

திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீனம்

௨௪-வது மஹா சந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக பரமாசார்ய சுவாமிகள்

வெளியீடு எண். 54.

உ

குருபாதம்

# நீதிநெறி விளக்கம்

ஆசிரியர்
திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
ஸ்ரீமத் குமரகுருபர சுவாமிகள்.

இஃது

இவ்வாதீன
இருபத்தைந்தாவது மகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்
திருவுளப்பாங்கின்படி,

இவ்வாதீன வித்துவான்,
காழி, சிவ. கண்ணுசாமி பிள்ளை, B. A.
அவர்களால் தொகுக்கப்பெற்ற

உரைவளத்துடன்
அச்சிடப்பெற்றது.

சர்வதாரி.

உ

குருபாதம்

# பொருளடக்கம்




| | |
|---|---|
| முதற்பதிப்பின் முகவுரை | க |
| இரண்டாம்பதிப்பின் முகவுரை | ஙு |
| மேற்கோளாக எடுத்துக்காட்டிய நூல்கள் | கச |
| கிடைத்த உரைப்பதிப்புக்கள் | கரு |
| சிறப்புப்பாயிரம் முதலியன | கசு—உரு |
| நீதிநெறி விளக்கம் | 1—411 |
| செய்யுள் முதற்குறிப்பகராதி | 413 |
| பொருள் அட்டவணை | 415 |




# இரண்டாம்பதிப்பின் முகவுரை

இலக்கிய மங்கையின் அழகு அதன்கண் விளங்கு கின்ற நீதி. ஒரு பெண்ணின் அழகு அவள் மேனி யமைப்பில்மட்டுமா? அவள் குணத்தில் இருக்கிறது. கூறும் முறையில் இருக்கிறது. அதுபோலவே இலக்கிய அழகாகிய நீதிகளும் கதையமைப்பிலிருக்கிறது. இதனை மட்டும் தனியே எடுத்துக்காட்டுவது எவ்வளவு அருமை.

இலக்கியப்பாற்கடலைக் கூர்த்த அறிவு என்ற மந்தரத்தால் கடைந்தபோதுதான் நீதியமுதம் திரண்டு வரக்கூடும். அவ்வளவு அரிதிற்பெறக்கூடிய ஒன்றைத் திரட்டிக்கொடுப்பது எவ்வளவு இன்பமானது. உழைப் பில்லாத ஊதியத்தைத்தானே உலகம் விரும்புகிறது!

மலையைக் கல்லி எலியைப் பிடிப்பதுபோலச் சில நாட்டு இலக்கியங்களில் கதைக்கூட்டத்தின் நடுவிலே குறிக்கோளாகிய நீதியை, பாலைவனத்திடையில் நிழன் மரத்தைச் சந்தித்ததுபோலச் சந்திக்கநேரும். தண் பொழிலைச் சிறிதுகூட முயற்சியும் அயர்ச்சியும் இன்றிச் சந்திக்கநேர்ந்தால் ஆ! என்ன மகிழ்ச்சி விளையக்கூடும்!

அங்ஙனம், இலக்கிய மங்கையின் தனித்த அழகுத் தொகுதி திருக்குறள். இலக்கியப் பாற்கடலில் கடையப் பெற்ற அமுதத்திரள் திருக்குறள். அலையாமல் அடைந்த காவிநிறை வாவியோடு கூடிய இளமரக்கா திருக்குறள்.

குறளோ, கடுகைத்துளைத்து ஏழ்கடலைப் புகட்டிக் குறுகத்தறித்த தென்றார் ஒருபுலவர். அது ஆயிரத்து முந்நூற்றுமுப்பது என்னும் எண்ணுடையது. அதனை

நூற்றிரண்டு வெண்பாவிற் செறித்தமைக்கப்பெற்ற சுவைப்பிழம்பு நீதிநெறி விளக்கம். இதனை எண்ணுக. சுவையை நன்கு ஊன்றிச்சுவைக்க.

இதனை, பலர் உரைகாண்பதன்வாயிலாகச் சுவைத்திருக்கிறார்கள்; தமிழுலகத்திற்கும் தந்திருக்கிறார்கள். பலவேறு சுவைகளிற்றோய்ந்த தருமை ஆதீனப்புலவர் காழி, சிவ. கண்ணுசாமி பிள்ளை B. A. அவர்கள் சுவைகள் எல்லாவற்றையும் ஒருசேரத்திரட்டி 1943-ல் ஆதீன வெளியீடாக இந்த உரைத் தொகுப்பினை வெளியிட்டார்கள்.

பின்னர் அவர்கள் தம் ஆய்வின்பயனைச் சிலபாடல்களுக்குப் பழைய உரையையும், உரைக்குறிப்பினையும், தமிழ்ப்பேரறிஞர், கா. சுப்பிரமணியபிள்ளை M. A., M. L., அவர்களது ஆங்கில மொழிபெயர்ப்பையும் சேர்த்து உதவினார்கள். அவை இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

செந்தமிழ்த் தொண்டினையும் சிவநெறித் தொண்டினையும் இருகண்களாகக்கொண்டு விளக்கிவரும் தருமபுர ஆதீனம் இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானமாகிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவுள்ளக் குறிப்பின்படி இப்பதிப்பு வெளிவருகிறது.

நீதியை விரும்புஞ் செந்தமிழ்ச்செல்வர்கள் அதனெறியும் விளக்கமும் கிடைத்தால் விடுவார்களா! மிக மிகப் போற்றுவார்கள் என்பதுறுதி.

திமிரம தகற்றுந் தெய்வக் கவிஞன்
குமர குருபரன் குரைகழல் வெல்க.

---



திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

உ௫-வது மகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ
குருபாதம்

# முதற்பதிப்பின் முகவுரை

**பதிப்பாசிரியர் சிறப்பு :**

திருக்கயிலாய பரம்பரை, நந்திமரபு, மெய்கண்ட சந்தானம், திருத்தருமபுர ஆதீனத்தின் 24-வது மகா சந்நிதானமாகத் திகழ்ந்தருளுகின்றவர்கள் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள்.** அருட்செல்வமும், பொருட்செல்வமும் ஒருங்கேவாய்க்கப் பெற்ற சுவாமிகள் கருவிலே திருவுடையவர்கள்; வடமொழி, தமிழ்மொழி, ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளின் பாலும் அளவிலாப் பற்றுடையவர்கள். அவர்களுடைய வள்ளன்மையும், ஆட்சித்திறமையும், உயரிய பண்பு நலங்களும் தமிழுலகம் நன்கறிந்தனவே. ஞானசாரிய பீடத்தமர்ந்த சிலநாட்களுள் திருமடத்திலும் ஆதீனத் திருக்கோயில்களிலும் அவர்கள் இயற்றியுள்ள சீர்திருத் தங்களும், திருப்பணிகளும் சைவ உலகம் அறிந்து வியந்து பாராட்டப்பெற்றவை. அறநெறி தழைக்கவும், பெருநெறியாம் சிவநெறி விளங்கவும் முதன்முதலாகத் தமிழ்மொழியில் ஆதீனத்தின் வாயிலாக ஒரு திங்கள் இதழை வெளியிட்டு வழிகாட்டிய பெருமை இம் மகா சந்நிதானத்துக்கே உரியதாகும். குருமணியாம் சண்முக மணி பயந்த "ஞானசம்பந்தம்" என்ற அவ்விதழ் நீடு நின்று நிலவுக!

இனி, நமது ஆதீனத்தில் மாநாடொன்று கூட்டி பொதுநெறி புகட்டும் சைவசித்தாந்தப் பெருநெறியின் அருமை பெருமைகளைத் தமிழ்நாட்டார்க்கு நன்குணர்த் திய தனிப்பெருமையும் அவர்களுக்கே உரியதாகும்.

உயர்தனிச் செம்மொழியாகிய ஒப்புயர்வற்ற நம் தாய் மொழி, பண்ணூருந் தமிழ்மொழி பல்லாற்றானும் பரவி வளம் பெறல்வேண்டும் என்ற பெருநோக்குடன் மகா சந்நிதானம் கடைக்கண்சார்த்தி வெளியிட்டுள்ள நூல் கள் பலப்பல; வெளியிட இருப்பவையோ மிகப்பல! வெளியிடும் நூல்களெல்லாம் உடனுக்குடன் மக்களுக்குப் பயன்படுவனவாயிருத்தல்வேண்டும் என்பது மகாசந்நி தானத்தின் திருவுள்ளம். தமிழ்மொழி இக்காலையுள்ள நிலையில் தமிழ்மாணவர்களுக்குப் பயன்படும் வகையில் வெளிவரும் நூல்களே மொழியினைப்பரப்பும் பெரும் பணிக்குரிய முதற்கருவியாம் என்பது மகாசந்நிதானத் தின் முடிபு. இம் முடிபுக்கேற்ப, ஆதீனத் தொடர் புடையதும், நீதிபுகட்டும் முறையில் திருக்குறளையொட்டி வைத்தெண்ணப்படுவதுமாகிய **நீதிநெறி விளக்கம்,** புதுமுறையில் புத்துரையுடனும் பல உரைகளிற் கண்ட உரை நயங்களுடனும், ஆங்கில மொழிபெயர்ப்புடனும் வெளிவரின் பெரும்பயன் தருவதாகும் என்று மகா சந்நிதானம் குறிப்புணர்த்தினர்கள். அத்திருக்குறிப் புணர்ந்து, ஒன்றுக்கும் பற்றாத சிறியேன் என் சிற்றறி விற்கெட்டியவரை முயன்று அதனை முடித்து நிறைவிக்க மகாசந்நிதானத்தின் திருவருளை நாடினேன். திருவருள் சுரந்தது; இச்சிறுநூல் எழுந்தது.

நூலாசிரியர் வரலாறு :

தமிழ் வளருந் தென்பாண்டி நாட்டினை வளமுறு விக்கும் தண் பொருநை என்னும் தாமிரபருணியின் வடகரையிலுள்ளது ஸ்ரீவைகுண்டம். அதனைச்சார்ந்த கயிலாயபுரமென்ற பகுதியிற் பிறந்தவர் இந்நூலாசிரிய ரான குமரகுருபரர். சைவவேளாள குலத்திற்றோன்றிய இவர் தந்தையார் தமிழ்ப்புலமை சான்ற சண்முகசிகா மணிக் கவிராயர். தாயார் சிவகாமசுந்தரி அம்மையார். இவருக்குக் குமாரகவிராயர் என்ற இளவலொருவரும்

உள்ளர். குமரகுருபரர் பிறந்ததுமுதல் ஐந்தாண்டுவரையும் வாய் பேசாதிருந்து, செந்தில்வேலவன் திருவருளால் பேசத்தொடங்கினர். மேலும், அவர் குமரகுருபரன் என்று அவ்வேலவனல் அழைக்கவும்பெற்ருர். உடனே "கந்தர் கலிவெண்பா" என்ற நூலை அவர் அருளிச் செய்தார். சித்தத்தைச் சிவன்பால் வைத்த ஆசிரியர், பின், வேலவனணைப்படி ஞானசிரியரை அடைய, வட நாட்டு யாத்திரை செல்ல விரும்பினர்; விரும்பியவர் தாம் பிறந்த ஊராகிய கயிலாயபுரத்திற்குச் சென்று கயிலாய நாதர்மீது "கயிலைக் கலம்பகம்" பாடினர். பின், யாத்திரையை மேற்கொண்டு பலதிருப்பதிகளையும் தரிசித்துக் கொண்டு மதுரைக்குச் செல்லுங்கால், மீனட்சியம்மை யாரின்மீது "பிள்ளைத்தமிழ்" என்னும் ஒரு பிரபந்தம் பாடி, அம்மையாரின் ஆணைப்படி அந்நகர்க்கரசராகிய திருமலைநாயக்கர் எதிர்கொண்டழைக்கச்சென்று அதனை அம்மையார் சந்நிதியில் அரங்கேற்றினர். அதுசமயம் அவ்வம்மையாரால் முத்துமாலை சூட்டப்பெற்றுச் சிறப் பெய்தினர்.

பின்னர் அங்குச் சிலநாள் தங்கியிருந்து "மீனட்சி யம்மை யிரட்டைமணிமாலை", "மீனட்சியம்மை குறம்", "மதுரைக் கலம்பகம்" என்ற பிரபந்தங்களையும் அந் நகர்க்கரசனகிய திருமலைநாயக்கர் வேண்டுகோளின்படி திருக்குறளின் சாரமாகிய நீதிநெறி விளக்கம் என்னும் இந்நூலையும் அருளிச்செய்தார்.

அதன் பின்னர் மதுரையரசன் கொடுத்த பல பரிசிற் பொருள்களையும் எடுத்துக்கொண்டு அந்நகர் நீங்கித் திருச்சிராப்பள்ளி, ஈங்கோய்மலை முதலிய பதிகளைக் கண்டு வணங்கி, ஆங்காங்குத் தம்முடன் வாதுசெய்ய வந்த புறச்சமயத்தார்களெல்லோரையும் வென்று, அவர்களுக்குப் பல ஏதுக்களை எடுத்துக்காட்டி, "துன்று கருணைப் பசுபதியே சொற்ற பலவானவருள்ளும் என்று முயர்ந்தோனெனத் தெளிவீர்" என்று உபதேசித்தார்.

பின், தருமையாதீன ஸ்தாபகாசாரியரான குருஞான சம்பந்தருக்கு ஞானோபதேசம் செய்த கமலைஞானப் பிரகாசர் அவதரித்ததும், பிறந்தவர்க்கு முத்தியளிக்கும் திருத்தலமுமாகிய திருவாரூரை யடைந்தார். ஆரூர்த் தியாகப்பெருமானை வணங்கித் "திருவாரூர் நான்மணி மாலை" என்ற பிரபந்தத்தை அருளிச்செய்தார்.

அக்காலத்தில், இவ்வுலகிடைச் சிவஞான வாரிதிக்கு உறுஞால ஊற்றெனத் திகழ்ந்தது **தருமபுர ஆதீனம்;** அவ்வாதீனத்தில் நான்காவது குருமூர்த்தியாய் எழுந்தருளி அருட்செங்கோல் நடாத்தியவர் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணித் தேசிக சுவாமிகள் ஆவார்கள். அவர்தம் திருவருட் சிறப்பைக் கேள்வியுற்ற குமரகுருபரர் திருவாரூரினின்றும் புறப்பட்டுத் தருமைக்கு வந்தடைந்தார்; தேசிகமூர்த்தியைக் கண்டு வணங்கினார். வணங்கியவரைத் தேசிகமூர்த்திகள் நோக்கி, **ஐந்துபேரறிவும்** என்ற பெரியபுராணப்பாடலின் அனுபவ உண்மையைக் காட்டுக எனப்பணித்தார்கள். குமரகுருபரரது வாக்குத் தடைப்பட்டது. உடனே, திருவருளாணை நினைவிற்கு வந்தது. இவரே தமக்கு ஞானாசிரியர் என உணர்ந்து அடிபணிந்து தம்மையாட்கொள்ளுமாறு அவர்வேண்ட, "நீ காசியாத்திரை முடித்து மீளின் யாம் தொண்டு கொள்வோம்" எனப் பணித்தருளினார்கள். குமரகுருபரரும் காசியாத்திரையில் ஏற்படக்கூடிய சில இடையூறுகளைப் பணிவுடன் விண்ணப்பிக்க, "அவ்வாறாயின் தில்லைக்கேனும் சென்றுவருக" என்று ஆணையிட்டருளினார்கள்.

குருவின் ஆணையைத் தலைமேற்றாங்கிய குமரகுருபரர், தருமையினின்றும் நீங்கி, வேளூர் சென்று சுவாமி தரிசனஞ்செய்து மேற்செல்லப் புறப்பட்டார். அக்காலை, குமாக்கடவுள் அருச்சகர்வடிவுடன் எழுந்தருளித் திருநீறளித்து, "நமதிளந்திருக்கோலத்தை நயந்து நல்லணிகளமைய ஒரு பிள்ளைத்தமிழுரைப்பாய்" எனக் கூறி

மறைந்தருளினர். உடனே, குமரகுருபரர் ஸ்ரீ செல்வ மூத்துக்குமரர் முன்படைந்து "பொன்பூத்தகுடுமி" என அசரீரியாக எழுந்த அருள்வாக்கை முதலாகக்கொண்டு "பிள்ளைத்தமிழ்" பாடியருளினர்; பின் திருத்தோணி புரம் சென்று வணங்கித் தில்லையையடைந்தார்; அங்கு, "சிதம்பர மும்மணிக்கோவை" என்னும் ஒரு நூலும், அடிதொடை முதலிய உறுப்புக்களும் பாக்களும் பாவினங்களும் ஒருசேர யாப்பிலக்கண விதிகள் யாவை யும் வகுத்துச் "சிதம்பரச் செய்யுட்கோவை" என்ற ஒரு நூலும் இயற்றியருளினர்; சிலநாட்கள் அங்குத் தங்கியிருந்து பின் மீண்டுந் தருமபுரம் அடைந்தார்; ஐயிரண்டழகொடு அணிபெற விளங்கும் "பண்டார மும்மணிக்கோவை" என்னும் நூலை இயற்றி ஞான சாரியரின் திருவடிகட்குச் சூட்டினர். ஞானசாரியர் திருவுளமகிழ்ந்து அவரை ஆட்கொண்டருளி ஞானோப தேசஞ் செய்வித்து, "குமரகுருபர சுவாமிகள்" என்று பெயர் அருளி வாழ்த்தினர்கள்.

பின், ஆசிரியர் பெருமானின் ஆணைப்படி குமர குருபர சுவாமிகள் காசிநகரடைந்தார்; ஆங்கே, கேதார நாதரைத் தொழுது வணங்கி, "காசிக் கலம்பகம்" என் னும் பிரபந்தத்தை அருளிச்செய்தனர்.

ஒருநாள், அவர் கலைமகளின் அருளால் துருக்கர் மொழியின் பயிற்சியும், காளியினருளால் சிங்க ஊர்தியும் பெற்று, அவ்வூர் மகம்மதிய அரசனிடத்துச் சென்று பல அற்புதங்களைச்செய்து, "சைவத்தின் மேற்சமயம் வேறில்லை" என்றும், "அதிற்சார் சிவமாந்தெய்வத்தின் மேற் றெய்வம் வேறில்லை" என்றும் காட்சியளவையால் நிலைநிறுத்தினர். அதுகண்டு அரசனும் குமரகுருபரரை வணங்கினன். மற்றுள்ளார் யாவரும் "தேக்கு நீர் சடையா னன்பர் செயற்கரி துலகிலுண்டோ!" எனக் கூறி ஆனந்தக் கடலுள் அழுந்தினர். குமரகுருபரர்

கேதாரநாதர் தமது கனவிற்றோன்றி அருளியவாறே, துணைக்கருடன் வட்டமிடும் இடத்தைக்காட்டி 'இவ்விடம் அறஞ்செய்தற்கு வேண்டும்' என அருளிச்செய்ய, மன்னனும் அவ்விடத்தில், 'எங்கும் இம்மாதவர்க்கா இயற்றிய மடத்தைப் போலப் பொங்கு நன்மட மொன்றில்லை' என்று கண்டார் யாவரும் வியக்க ஒரு மடம் எடுத்து, அதில் தன் முகரையும் வைத்துத் தத்தஞ் செய்தான். குமரகுருபரர் அம்மடத்தில் எழுந்தருளி இருந்துகொண்டு, மதுரை மன்னனால் கொடுக்கப்பட்ட பொருள்களி னுதவியால் அம்மன்னன் பெயரால் ஒரு சத்திரமும், கேதாரநாதருக்கு ஓர் ஆலயமும் அமைத்தார்; ஆலயத்திற்குரிய நித்திய நைமித்தியங்களுக்குத் திட்டம் செய்வித்தார். இவ்வாறு பல சிவதர்மங்களைச் செய்து கொண்டு இருக்குங்கால், ஞானசாரியரைத் தரிசிக்க வேண்டுமென்னும் அவா அதிகரித்தது. கேதாரநாதரிடம் விடைபெற்றுத் தருமபுரம் சென்று தமது ஞானசிரிய ரைக்கண்டு தரிசித்து மீண்டனர். இவ்வாறு மும்முறை நிகழ்ந்தன. நான்காவதுமுறை ஞானசிரியரைத் தரிசிக் குங்கால் "இனி அடியேனுக்கு இச்சந்நிதானத்தைவிட்டு நீங்க மனமில்லை" என்று தெரிவித்தனர். ஞானசிரியர் குமரகுருபரரை நோக்கி,

"காட்டிருந் தாலு மலையிருந் தாலுங் கருதரிய
நாட்டிருந் தாலு நமக்கென்ன காணல்ல தோர்கமலை
வீட்டிருந் தாண்டருள் ஞானப் பிரகாசன் விரைமலர்த்தாள்
கேட்டிருந் தாலும் பிறவா நெறிவந்து கிட்டிடுமே"

என்னும் பாடலை அருளிச்செய்து, சொக்கலிங்கப் பெருமானையும் ஞானபூசையாக எழுந்தருளப்பண்ணிக் கொடுத்தனர். குமரகுருபரரும் தம் ஞானசிரியரை வணங்கி விடைபெற்றுத் தருமையம்பதியை யகன்று, காசியையடைந்து சிவதருமங்களை இயற்றிக்கொண்டு, சிலநாளிருந்து, வைகாசித் திங்களிலே கிருஷ்ணபட்சத் திருதியையிலே இறைவன் திருவடி நீழலிற் கலந்தருளினார்.

## நூலாசிரியர் காலம்:

இவர்காலம் 16-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியும், 17-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியும் ஆகும். அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியர், வித்வான், திரு. கா. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் ஆசிரியரின் காலம் கி. பி. 1600—1650 எனக்குறித்தார். பிஷப்கால்டுவெல், கி. பி. 1623—1650 என்பர். காலஞ்சென்ற தமிழாராய்ச்சி அறிஞர் யாழ்ப்பாணம், முதலியார் செ. இராசநாயகம் அவர்கள் கி. பி. 1575—1635 என்று குறித்துள்ளார்கள். இதைக்குறிக்குமுகத்தான், அபிதான சிந்தாமணி ஆசிரியர் 18-ஆம் நூற்றாண்டு என்று கூறியது சரியன்றென்றும், குமரகுருபரர் புராணத்தில் காலஞ்சென்ற ஆசிரியர் மகாவித்துவான், மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் குமரகுருபரசுவாமிகள் பிள்ளைப் பெருமாளையங்கார் காலத்தவர் என்று கூறியுள்ளது பொருத்தமன்றென்றும் திரு. இராசநாயகம் அவர்கள் நன்கெடுத்துக் காட்டியுள்ளார்கள்.

## நூற்பெயரும், நுதலிய பொருளும்:

நீதிநெறி விளக்கம் என்பது நூற்பெயர். அறநெறியை விளக்குவது. அறநூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் அறநெறி அல்லது நீதிநெறியாம். இரவில் நெடுவழிச் செல்லும் ஒருவனுக்கு அவன் போகக்கருதிய ஊருக்கு நேரியவழி யின்னதென்று விளக்கிக்காட்டுதல் கருதி அரசினர் ஆங்காங்கு விளக்குகள் அமைத்துவைத்து அவனைக் குறித்த ஊர்க்கண் உய்க்க வுதவுகின்றமைபோல, அறிவின்மையாகிய இருள்நிறைந்த இவ்வுலக வாழ்க்கையில் உயிர் தீயவழிச் சேறலொழித்து நல்வழிச்சேறல் கருதி ஆசிரியர் குமரகுருபரர் அமைத்த அறிவுச்சுடர்மணி விளக்கம் இந்நூலாம். நீதி நெறி விளக்கம் என்னும் இத்தொடர்

மொழி மூன்றுசொல் இரண்டு சந்தியாய் முன்னது பண்புத்தொகை நிலைத்தொடராய்ப் பின்னது இரண்டாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயராய் நூலுக்காயிற்று. இந் நூலிலே எம்மதவாதிகளாயினுஞ் சம்மதமாகச் செயற் பாலனவாகிய காரியங்களும், தவிர்தற்பாலனவாகிய காரியங்களும், அவற்றின் பலன்களும், அவற்றை உள்ள வாறுணருநெறியும், உணர்வோர் செய்யுந் திறமும், ஊரார் செய்யுந் திறமும், பிறவும் அனுபவங்களோடு எடுத்துக்காட்டப்பெற்றுள்ளன. இவையெல்லாம் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கும் பயப்பனவா யடங்கும். எனவே,

"அறிவிழுக் கங்கெட நிறையொழுக் கந்தொட
நூல்பயின் முறையிற் பாலருந் தேற்
வாலுணர் புலவர் மேனகை குலவ"

எழுந்த இந்நூல் நீதிநெறி விளக்கம் எனப் பெயர் பெற்றது இயல்பே.

## நூல்நடையும் நூற்சிறப்பும்:

சங்கமருவிய தொகை நூற்களுக்குப் பின்வந்த நீதிநூற்களுள் நடையினாலும் பொருட் சிறப்பினாலும் பதினெண் கீழ்க்கணக்கு நீதிநூற்களை முற்றும் ஒத்திருப் பன அறநெறிச்சாரமும், நீதிநெறிவிளக்கமுமேயாம். அவற்றுள், பின்னது சங்கச் செய்யுட்களோடு ஒருங்கு வைத்து எண்ணத்தக்க பெருமை வாய்ந்து சொற் செறிவும் பொருட் செறிவுமுடையது. பத்தழகும் பண்புற அமைந்தது. சீரிய செந்தமிழ் நடையானியன்றது. வட சொற்கள் பெரிதுங் கலக்கப் பெறாதது. அணிநலம் பலவுஞ் சிறந்து மிளிர்வது. சுவையின்றி இருப்புக் கடலை யென யாக்கப்பட்டுள்ள நீதி நூல்கள் சிலவற்றைப் போலாது அணிநலன் சிறக்க யாக்கப்பட்டுத் திகழ்வது.

அறிவிற்சிறந்த தமிழாசிரியர்கள் பலரால் இதற்கு உரைகள் பல இயற்றப்பட்டிருக்கின்றமையும், ஆங்கிலேயரையுள்ளிட்ட அறிஞர் பலரால் இதற்கு ஆங்கில மொழிபெயர்ப்புகள் செய்யப்பட்டிருக்கின்றமையும் இந்நூலின் அருமை பெருமைகளுக்குச் சான்று பகர்வனவாம். இந்நூலையும், நூலாசிரியரையுங் குறித்து 1881-ம் ஆண்டில் **பிஷப் கால்டுவெல்** என்பார் எழுதிய **திருநெல்வேலி வரலாறு** என்ற நூலின் பிற்சேர்க்கைகளுள் காணப்பெற்ற ஓர் ஆங்கிலக் குறிப்பின் மொழிபெயர்ப்பு கீழே தரப்படுகின்றது.

"திருநெல்வேலி நாட்டுப் புகழ்பெற்ற சான்றோர்களுள் அண்மையில் இருந்தவர் **நீதிநெறிவிளக்க** ஆசிரியர் என்று கூறலாம். நீதிநெறி விளக்கம் நீதிச்செய்யுட்களைக் கொண்ட நூல்; குறளையும், நாலடியாரையும் ஒட்டி வகுக்கப்பெற்றது. இந்நூலின் செய்யுட்கள் பொதுமக்கள் நன்மதிப்பில் உயர்ந்த இடம் பெற்றுள்ளன; ஆனால், இவற்றுட் சிலவே தனிச்சிறப்பும், செய்யுண்மையும் வாய்ந்த முதன்மைச் செய்யுள்களாகக் கருதப் பெறுகின்றன. இச்செய்யுட்கள் அடிக்கடி கல்லூரித் தேர்வுகளுக்குப் பாடமாக எடுத்துக்கொள்ளப்பெறுகின்றன. இந்நூலாசிரியர் ஒரு சைவத் துறவி; வேளாளவகுப்பைச்சேர்ந்தவர்; **ஸ்ரீமத். குமரகுருபரத் தம்பிரான்** என்று அழைக்கப்பெற்றவர். "தம்பிரான்" என்பது சைவமடத் தலைவர்களின் பட்டப்பெயராகும்;

இந்நூலாசிரியர் **குமரகுருபர சுவாமிகள்** என்றும் அழைக்கப்பெறுவர். "சுவாமிகள்" என்பது தலைவன் என்று பொருள்பெறும் சுவாமி என்ற சொல்லின் மரியாதைப் பன்மை. தாமிரபருணியாற்றின் வடகரையிலுள்ள **ஸ்ரீவைகுண்டம்** என்ற பெயர்பெற்ற நகரிற் பிறந்தவர் குமரகுருபரர். இந்நகர் எப்பொழுதுமே சிறப்பு வாய்ந்து வந்துள்ள தொன்றாகும். இப்பொழுது இது தென்கரை என்ற தாலூகாவின் தலைநகராயுள்ளது. இந்நகர் வைணவ மதத்தினர் கொண்டாடும் திருப்பதிகளுள் ஒன்றென்பது இதன் பெயராலேயே விளங்கும். வைகுண்டம் என்பது விஷ்ணுவின் உலகம். இந்நகரத்தின் மக்கட்டொகை ஏழாயிரத்திற்கு மேற்பட்டதாகும். குமரகுருபரர், புகழ்பெற்ற மதுரை மன்னன் திருமலை நாயக்கன் காலத்தில் இருந்தாரெனக் கூறுவர்; அப்படியாயின் அவர் காலம் கி. பி. 1623 முதல் 1659 ஆகும்."

நூன்முறை:

இனி, இந்நூலின் இப்பதிப்பு எவ்வாறு முறைப் படுத்தி அச்சிடப்பெற்றுள்ளதென்பதைச் சிறிது விளக்குவாம். முதற்கண் நூலிலுள்ள செய்யுட்களுக்கெல்லாம் இயன்றவரைச் செய்யுட் சொற்களைக் கொண்டே சிறு தலைப்புக்கள் கொடுக்கப்பெற்றுள்ளன. அதன்பின்னர் செய்யுள்; அதனை யடுத்து 1 என்ற பகுதியாகச் செய்யுளின் சொற்களையொட்டி நேரான பதவுரையொன்று புதிதாக எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளது; 2 என்ற பகுதியிற் வழக்காற்றிலுள்ள அந்வயம் என்ற கொண்டு கூட்டுப் பொருள்கோள்முறை கொடுக்கப்பெற்றுள்ளது; 3 என்ற பகுதியிற் செய்யுளின் கருத்துரை தரப்பட்டுள்ளது; 4 என்ற பகுதியில் இயன்றவரையிற் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் காணும் ஒத்தகருத்துடைய மேற்கோள்கள் எடுத்துத் தரப்பெற்றுள்ளன; 5 என்ற பகுதியில் செய்யுளின் சொற்றொடர்களைப் பிரித்தெடுத்துத் தலைப்பிலிட்டு, கீழே அத்தொடரிலுள்ள சொற்கள் ஒவ்வொன்றிற்குமோ, சிறுதொடர்களுக்கோ பல உரை நூல்களிலுங் கண்ட சிறப்புரைகளும் கருத்துக்களும் எடுத்துக் கொடுக்கப்பெற்றுள்ளன. இறுதியாக, ஆங்கில மொழிபெயர்ப்புகளிற் சிறந்தனவாகக் கருதப்படுபவை காலமுறைக்கேற்றவாறு எடுத்துப்பதிப்பிக்கப்பெற்றுள்ளன. அவை ஒவ்வொன்றின் கீழும் அவ்வவற்றிற்குரிய உரையாசிரியரின் பெயர் முதலெழுத்துக்கள் தரப்பட்டு உள்ளன. அவ்வாறு தரப்படாமற் காணப்பெறுங் குறிப்புக்கள், கருத்துக்களெல்லாம் அடியேனுடையனவாகும். நூலிறுதியில் பொருள் அட்டவணையொன்றும், செய்யுள் முதற்குறிப்பகராதியும் சேர்க்கப்பெற்றுள்ளன.

நன்றிகூறல்:

இந்நூலை எழுதிப் பதிப்பிக்குமாறு திருவுளம் பற்றிய திருத்தருமையாதீன 24-வது மகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் திருவடிகளுக்கு முதற்கண் அடியேன் எழுமையும் கடமைபூண்டவனவேன். மேற்கொண்ட இப்பணியில் அடியேனை ஊக்கி ஆதரவளித்த பேரன்பர் தருமையாதீனம் B. முத்துக்குமாரசாமி முதலியார் அவர்களுக்கும், அண்மையிற் காலஞ்சென்ற என் ஆசிரியர் பரங்கிப்பேட்டை, தருமையாதீன வித்துவசிரோமணி, ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை அவர்களுக்கும் அடுத்து என் உளமார்ந்த நன்றி உரியதாகும். இனி இந்நூலை இயற்றுதற்குதவிய சிறந்த பல பழையவுரைப் பதிப்புக்களைத் தந்தருளியும், நூல் அச்சேறுங்காலத்தில் பிழைபார்த்துத் தந்தும் என்பாற் கருணைகாட்டிய திருமயிலை வித்துவான், சே. சோமசுந்தரம் பிள்ளை அவர்களுக்கும், அவர்களின் இளவல் திருமயிலை சே. வே. ஜம்புலிங்கம் பிள்ளை அவர்களுக்கும், நூலாசிரியர் குமரகுருபர அடிகளாரின் திருவுருவக் கட்டையைத் தந்துதவிய திருவாரூர் இலக்கண விளக்க ஆசிரியர் பரம்பரை வித்துவான், S. சோமசுந்தர தேசிகர் அவர்கள் குமாரர்கட்கும், "ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தங்கள்" என்ற தம் நூலிலுள்ள நீதிநெறி விளக்கத்திற்குரிய குறிப்புரையை ஆங்காங்குச் சேர்த்துக்கொள்ள அன்புகூர்ந்து உத்தரவுதந்த தமிழ்ப்பெரியார், உ. வே. சாமிநாதையர் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி உரியதாகும்.

சென்னை,<br>3—3—43.

காழி, சிவ. கண்ணுசாமி, B. A.

# மேற்கோளாக எடுத்துக்காட்டிய நூல்கள்



அரிச்சந்திர புராணம்
அறநெறிச்சாரம்
ஆசாரக்கோவை
ஆத்திசூடி
இலக்கணக்கொத்து
இராமாயணம்
இலக்கண விளக்கம்
இனியவைநாற்பது
இன்னாநாற்பது
ஏலாதி
ஒழுவிலொடுக்கம்
ஔவைகுறள்
கந்தபுராணம்
கம்பராமாயணம்
கலிங்கத்துப்பரணி
கலித்தொகை
காசிகாண்டம்
காசிக்கலம்பகம்
குசேலோபாக்கியானம்
கொன்றைவேந்தன்
சிந்தாமணி
சிதம்பரச் செய்யுட்கோவை
சிதம்பர மும்மணிக்கோவை
சிறுபஞ்சமூலம்
சிவஞான சித்தியார்
சிவப்பிரகாசப் பெருந்திரட்டு
சூளாமணி
சேதுபுராணம்
ஞானமிர்தக் கட்டளை
தணிகைப் புராணம்
தாயுமானவர் பாடல்
திரிகடுகம்
திருக்குறள்
திருக்குற்றாலத் தலபுராணம்
திருச்சிற்றம்பலக் கோவையார்
திருமந்திரம்
திருமுருகாற்றுப்படை
திருவருணைக் கலம்பகம்
திருவாசகம்
திருவாதவூரர் புராணம்
திருவிளையாடற் புராணம்
தொல்காப்பியம்
நல்வழி
நளவெண்பா
நன்னூல்
நன்னெறி
நாலடியார்
நான்மணிக்கடிகை
நீதிசாரம்
நீதிநூல்
நீதிவெண்பா
பட்டினத்தார் பாடல்
பண்டார மும்மணிக்கோவை
பழமொழி
பாகவதம்
பாரதவெண்பா
பிங்கலம்
பிரபுலிங்க லீலை
பிள்ளையார் புராணம்
புறநானூறு
பேரூர்ப் புராணம்
மணிமேகலை
மாபாரதம்
முதுமொழி
முதுமொழிக்காஞ்சி
வளையாபதி
விநாயகர் புராணம்
விவேகசிந்தாமணி
வெற்றிவேற்கை

## கிடைத்த உரைப் பதிப்புகள்

| | உரையாசிரியர் | ஆண்டு | உரை அளவு | உரையாசிரியரையோ, பதிப்புகளையோ குறிக்கும் எழுத்துக்கள் |
|---|---|---|---|---|
| 1. | காஞ்சிபுரம் சபாபதி முதலியார் | 1835 | நூல் முழுதும் | |
| 2. | சி. முத்தைய பிள்ளை | 1864 | ஷை | சி. மு. |
| 3. | கோ. இராசகோபால பிள்ளை | 19-ம் நூற்றாண்டின் பிற்பகுதி | ஷை | கோ. இ. |
| 4. | ஏ. எஸ். ஜெகராவ் முதலியார் | 1895 | முதல் 60 செய்யுட்கள் | ஏ. எஸ். ஜெ. |
| 5. | சி. வை. தாமோதரம் பிள்ளை | 19-ம் நூற்றாண்டின் பிற்பகுதி | முழுதும் | சி. வை. தா. |
| 6. | வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் | ஷை | முதல் 51 செய்யுட்கள் | வி. கோ. சூ. |
| 7. | அ. குமாரசாமிப் புலவர் | 1902 | ஷை | அ. கு. |
| 8. | தி. சுப்பராயச் செட்டியார் | 1928 | முழுதும் | தி. சு. செ. |
| 9. | இளவழகனார் | 1939 | ஷை | இள. |
| 10. | உ. வே. சாமிநாதையர் | 1939 | குறிப்புரை முழுதும் | உ. வே. சா. |
| 11. | மோ. வேங்கடசாமி | தெரியவில்லை | 36 செய்யுட்கள் | மோ. வே. |
| 12. | (ஊ. புஷ்பரதச் செட்டியார் பதிப்பு) | ,, | முழுதும் | ஊ. பு. செ. |

## மொழிபெயர்ப்புப் பதிப்புகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | Rev. H. Stokes | 1830 | Full | H. S. |
| 2. | C. Muthiah Pillai | 1864 | ,, | C. M. |
| 3. | Rev. S. Winfred | 1914 | ,, | S. W. |
| 4. | T. B. Krishnaswami Mudaliar | 1937 | ,, | T. B. K. |

குருபாதம்

# சிறப்புப் பாயிரம்

(நிலைமண்டிலவாசிரியப்பா)

திருமக ளகலாப் பரமவை குந்த
நன்னக ருதித்த செந்நெறிக் குரிசில்
ஐந்தெனும் பருவம் வந்துறு மளவும்
மழக்குண மொருவி மிழற்றிடாச் செம்மல்
செந்திலம் பதிவாழ் கந்தன தருளால்
ஓதா துணர்ந்த போதனுய் முன்னர்க்
கலிவெண் பாவெனு மொலிபெறு மங்கலப்
குகன்றிரு முடிதனக் குகந்திடச் சூட்டிப்
பிள்ளைக் கவிமுதல் வெள்ளைக் கிழத்தி
மாலை முதலாச் சால்பமை பிரபந்த
முந்நான் கன்றியு மொழிதரு கைலைக்
கலம்பகந் துண்டிக் களிற்றுப் பதிகம்
அவ்விரண் டியற்றிச் சைவநற் சமய
நிலைமையுங் காட்டி யுலைவிலா தியாருந்
தீதெலா மொருவி நீதியே புரிய
நீதிநெறி விளக்கமென் றேதமில் பனுவலும்
இயற்றின னில்லறந் தியக்குறு நிலையென
இளமையிற் றுறந்து வளமைசேர் தருமை
மாசிலா மணியெனுந் தேசுறு குரவன்
பதமலர் பழிச்சுமற் புதகுண குமர
குருபர னெனும்பெயர் மருவிய முனியே.

---

இச்செய்யுள் பாளையங்கோட்டை தேவர்பிரான் கவிராயர் இயற்றியது என்பது ஊயர்திரு. உ. வே. சாமிநாதையர் அவர்கள் முடிப்பு.

உ

குருபாதம்

# உவப்புரை

சூரியனார்கோயில் ஆதீனத்து மகாசந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ முத்துக்குமார தேசிக சுவாமிகளது**

அடியார் கூட்டத்துள் ஒருவராகிய

## ஸ்ரீமத். முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள்

உலகின்கண் ஓங்குயர் விழுச்சீர் வாய்ந்து ஞாலமளந்த மேன்மைத் தெய்வத் தமிழ்மொழியிலே பலப்பல நூல்கள் உளவாயினும்,

**தேவர் குறளுந்** திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

என ஒத்த கருத்துடையனவாகித் தொகுக்கப்பட்டவற்றுள் முதலில்வைத் தெண்ணப்பட்டதாகிய திருவள்ளுவரருளிய திருக்குறளானது சைவத் தனிச்சிறப்பு நூலாகி நின்றே எப்பாலவரும் இசையும்படி பொருள் உணர்த்துந் திறத்தால் உலகப் பொதுநூல் எனவுங் கூறநிற்கும் பெருமை சான்றது. அதன்கணுள்ள ஆயிரத்து முந்நூற்று முப்பதருங்குறளின் பொருளையும் வடித்தெடுத்து நூற்றிரண்டு வெண்பாட்டுகளில் விளங்க வைத்து "நீதிநெறி விளக்கம்" எனப் பெயர் சூட்டி அளித்த அருளாளர் திருத்தருமபுர ஆதீனத்துக் **குமர குருபர சுவாமிகள்** ஆவார். அவ்வரிய நூற்குப் பல புலவர்கள் எழுதி வெளியிட்ட உரைப்பகுதிகளையும், ஆங்கில மொழிப்பெயர்ப்புப் பகுதிகளையும் தொகுப்பித்து நேருரையொன்று சேர்த்து, காழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை B. A. அவர்களைக்கொண்டு செவ்விதாக

அர்ச்சிடுவித்து மேற்படி ஆதீனம் ஞானகுருபீடத்தில் இருபத்துநான்காவது குருமூர்த்திகளாக எழுந்தருளி யிருந்து சைவஞானச் செங்கோல் நடாத்தும் மகாசந்நி தானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ **சண்முகதேசிக ஞானசம்பந்த பரமா சாரிய சுவாமிகள்** ஆதீன வெளியீடாக இதனை உப கரித்தருளுகின்றார்கள். இவ்வெளியீடு தமிழுலகுக்குப் பெரும்பயனளிக்கும் என்பது ஒருதலையாம்.

இக்குருமுதல்வர் பீடாரூடர்க ளானதுமுதல் சிவா லயங்களைப் புதுக்கியும், சைவநூல்களை வெளியிட்டும், தமிழ்வேத பாடசாலை, வேதசிவாகம பாடசாலைகளை அமைத்து இனிது நடைபெறச்செய்தும், பேரவைகளைக் கூட்டியும், பதிப்பகமொன்று நிறுவி ஞானசம்பந்தம் என்னும் திங்கள் மலரால் எங்கணும் சிவமணங்கமழச் செய்தும் சைவ சித்தாந்த உணர்ச்சியை வளர்த்து நல்லறந்தருதல்போலவே தங்கள் ஆதீன ஞானநிதிகளா யுள்ள பாடியங்களையும் ஸ்ரீமிருகேந்திர விருத்தியின் வெளிவராத இருபாதங்களையும் மற்றும் சிவாகம நூல் களையும் அணிமையில் வெளியிடத் திருவுளம்பற்றி யிருப்பது தெரிந்து அடியேங்கள் உள்ளம் உருகிக் குளிரும்.

என்று மின்பம் பெருகு மியல்பினால்
நன்று **சண்முக தேசிக நாதர்தம்**
துன்று பேரொளித் தூயசெங் கோல்புவி
நின்று வாழிய நீடுபல் லூழியே.



குருபாதம்

# சிறப்புரை

தருமையாதீன வித்துவசிரோமணி

ப. அ. முத்துத்தாண்டவராயபிள்ளை அவர்கள்

இருநிதி மடந்தைய ரெவரு மேத்துவ
தொருநிதி முடிப்பர னுவந்து வாழ்வது
தருநிதி மன்னவன் றங்கி நிற்பது
தருமையம் பதியெனச் சகத்தர் கூறுவர். 1

திவ்விய பதிக்கணு தீன கர்த்தராய்
நவ்வியங் கரதலன் நயக்கு மாமர
பவ்வியல் வழிவழி யமருஞ் சண்முகர்
செவ்விய சிவநெறித் தேசி கோத்தமர். 2

ஞானசம் பந்தராம் ஞான சற்குரு
மோனசம் பந்தரா முனிவர் சற்குரு
தீனசம் பந்தரைத் தெருட்டுஞ் சற்குரு
தானதன் மஞ்செயுந் தவத்தர் சற்குரு. 3

வேதவா கமவழி விளக்குஞ் சற்குரு
போதமா நெறியினைப் புகட்டுஞ் சற்குரு
சீதமா மலரடி செப்பு வார்முடிப்
பாததா மரைகளைப் பதிக்குஞ் சற்குரு. 4

நெல்லினை நிதியைநன் னெறியைத் தம்பதம்
புல்லிய புலவர்க்குப் பொழியுஞ் சற்குரு
நல்லிய லுணர்த்திடும் ஞான முத்திரை
வல்லவர் தருமைக்கு மன்ன ரீங்கிவர். 5

சமரவேற் படைகொளுஞ் சண்மு கப்பிரா
னமரவே யுளத்தனி யருட்பெ ருங்கவி
குமரமா குருபரர் கூறு நீதிநா
லமரரா மதிபரு மதிச யிக்கவே. 6

பண்ணியல் புணர்த்திடும் பானு ஞானமா
விண்ணியல் முத்தமிழ் விரகர் காழியின்
கண்ணிய னஞ்சிவ கண்ணு சாமிசெய்
திண்ணிய உரைமொழி பெயர்ப்புச் சேர்த்திவண். 7

சொன்னவா கமமுணர் சுருதி வல்லவ
ருன்னவே பதித்தெமக் குதவு கின்றன
ரன்னவ ரருளினை யகத்துக் கொண்டியாம்
மன்னவே வாழ்த்துவோ மனத்து ளெண்ணியே. 8

நீதி நெறிவிளக்கம் நித்தம் படிப்பவர்தாம்
நீதியராய் வாழ்வார் நிசம். 9

ஒருமையாம் நீதிநெறி யோங்க அருளும்
தருமையா தீனந் தழைத்து 10



உ

குருபாதம்

# அணிந்துரை

**புதுவை, சுவாமி சுத்தானந்த பாரதியார் அவர்கள் இயற்றியது.**

*உயிரிற் கலந்த ஒருவனை யுணர்ந்தே
சீவ வாழ்க்கை சிவமய மாக
உய்நெறி காட்டிய மெய்கண் டாரின்
அருள்வழி வந்த தரும புரத்தின்
ஆதீ னத்துச் சோதியாய் விளங்கும்
பரமா சாரியார் பதிப்பொருள் கண்டார்
தமிழுஞ் சைவமுந் தழைத்திட வேண்டி
அருட்பணி பரவுந் திருத்தகு முதல்வர்
சண்முக தேசிக ஞானசம் பந்தர்
அருமை பெருமைகள் அறியார் யாரே!
முப்பொரு ளறிவுடன் முத்தமி ழறிவும்
இந்நா ளோங்கும் இயற்கலை யறிவும்
எளிதாய் தமிழருக் கெய்திட வேண்டி
மாசந் நிதியின் வண்மையிற் பூத்த
அறிவு மலர்கள் அளவில வாமே
அவற்று ளொன்றிவ் வரியகன் னூலே
கந்த னருளாற் செந்தமிழ்க் கவியாய்ச்
சித்தஞ் சிவன்பால் வைத்த துறவியாய்
கந்தரைப் போற்றுங் கலிவெண் பாவும்
உள்ள முவக்கும் பிள்ளைத் தமிழும்
கயிலை நாதர் கலம்பக முடனே
நான்மணி மாலையு மும்மணிக் கோவையும்
கவிவுறு காசிக் கலம்பக முடனே
பதிப்பா டல்கள் பலபல செய்தார்
முஸல்மான் அக்பரும் உவகை கொள்ள.*

வண்டமிழ்ப் பெருமையை வடக்கே நாட்டி
காசியிற் றிருமடங் கட்டி வசித்தார்
தரும புரத்தின் சந்நி தானமாம்
மாசி லாமணித் தேசிக ரிடமே
தீக்கை பெற்ற சிவனடிச் செல்வர்
கோதறு குமர குருபரத் தம்பிரான்
வள்ளுவர் வகுத்த மாமறைப் பொருளைத்
தெள்ளத் தெளியச் செப்பிடும் பனுவ
லருள்கெனத் திருமலை யரசன் கேட்க
அறம்பொரு ளின்பம்வீ டமைவுற நீதி
நெறிவிளக் கத்தை நிலவுறச் செய்தார்
கடவுட் பெருமையும் கல்வி நலமும்
கற்றறிந் தடங்கிய சொற்றிற மாண்பும்
சீரிய ரியல்பும் பூரிய ரியல்பும்
செங்கோற் சிறப்புங் கொடுங்கோ லிழிவும்
நல்லற மாகிய இல்லற மாண்பும்
பிறர்மனை நோக்கும் பெரும்பிழைத் தீதும்
காம நோயைக் கடிந்தார் பெருமையும்
புலன டக்கமும் பொய்யறு துறவும்
அஞ்சா நெஞ்சுடன் அவாவறுத் தொழுகலும்
பழிவினை தவிர்த்த பயனுள செயலும்
நடுநிலை யுணர்வும் கெடுநிலை தவிர்த்த
ஒழுக்கமும் விழுமிய வுரையும் பணிவும்
பெரியார் தம்மைப் பேணுந் திறனும்
ஈகையும் புகழும் இணைந்தநல் வாழ்வும்
அயரா முயற்சியும் ஆள்வினைத் திறனும்
நில்லா வுடலை நிலையெனக் கருதா
மெய்யுணர் வுடனே துய்யநல் லன்பால்
ஆண்டா னுக்கே அடித்திறம் பூண்ட
திருநெறி வாழ்வும் தேசுறக் காட்டி
மாந்தர் உய்ய மருந்தென வுதவும்
நீதி நெறிக்கு நேரிய பதவுரை
கருத்துரை அந்தக் கருத்துடை மேற்கோள்

ஆங்கில வுரையுடன் அழகுற வகுத்தான்
அன்புப் புலவன் அறிவிற் சிறந்தோன்
ஆங்கில முடனே அருந்தமி ழுணர்ந்தோன்
தமிழ்த்துடிப் புள்ள தகைபெறுந் தமிழன்
சிவனடி நேயன் சிந்தை தூயன்
ஆதீ னத்தின் அடியான் அவனே
ஆளுடைப் பிள்ளையா ரருட்பா லுண்ட
காழியம் பதிவரு கண்ணுச் சாமியே
பொற்பூ ணுக்குப் பொற்பூ ணுண்டோ
இப்பெரும் புலவன் இயற்றிய வுரைக்கும்
மதிப்புரை யுண்டோ மதிப்பிற் கடங்கா
நிதியா மிந்த நீதி நெறியைக்
கற்றறிந் தொழுகிக் கண்ணில மாந்தர்
பிறவிப் பயனைப் பெறுக
சித்தங் கலந்த சிவனரு ளாலே.



# சிறப்புரை

மகாமகோபாத்தியாய, முதுபெரும்புலவர்

**பண்டிதமணி, திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள்**

**8—3—43.**

குமரகுருபர அடிகள் அருளிச்செய்த "நீதிநெறி விளக்கம்" என்னும் அரிய நூல் திருக்குறள் முதலிய பண்டைத் தமிழ் நீதிநூல்களின் சாரமாகத் திகழ்வ தொன்று. சொற்செறிவும் பொருணலமும் வாய்ந்தது. இதற்குப் பல ஆசிரியர்கள் எழுதிய உரைப்பகுதிகளைத் தொகுத்து, ஆங்கில மொழிபெயர்ப்பையும் சேர்த்துக் காழி, சிவ. கண்ணுசாமி பிள்ளை B. A. அவர்களைக் கொண்டு அழகுற அச்சிட்டுத் தமிழுலகிற்கு உபகரித்த வர்கள் தற்காலம் தருமபுர ஆதீனத்தில் எழுந்தருளியிருக் கும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமா சாரிய சுவாமிகளாவார்கள்.** இவர்கள் தமிழ்மொழி, சைவசமய வளர்ச்சி குறித்துச் செய்துவரும் நல்லறங்கள் பலவாகும். தம் ஆதீனத்துப் பெரியோர்கள் அருளிச் செய்த சைவநூல்கள் பலவற்றையும் செப்பமுற அச்சிட்டு உதவிவருகின்றார்கள். சைவப் பெருங்கழகம் கூட்டியும், அன்னபிற கழகங்களை ஆதரித்தும் இவர்கள் செய்து வரும் உதவிகள் பல. அம்முறையில் இவ் வெளியீட்டை யும் தமிழுலகிற்கு உபகரித்த பெருமை அடிகளுக்கே உரியதாயிற்று.

தமிழ்ச் சைவவுலகு இவர்கள் புகழ் ஒளியால் விளக்க முற்றுப், பண்டைப் பெருமையைப் புதுக்கி நலம்பெறுக வென இறைவனை வேண்டுகின்றேன்.

---

உ

குருபாதம்

அண்ணாமலைநகர், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்
தமிழ்த்துறைத் தலைவர்

## கா. சுப்பிரமணிய பிள்ளை M. A., M. L., அவர்கள்

**7—3—43.**

சைவத் திருவாளர், காழி, சிவ. கண்ணுசாமி பிள்ளை அவர்கள் எழுதியுள்ள நீதிநெறி விளக்கத்தின் தொகுப்புரையைப் பார்த்துப் பெருமகிழ்ச்சியடைந்தேன். அதன்கண் ஒவ்வொருபாட்டிற்கும் உரிய பதவுரை, உரைநடை, கருத்துரை, சொற்களுக்குப் பல கலைஞர் எழுதிய சிறப்புரை, மூவர் அல்லது நால்வர் எழுதிய ஆங்கில மொழிபெயர்ப்பு முதலியனதொகுத்துக் காட்டப்பெற்றுள்ளன. இதனால் இந்நூலின் சார்பாகச் செய்யப்பட்டுள்ள பல ஆராய்ச்சிகளையும் எளிதில் ஒருங்கே தெரிந்துகொள்வதற்கு இந்நூல் பெரிதும் துணைபுரிவதாகும்.

இந்நூலுரை பிழையற்ற இனிய தமிழ் நடையில் எழுதப்பெற்றுள்ளது. ஆதலின் இது தமிழ்வாணர்கள் பலராலும் பாராட்டத்தக்கது.

தக்க தண்டமிழ் நூல்கள் பலவற்றைத் திருந்திய முறையில் அச்சிட்டுப் பொது நன்மக்களுக்குப் பயன்படுத்தும் அரிய தொண்டினை மேற்கொண்டருளும் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள் தாள் கிடையாமையால் நூல்களை அச்சியற்றலரிதா மிக்காலத்தில் இந்நூலினைச் சிறந்த முறையில் அச்சிட்டு வெளியிடும் பேருதவிக்குத் தமிழ் உலகம் என்றும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டுளது.

---

4. "இளமையு நிலையாவா லின்பமு மின்றவல்ல
வளமையு மஃதேயால் வைகலுந் துன்பவெள்ளம்"

—வளையாபதி.

5. "இச்செய்யுள், இந்நூலாசிரியரால், தாமே இயற்றியுள்ள சிதம்பரச் செய்யுட் கோவையிலும் சேர்க்கப்பெற்றிருக்கின்றது."

—உ. வே. சா.

"இஃது அறிவுரையோடு கூடிய கடவுள்வாழ்த்துச் செய்யுளென்க. இவ்வாறுங் கொள்ளுமொரு முறையைத் திருக்குறட் கடவுள்வாழ்த்து அதிகாரத்தானறிக."

—இள.

"ஆன்மாக்கள் பற்றிய பற்றை விடுவித்தற்கு, அவை இம்மையில் அனுபவித்தற்குரிய பொருள்களுள் இன்ப நுகர்தற்கு இளமைப் பருவமும் அதற்குச் சாதனமாகிய செல்வமும் சரீரமும் முக்கியப் பொருள்களாதலின், அவற்றின் நிலையாமையை யுணர்த்த எடுத்துக்கொண்டவர், நீர்க்குமிழி தோன்றி யழிதல் போல இளமை தோன்றி யழிதலின், 'குமிழி இளமை' யெனவும், அலைகள் தோன்றும்போது பெரியனவாகத் தோன்றிக் கரைசாரக் கரைசாரச் சுருங்குதல்போலச் செல்வம் தோன்றும் போது பெரிதாகத் தோன்றி வரவரச் சுருங்குதலின், 'செல்வம் நெடுந் திரைகள்' எனவும், நீரில் எழுதிய எழுத்து அப்பொழுதே யழிதல்போலத் தோன்றிய சரீரம் உடனே யழிதலின் 'நீரில் எழுத்தாகும் யாக்கை' எனவுங் கூறி, அந்நிலையாப்பொருள் களைக்கொண்டு நிலைத்த பொருளைப் பெறவேண்டும் என்பார் 'எம்பிரான் மன்று வழுத்தாதது என்?' எனவுங் கூறினர்."

—தி. சு. செ.

"புல்லறிவாளர் கண்டவுடனே மயங்குவது இளமையே யாதலின் அதனை முன்னும், அவ்விளமை காரணமாக இன்பந் துய்ப்பதற்குத் துணைக்கருவியாய் நிற்பது செல்வமே யாதலின் அதனை யதன்பின்னும், இளமை சென்றொழிந்து அவ்விளமையின் நுகர்ச்சிக்கண் பொருளழிந்து இரண்டும் போனபின்னருஞ் சிறிது காலம் யாக்கை அப்புல்லறிவாளர் இரங்குதற்பொருட்டு நிற்றலின் அதனை யவற்றின் பின்னரும் வைத்தனர்."

—வி. கோ. சூ.

"நிலையாமையைக் காட்டுதற்குக் குமிழி, திரை, எழுத்து என்பன உவமிக்கப்பட்டன. அங்ஙனம் உவமிக்கப்பட்டவைகள் மூன்றும் நீரில் நிகழும் நிகழ்ச்சிகளாயிருத்தலின், அந்நீரோட்டத்தை இளமையும் செல்வமும் யாக்கையும் பொருந்திய வாழ்க்கைக்கு உள்ளுறை யுவமமாகக் கண்டுகொள்க. உவமைகள் உருவகமாக வந்தமையால் உவமேயக் கருத்துக்கள் உறுதியாயின. இளமை எய்திப் பொருள் தொகுத்து உடம்பை விடுதலால் அவைதம்மை அம்முறையே வைத்தார். இளமை உருத்திரண்டு அழகு கெழுமி இருப்பதுபோல் இருந்து சிறிது காலத்தில் மாறுதற்கும், செல்வம் மிகுந்துங் குறைந்தும் மறைந்தும் எழுந்தும் நீளத் தொடர்ந்தும் குறுகியமர்ந்தும் மாறுபடுதற்கும், நன்றுயிருக்கும் உடம்பு சட்டென்று இறத்தற்கும் முறையே குமிழி முதலியன உவமையாக வந்தன என்க." —இள.

குமிழி, திரைகள், நீரில் எழுத்து என்றமையால் நீர் என்று கொண்டது கடலையே குறிக்கும்; பிறவிக்கடலுக்குக் கடல் உவமை. பிறவியைக் கடலாகக்கொள்ளும் மரபை 'பிறவிக்கடல் நீந்துவர்', 'பிறவாழி நீந்தலரிது' என்னும் குறட் பயிற்சியாலறிக.

**நீரிற் குமிழி இளமை :**

**நீர்**—மங்கல முதன்மொழி.

**குமிழி**—என்பது மொக்குள், கொப்புளம் எனப்பொருள் படும். இது 'முகுளம்' என்னும் வடசொற் சிதைவென்பர் சிலர். குமிழி-உருண்டு திரண்ட புடைப்பு.

'குமிழி' என்பது 'இளமை' என்பதன் பெயர்ப்பயனிலை.

" குமிழி, வினைமுதற்பொருளில் வந்த தொழிற் பெயர்; குமிழ்-பகுதி, இ-விகுதி. குமிழ்த்தல்-புடைத்தல்." —தி.சு.செ.

"ஊரி, மூடி., அம்பலத்தாடி என்புழிப்போல இவ்விடத்து இகர விகுதி வினைமுதற்பொருளைக் காட்டியது. குமிழுந் தொழிலையுடையது 'குமிழி.' குமிழ்தல்-புடைத்தல்." —சி. மு.

"குமிழ்-பகுதி, இ-வினைமுதற்பொருண்மை விகுதி. இப் பகுதி முகிழ் என்னும் முதனிலைத் தனிவினைப் பெயர் தசை,

சந்த; நாரிகேளம், நாளிகேரம்; மரகதம், மரதகம் என எழுத்து நிலைமாறி நின்றாற்போல நின்றசொல்.'' —கோ. இ.

''குமிழி தொழிலடியாகப் பிறந்த பெயர்; முகிழ் என்பதின் நிலைமாற்றாகிய குமிழ் பகுதி; இ வினைமுதற்பொருள் விகுதி. முகிழ்ப்ப தென்பது பொருள்; முகிழ்த்தல் - உண்டாதல்.'' —பழையவுரை.

**இளமை**—''இது சொன்னிலையால் மை யென்னும் பண்புப் பெயர் விகுதி பெற்றமைபற்றிப் பகுபதமாயினும், மை விகுதிக் குப் பகுதிப் பொருளின்றி வேறு பொருளில்லையாகலின் பொரு ணிலையாற் பகாப்பதமெனப்படும். இவ்வாய்பாட்டுப்பண்புகள் மைவிகுதியின்றி யியங்கா'' —சி. மு.

'' குமிழி நாள்வெயிற் காலையிற் பளபளவென மின்னிக் காணப்பட்டுச் சிறிது நேரத்தினுட் பொட்டென மாய்தல்போல இளமையும் தொடக்கத்தில் மிகவும் அழகுடைத்தாகவும் இன்ப முடைத்தாகவுங் காணப்பட்டுச் சிறிது காலத்தினுள் நலனழிந் தொழியுமென்பார், 'நீரிற் குமிழி யிளமை' யென்றார். ''படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக்கெடும்'' என்றார் நாலடியா ரினும்.'' —வி. கோ .சூ.

**நிறை செல்வம் நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்:**

**சுருட்டு**—சுருள் என்றதன் பிறவினை; இது '' நட்டபாட ேறற்றாதவர்'' என்புழிப்போலத் தன்வினைப்பொருள்பட நின் றது.'' —சி. மு.

**நெடுந்திரைகள்**—''இது பரவை வழக்கேபோலக் 'கள்' விகுதி பெற்றுத் 'திரைகள்' என நின்றது. இது முதனிலைத் தொழிலாகு பெயர் என்பாருமுளர். 'செல்வம்' என்பதற்கு இது பெயர்ப் பயனிலை.'' —சி. மு.

''நீரின்கண் நீண்ட அலைகள் பன்முறையுந் தோன்றி யழிதலே யன்றி ஓரிடத்திலேயே நிலையாய் நிற்றலின்றிப் பலவிடத் துஞ் சென்று மறிந்து மறிந்து வீழ்தல்போல, நிறைசெல்வமும் நிலைபேறின்றிச் சகடக்கால்போல மாறி மாறி வருமென்பார், 'நிறைசெல்வ நீரிற்சுருட்டு நெடுந்திரைகள்' என்றார். 'அக்கடுற

யார்மாட்டு நில்லாது செல்வஞ் சகடக்காற் போலவரும்' என்ற நாலடியாரையுங் காண்க.'' —வி. கோ. சூ.

**நீரில் எழுத்தாகும் யாக்கை:**

* "எழுத்து—உருக்கு, பெருக்கு என்பனபோல முதனிலை திரிந்த தொழிற் பெயர்.'' —கோ. இ.

"ஆகும்— தொடர்மொழி வினையாய் 'யாக்கை' என்பதன் பயனிலையாயிற்று. இதனைக் கடைநிலைத் தீவகமாக்கிக் 'குமிழி,' யொடுந் 'திரைக'ளொடுங் கூட்டியுரைத்தலுமொன்று''. —வி. கோ. சூ.

**யாக்கை**—உடல், தோல், நரம்பு முதலியவற்றால் கட்டப் பட்டது. யா-பகுதி.

"நீரின்கண் எழுதப்படும் எழுத்தானது எழுதிய அக்கணமே அழிதலின்றி யெழுதிய இடமுந் தெரியாது போதல்போல, மக்கள்யாக்கையும் விரைவினில் அழிதலேயன்றி அஃதிருந்த இடமுந் தெரியாது கெட்டழியு மென்பார், 'நீரி லெழுத்தாகும் யாக்கை' யென்றார்''. —வி. கோ. சூ.

"மின்னி னிலையில மன்னுயி ராக்கைகள்
என்னு மிடத்திறை உன்னுமி னீரே''

—நம்மாழ்வார் திருவாய்மொழி.

"நீரெழுத்துக் கொத்தவுடல்'' —காசிக்கலம்பகம்.

**நமரங்காள்:**

"ஈண்டு 'அம்' நமர்காள் என்பதனிடையே கட்டுரைச்சுவை தோன்றவும், அஃறிணைத் தன்மை தோன்றவும் வந்ததோர்

---

* "எழுதப்படுவதென்னும் பொருட்கண் எழுவென்னுமுதனிலை யுரிச்சொல்லின்முன்னர்ச் செயப்படுபொருண்மை யுணர்த்தும் ஐகார விகுதி புணர்ந்து, 'செய்யா யென்னுமுன்னிலை வினைச்சொல்' என்னுஞ் சூத்திரத்து மொழிந்தபொருளோடொன்றவவ்வயின் மொழியாததனை முட்டின்றுமுடித்தலென்னுமுத்தியால் அவ்வைகாரங்கெட்டுக் கெட்ட வழித் தகரமிரட்டித்து, எழுத்தென முடிந்தது'' என்பர் தொல்காப் பியச் சூத்திர விருத்திஆசிரியர்.

அசை. 'நாம்' என்பது பகுதி. இது 'நம்' என்று குறுகியது."
—வி. கோ. சூ.

" நங்குடித் தெய்வங் கண்டீர் நமரங்கா ளுறிமினென்ன"
—சிந்தாமணி.

**என்னே வழுத்தாத தெம்பிரான் மன்று:**

" **வழுத்தாதது**—எதிர்மறைத் தொழிற்பெயர். ழுத்துத லாகிய வாக்கின்றொழில் கூறவே மனமெய்களின் றொழில்களும் உடனுரைத்துக் கொள்ளப்படும்." —வி. கோ. சூ.

**எம்பிரான்**—இது பொதுப்படக் கடவுளைக் குறிக்குமாயினும் பின்வரும் 'மன்று' என்பதைக் கொண்டும், நூலாசிரியரது மதம் சுத்தாத்துவித சைவசித்தாந்தமாக இருப்பதைக் கொண்டும் இஃது அம்பலத்தாடுங் கூத்தப்பிரானையே குறித்ததாகக் கொள்ளல் ஏற்புடைத்தாம்.

**மன்று**—மன்-பகுதி, று-விகுதி. நிலைபெற்றிருப்பது என்பது பொருள். இங்கு, " திருச்சிற்றம்பலம் " ஆகிய சிதம்பரத்தை யுணர்த்தும். நிலைபெற்றுள்ளதென்னும் பொருள்படும் "மன்று" என்ற சொல்லாட்சியினால் முற்கூறிய இளமை, செல்வம், யாக்கை என்ற மூன்றன் நிலையாமை வலியுறுத்தப்பட்டது. அன்றியும், "மன்று" என்ற குறிப்பால் அம்பலத்தரசன் மன்றத்தில் அருளும் தன் திருநடத்தில் உற்ற திரோதத்தை உணர்த்துவான் ஊன்றிய மலர்ப்பதத்தையும், முத்தி யுணர்த்தும் அவன்றன் நான்ற மலர்ப்பதத்தையும் உணர்த்தியவாறும். என்னை? "கோளிற் பொறியிற் குணமிலவே எண் குணத்தான் தாளை வணங்காத் தலை" என்றார் பெருநாவலராகலின். "எம்பிரானல்கும் வீடதேயலால் துன்பமறு மார்க்கம் வேறு உண்டோ?" என்றார் கந்தபுராணமுடையாரும்.

"இஃது உருவகவணி. இவ்வுருவகத்திற்கு ஏற்றவாறு, எப்போதுஞ் சலனமுள்ள நீரினை, நிலைவேறுபட்டு மாறி மாறி நிகழுமிவ்வுலகினுக்குவமையாக விரித்துரைத்துக் கொள்க."
—வி. கோ. சூ.

"நமரங்காள்" என அன்போடழைத்து இதத்தைக் கூறியதனால் பாட்டு முழுவதுஞ் சேர்ந்து ஆர்வமொழி என்னும் அலங்காரமாம்."
—உள. பு. செ.

"வழுத்தாதது எழுவாய்; என் பயனிலை"

இச்செய்யுள் இருவிகற்பத் திராசிடை நேரிசை வெண்பா.
—பழையவுரை.

Youth is a bubble on the water: riches in full abundance are the long waves that roll on the water: the body is a writing on the water. Why, O my friends! worship we not the Court of our God? —H.S.

Youth is a bubble on the surface of the waters. Abundant wealth is like the rolling waves of the ocean. The body is like character traced on water. Why then, do we not, Oh my friends! worship the temple of our God(நடேசன்)? —C. M.

Youth is a bubble on the water; abundant riches are the long waves that roll on the water; the body is a letter written on the water. Why then, Oh my friends! praise we not the Temple of our God? —S. W.

Youth is a bubble on water; abundant riches are the long rolling waves of ocean; and the body lasts no longer than letters traced on water. Why then, my friends, do you not worship in the court of our Lord? —T.B.K.

Youth is bubble, riches full are a long roll of breakers; and the body is mere writing on the water, yet Oh our kinsmen! why hasten you not to sing the glory of our Lord's Hall? —K. S.

---

## 2. 'கல்வியின் பயனும் சிறப்பும்

அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை.

1. அறம் - தருமத்தையும், பொருள்-செல்வத்தையும், இன்பமும்-இன்பத்தினையும், வீடும் - முத்தியினையும், பயக்கும் - கொடுத்து; புறங்கடை - ஊர்க்குப் புறத்தே, நல்லிசையும் - குற்றமற்ற புகழையும், நாட்டும் - நிலைநிறுத்தி; உறும் - வரக்கடவதாகிய, கவல் - கவலை, ஒன்று - ஒன்று, உற்றுழியும் - வந்தவிடத்தும், கைகொடுக்கும் - உதவிபுரியும்; கல்வியினூங்கு-கல்வியினு மேம்பட்டுச் (சிறந்த வேறு ஒன்று), இல்லை - இல்லை, சிற்றுயிர்க்கு - சில வாழ்நாட்களையுடைய (மக்கள்) உயிர்களுக்கு, உற்ற - பொருந்திய, துணை - துணையாக.

2. அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும், புறங்கடை நல்லிசையும் நாட்டும், உறுங்கவலொன்று உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியினூங்கு சிற்றுயிர்க்கு உற்றதுணை இல்லை.

3. இம்மை மறுமைப் பயன்களுக்கும் முத்திக்கும் ஏதுவாய கல்விப்பொருளொன்றே மக்களுக்கு எவ்வாற்றானுஞ் சிறந்த துணை என்பது கருத்து.

4. "கற்பக் கழிமட மஃகு மடமஃகப்
புற்பந்தீர்ந் திவ்வுலகின் கோளுணருங் கோளுணர்ந்தான்
தத்துவ மான நெறிபடரு மந்நெறி
இப்பா லுலகி னிசைநிறீஇ—யுப்பால்
உயர்ந்த உலகம் புகும்." —நான்மணிக்கடிகை.

5. "இதுமுதல் எட்டுச் செய்யுட்களால் கல்வியின் இயல்பு கூறப்படும்." —உ. வே. சா.

"இதுமுதல் "வேத்தவை காவார்" (செய்யுள்-26) இறுதியாகக் கல்வியாலாய பயன் கூறுகின்றார்." —தி. சு. செ.

"பொருளின்பாற்பட்ட கல்வியை முதற் கூறினர், 'வடு விலா வையத்து மன்னிய மூன்றி னடுவண தெய்த விருதலையும் எய்து" மாதலின்." —சி. வை. தா.

"இம்மைப்பயன், மறுமைப் பயன், மோட்சம் இம்மூன்றை யுந் தருவதாதலால் முதலில் அறத்தையும், இம்மை மறுமைப் பயன்களைத் தருவதாதலால் அதன்பின் பொருளையும், இம்மைப் பயன் ஒன்றனைத் தருவதாதலால் ஈற்றில் இன்பத்தையும் முறையே வைத்தும், அவற்றோடு சாத்தியமாய் நிரதிசய நித்திய இன்பத்ததாகிய வீட்டிடை வேற்றுமை தோன்ற அம்மூன்றை யும் அறம்பொருளின்பம் என ஒருசேரவைத்து உம்மை கொடுத் துப் பிரித்தும், மக்கள் அடைதற்குரிய பொருள் இந்நான்குமாத லால் வீடுமென அவற்றுடனெண்ணியும், இந்நான்கையுமே யன்றித் தன்னைப்பற்றி யுளதாம் கீர்த்தியையும், நேரிட்ட இடுக் கணினின்று நீங்கும் உபாயத்தையுந் தரவல்லதாதலால் 'பயக்கும், நாட்டும், கைகொடுக்கும்' எனத் தனித்தனிப் பயனிலை கொடுத்துங் கூறினர்." —கோ. இ.

"பயக்கும், நாட்டும், கைகொடுக்கும் என்னும் இம்மூன்று பெயரெச்சங்களும் 'கல்வி' என்னும் ஒரேபெயரைத் தழுவி நிற் றலின், முன்னருள்ள 'பயக்கும், நாட்டும்' என்னும் பெயரெச் சங்களைப் 'பயந்து', 'நாட்டி' என வினையெச்சமாக்கிப் பொருளு ரைத்தாம். இவ்வாறு முடித்தலே ஆன்றோர் மரபாகவும், சிலர் இதனை அறியகில்லாது எழுவாயை வருவித்துத் தனித்தனிப் பின்னவாக்கியமாக்கிப் பொருள்கூறி இடர்ப்பட்டு மயங்குவர். அவ்வாறுரைத்தல் போலியென்ப துய்த்துணர்க. யாங்கூறுவதே **பிரயோகவிவேக** முடையார்க்குமொப்ப முடிந்ததாமாறு காண்க" —வி. கோ. சூ.

**அறம் பொரு ளின்பமும் வீடும் பயக்கும்:**

"**அறம்**—அறு - பகுதி, அம் - செயப்படுபொருள் விகுதி. மனுமுதலிய நூல்களால் இது செய்க இது தவிர்கவென வரை யறுக்கப்பட்டதாதலின் 'அறம்' எனக் காரணப் பெயராயிற்று. அஃது ஈகை முதலிய நல்லொழுக்கங்களாம்." —வி. கோ. சூ.

"ஈதல் அறம்" —ஔவையார்.

"அறமென்று ஈண்டுக்கூறியது சன்மார்க்க வமைதியை. மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன் ஆகுலநீர பிற."
—சி. வை. தா.

அறம் என்பதற்குப் பொதுப்படத் தருமம் என்று பொருளுரைக்கப்பட்டதாயினும், அரிதிற் பெற்ற ஆறறிவின் துணை கொண்டு மனத்துக்கண் மாசிலனாகி, விதிவிலக்குகளை உணர்ந்து தெரிந்து, ஈகை முதலிய நல்லொழுக்கங்களை மேற்கொள்ளும் முறை என்பதனையே அஃதுணர்த்தும். தருமம் முறையென்று பொருள்படலுங் காண்க. இதுவே பயக்கும் என்ற வினைப் பொருட்கேற்ற பொருளுமாகும்.

**பொருள்**—"தீவினைவிட் டீட்டல் பொருள்."—அவ்வையார்.

"பொருளாவது தீயவழியினீங்கிச் சம்பாதிக்கும் பொன், மணி, நெல் முதலியன."
—ஏ. எஸ். ஜெ.

**இன்பம்**—தலைவனும் தலைவியும் வெறுப்பின்றி மனமியைந்து ஒருமித்து வாழ்தல்.

"எஞ்ஞான்றும் காதலிருவர் கருத்து ஒருமித்து ஆதரவு பட்டதே யின்பம்."
—அவ்வையார்.

" தாம் வீழ்வார் மென்றோட் டுயிலி லினிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு."
—குறள்.

**வீடும்** — வீடாவது, அறம் பொருள் இன்பமென்ற இம் மூன்று பற்றையும் விட்டுவிடுதல். விட்ட அந்நிலையே பேரின்பமாம்.

"பரனை நினைந்து இம்மூன்றும் விட்டதே பேரின்ப வீடு."
—அவ்வையார்.

" 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்பதற்கிணங்க, வீடு -விடு என்னும் பகுதியினின்றும், மோக்ஷம் 'முச்'(விடு)என்னும் பகுதியினின்றும் பிறந்துள்ளன; விடு என்னும் முதனிலை திரிந்து நின்றதனால், வீடு முதனிலை திரிந்த தொழிற்பெயர். அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றுந் திரிவர்க்கம்; வீடு அபவர்க்கம்............இகத்தில் அடையக்கூடிய பயன்களன்றி மானுட

வுடல் படைத்ததற்குப் பயனாக அடையவேண்டிய வீடும் என்றுணர்த்த உயர்வு சிறப்புப்பொருளதாம் உம்மை சேர்த்தனர்."

—போ. வே.

"இம்மையில் மக்களுறுதிப் பொருளும் மறுமையில் மக்களுறுதிப் பொருளும் இவையெனப் பிரித்துக் காட்டுவார் 'அறம் பொருளின்பமும் வீடும்' என உம்மையை யிடையே பெய்துரைத்தார். இனி, முப்பாலாகத் திருவள்ளுவநாயனார் முதலியோர் கூறினமையான் 'அறம்பொருளின்பமும்' என உம்மை கொடுத்து ஒருங்கு சேர்த்தும், "சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாகிய அந்தமிலின்பத் தழிவில்" வீட்டை 'வீடும்' எனப் பிரித்துங் கூறினாரென்பதுமாம். இந்நான்கனையும் வடநூலார் தர்மார்த்த காமமோக்ஷம் என்னுஞ் சதுர்வித புருஷார்த்தமென்ப."

—வி. கோ. சூ.

**புறங்கடை நல்லிசையு நாட்டும்:**

"**புறங்கடை** என்புழிக் கடை என்பது ஏழாம் வேற்றுமை உருபு. இங்கே புறமென்பது கற்றுவல்லோனிருக்கும் ஊர்க்குப் புறமாகிய இடத்தை."

—அ. கு.

"புறங்கடை- பின் முன்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை, "நுனிக்கொம்பர்", "கடைக்கண்" என்புழிப்போல. அன்றிக் "கடைப்புறம்" என்பதன் இலக்கணப் போலியுமாம்."

—வி. கோ. சூ.

புறங்கடை என்பதைப் புழைக்கடைக்கு எதிர்ப்பதமான தலைக்கடை எனக்கொண்டு தலைவாயில் என்னும் பொருள் கொள்வது அத்துணைச் சிறப்பன்று.

"Here it has the sense of abroad. It occurs in its proper sense of outer court or gate in lines 103, 141, 189 and 260"

—H. S.

**நல்லிசையும்**—இசை-பாட்டு; புகழ்பெற்றோர் சரிதத்தைப் பலர் பாடுகின்றமையால் இசை "கீர்த்தி" என்னும் புகழுமாயிற்று. "புலவர் பாடும் புகழுடையோய்" என்பது **புறநானூறு.**

"இந்நிலத்து மன்னுதல் வேண்டின் இசைநடுக"

—நான்மணிக்கடிகை.

**உறுங்கவலொன் றுற்றுழியுங் கைகொடுக்கும்:**

**கவல்**—''கவல்-கவலை; கவலையாவது இட்டமுள்ள ஒன்றினை இழத்தன் முதலியவற்றால் மனத்தில் தோன்றும் வியாகுலம்,''
—அ. கு.

''உறுங்கவல்—முன்வினைப்பயனாகக் கட்டாயம் வந்தே தீரும் கவலைக்கிடமான செய்கை. உறுங்கவல் - மிக்க கவலையுமாம்.''
—இள.

**உற்றுழியும்**— ''உற்ற வழியும் எனற்பாலது உற்றுழியும் என நின்றது தொகுத்தல் விகாரம். இதன்கண்ணுள்ள உம்மையை எண்ணும்மையாகக் கொள்ளலேயன்றிக் கல்வி யறிவுடையார்க்கு உறுங்கவலுறுதல் அருமையினும் அருமையெனக் காட்டுதற்கெழுந்த எதிர்மறை யும்மையாகப் பொருளுரைத்தலு மாம்.''
—வி. கோ. சூ.

**கைகொடுக்கும்** — '' கவலையுற்றுழிக் கைகொடுத்தலாவது இடையே வந்த இடுக்கணைக் கெடுத்துச் செயற்பாலது இதுவென அறிந்து மனங்கிளர்தற்குக் காரணமான அறிவினை உண்டாக்குதல். ''வறுமையான் மடமைதன்னான் வருந்திநெஞ் சழியுங்காலை-உறுதிசெய் துணையாங்கற்ற வுணர்வினை வளர்க்கும்'' என்பது **விநாயக புராணம்**''
—அ. கு.

''வழுக்கு நிலத்திற் கால் நிலைதவறி வீழ்தலுறுவானுக்கு அருளி நிற்கும் நண்பன் சிறிது போழ்துந் தாழ்த்தலின்றித் தன்கையைக் கொடுத்து அவனை வீழவொட்டாது தடுத்துக் காத்தல் போலக் கல்வியும் உதவுமென்பார் இங்ஙனங் கூறினார்.''
—வி. கோ. சூ.

**கல்வியினூங்கில்லை:**

**கல்வியின் ஊங்கு**—' கல்வியின்-ஐந்தனுருபு ஏற்றங்கருதிய உறழ்வுப்பொருளில் வந்தது; இதனை எல்லைப்பொருளென்பாரு முளர்.''
—வி. கோ. சூ.

'ஊங்கு' மிகுதிப்பொருள் தருவதோரிடைச்சொல். உரிச்சொல் என்றுகொள்வாருமுளர்.

**சிற்றுயிர்க் குற்ற துணை:**

**சிற்றுயிர்க்கு** — "சிற்றுயிர் - செம்பொனணியணிந்த செவியுடையாரைச் செஞ்செவியர் என்பதுபோல்வதாகிய ஒரு குறிப்பு."
—கோ. இ.

"உயிர்கள் சிறிய பெரிய அல்லவேனும் அவை வாழுமுடல்கள் கணப்பொழுதும் நீட்டித்து நில்லாமையின் அதுகருதிச் 'சிற்றுயிர்' என்றார். இதுபற்றியன்றே "மின்னினிலையில மன்னுயிராக்கைகள்" என்றார் பிறரும். சிறுமை + உயிர் — சிற்றுயிர். 'ஈறுபோதல்' என்ற நன்னூல் விதியான் அமைத்துக்கொள்க. அன்றிச் சில வாழ்நாட்களையுடைய வுயிர்களைச் 'சிற்றுயிர்' என்றது ஒருவகைக் குறிப்புமாம். இனிப்பேருயிராகிய பரமான்மாவினின்றும் நீங்குதற்பொருட்டு சீவான்மாவைச் சிற்றுயிரென்றார் என்பாருமுளர். 'உயிர்' என்பது சர்வான்மாக்களையும் பொதுமையிற் குறித்துநிற்குமாயினும், கல்வி துணையாவது மக்கள் உயிர்க்கே ஆதலின் அதற்கேற்பப் பொருளுரைத்தாம்."
—வி. கோ. சூ.

"சிற்றுயிர்-அறிவிலும், ஆற்றலிலும் சிறுமையுடைய உயிர்; அது மலத்தாற்றொடக்குற்று ஏங்குஞ் சிறுமையையுங் குறித்து நின்றது."
—இள.

"உயிரை அணுவென்னும் மரபுபற்றிச் சிற்றுயிரென்றார்."
—உ. வே. சா.

**உற்ற துணை** — "சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினையுடைய உயிர்கட்கு, இம்மைக்குரிய அறமுதலிய மூன்றையும் அவற்றாலாகிய புகழையுந் தருதற்குச் சாதனம் செல்வப்பொருளாயினும் மனக்கவலையை ஒழித்தற்கும் முத்தியை அடைவித்தற்குஞ் சாதன மாகாமையால் அவை எல்லாவற்றையுந் தருதற்குச் சாதனங் கல்வியே யென்பார் 'சிற்றுயிர்க் குற்றதுணை கல்வியினாங்கில்லை" என்றார்.
—தி. சு. செ.

"முதலடியுளும் இரண்டாமடியுளும் நான்காமடியுளும் மோனையின்மை காண்க. இச்செய்யுள் வடசொல் ஒன்றேனுமின்றிவந்த தனித்தமிழ்ப் பாடலாதல் காண்க." —வி. கோ. சூ.

"துணை எழுவாய்; இல்லை பயனிலை"

It will bestow virtue, riches, pleasure and Heaven; it will establish a good report in the world, and when any great affliction may betide, it will afford a hand; than learning short-lived mortals have no surer stay. —H. S.

It will teach virtue and, yield wealth and pleasure, and heavenly bliss; it will establish a good name abroad; and when calamities befall you, it will lend a helping hand. Hence there is no better support to short-lived mortals than learning. —C. M.

It will bestow virtue, wealth, pleasure and heavenly bliss; it will establish reputation abroad; and when any great affliction may befall, it will yield support; hence, to short-lived mortals there is no surer stay than learning. —S. W.

Virtue, wealth, pleasure and heavenly bliss learning bestows; it establishes a good name abroad; and when a calamity befalls, lends a helping hand. There is thus no better support to short-lived humanity than learning. —T. B. K.

Enlightment gives one righteousness, wealth pleasure, and lasting bliss; establishes fair fame in the world at large and lends a helping hand in a circumstance of extreme anxiety. Hence there is no better helpmate than it to the human soul. —K. S.

---

## 3. கல்வியின்பம்

தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கும்
மடங்கொன் றறிவகற்றுங் கல்வி—நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது.

1 தொடங்குங்கால்-கற்கப்புகுங்காலத்திலே, துன்பமாய் - துன்பம் விளைப்ப (துபோல்வ)தாகி, இன்பம் - (பின்னர்) இன்பத்தை,

பயக்கும் - விளக்கும், மடம்-அறியாமையை, கொன்று - நீக்கி, அறிவு-அறிவினை, அகற்றும் - பெருகச் செய்யும், கல்வி-கல்வி; நெடுங்காமம் - மிக்க காமமோ, முன்-தொடக்கத்தில், பயக்கும் - விளக்கின்ற, சில்நீர-சிறிது பொழுதே இருக்குந் தன்மையையுடைய, இன்பத்தின் - இன்பத்தைக்காட்டிலும், முற்றிழாய் - தொழினலம் முற்றிய அணிகலனுடையவளே, பின்-பின்னர், பயக்கும்-விளக்கின்ற, பீழை-(நெடுங்காலந் தங்கி வருத்துவதாகிய) துன்பம், பெரிது -பெரியதாகும்.

2. முற்றிழாய்! மடங்கொன்று அறிவகற்றும் கல்வி தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும்; நெடுங்காமம் முற்பயக்கும் சின்னீர இன்பத்தின் பிற்பயக்கும் பீழை பெரிது.

3. **போலியின்பம் பயக்கும் காமம்போலாது கல்வி மெய் யின்பம் பயத்தலின், அதனைப் பயிலல் வேண்டும் என்பது கருத்து.**

4. "உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்" —குறள்.

5. "கல்வியின் உயர்வுங் காமத்தின் இழிவுங் கூறப்படும்"
— உ. வே. சா.

"காமத்தில் இன்பம் ஊறிவரும் மக்களில் கற்றலென்பது துன்பமாயிருக்கிறதே என்று எண்ணுவார்க்கு விடைமொழியாகும் இச்செய்யுள். துவக்கத்தில் காமம் தரும் இன்பத்தை விடக் கடைசியில் தரும் துன்பம் பெரிது என்னுங் குறிப்பினாலே கல்வியும் முதலில் தரும் துன்பத்தைவிடப் பிறகுதரும் இன்பமே பெரிதாயிருக்கும் என்றொன்றுங் கொள்க." —இள.

தொடக்கத்தில் கல்வி துன்பம் விளைத்துப் பின்பு இன்பத்தைத்தரும்; அன்றியும் அறியாமையைக் கெடுத்து அறிவைப் பெருக்கும் என முன்னிரண்டடிகட்குச் சிலர் கூறிப்போந்த உரை சிறவாமையறிக. அறியாமை நீங்கின விடத்தன்றி மெய் யின்பந் தோன்றாதென்ப தொருதலை.

அணிநலன் நோக்கிப் பின்னிரண்டடிகட்கும், மிக்க காமம், தொடக்கத்தில் கொடுக்கின்ற சிறிதுபொழுதே யிருக்குந்

தன்மையை யுடைய இன்பத்தினும், பின்னர் துன்பத்தைப் பெரிதும் விளைக்கும் எனப் பொருள் கொள்ளலுமாம்.

**தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும்:**

**தொடங்குங்கால்** — "காலத்தில்" என்பது கால் எனத் தொகுத்து நின்றது; காலம் என்னும் பெயர் கால் என அம் கடைக்குறையாய் வந்தது எனலுமாம்.

**துன்பமாய்**—"துன்பந்தரும்பொருளைத் துன்பமாய் என்றது உபசார வழக்கு." —ஏ. எஸ். ஜெ.

**மடம் கொன்று அறிவகற்றும் கல்வி:**

**கொன்று**—என்பது இலக்கணை.

"கற்கப் புகும்போது நீங்காதிருந்த அறிவின்மையே துன்பம் பயத்தற்கும், கற்றுணரவுணரத் தோன்றும் அறிவுண்மையே இன்பம் பயத்தற்குங் காரணமாதலைப் புலப்படுத்தற்கே 'மடங்கொன் றறிவகற்றுங் கல்வி' என்றார்."—அ. கு.

"அறியாமை மீண்டும் உண்டாகாதவாறு கல்வி கெடுத்து விடும் என்பார் 'கொன்று' என்றார். 'கற்பக் கழிமடமஃகும்' என்ற **நான்மணிக்கடிகைச்** செய்யுளும் இக்கருத்தது."—இள.

**நெடுங்காமம் முற்பயக்கும் சின்னீர இன்பத்தின்:**

**நெடுங்காமம்**— "எல்லாப் போகங்களினும் தான் மிக்க விருப்பங்கொடுத்தல்பற்றி மகளிர்போகம் நெடுங்காமமெனப் பட்டது" —அ. கு,

"காமத்துக்குச் சிறுமை அடை கொடாது நெடுமை அடை கொடுத்தது அறிவிலான் அதனைப் பெருமையாகக் கொள்ளுதல் பற்றி என்க." —கோ. இ.

இஃது உட்பகை ஆறனுள் முதலில் வைத்தெண்ணப்படுவதாகும்.

**சின்னீர**—சின்மையாகிய நீர என விரியும்.

"சிறுமையைச் சின்மை என்பது வழக்கெனவும், மரபு வழு வமைதி எனவுங் கூறுவர் சேனாவரையர் முதலியோர்." -கோ. இ.

"சின்மை சிறுமை என்பதன் மரூஉ. சில் நீர்மை பண்புத் தொகை. நீர பண்படியாகப் பிறந்த குறிப்புவினைப்பெயரெச்சம்; நீர்மை பகுதி." —பழையவுரை.

**முற்றிழாய் :**

"முற்றிழை யென்பது அன்மொழித்தொகைக் காரணப் பெயர் விளி. இனி, உறுப்பனைத்திலும் ஆபரணங்களை யுடையாளே எனப் பொருள் கூறுதலுமியலும்." —வி.கோ.சூ.

இது "மகடூஉ முன்னிலை" எனப்படும்.

**பிற்பயக்கும் பீழை பெரிது :**

**பீழை** — "பிழையென்பது பீழையென நீண்டதெனவும், 'பீடா' வென்னும் வடசொற் சிதைவெனவுங் கூறுவாருமுளர்." —வி. கோ. சூ.

"பீழையென்னும் வடமொழிச் சிதைவு; நாடிகாவென்றது நாழிகை யென்று வந்தாற்போல." —உ. வே. சா.

Learning at first painful, will afterwards afford pleasure. It will destroy ignorance and extend knowledge. But the pain, which succeeds to the short-lived pleasure of immoderate lust, is great, O thou, adorned with perfect jewels !

—H. S.

Learning, though painful in the beginning, will (ultimately) afford delight. It will dissipate ignorance, and extend knowledge. Oh! thou, decorated with well-wrought jewels! The evil that springs in the end from protracted sensual indulgence exceeds the frivolous pleasure it at first affords. —C. M.

Learning, though painful at first, will afterwards afford pleasure. It will destroy ignorance and extend knowledge.

O thou, adorned with perfect jewels! the pleasure which sensual indulgence affords at first is transient, but the pain which succeeds to it is great and lasting. —S. W.

Painful at first, learning affords pleasure afterwards; it destroys ignorance and enlarges knowledge. But thou, adorned with perfect jewels! know that the pain that succeeds the short-lived pleasure of lust, is great. —T. B. K.

Study, hard at the start, will yield delight in effect by killing ignorance and widening the intellect; while the misery which persistent lust causes in the end, is far worse, than the petty pleasure it fetches at first. —K. S.

---

## 4. கல்விச்செல்வம்

கல்வியே கற்புடைப் பெண்டிரப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே யீர்ங்கவியாச்—சொல்வளம்
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்துஞ்
செல்வமு முண்டு சிலர்க்கு.

1. கல்வியே - தாம் கற்ற கல்வியறிவே, கற்பு உடை - கற்புள்ள, பெண்டிர் - மனையாட்டியாகவும், அப்பெண்டிர்க்கு - அம்மனையாட்டியர்பால் (தாம்பெற்ற), செல்வப் புதல்வனே - அருமந்த பிள்ளையே, ஈர்ங்கவியா - (தாமியற்றிய) இனிய செய்யுளாகவும், சொல்வளம் - சொல்வன்மையே, மல்லல் - வளப்பந் தரும், வெறுக்கையா - செல்வப் பொருளாகவும் (இருப்பதோடு,) மாண் - பெருமை நிறைந்த, அவை - பேரவை (யில் இடம்பெற் றமர்ந்து), மண்ணுறுத்தும் - அணிசெய்விக்கும், செல்வமும் - தனிச் சிறப்பும், உண்டு - உளவாக அமைந்து கிடப்பது, சிலர்க்கு - ஒருசிலர்க்கேயாம்.

2. சிலர்க்குக் கல்வியே கற்புடைப் பெண்டிர் (ஆ), ஈர்ங் கவியே அப்பெண்டிர்க்குச் செல்வப் புதல்வன், சொல்வளமே மல்லல் வெறுக்கையா, மாணவை மண்ணுறுத்தும் செல்வமும் உண்டு.

3. **திறம்படக் கல்விகற்று, அதனாற் செய்யுளியற்றும் ஆற்றல் பெற்று, அதனுட் பொதிந்து கிடக்குங் கருத்துக்களை எடுத்துப் பலர்க்குங் கூறும் சொல்வளமும் பெற்று இவற்றின் பயனாகக் கற்றோர் நிறைந்த வேத்தவையில் இடம் பெற்று அங்கு அவையஞ்சாது யாவரும் வேட்பத் தொண்டாற்றும் தனிச்சிறப்பைப் பெறுவதே உண்மையான கல்வியுடைமையாகும். இதனைப்பெற ஒவ்வொருவரும் முயலவேண்டுமென்பது கருத்து.**

4. "கேடில் விழுச்செல்வம் கல்வி யொருவர்க்கு
மாடல்ல மற்றை யவை" —குறள்.

"கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
செல்வமுஞ் செல்வ மெனப்படும்."—(இந்நூல்: 16-ம் செய்யுள்)

5. "கல்வி, கவித்துவம், பாடங்கூறும் வன்மை, சொல் வன்மை என்பன ஒன்றைக்காட்டிலும் ஒன்று சிறப்புடையன வென்று கூறுகின்றார்." —உ. வே. சா.

"இல்வாழ்க்கை இனிது நடத்தற்கு இன்றியமையாதவர் கற்புடைப் பெண்டாதலின் அவளை இம்மை மறுமைக்கு இன்றியமையாத கல்விக்கு உவமானமாக்கியும்; இல்வாழ்க்கைக்கு அழகு பிள்ளைப் பேறாதலின் புதல்வனை, கல்வி கற்றதற்கு அழகாகின்ற தான் பாடுங்கவிக்கு உவமையாக்கியும் (புதல்வனில்லாவிடில் தந்தைக்கு மோட்ச சித்தியில்லை யாதல்போல, கவிபாடுந்திறம் இல்லாவிடின் கற்ற கல்வியாற் பயனில்லை யாதலால், புதல்வனைக் கவிபாடுந் திறத்துக்கு உவமையாக்கியும் என்வுமாம்); மனைவி மகனைப்பெற்றும் செல்வமில்லாவிடின் இல்வாழ்க்கை இனிது நடவாமைபோல, ஒருவன் கல்விகற்றுக் கவிபாடுந்திறம் பெற்றும் தான் கற்ற கல்வியையும் தான்பாடின கவியையும் பிறரறியச் சொல்லும் சொல்வளமில்லாவிடின் பயன்படாமையால் சொல்வளத்துக்குச் செல்வத்தை உவமையாக்கியுங் கூறினர்............... கல்வியும் கவிபாடுந் திறமும் சொல்வளமும் ஒருவன் பெற்

றிருப்பினும் பலர் கூடிய சபையில் அலங்காரமாய் அச்சமின்றிப் பிரசங்கஞ் செய்வது அருமையினும் அருமையாதலால் மாணவை மண்ணுறுத்துஞ் செல்வமுமுண்டு என்றார். இங்ஙனஞ் செய்யக் கூடியவர்களும் 'ஆர்த்த சபை நூற்றொருவர் ஆயிரத் தொன்றாம் புலவர், வார்த்தை பதினாயிரத்தொருவர்' ஆதலின் சிலர்க்கு உண்டு என்றார்.'' —பழையவுரை.

'மடங்கொன் றறிவகற்றுங் கல்வி' யுடையராதல் சிலர்க்கே இயலும். அவ்வாறு கல்வியறிவைப் பெற்றாலும் பொருணலம் அணிநலம் சிறக்கச் செய்யுளியற்றுந் திறன் வாய்க்கப் பெறுதல் ஒருசிலர்க்கே இயலும். அவருள்ளும் ''கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்'' வேட்பத் தங்கருத்தை தெள்ளத் தெளிய நயம்பட எடுத்துரைக்கும் சொல்வன்மை பெறுதல் ஒரு சிலர்க்கே இயலும். அவருள்ளும் அத்தகைய அரிய கல்வியறிவுடைமை யேதுவாக மக்களாற் பாராட்டப்பட்டுப் பேரவையில் முந்தியிருக்கும் பேறு பெற்று, அங்குக் குழுமியுள்ள ''கற்றார்முற் கற்ற செலச்சொல்லி''க், ''கற்றாருட் கற்றாரென''க் கொண்டாடப்படும் சிறப்பைப் பெறுதல் மிகச் சிலர்க்கே இயலும். என்னை? கல்வியறிவு நிறைந்திருந்தும் செய்யுளியற்ற மாட்டாரையும், கல்வியுடன் செய்யுளியற்று மாற்றல் பெற்றிருந்தும் பிறர் அறிய எடுத்துரைக்கும் நாவன்மை வாய்க்கப் பெறாதாரையும், கல்வியறிவு செய்யுளியற்றுந்திறம் சொல்வன்மை ஆயமூன்றும் வாய்ந்தும் மக்களாற் பாராட்டப்படாது மூலையில் மங்கிக் கிடப்பாரையும் நாளுங் காண்ட லியல்பாகலின் என்க.

''புகழும் பொருளும் பிறவும் பெற்று மேம்படுதற்குக் காரணமாதல் பற்றிக் 'கல்வியே கற்புடைப் பெண்டிர்' என்வும், சித்திரித்துச் சபையிலே வைக்கப்பட்ட பொருள் பார்ப்பவர் மனதைக் கவர்ந்து சிறப்பித்தல்போல நற்கவிஞருங் கற்றோர் மனதைக் கவர்ந்து சிறப்பித்தல் பற்றி 'மாணவை மண்ணுறுத்தும்' எனவுங் கூறினர்.'' —அ. கு.

''கல்வியோடு கூடிய ஒருவன் வாழ்க்கை, நல்ல மனைவியோடு கூடிய இல்லறம் நிகழ்த்தும் ஒருவன் வாழ்க்கையை ஒக்கும்.'' —இள.

**கல்வியே கற்புடைப்பெண்டிர் :**

"**கல்வியே**—என்பதில் ஏகாரம் பிறபெண்டிரினும் இது விசேஷமென்றுசிறப்பும் பொருளில் வந்தது." —ஊ. பு. செ.

**கற்புடை(ய)**—"கல்-பகுதி. கணவனாற் றலைவிக்குக் கற்பிக்கப்படுவது என்பது பொருள்.; அஃது அவனாணைவழி யொழுக லுக்காயிற்று. அத்தகைய மனைவி போலவே கற்ற கல்வியும், கற்றோனது ஆணைவழி யொழுகல்வேண்டு மென்பதாயிற்று. அஃதாவது வேண்டுழி வேண்டுழி வந்துதவவேண்டு மென்பதாம். மறவியே தலைவன் சொற்கடந்து நடத்தலாம். 'கற்பெனப் படுவது சொற்றிறம்பாமை' என்றாள் **தமிழ் மூதாட்டியும்**"
—வி. கோ. சூ.

"'கற்புடைப் பெண்டிர் என்றார் எழுமையுந் தொடர்ந்து வருதலின். பெண்டிர்-மனைவி; கல்வியைப் பெண்டிராக்கியது அதற்குரிய வடசொல்லாகிய வித்யாவென்பது பெண்பாற் சொல்லாதல்பற்றி. 'நாணென்னும் நல்லாள்' (குறள்:924) என்பதனாலும் அதனுரையாலும் இத்தகைய வழக்கை அறிக."
—உ. வே. சா.

**அப்பெண்டிர்க்குச் செல்வப்புதல்வனே ஈர்ங்கவியா:**

**பெண்டிர்க்கு**—'இர்' ஈற்றுப் பெண் பலரறிசொல்: மகளிர் என்பதும் அற்று; 'கேளிர்' 'புத்தேளிர்' என வேறு சொற்களும் காண்க. பெண்டிர்க்கு - வேற்றுமைப்பொருண் மயக்கம்; இதனை யறியார் உருபுமயக்க மென்பர்." —வி. கோ. சூ.

"பெண்டிரென்பது ஒருவர் மனைவியை வேறொருவர் கூறுங் கால் பன்மையாற் கூறுதல் முறையாதலால் அவ்வாறு உயர்வு பற்றிவந்த பால்வழுவமைதி; 'பெண்டிர்' பண்படியாகப் பிறந்த பெயர்; பெண்டு பகுதி." —கோ. இ.

"இங்ஙனங் கற்புடை மகளிரை உயர்வாகக் கோடல் தமிழர் மரபென்றுணர்க. சிலப்பதிகாரத்தில் 'உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்', (புகழமைந்த கற்புடைமகளை மக்களேயன்றித் தேவர் முனிவரு முதலாயுள்ளோர் சென் றேத்துதல் இயல்பு) என்பதால் காண்க. —பழையவுரை

**செல்வப் புதல்வனே**—"செல்வப் புதல்வி யென்றுது சிறப்புப் பற்றிச் 'செல்வப் புதல்வன்' என்றூர்.' —வி. கோ. சூ.

"ஒன்றுலொன்று குறைவின்றி வளர்க்கப்படும் பிள்ளை. இதனைச் செல்லப் பிள்ளை (செல்வப் பிள்ளை) என்னும் வழக்கானு மறிக." —பழையவுரை

**ஈர்ங்கவியா**— 'ஈர்ங்கவி' பண்புத்தொகை நிலைத்தொடர் ஆதலின் 'ஈரம்' என்பதின் இறுதி குறைந்து, கடைக்குறையாய் நின்ற ஈர் என்பதன்முன் வந்த வல்லெழுத்திற்கு இனவெழுத்து மிகுந்தது." —தி. சு. செ.

"கவிக்கு ஈரமாவது கேட்போர் செவிக்கும் மனத்துக்கும் இனிமையா யிருத்தல்" —கோ. இ.

ஈர்ங்கவி என்புழி, "தீங்கவி" எனப் பாடங் கொள்வாருமுளர்.

மேல், கொண்டுகூட்டிற் (அந்நுவயத்திற்) காட்டியபடியே 'ஈர்ங்கவியே செல்வப் புதல்வனு' எனக் கூட்டியுரைப்பது 'எடுப்பழிவுளது' என்னும் குற்றத்தை விலக்குவதாகும்.

**சொல்வளம் மல்லல் வெறுக்கையா:**

**சொல்வளம்**—"தாம் கற்றறிந்தவற்றைப் பிறருக்குச் சொல்லும் சிறப்பு என்று பாடங் கூறுதலை." —உ.வே. சா.

**மல்லல்வெறுக்கை**— "'மல்லல் வளனே' என்றூர் தொல்காப்பியனுராதலின் 'மல்லல் வெறுக்கை' ஒருபொருட் பன்மொழியெனக் கொள்க. இதனை மீமிசைச்சொல் எனவுங் கூறுவர். 'வெறுக்கை': அறிவுடையோரான் வெறுக்கப்பட்டமையிற் பொருட்செல்வம் வெறுக்கையெனக் காரணக்குறி யெய்திற்றென்ப." —வி. கோ. சூ.

"பொருவறு பந்தமெல்லாம் புணர்த்திடுந் தெய்வசிந்தை
ஒருவமே விட்டுநிற்கும் உறக்கமு மிறக்கச் செய்யும்
கருவினுட் புகுத்து மின்ன கரிசுண் டதனுலன்றே
இருநிலத் திடைவெறுக்கை என்மனர் புலமை சான்றோர்."
—குசேலோபாக்கியானம்.

**மாணவை மண்ணுறுத்துஞ் செல்வமுமுண்டு சிலர்க்கு:**

**மாண் அவை**— "உரிச்சொற்றொடர். மாணவையாவது 'புகழுந் தரும நெறி நின்ஞேர் பொய் காமம், இகழுஞ் சினஞ்செற்றமில்லோர் நிகழ்கலைகள், எல்லா முணர்ந்தோ ரிருந்தவிடம்' என்பது **வெண்பாப்பாட்டியல்** " —அ. கு.

"மாணவை - மாட்சிமிக்க சபை; என்றது நல்லவை, நிறையவைகளை; அவற்றின் இலக்கணம்: "ஆறுட் பகைசெற் றருங் கலையோர்ந்து, பாரிற் கீர்த்தி படைத்தோர் வைகுதல், நல்லவை யடக்கம் வாய்மை நடுநிலை, சொல்லு நன்மை யுடையோர் தொகைஇ, வல்லார் மொழியினும் வல்லுந ராக்கிக், கேட்போ ருறையவை நிறையவை யாகும்." - **இலக்கண விளக்கம்**

—உ. வே. சா.

**மண்ணுறுத்தும்**— "மண்ணுறுத்தல் - கழுவுதல். இஃது எதிரிருக்கும் அவையினரின் அறியாமையாகிய மாசைத் தன் விரிவுரைநீராற் கழுவுதலைக் குறித்துநின்றது." —இள.

**செல்வமும்** என்பதன்கணுள்ள உம்மை உயர்வு சிறப்பு.

**சிலர்க்கு**—"செல்வமுடையாரிலும் சிலர்க்கே ஈகைச்செல்வம் இருப்பதுபோலக் கற்றாரிலும் சிலர்க்கே எடுத்துக்கூறும் ஆற்றலுள்ளது. இச்செயல் அரிதாதல்பற்றிச் 'சிலர்க்கு' என்றதுடன் 'செல்வமும்' என்று உம்மை கொடுத்தார்."—இள

இச்செய்யுள் **உருவகவணி.**

"கற்புடைப் பெண்டிரும், புதல்வனும், வெறுக்கையும், செல்வமும் தம்முள் சம்பந்தமுடைமையினால் இச்செய்யுள் இயைபுருவகம்." —கோ. இ.

*Blest* with learning as a chaste spouse, with sweet poetry as the darling son of that spouse, and with fluency of language as a store of riches, there are some whose wealth adorns the illustrious assembly *of the learned*. –H. S.

With learning as the chaste wife, sweet poetry as the favourite son of that matron, and copiousness of expres-

sion as ever increasing wealth, some there are who also possess the talent of adorning a grand assembly. —C. M.

Some there are who are blest with learning as a chaste spouse, with sweet poetry as the darling son of that spouse and with copiousness of language as a store of riches; such persons then posses the gift adorning the illustrious assembly of the great. --S. W.

Learning is the chaste wife; sweet poetry is the darling son thereof and eloquence is the ever increasing wealth. Some have also the talent of adorning a noble assembly. —T. B. K.

Only a few are blessed with the rare fortune that adorns the grand council of the cultured, hearing is their chaste wife, sweet verse is her worthy son and rich dection is their bountoues weaith. —K. S.

---

## 5. உய்த்துணர்வும் சொல்வன்மையும்

எத்துணைய வாயினுங் கல்வி யிடமறிந்
துய்த்துணர் வில்லெனி னில்லாகும்—உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை யின்றெனி னென்னு மஃதுண்டேற்
பொன்மலர் நாற்ற முடைத்து.

1. எத்துணைய ஆயினும்-எவ்வளவு மிகுதியாயிருப்பினும், கல்வி-(ஒருவர் கற்ற) கல்வி, இடமறிந்து-(கற்ற நூல்களில் ஆழ்ந்தகன்ற நுண் கருத்துக்கள் பொதிந்து கிடக்கும்) இடங்களைத் தெரிந்து, உய்த்துணர்வு -நுனித்துப் பொருள் கொள்ளும் ஆராய்ச்சி யுணர்வு, இல்லெனின்-இல்லையாயின், இல்லாகும் - (கல்வியறிவு) இல்லையாகும்; உய்த்துணர்ந்தும் - அவ்வாறு நுனித்து ஆராய்ந்து பொருள் தெளிந்தும், சொல்வன்மை - (தான் அறிந்து தெளிந்த ஒன்றைப் பிறருணர எடுத்து விளக்குஞ்) சொல்லாற்றல், இன்று எனின் - இல்லையாயின், என்னும் -

(பயன்) யாதாகும்? அஃதுண்டேல்-அவ்வாற்றலு முளதாயின், பொன் மலர்-பொன்னினாற் செய்யப்பட்ட மலர், நாற்றம் - நன்மணத்தையும், உடைத்து - உடைத்தாவது (போலாம்).

2. கல்வி எத்துணையவாயினும் இடமறிந்து உய்த்துணர் வில்லெனின் இல்லாகும்; உய்த்துணர்ந்தும் சொல்வன்மை இன்றெனின் என்னாம்! அஃதுண்டேல் பொன்மலர் நாற்றம் உடைத்து.

**3. கல்வியாகிய செயற்கையறிவு பயன்படுவது இயற்கை யுணர்வாகிய ஆராய்ச்சி யறிவினாலும், சிறப்படைவது சொல்வன்மை யினாலுமேயாம்.**

4. ''இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார். —**குறள்**

''நுண்மொழி நோக்கிப் பொருள்கொளலு நூற்கேலா
வெண்மொழி வேண்டினுஞ் சொல்லாமை—நன்மொழியைச்
சிற்றின மல்லார்கட் சொல்லலு மிம்மூன்றுங்
கற்றறிந்தார் பூண்ட கடன்'' —திரிகடுகம்

செழும்பெரும் பொய்கையுள் வாழினு மென்றும்
வழும்பறுக்க கில்லாவாந் தேரை—வழும்பில்சீர்
நூல்கற்றக் கண்ணு நுணுக்கமொன் றில்லாதார்
தேர்கிற்கும் பெற்றி யரிது. —**நாலடியார்.**

நுண்ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை
பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம் —**ஷை**

தான் தேறான் பிறனை யெப்படித் தேற்றுவான்? —முதுமொழி.

5. ''கல்வி-(ஒருவன் தான் தனியே நூல்களைப் படித்தறிந்து கொண்ட) கல்விகள், எத்துணைய ஆயினும்-எவ்வளவின வாயினும், இடம் அறிந்து- (கற்றற்குரிய) இடமாகிய நல் லாசிரியனைத் தெரிந்துகொண்டு, உய்த்து உணர்வு - (அவன் பால் அவற்றை) ஆராய்ந்து தெளிதல்'' எனப் பொருள் கொள்வாருமுளர். நல்லாசிரியர் ஒருவரை யடைந்து பயின்றா லன்றி ஒருவனுக்குக் கருவிலமைந்து கிடக்கும் இயற்கை யுணர்வு பிறங்குமாறில்லையெனப் பிழைபட்டதொரு முடிபுக்கு

உய்ப்பதால் இவ்வுரை பொருந்துமா றில்லை. என்னை? நல்லாசிரியனை அடைந்து முறையே கல்வி பயிலாதும், பள்ளியுற்றுப் பயின்றறியாதும் பலர் இயற்கையறிவின் றிறத்தால் அறிவிற் சிறந்து விளங்குகின்றமையைப் பலநாடுகளிலுங் காண்கின்றுமாகலின். இனி, நல்லாசிரியனை யடுத்துக் கல்வி கற்ற ஒருவனிடங் காணப்பெறும் "இடமறிந்துய்த்துணரும்" இயற்கையுணர்வும் அவ்வாசிரியற்கே சிறப்பை யளிக்கும் எனக் கொள்ளுதல் இயல்பாகும் என்பதையும் ஓர்க.

"கற்கப்புகுவோன் ஐயம திரிபற வுணர்த்தும் நல்லாசிரியனைத் தெரிந்து கற்கவேண்டும் என்பார் 'உய்த்துணர் வில்லெனி னில்லாகும்' எனவும், அவ்வாறு கற்றுணர்ந்தும் பொருள் விளங்கச் சொல்லும் வலிமை இல்லையாயின் அவ்வுணர்ச்சி பயன்படாது என்பார் 'என்னும்' எனவும், அச்சொல்வன்மை உளதாதல் அரிது என்பார் 'பொன்மலர் நாற்றம் உடைத்து' எனவுங் கூறினர்." —தி. சு. செ.

**எத்துணையவாயினும்:**

"முத்தமிழ்க் 'கல்வி கரையில' வாகலின் 'எத்துணைய' எனப் பன்மைவினை கொடுத்தார்." —வி. கோ. சூ.

'எத்துணையதாயினும்' என்று பாடங்கொண்டார்கள் **சி. வை. தா.** வும், அ. கு. வும்.

**கல்வி இடமறிந் துய்த்துணர் வில்லெனி னில்லாகும்:**

**இடம்—** "உய்த்துணர்பவ னுணருமிடம் மொழி வந்த வாக்கியமிரண்டுமாம்." —சி. வை. தா.

இடம் - ஆசிரியனை உணர்த்தும் எனக் கொள்ளின் ஆகுபெயராம்.

**உய்த்துணர்வு—**"சொற்களைக் கொண்டுபோய்ச் சேர்த்துப் பொருள் கொள்ளுமுணர்வு. புத்தியை நூல்களிலே செலுத்தி ஆராய்ந்து பொருந்துமாறறிதல் என்பதும் பொருந்தும்".

—அ. கு.

**உய்த்துணர்ந்தும் சொல்வன்மை இன்றெனின் என்னும்:**

சொல்வன்மை—

"நாநலம் என்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று" —குறள்.

என்னும்—"ஆம் கட்டுரைச் சுவைபட நின்றது."
—வி. கோ. சூ.

**அஃதுண்டேற் பொன்மலர் நாற்றமுடைத்து:**

அஃதுண்டேல்—"ஏல், எனின் என்பதன் மரூஉ."
—வி. கோ. சூ.

"பொன்மலர் நாற்றமுடைத்து" என்பது இல்பொருளுவமையணி. இதை வடநூலார் அபூதவுவமை என்பர். இச் செய்யுள் வடசொற்கலவாது வந்தமை காண்க. —வி. கோ. சூ.

Learning, however extensive, will be useless, unless there be discretion to display it in the proper place; and even then, without the power of language, of what avail is it? With that, it is a flower of gold that possesses fragrance. —H. S.

How extensive soever it may be, learning will be of no avail if not acquired under a proper tutor with due appreciation. Even if so acquired, of what use is it without vigour of expression? Should that also be possessed, it is like a golden flower invested with fragrance. —C. M.

Learning however extensive, is useless unless acquired from an able preceptor. Even then without power of speech it avails nothing; when that is present it is as a flower of gold filled with fragrance. —T. B. K.

Be it ever so vast, erudition is not worth having if it is not characterised by right judgment at the right place. Of what avail is the power of judging aright if it

does not issue in fit expression? When both are combind in one, there is a gold flower of no small fragranee

—K. S.

## 6. இருந்தும் பயனில்லன

*அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியுங் கல்லார்*
*அவையஞ்சா வாகுலச் சொல்லும்—நவையஞ்சி*
*ஈத்துண்ணார் செல்வமு நல்கூர்ந்தா ரின்னலமும்*
*பூத்தலிற் பூவாமை நன்று.*

1. அவை - (கற்றுவல்ல சான்றோர்கூடிய) சபையிலே, அஞ்சி - எடுத்துச் சொல்லுதலை யஞ்சி, மெய் - உடல், விதிர்ப்பார் - நடுங்கு வோருடைய, கல்வியும் - கல்வி யறிவும், கல்லார் - கல்வி யறிவில்லாதவருடைய, அவை - சபைக்கு, அஞ்சா - அஞ்சாத், ஆகுலச் சொல்லும்- (துன்பந் தாவல்ல) ஆரவாரப் பேச்சும், நவை - (கொடாமையால்) வரும் குற்றத்திற்கு, அஞ்சி - அஞ்சி, ஈத்து - (நல்லீற்றிலீட்டிய பொருளை நல்வழியில் இரவலர்க்குக்) கொடுத்து, உண்ணார் - (தாமும்) துய்க்காதவர்களுடைய, செல்வமும் - செல்வமும், நல்கூர்ந்தார் - வறியராயினார்தம், இல் - மனைவியரது, நலமும் - அழகும், பூத்தலின் - (வெளிப்பட்டுத்) தோன்றுதலினும், பூவாமை - (வெளிப்பட்டுத்) தோன்றாமை, நன்று - நல்லதாம்.

2. அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும், அவை யஞ்சா கல்லார் ஆகுலச் சொல்லும், நவையஞ்சி ஈத்துண்ணார் செல்வமும், நல்கூர்ந்தார் இன்னலமும் பூத்தலிற் பூவாமை நன்று.

3. **சொல்வன்மை யற்றவர்தங் கல்வி யறிவும் கல்லார்தம் ஆரவாரமும், அழுக்கர்தம் பொருள் மிகுதியும், வறிஞர்தம் மனைவியரழகும் இருந்தும் பயனின்றி ஒழிவனவாம்.**

4. *"பகையகத்துப் பேடிகை யொள்வாள் அவையகத்*
*தஞ்சு மவன்கற்ற நூல்."* —குறள்.

*"இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற*
*துணர விரித்துரையா தார்."* —குறள்.

"கல்லாதும் கேளாதும் கற்ரு ரவைநடுவண்
சொல்லாடு வாரையும் அஞ்சற்பாற்று." —பழமொழி.

5. "இன்னது இன்னரிடத்தில் இருந்தும் பயனில்லை யென்று கூறுகின்ருர்." —உ. வே. சா.

"மலர்பூத்துழியே மணம் வெளிப்பட்டுத் தோன்றி யாவர் கண்ணையுங் கவர்கிற்குமன்றிப் பூவாது அரும்பா யிருப்புழிப் பிறர் தன்னைக் கவனியாதவாறு கூம்பியும் மணம் வெளிப் பட்டுத் தோன்ருதும் இருத்தல்போல, அவையஞ்சி மெய்விதிர்ப் பாரும், கல்லாரும், நவையஞ்சி யித்துண்ணுரும், நல்கூர்ந்தார் தம் அழகிய மனைவியரும் வெளிப்பட்டுத் தோன்ருது உள் ளடங்கி யிருத்தல் நலமென்பதுணர்க." —வி. கோ. சூ.

"இப்படிப்பட்ட கல்வியும் சொல்லும் செல்வமும் நலமும் இருப்பதில் பயனில்லாமையோடு, தமக்கும் பிறர்க்கும் துன்ப முண்டாவதனல், 'பூவாமை நன்று' என்ருர்." —ஊ. பு. செ.

"கற்றவர்களிலும் அவைக்கு அஞ்சாதவரே உண்மையிற் கற்றவர்; மற்றவர் கற்றுங் கல்லாதவரே யாவர். இதனைத் திருவள்ளுவனர், 'கற்ருருட் கற்ருர்' (குறள்:722) என்றும், "கல்லாதவரிற் கடை" (குறள்-729) யென்றுங் கூறுவர்" —இள.

**அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும்:**

அவை—'அவை' என்பதற்கு மேல் 4-ம் பாட்டின் குறிப்பில் "மாணவை" என்றதற்குத் தந்துள்ள குறிப்பினைக் காண்க.

அஞ்சி— "செய்து" என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

"அவை யஞ்சி யென்பதை "அவைக்கஞ்சி" யென நான் காவது விரித்துரைத்தாம்; பகைப்பொருளது. இவ்வாறு விரித்தலே தற்கால வழக்கு; புதியன புகுதலாற் கொண்டது. "அவையினஞ்சி", "அவையை யஞ்சி" என விரித்தலே பழைய வழக்கு. அவ்வாறே விரிப்பர் தொல்காப்பியனரும்".

—வி. கோ. சூ.

"அச்சப்பொருளுள்ள வினைச்சொல் வரும்போது அதற்கு ஏதுப்பொருளை யுணர்த்துஞ் சொல் இரண்டாம் வேற்றுமை பெற்று வருவது செய்யுள் வழக்கு; நான்காம் வேற்றுமை பெற்று வருவது உலக வழக்கு; ஐந்தனுருபு பெற்று வருவது ஆரியத்தின் வழக்கு." —ஊ. பு. செ.

மெய்—"பொய்யாகிய உடலை மெய்யென்றது மங்கள வழக்கு." —ஏ. எஸ். ஜெ.

**விதிர்ப்பார்**—'அதிர்வும் விதிர்ப்பு நடுக்கஞ் செய்யும்' (**தொல்காப்பியம்.**) —வி. கோ. சூ.

"மெய்விதிர்ப்பார் - உயர்திணையோடு சார்ந்த அஃறிணை உயர்திணை முடிபெற்றது திணைவழுவமைதி." —தி. சு. செ.

"ஈண்டு மெய்யென்றது எழுவாயாய் விதிர்ப்பார் என்ற தன்கணுள்ள விதிர்த்தல் வினைகொடு முடிந்தது. என்னை? "உயர்திணை தொடர்ந்த பொருண்முதலாறு, மதனொடு சார்த்தி னத்திணை முடிபின" (**நன்னூல்**) என்றாராதலின்." —வி.கோ.சூ.

**கல்லார் அவையஞ்சா ஆகுலச் சொல்லும்:**

"'கல்லாரவை' என்றமையின் முன்னது கற்றார் அவையாயிற்று." —இள.

**அஞ்சா**—"அஞ்சாத என்பதன் கடைக்குறை. செய்யாத என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சமே இவ்வாறு தொக்கு வரும்." —சி. மு.

**ஆகுலச் சொல்லும்**—"தம்மைப் பிறரறிதல்வேண்டிச் சொல்லப்படுதலின் 'ஆகுலச்சொல்' என்றார்." —அ. கு.

**நவையஞ்சி ஈத்துண்ணார் செல்வமும்:**

**நவை**—"பொருளீட்டுபவரது பழிப்பென்னுங் குற்றம்" —சி. வை. தா.

"பாவத்தால் வந்த பொருளைக் கொடுத்தலும், அறஞ் செய்தற்குக் காரணமான தன்னுடம்பை உண்ணாது வாட்டுதலுந் தருமமாகா." —அ. கு.

**ஈத்து**—"எதுகைத்தொடை நோக்கிவந்த வலித்தல் விகாரம். ஈந்து என்றதனால் இரப்பவரென்பது பெற்றாம்" —கோ. இ.

"ஈத்தல் என்றே சான்றோர் செய்யுட் பிரயோகமிருத்தலின் அவ்வாறே கொள்ளலாம். "ஈத்த கையா லுவவாதார்க் கீப்பின்னு" என **இன்னாநாற்பதி**னும் "செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த" எனவும், "சாத னீங்க வெமக்கீத் தனையே" எனவும் **புறநானூற்றி**னும், "பத்தினிப் பெண்டிர் பாத்தூணீத்ததும்" என **மணிமேகலையி**லும் பயின்று வருதல் காண்க. —வி. கோ. சூ.

"ஈத்துவக்கு மின்பம்" —குறள்.

"ஈத்துண்ணார்" —நான்மணிக்கடிகை.

**நல்கூர்ந்தா ரின்னலமும்:**

**நல்கூர்ந்தார்**—"நல்கூர் - பகுதி. பிறர் நல்கும் பொருள்களைக் கொண்டு உலகில் ஊர (சீவனம் பண்ண) வேண்டியிருத்தலின் நல்கூர்தல் (நல்குரவு) வறுமைக்காயிற்று. —வி. கோ. சூ.

**இன்னலம்**—"இனிய உடல்நலம்; இல்லாச்சிரம இன்பமெனினுமாம்." —சி. வை. தா.

"(ஈகைக்குண முதலிய) இனிமையாகிய நல்ல தன்மை. ஈகைக்குண முதலிய தன்மையாவன: ஈகைக்குணம், இளமை, அழகு, கல்வியறிவு என்பன." —கோ. இ.

"இனிய தாட்சிணியமும்" —தி. சு. செ.

"இனி 'இன்னலம்' என்பதற்குக் குடிப்பிறப்பின் சிறப்பு எனவும், அதனை இன் நலம் எனப்பிரித்து இனிய இளமை முதலிய நலங்களெனவும் பொருள் கூறுவாருமுளர்." —வி. கோ. சூ.

"கல்விப் பொருளினது இன்மை உண்மைகளைக் கூறுவார் செல்வப் பொருளினது உண்மை யின்மைகளையும் உடன் கூறினமையால் இது பழிப்பொப்புமைக்கூட்ட அணி."
—கோ. இ.

"சொல்லக்கருதிய சவையஞ்சுவார் கல்வியோடு பெரிதும் அதன் குணத்தையுடைய ஆகுலச்சொன் முதலியவைகளும் உடன்வைத்துக் கூறப்பட்டமையால் இது பழிப்பொப்புமைக் கூட்டமென்னும் அணி."
—அ. கு.

The learning of those whose frame trembles *with diffidence* before the assembly, the frivolous loquacity of the ignorant who feel no awe in the assembly, the wealth of those who do not conscientiously bestow alms before they eat, and the merit of a poor man are things, the absence of which is better than their existence.
—H. S.

The learning of those who tremble through fear in an assembly, the blustering words of the illiterate who fear not an assembly, the wealth of those who neither give it to others nor enjoy it themselves and the blooming youth of the indigent, will prove more advantageous if they are not, than if they are.
—C. M.

The learning of those who tremble *through diffidence* before the assembly; the loquacious empty words of the illiterate who feel no awe in the assembly; the wealth of those who do not give alms before they eat; and the personal beauty of the poor are things whose non-existence is better than their existence.
—S. W.

The learning of those who quake with fear before an assembly, the loud words of the illiterate who fear it not, the wealth of those who neither willingly give to others nor enjoy it themselves and the beauty of the indigent are things that had better not be.
—T. B. K.

The scholarship of the timid-minded who tremble before the council of the learned, the fool-hardy boast of the uncultured who entertain no fear of it, opulence of the close-fisted who do not give or eat for fear of impoverishment and the liberal temper of the indigent had better not blossom at all. —K. S.

---

## 7. புலவர் பெருமை

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு.

1. கலைமகள் - (கல்வித் தெய்வமாகிய) நாமகளின், வாழ்க்கை - வாழ்விடம், முகத்தது - (மலரவன், புலவர் என்னும் இருவருக்கும்) வாயினிடத்ததே, எனினும்-ஆனாலும், மலரவன் - (திருமாலின் உந்தியந் தாமரையில் வந்தோன்றிய) பிரமன், வண் - பல்வளனுமுடைய, தமிழோர்க்கு - தமிழ்ப்புலவர்களுக்கு, ஒவ்வான் - இணையாகமாட்டான்; (எதனாலெனின்), மலரவன் - பிரமன், செய் - (ஐம்பூதங்களைக் கருவியாகக் கொண்டு) படைக்கின்ற, வெறும் - பயனற்ற, உடம்பு - (தூல) உடல்கள், மாய்வனபோல் - நிலையற்று அழிந்து படுகின்றமைபோல, மாயா - அழியா(மல் என்றும் நிலைபெற்றிருப்பனவாம்), புகழ்கொண்டு - புகழையே கருவியாகக் கொண்டு, மற்று இவர் - (இத்)தமிழ்ப்புலவர்கள், செய்யும் - (நூல்களில்) அமைக்கும், உடம்பு - (பயனுள்ள) நுண்ணுடல்கள் (ஆதலின்).

2. கலைமகள் வாழ்க்கை முகத்ததெனினும், மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்; மலரவன் செய் வெற்றுடம்பு மாய்வனபோல் மற்றிவர் புகழ்கொண்டு செய்யுமுடம்பு மாயா.

3. பிரமன் அளிக்கும் பூதஉடல் அழியும்; கவிகள் அளிக்கும் புகழுடல் அழியாது.

4. "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து." —குறள்.

"உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார்." —நன்னெறி.

5. "புலவர்களைப் போலவே கலைமகளைத் தன்பாற் பெற்ற பிரமனது படைப்பு, புகழைப் பெறாமலே அழிந்துவிடும்; புலவர் படைப்போ புகழைப் பெறுதலோடு அழியாமலும் நிற்குமென்றார்." —உ. வே. சா.

"ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே இருந்த தொல்காப்பிய னாரும், இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னே இருந்த திருவள்ளுவனாரும் அருளிச்செய்த தொல்காப்பியம், திருக்குறள் என்னும் இலக்கண இலக்கிய நூல்களின் வாயிலாகத் தாங்கள் செய்துகொண்ட புகழுடம்புகள் இன்றும் புகழ்கொண்டு அழியாமல் நின்று நிலவுதலும், ஆனால் மலரவன் செய்த அவருடம்புகள் புகழோடு இக்காலத்திற் காணமுடியாதபடி அக்காலங்களிலேயே மறைந்துபோனமையுங் கண்டுகொள்க. இவ்வெற்றுடம்பும் புகழுடம்பும் மேல் 40-ஆம் செய்யுளிலும் வருகின்றமை காண்க." —இள.

கலைமகள் உறையப் பெற்றிருப்பதும், படைக்கும் ஆற்றல் வாய்ந்திருப்பதும் பிரமனுக்கும் தமிழ்ப்புலவர்க்கும் உள்ள ஒப்புமை. பிரமன் படைப்பாகிய பூதஉடல்கள் அழிதன்மாலை யவாயிருக்க, புலவரின் படைப்பாகிய நூலுடல்கள் பொன்றாது நின்று நிலவுவனவாயிருக்கின்றமை வேற்றுமை. புலவர்களை முதற்கண் பிரமனோடு ஒப்பிட்டுக் கூறியதே புலவர்க்குப் பெருமை தருவதாம். பிரமனாற் படைக்கப்பட்ட புலவர்களைப் படைப்புத் தொழிலிற் பிரமனினுஞ் சிறந்தோராகக் கூறி, ஆசிரியர் புலவர்கட்கு ஒப்பில் பெருமையை யளித்துள்ள நயம் கண்டுமகிழ்தற்பாற்றும்.

**கலைமகள் வாழ்க்கை முகத்ததெனினும்:**

**கலைமகள்**—"கலை - 'கலா'வென்ற ஆரியத்திரிபு; மகள் - இளமைப் பொருள் பயக்கும் மகவென்னும் உரிச்சொல்லடி யாகப் பிறந்த பெயர்." —வி. கோ. சூ.

கலை என்பது அறியாமையைக் கல்லியெடுப்பது என்று பொருள்படும் 'கல்' என்னுந் தமிழ் வினைச்சொல்லினடியாகப் பிறந்த பெயர் என்று கொள்ளுதலே சிறப்புடைத்தாம்.

"கலை - கொடை, மடை, விடை என்பனபோலச் செயப்படு பொருள் பெறப்பட்டது. கற்றலால் பெறப்படுவது கலை. இது வினையடிப் பகுபதப் பொருட்பெயர்." —சி. மு.

கலைமகள் - நூலிற்குரிய பெண். "வாக்கின் செல்வி" என்பதனாலும் அறிக.

**வாழ்க்கை**—"வாழ்க்கை என்னும் தொழிற் பெயர் ஈண்டு இடப்பொருள் தருதல் காண்க; இருக்கை என்பதுபோல்."
—வி. கோ. சூ.

வாழ்க்கை என்றே தென்னாட்டில் ஊர்ப்பெயரமைந்து காணப்படுவதும் குறித்தற்பாற்று.

**முகத்தது**—"வடநூல் வழக்குப்பற்றி 'முகம்' என்பதற்கு வாய் எனப் பொருளுரைத்தாம். வடமொழியுள் முகத்தின் சொற்களைத் தவிர்த்து வாயினைக் குறித்தற்குத் தக்க சொல் லில்லை என்பதுணர்க. வதனத்தைக் குறிக்கும்போது "முகம்" என்னுஞ் சொல் தமிழ்ச்சொல்லே யென்க; அது 'முகு' என்னும் பகுதியடியாகப் பிறந்தது. அம் - விகுதி. முகை, முகிழ், முகி என்ற சொற்களையும் நோக்குக." —வி. கோ. சூ.

"முகம் என்றது நாவை" —உ. வே. சா.

**மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்:**

**மலரவன்** — தாமரை மலரிலிருப்பவன். "பூவெனப்படுவது பொறிவாழ் பூவே" என்பது நோக்குக. தாமரை என்பது திருமால் உந்தியாகிய தாமரை.

"பூமேவு செங்கமலப் புத்தேள்" —கந்தர்கலி வெண்பா.

"கலைமகள் வாழ்க்கை கூறியமையின் 'மலரவன்' இதய கமலாசனனாகிய கடவுளெனப் பொருள்கொள்ளல் பொருந்தாது." —சி. வை. தா.

**வண்டமிழோர்** — தமிழர் என்பது தமிழோர் என்றாயிற்று; தமிழ்ப்பயிற்சியிற் சிறந்த புலவரையே குறித்ததாம்.

"நூற்செல்வத்தைப் பிறருக்கு உதவும் வண்மையை யுடைய தமிழ்ப்புலவர்." —உ. வே. சா.

"**தமிழ்**—ஆரியர் முதலிய பிற்றையோர் குடியேறுதற்கு நெடுங்கால முன்னரே இந்தியாவில் நிலைபெற்றிருந்த பூர்வீகர்களுடைய பாஷை. தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலானவைகளும், தமிழும் ஆதியில் ஒரே இனமான பாஷைகள். அகத்தியர், தொல்காப்பியர் முதலானவர்கள் இந்தப் பாஷையைத் தங்களிலக்கணங்களில் தமிழ் ஒன்றே வழங்கியிருப்பதுமன்றித் தமிழ்ச்சொற்களையும், வடமொழியினின்றும் தமிழில் வழங்கிவருகின்ற சொற்களையும் வேறுவேறாக வரையறை செய்திருக்கின்றனர். இங்ஙனமிருக்கவும் தமிழ் என்பது திராவிடம் (திரவிடம்-த்ரமிளம்-தமிளம்-தமிள்-தமிழ்) என்னும் வடமொழிச் சிதைவு எனச் சிலர் கூறுவது எங்ஙனம் பொருந்தும்? ஆரியர்களுக்கு முன்னமே இத்தேசத்தில் வழங்கி வந்த பாஷைக்கு ஆரியரால் வழங்கிய பெயராயிற்று என்பது பெட்டைக் குதிரைக்கு இரட்டைக்கொம்பு முளைத்தது என்பதே போலும். தமிழ் என்பதை உச்சரிக்க இயலாத ஆரியர்கள் (தமிள்-தமிளம்-த்ரமிளம்-த்ரமிடம்-த்ரவிடம்) திராவிடம் ஏன் வழங்கியிருக்கலாம் என்று தோன்றுகிறது. 'செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி' என்றும் பெரிய திருமொழியின் அடியைக்குறித்து **ஆசார்ய** ஹ்ருதயம் என்னும் பிரபந்தத்தில் உரைப்பதை விறுவியறிக. பிஷப் கால்டுவெல் முதலியோர் எழுதிய நூல்களிலுங் கண்டு தெளிக. நெடுங்காலமாய் வழங்கிவருகின்ற இம்மொழிக்கு காரணங் கற்பிப்பது அரிதாயிற்று. தமிழ் என்பதற்கு இனிமை என்று பொருள் உண்டு. இதனைத் 'தண்டமிழ் யாழினுமினிய சொற்கிளியே' (இராமாயணம்) என்பதுபோன்ற இலக்கியங்களான் அறிக. தமிழ்ப்பாஷையே வடமொழியின் வந்த பாஷையென வாய்மதம் பேசுவாருமுளர். ஆங்கிலேய ஆசிரியரொருவர் தமிழில் நின்றும் வடமொழியிலேதானே வழங்கலாவனவான மொழிகள் அறுபது மாத்திரம் எடுத்துக்காட்டியிருக்கவும் நாம் உண்ர் விலாரோடு உமிகுற்றிக் கைசலிப்பானேன்?"

—பழையவுரை.

**மலரவன்செய் வெற்றுடம்பு மாய்வனபோல்:**

• **வெற்றுடம்பு**—வெறுமை உடம்பு என்பது வெறும் உடம்பு என்றாகி வெற்றுடம்பாயிற்று.

"உயிர்நீப்பின் தனக்கென ஒரு பெருமையும் இல்லாத உடம்பு." —உ. வே. சா.

"மண் நீர் முதலிய பூதங்களாலாயதென்பது அறிவித்தற்கு 'வெற்றுடம்' பென்றார்." —அ. கு.

**மாயா புகழ்கொண்டு மற்றிவர் செய்யுமுடம்பு:**

**புகழ்கொண்டு**—புகழ் என்றும் பொன்றாது நின்று நிலவும் பான்மைத்து என்பது,

"ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில்"

என்னுங் **குறளான்** அறியப்படும்.

"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின், வலவ னேவா வானவூர்தி, யெய்துப வென்பதஞ் செய்வினைமுடித்து" என வரும் **புறநானூற்**றடிகளாற் புலவராற் பாடப்பட்டோரின் பெருமை நன்கு விளங்கும். அஃதற்றாயின் புலவர் பெருமை கூறலும் வேண்டுமோ!

"இவர் செய்யும் உடம்பென்றது நூல்களை; "எழுவகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல, சொல்லாற் பொருட்கிடனாக வுணர்வினின், வல்லோ ரணிபெறச் செய்வது செய்யுள்" என்று **நன்னூலார்** புலவரது படைப்பை உடலோடொப்பிடுதல் இங்கே நினைத்தற்குரியது. பிரமனைக் காட்டிலும் புலவர் தம் நெஞ்சிற்கு அணியராதலின் இவரெனச் சுட்டினார்."
—உ. வே. சா.

"பிரமனையும் புலவரையும் ஒப்புமை செய்து, பின்பு தொழிலான் வேறுபடுத்தி, அப்புலவரை யுயர்த்திக் கூறுத லின் **வேற்றுமையணி.**" —தி. சு. செ.

ஏதுவணியும் வேற்றுமை யணியுங் கலந்தனவெனக் கொள்ளலுமாம்.

Though Saraswathi dwells in the face of both, Brahma may not vie with the illustrious Tamil Bards; for the bodies, which these form by their praises, will not perish like the empty bodies of Brahma's creation. —H. S.

Although the Goddess of Learning lives in the countenance of Brahma, he bears no comparison to the Tamil Pandits; for, the body of fame that these create perishes not like the body of clay made by Brahma. —C. M.

Although the Goddess of Learning dwell in the faces of both, Brahma, the lotus-seated, bears no comparison with the illustrious Tamil poets; for the bodies which these form by their praises, perish not like the empty bodies which Brahma creates. —S. W.

Though Saraswathi dwells in Brahma's face, he cannot equal the illustrious Tamil poets; for the famous works these create perish not like those of Brahma bereft of fame. —T. B. K

Even with the Goddess of Learning abiding in his countenance, the Lord of Lotus cannot stand comparison with the gifted Tamil bards; for, the body of glorious verse that these create does not die like the frivolous frame made by him.

—K. S.

---

## 8. அவையஞ்சு கல்வி

நெடும்பகல் கற்ற வவையத் துதவா
துடைந்துளா ருட்குவருங் கல்வி—கடும்பகல்
ஏதிலான் பாற்கண்ட வில்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால்.

1. நெடும்பகல் - பலநாட்களாக, கற்ற - (வருந்தித் தாம்) படித்த நூல்கள், அவையத்து - (கற்றுவல்லோர் கூடியுள்ள) சபையில், உதவாது - (எடுத்துக்கொண்ட பொருளை விளக்கிக்) கூறுதற்குப் பயன்படாமல், உடைந்துளார் - மனமுடைந்திருப்பவரது, உட்குவரும் - நாணத்தகும், கல்வி - கல்வியானது, கடும்பகல் - பட்டப்பகலில், ஏதிலான்பால் - அயலானுடன், கண்ட - (இருக்கக்) கண்ட, இல் லினும் - மனைவியிலும், பொல்லாதே - தீயதே; (எனெனில்) தீதென்று - பொல்லாததென்று, நீப்ப-('உட்குவருங் கல்வி' யை) விலக்கியொழித்தல், அரிது - அரிதாகுமாகலின்.

2. நெடும்பகல் கற்ற அவையத்து உதவாது உடைந் துளார் உட்குவருங் கல்வி தீதென்று நீப்பு அரிதால் ஏதிலான் பால் கண்ட இல்லினும் பொல்லாதே.

3 உற்றுழி நினைவிற்கு வாராத கல்வியாற் பயனில்லை; கற்பது சிறு அளவிற்றாயினும் நன்கு கற்று அதிற் பயிற்சிபெறல் வேண்டும்.

4 "கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவை யஞ்சுவார்" —குறள்.

"ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து." —குறள்.

5 "சொல்வன்மை யில்லாரது கல்வி பயனின்றென்று கூறுகின்றார்." —உ. வே. சா.

முற்றப்பகலு முனியாது இனிது ஓதி ஓதிக் கற்றன மென்று கருதியானொருவன், கற்றோரவைக்கண் இடம்பெற்று ஒரு பொருளை எடுத்து விளக்கிப் பேசப் புகுங்கால், அவை யஞ்சி மெய்விதிர்ப்பானாயினும், அன்றி மேற்கோள்கள் காட்ட

முயன்று கற்ற தொன்றும் நினைவுக்கு வாராமற் குன்று முட்டிய குரீஇப்போல் இடர்ப்படுவானாயினும் அது பெரிதும் நாணுதற் குரிய தொன்றும். அத்தகைய கல்வி "பூத்தலிற் பூவாமை" நன்றன்றோ?

"கற்றநூல்கள் சபையில் உதவ வேண்டுமானால் இடை விடாது பழகவேண்டும் என்பது கருத்து. "நூறு நாள் ஓதி ஆறு நாள் விடத்தீரும்" என்பது பழமொழி" —பழையவுரை.

**நெடும்பகல் கற்ற:**

**நெடும்பகல்**—"பகல் - ஒரு நாளிலிருந்து பகுக்கப்பட்ட பாதியானபடியால் இப்பெயர் பெற்றது. இது வினையடிப் பகுபதப் பொருட்பெயர்." —சி. மு.

"பகல் - பகு பகுதி. இருளைப் பகுத்து நீக்குதலிற் பக லெனப்பட்டது; பகை, பகுதி பகவு என்பனவுங் காண்க." —வி. கோ. சூ.

**கற்ற**—"இறந்தகால வினையாலணையும் பெயர். இனிக் "கற்ற" வென்பதனைக் பெயரெச்சமாக்கி "உட்குவரும்" என் பதனோ டடுக்கிக் "கல்வி" யென்னும் பெயரோடு மாட்டி முடிப்பாரு முளர்." —வி. கோ. சூ.

**உடைந்துளார் உட்குவருங்கல்வி:**

**உடைந்துளார்**— "ஒருசொன்னீர்மைத்து. இதன்கண் "உள்" என்பது துணைவினை," —வி. கோ. சூ.

" உடைந்துளார் - தம்மோடு வாதிப்பவருக்குத் தோற்றவ ரது." —பழையவுரை.

**உட்குவரும்**—"உட்கு - அச்சம். அது. நுதல்வியர்த்தன் முதலியபற்றி அறியப்படுவது." —அ. கு.

"உட்கு - வெட்கம். பெரும்பான்மையும் வெட்கத்தை யடைந்தவர் தமக்குட் சுருங்கி (உள்ளடைந்து) போவதனால் இப்பெயர் வெட்கத்திற் காயிற்று; இது குறிப்பு வினைப்பெயர். உள் - பகுதி." —சி. மு.

**கடும்பகல் ஏதிலான்பாற் கண்ட இல்லினும் பொல்லாதே:**

**கடும்பகல்:**—"கடுமைப் பண்பு கடுகட் டென்பதிற்போல மிகுதியை யுணர்த்தியது." —கோ. இ.

"பெரிதும் விளக்க முடைமையால் உச்சிக்காலம் 'கடும்பக' லெனப்பட்டது. கடி - விளக்கம்" —அ. கு.

விளக்கத்தையும் மிகுதியையும் ஒருங்குணர்ந்த "பட்டப் பகல்" எனப் பொருள் கொள்ளப்பட்டது.

"**ஏதிலான்பால்**—ஏதிலான் என்பது "முறை முதலிய ஏது மில்லாதவன்" என்னும் பொருள்பட நின்றது." —சி. மு.

"ஏதிலான் - பண்படியாகப் பிறந்தபெயர். ஏதில் பகுதி; ஆன் ஆண்பாற் படர்க்கை விகுதி. சம்பந்தம் யாதும் இலா னென்பது பொருள். ஏது வென்பதற்குக் காரணமெனப் பொருள் கூறின், அது வடமொழியாதலான் உகரங் கெடாது வரல்வேண்டும் என மறுக்க. ஏதிலான்பால் என்றது இடக்க ரடக்கல்." —கோ. இ.

**இல்**—"இல்லிலிருப்பவளை இல் என்பது இடவாகு பெயர்." —சி. மு.

**பொல்லாதே**—"வருந்தித் தேடிவைத்திருந்தும் உற்ற சமயத் திலுதவாமைபற்றிப் 'பொல்லாதே' என்றார்." —அ. கு.

"இல்லாள் தற்கொண்டாற் பேணி யறுசுவையுண்டி யமர்ந்து ஊட்டவேண்டியவளாதலின் அதனைச் செய்யாது, கொண்டகணவன், காலையில் தொழிற்பொருட்டு வெளியே வயல் முதலிய இடங்கட்குச்சென்று வியர்த்திளைத்துத் திரும் பியவன் மேலுந் துயருறும்படி அயலவன் அகம் அடைந்திருப்ப துணரின், அத்தகைய மனையாட்சியற்றாள் தனக்கு நலம்பய வாதவள் என்று விலக்கப்படுதல் கூடும். ஆனால் கற்ற கல்வி அங்ஙனமும் நீக்கப்படமுடியாத தென்பார் 'இல்லினும் பொல் லாதே' என்றார்." —இள.

**இதென்று நீப்பரிதால்:**

**நீப்பு:**—"நீ என்று பகுதியடியாகப் பிறந்த தொழிற் பெயர். கா-காப்பு என்பது போல." —வி. கோ. சூ.

"கல்வியானது மனைவிபோலப் பிறிதின் கிழமைப் பொருளாகாது தற்கிழமைப் பொருளாய் நிற்றலின் 'இதென்று நீப்பரிதால்' என்றார்." —வி. கோ. சூ.

"அம் மனைவி உதவாளென்று அகற்றிவிடுதலைப்போலக் கல்வி தீயதென்று நீத்தலரிது; ஆதலின் அவளைக் காட்டிலும் பொல்லாதென்றார். கற்ற கல்வி பிறவிதோறும் தொடருமாதலின் நீப்பரிதாயிற்று." —உ. வே. சா.

The shrinking learning of men broken by long study, which is not available in public, is worse than a wife seen in broad day-light in a neighbour's company, for it is an evil that cannot be put away. —H. S.

The disgraceful learning of those who lose themselves in an assembly of the wise, and can make no use of the knowledge they have acquired after years of industry, is worse than one's wife discovered with a stranger; for the former cannot be cast off as evil. —C. M.

The learning of those who shrink back with shame before the assembly and possess no ability to display before it the knowledge they have acquired by long study is worse than a wife seen in broad day-light in a neighbour's company; for the latter evil can be put away, but not the former one. —S. W.

Worse than the wife detected in adultery in mid-day is the learning acquired through a long time but found useless before a learned assembly. The one can be got rid of by divorce; the other cannot be. —T. B. K.

Knowledge long acquired, but of little avail before a learned assembly should be dreaded worse than the wife found with a stranger in broad day-light, for while the latter can be divorced, the former cannot. — K. S.

---

## 9. கற்றன மறவாமை

*வருந்தித்தாங் கற்றன வோம்பாது மற்றும்*
*பரிந்துசில கற்பான் றொடங்கல்—கருந்தனங்*
*கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்*
*கெய்த்துப் பொருள்செய் திடல்.*

1. வருந்தி - (நெடும்பகல்) உழைத்துழைத்து, தாம் - தாம், கற்றன - கற்றுணர்ந்த நூற் பொருள்களை, ஓம்பாது - (பன்முறையும் பயின்று தெளிந்து) பேணிக்கொள்ளாமல், மற்றும் - மீண்டும், பரிந்து - (விரும்பி) வருந்தி, சில - வேறு சில நூல்களை, கற்பான் - கற்க, தொடங்கல் - புகுதல்; கருந்தனம் - பெரும்பொருள், கைத்தலத்த - கையினிடத்ததாயிருந்தும், உய்த்து - (அதனைக்) கொண்டு சென்று, சொரிந்திட்டு - எறிந்துவிட்டு, அரிப்பரித்தாங்கு - பன்முறையுங் கையினாலும் கருவியினாலும் அரித்தரித்துச் சேர்த்தலைப் போல, எய்த்து - உழைத்து உடல் தளர்ந்து, பொருள்செய்திடல் - மீண்டும் பொருளீட்டுதலை யொக்கும்.

2. தாம் வருந்திக் கற்றன ஓம்பாது மற்றும் பரிந்து சில கற்பான் தொடங்கல், கைத்தலத்த கருந்தனம் உய்த்துச் சொரிந்திட்டு அரிப்பரித்தாங்கு எய்த்துப் பொருள் செய்திடல்.

3. நுனிப்புல் மேய்வதுபோல், பல நூல்களைக் கற்று விரைவில் மறப்பதினும், தக்க சிலநூல்களைக் கசடறக் கற்றுத் தேர்ந்து தெளிந்து பயனடைதல் சிறந்ததாம்.

4. "நெடுநீர் மறவி மடிதுயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன்." —குறள்.

"மேதையிற் சிறந்தன்று கற்றது மறவாமை"
—முதுமொழிக்காஞ்சி.

"வருவதிற் கருத்தினை மட்டுப் படுத்தி
வந்ததிற் சிந்தையைச் சிந்தா திறக்குக."
—இலக்கணக்கொத்து.

5. "புதியவற்றைக் கற்றலினும் கற்றவற்றைப் பாது காத்தல் சிறந்த தென்பர்." —உ. வே. சா.

**வருந்தித் தாங் கற்றன ஓம்பாது:**

**வருந்தி**—"வருந்தி" யென்னு மெச்சத்தை "ஓம்பாது" என்பதின் மேல் முடித்துப் பொருள் கூறின், "தொடங்குங் கால்" என்னுஞ் செய்யுளோடு முரணி "மாறுகொளக்கூற" லெனுங் குற்றம் விளையுமென்க." —சி. வை. தா.

**ஓம்பாது**—"வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்" என்று தமிழ் மூதாட்டியார் வரையறுத்துக் கூறியுள்ளார். அதற் கேற்ப, கற்ற நூல்களைப் பன்முறையும் நினைந்து நினைந்து உள்ளத்து அமைத்துக்கொள்ளுதலே ஓம்புதலாகும்.

"கசடறக் கற்றலாவது விபரீதவையங்களை நீக்கி மெய்ப் பொருளை நல்லோர் பலருடனும் பலகாலும் பயிறல்" என்ற **பரிமேலழகருரை** இங்கு நினைவுகூரற்பாற்று.

"படியிற் கல்வி விரும்பினேன் பாடம்போற்று மதுபோல"
—பிரபுலிங்கலீலை.

**மற்றும் பரிந்து சில கற்பான் தொடங்கல்:**

**மற்றும்**—பிறிது என்னும் பொருள்பட நின்றது என்பர் ஒருசாரார்; எனினும், 'மற்றும்' என்பதிலுள்ள 'உம்' முன்னர் வருந்திப் பயின்றதேயன்றி யென்னும் பொருளைப் பயப்ப தாதலால் இறந்தது தழீஇயஎச்சப் பொருட்டாதல் நோக்கி, மீண்டும் எனப் பொருளுரைக்கப்பட்டது.

**பரிந்து**—"நாம் கற்றது போதாதென மனமிரங்கி"
—மோ. வே.

கற்பான்—பானீற்று எதிர்கால வினையெச்சம்.

**கருந்தனம் கைத்தலத்த உய்த்துச் சொரிந்திட்டு:**

**கருந்தனம்**—"ஈண்டுக் கருமை, பெருமைப் பொருளது"
—வி. கோ. சூ.

**கைத்தலத்த**—"இடவடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். கைத்தலம் — கையினது தலமெனா ஆறுவதன் றொகையாக வேனும், கையாகிய தலமெனப் பண்புத்தொகையாகவேனுங் கொள்க."
—வி. கோ. சூ.

**உய்த்து**— "செலுத்தி என்னும் பொருட்டு. இஃது இவ்விடத்துப் "புறத்தே கொண்டு போய்" என்னும் பொருள்பட நின்றது. இது "செய்து" என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம்."
—சி. மு.

"உய் - பகுதி, த்-சந்தி, த் - இடைநிலை, உ - விகுதி. இப்பகுதி "பிழைத்து" என்னும் பொருளில்வரின் "உய்ந்து" என மெல்லெழுத்துச் சந்தி பெற்றுவரும்; பகுதி ஒன்றே சந்தி வகையால் பொருள் வேறுபடுதல் காண்க."
—தி. சு. செ.

**சொரிந்திட்டு**—இதில் 'இடு' துணைவினை; "அது பேதைமையை உணர்த்திற்று."
—மோ. வே.

"உய்த்துச் சொரிந்திட்டு - மதியாமற் போகவிட்டு"
—உ. வே. சா.

**அரிப்பரித்தாங்கு:**

"(அக்கசாலையினின்றுஞ் சிதறி) மண்ணோடு கலந்து கிடக்கும் பொற்பொடிகளை அரித்தெடுத்து. அரிப்பு - மண்ணோடு கலந்து கிடக்கும் பொற்றூள்; அரித்தெடுக்கப்படுதல் பற்றி அரிப்பெனப்பட்டது."
—அ. கு.

"அரிப்பரித்து என்பது "போர் பொருதான்" என்பதுபோல நின்றதாதலால் அதற்கு "அரிப்புச் செய்து" எனப் பொருள் சொல்லப்பட்டது. இவ்வாறன்றி, அரிப்பு - அரிப்புக் கருவியால், அரித்து - (மண்ணை) அரித்து எனப் பொருளுரைத்து,

அரிப்பு தொழிலாகு பெயராய் அத்தொழிற் கருவியை உணர்த்தியதெனக் கொள்ளினும் பொருந்தும். 'அரித்து' செயப்படு பொருள் குன்றுவினையாதலால் "மண்" என்னுஞ் செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது." —கோ. இ.

அரிப்பரித்து என்பது "அரிப்பினல் அரித்து" என விரியும்." —சி. மு.

"அரிப்பரித்து" — அடியடித்தான் என்பதுபோல் அரித்தலைச்செய்து என்று பொருள் கொள்க. "அரிப்பு" என்னுந் தொழிற் பெயரை அரிக்கத்தக்கவைகளுக்கு ஆகுபெயராக்கியு முரைக்கலாம்." —ஊ. பு. செ.

"அரிப்பரித்தல்—கடைவீதி முதலிய இடங்களில் உள்ள புழுதியை ஏதேனும் சிறு பொருள் கிடைப்பது கருதிப் பல நேரங் கொழித்தல்; இதனைச் செய்வார் அரிப்பரென்று வழங்கப்படுவார்." —உ. வே. சா.

"அரிப்பரித்தல் - வெயிலில் நின்று மண்ணை அரித்தெடுத்தல். இவ்வரித்த மண், வீடு கட்டுதற்கும் பாண்டம் வனைதற்கும் பயன்படும்." —இள.

**ஆங்கு**—யாற்றங்கரை மண்ணிடைச் சென்று அரித்தரித்துப்பொன் தேடுங்கால், கிடைத்த விடத்து அதனைச் சேர்ப்பதாலாகும் உடற்சோர்வையும், கிடையாவிடத்து உடனெய்தும் உளச்சோர்வையும் ஒருங்கே யளிக்கும் பெற்றியது அரிப்பரித்தற் றொழிலாதலின அத்தொழில் செய்வாரைப் போல என்று "ஆங்கு" என்பதற்குப் பொருள் கூறப்பட்டது.

**எய்த்துப் பொருள் செய்திடல்:**

**எய்த்து**—எய்த்தல் - இளைத்தல். "பேயாய்த் திரிந் தெய்த்தேன்" —**சுந்தரமூர்த்தி நாயனர்.** சிறிது சிறிதாக அரித்துத் திரட்டுதலால் நேரும் உழைப்புப்பற்றி, 'எய்த்து' எனக் கூறினர்.

**பொருள் செய்திடல்**—"செய்க பொருளை", பொருள் செயல் வகை" என்புழிப்போலச் செய்தல் ஈட்டுதற் பொருளது.

"இச்செய்யுள் தொகையுவமையணி." —வி. கோ. சூ.

"கற்பான் றொடங்கல், பொருள் செய்திடல் என உவமேய உபமானங்களை அபேதமாய்க் கூறியதனால் நிதரிசனையணியாம்." —ஊ. பு. செ.

The attempt of those, who without preserving that learning which they have acquired with difficulty, try to make fresh acquirements, is like throwing away gold from their hands, and toiling to make a fortune by sifting dust *in search of treasure.* —H. S.

To attempt to learn more, without digesting what has been acquired already by reflection is, like voluntarily throwing away in the sands the abundant wealth that was in one's hand, and then toiling to secure it by sifting the sands. —C. M.

Without preserving what they have already learned with great pains, to attempt to learn more and more is like throwing away the great wealth that was in one's hand and toiling to make wealth again by sifting dust *in search of treasure.* —S. W.

To attempt to learn more, without safeguarding by continuous study what has already been arduously acquired, is like throwing away abundant wealth in hand and then striving hard after, collecting it by sifting. —T. B. K.

Not to retain and develop what one strove hard to learn, but to be distracted by a few novel studies on hand, is like engaging in a wearisome sifting and scraping of cast off heaps for sundry valuables. —K. S.

## 10. நல்கூர்ந்தார் கல்விநலன்

எனைத்துணைய வேனு மிலம்பாட்டார் கல்வி
தினைத்துணையுஞ் சீர்ப்பா டிலவாம்—மனைத்தக்காள்
மாண்பில ளாயின் மணமக னல்லறம்
பூண்ட புலப்படா போல்.

1. எனைத்துணையவேனும் - எவ்வளவு மிக்கனவா யிருப்பினும், இலம்பாட்டார் - வறியவருடைய, கல்வி - கல்வி நலன்கள், தினைத்துணையும் - ஒரு தினையளவேனும், சீர்ப்பாடு - சிறப்புறுதல், இலவாம் - இல்லாதனவாய் விடும்; (அஃது எது போலவெனின்) மனைத்தக்காள் - இல்வாழ்க்கைக்குத் தக்கவளாகிய மனையாட்டி, மாண்பு - நற்குண நற்செய்கைகளாலாகிய பெருமை, இலளாயின் - இல்லாதவளாயின், மணமகன் - அவளுடைய கணவன், பூண்ட - மேற்கொண்ட, நல்லறம் - (இல்லறமாகிய) நல்லறத்தின் பெருமைகள், புலப்படாபோல் - (சிறவாமல்) மறைவனபோல்வதாம்.

2. மணமகன் பூண்ட நல்லறம் மனைத்தக்காள் மாண்பிலளாயின் புலப்படாபோல், இலம்பாட்டார் கல்வி எனைத்துணைய வேனும் தினைத்துணையுஞ் சீர்ப்பாடிலவாம்.

3. பொருள் வளத்தானன்றிக் கல்வி நலன் சிறவாது; இதுவே இவ்வுலக வியற்கை.

4. "நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்" —குறள்.

"மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில்" —குறள்.

"கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொற்கூற்ற
மல்லாத மாந்தர்க் கறங்கூற்றம்—மெல்லிய
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றங் கூற்றமே
யில்லிற் கிசைந்தொழுகாப் பெண்" —மூதுரை.

5. எனைத்துணையவேனும் இலம்பாட்டார் கல்வி:

5. "வறுமையிற் கல்விபோலப் புலப்படா மருங்கு னல்லார்" (திருவிளையாடல்) —உ. வே. சா.

"கணவன் செய்யும் அறங்களுக்கு மனைவியுங் கருத்தொத்திருந்தாலன்றி அவ்வறங்கள் பயனடைதலில்லையாவதுபோல, ஒருவர் எவ்வளவு கல்வி கற்றிருப்பினும் செல்வமும் ஒத்திருந்தாலன்றி அக்கல்வியானது சிறப்படைதலில்லையாமென்க. தரித்திரர் கற்ற கல்வி பயன்படாது. பொருளில்லாவிடின் கல்வி சிறப்படையாது. ஒருவனுக்குக் கல்வியும் செல்வமும் என்னுமிரண்டும் அமைவது ஓர் ஆவிற்கு இருகோடு தோன்றினாற் போல் என்றறிக" —பழையவுரை.

**எனைத்துணையவேனும் இலம்பாட்டார் கல்வி:**

**எனைத்துணையவேனும்**—"எனை, எத்தனை என்பதன் மரூஉ. இது குறிப்புமுற்று. 'ஏனும்' என்பது சேர வினையெச்சமாயது. "எனைய" என்ற குறிப்புப் பெயரெச்சம் ஈறு குறைந்து "எனை" என்று நின்றதுமாம். "எனினும" என்பது "ஏனும்" என மருவி நின்றது.

**இலம்பாட்டார்**—'இலம்பாடு' இன்மை என்னும் பண்படியாகப் பிறந்த பெயர். 'இலம்பாட்டார்' என்பதில் 'இலம்பாடு' பகுதி, ஆர் பலர்பால் விகுதி. 'பாடு' என்பது "உடம்பாடு" "சடப்பாடு" என்புழிப்போலத் தன்மை என்னும் பொருள்படும். ஆகவே, இஃது இன்மையாதல் என்று பொருள்படும்.

"இலனென்னு மெவ்வம்" என்று திருவள்ளுவர் கூறியதால் இலம்பாட்டின் இளிவரவு நன்குணரப்படும்.

"இலம், நலம் என்பதுபோல அம் விகுதிப் பண்புப்பெயர். இப்பண்புப்பெயர் பெரும்பாலும் பாடென்னுந் தொழிற் பெயரைச் சார்ந்தே வருமென உணர்க. பாடு படு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். இவ்விரண்டு சொல்லுந் தொக்க இலம்பாடென்பது ஒருசொல்லின் தன்மைத்து." —கோ. இ.

"இலம்பாடு - இன்மை உண்டாதல்." —பழையவுரை.

**தினைத்துணையும் சீர்ப்பாடிலவாம்:**

**தினைத்துணையும்**— "தினை சிறுமைக்குக் காட்டியதோ ரளவை" —கோ. இ.

**சீர்ப்பாடு**— "சீர்ப்படு" என்னும் முதனிலை நீண்ட தொழிற் பெயர்.

"தன்பாலழகு என்று பொருள் கூறுவாறு முளர்" —பழையவுரை.

"கல்வி சீர்ப்பாடில என்பது பால்வழுவமைதி." —கோ. இ.

**மனைத்தக்காள் மாண்பிலளாயின்:**

**மனைத்தக்காள்**—"மனை என்னும் வீட்டின் பெயர் அதன் கண் நடத்தப்படும் வாழ்க்கைக்கு ஆதலால் இடவாகு பெயர். இரண்டு சொல் கூடி ஒரு சொல்லின் தன்மைப்பட்டு நின்ற "மனைத்தக்காள்" இறந்தகால வினையாலணையும் பெயர்." —கோ. இ.

"மனை—இல்லறம்; அதற்குத் தக்கவள் மனைத்தக்காள்; "மனைத்தகு" ஓர் பகுதியாக் கொள்ளினு மமையும்." —ஊ. பு. செ.

**மாண்பிலள்**— "மாண்பு, கற்புடுத் தன்புமுடித்து நாண் மெய்ப் பூசி நற்குண நற்செய்கை பூணுதல்." —சி. வை. தா.

மனைவியின் "நற்குணங்களாவன: வறியார்மாட்டரு ளுடைமை, நாயகன் முனியினு மன்பு நீங்காமை முதலாயின; நற்செயல்களாவன: "சிறுகாலை யட்டில் புகல், அருத்தியுறச் சமைத்தல், சுவைதிருத்தி யூட்டல், மறுகாலையென்னுது விருந் தழைத்தல்" முதலாயின. —அ. கு.

"மாசிலாக் குலத்து வந்தாள், வருவிருந் துவப்பவூட்டு நேசமிக்குடையாள், கொண்க னினைப்பறிந் தொழுகு நீராள், தேசுறு வாய்மை யுள்ளாள், சினந்திட லென்று மில்லாள், பேசு திண் கற்பு வாய்ந்தாள், பெற்றதே கொண்டுவப்பாள்" என்ற குசேலோபாக்கியானச் செய்யுளாலும் இதையறியலாம்.

"மடப்பதூஉ மக்கட் பெறுவதூஉம் பெண்பான்
முடிப்பதூஉ மெல்லாருஞ் செய்வர்—படைத்ததனால்
இட்டுண்டில் வாழ்க்கை புரிந்துதா நல்லறத்தே
நிற்பாரே பெண்டிரென் பார்."

என்ற அறநெறிச்சாரச் செய்யுளும் நோக்குக. மனைத்தக்க இம் மாண்பே மங்கலமென்ற மனைமாட்சியாகும்.

"மனைத்தக்காள் மாண்பிலள் என்றது திணை வழுவமைதி"
—கோ. இ,

மணமகன் நல்லறம் பூண்ட புலப்படாபோல்:

மணமகன்— மணஞ்செய்த மகன் எனவிரியும்.

நல்லறம்— "நல்லறமாவது அருந்தவர் விருந்தர் முதலியோரைப் பேணுதல். அது, இந்நூலாசிரியர் கூறிய 'நற்குண நிறைந்த கற்புடை மனைவியோ, டன்பு மருளுந் தாங்கி யின் சொலின், விருந்து புறந்தந் தருந்தவர்ப் பேணி, யைவகை வேள்வியு மாற்றி' என்னும் சிதம்பர மும்மணிக்கோவையானும் பெறப்படும்."
—அ. கு.

"அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்."

என்றார் திருவள்ளுவ நாயனாராதலின், இல்லறத்தை 'நல்லற' மென்றனர். இதுபற்றியன்றே, 'இல்லற மல்லது நல்லற மன்று' என்றார் ஔவையாரும்."
—வி.கோ.சூ.

புலப்படா—"புலப்படாமை யென்னும் பொருட்டா வுரைத்தலுமாம்."
—வி.கோ.சூ.

"புலன்களுக்கு விடயமாதல் புலப்படுதல் — அஃதாவது தோன்றல்"
—சி. மு.

"இஃது உவமையணி. இது வடசொல் விரவாத தனித்தமிழ் வெண்பாவாதல் காண்க."
—வி.கோ.சூ.

However great may be the learning of poor men, it will never be appreciated so much as a grain of *tinay*.

As, if the mistress of the house possess not the qualifications which become a wife, the virtues, with which her husband is endued, will not become conspicuous. —H. S.

Just as the deeds of charity undertaken by a person will fail, should his wife be devoid of the domestic virtues, so will the learning of the indigent, extensive though it be, fail to secure the slightest applause. —C. M.

The learning of the indigent, however great will never be appreciated even so much as a grain of millet; as, if the mistress of the house possess not the virtues which become a wife, the virtues with which her husband is endued will not become conspicuous. —S. W.

The learning of the indigent, however great, does not secure even the least appreciation; as the virtuous deeds of a person fail, whose wife is devoid of domestic virtues. —T. B. K.

Be they ever so high, the intellectual attainments of the needy do not a whit shine with due splendour. They are like the generous efforts of a household whose house-wife is not of worth and honour." —K. S.

---

## 11. கைத்துடைமை

இன்சொல்லன் றாழ்நடைய னாயினுமொன் றில்லானேல்
வன்சொல்லி னல்லது வாய்திறவா—என்சொலினுங்
கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடன்ஞாலம்
பித்துடைய வல்ல பிற.

1. இன்சொல்லன் - (நன்கு கற்றதன் பயனாக) ஒருவன் இனிய சொற்களையே பேசும் இயல்புடையனாகவும், தாழ்நடையன் - பணிந்து

ஒழுகும் இயல்புடையனுகவும் (இருந்தும்), ஆயினும்-ஆனாலும், ஒன்று - (பொருளல்லவரையும் பொருளாகச் செய்யும் செல்வப் பொருளாகிய) ஒன்றுமட்டும், இல்லானேல் - சிறிதும் இல்லானுயின், வன்சொல்லின் - (அவனைக் கண்டவிடத்துக்) கடுஞ்சொற் சொல்லுதலினின்றும், அல்லது- அல்லாமல் (இன்சொற் சொல்லுதலுக்கு), வாய்திறவா - (உலகமக்கள்) வாய் திறக்கமாட்டார்கள்; என் சொலினும் - எத்தகைய கடுஞ் சொற் களைச் சொன்னாலும், கைத்துடையான்-கையிற்பொருளுடையா னொரு வனுடைய, காற்கீழ்-அடிக்கீழே, ஒதுங்கும்-வீழ்ந்து கிடப்பார்கள், கடல்- கடலாற் புடைசூழப்பட்ட, ஞாலம் - இவ்வுலகத்திலுள்ள மக்கள்; பித் துடைய - மயக்கவுணர் வுடையவர்களே அவர்கள்; அல்ல பிற - மற்று மயக்கவுணர் வில்லாதவர்க ளல்லர்போலும்!

2 கடன் ஞாலம் இன்சொல்லன் தாழ்நடையனுயினும் ஒன்றில்லானேல் வன்சொல்லினல்லது வாய்திறவா; கைத்துடை யான் என்சொலினுங் காற்கீழொதுங்கும்; பித்துடைய பிற அல்ல!

**3. கற்றோரினும் செல்வரைப் போற்றுவதே இவ்வுலக வியற்கை! இது மயக்கவுணர்வின்பாற் பட்டதாதலால் கற்றலே நன்று.**

4. "இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு." —குறள்.

தொழுமகன் ஆயினும் துற்றுடை யானைப்
பழுமரஞ் சூழ்ந்த பறவையிற் சூழ்ப
விழுமிய ரேனும் வெறுக்கை யுலர்ந்தால்
பழுமரம் வீழ்ந்த பறவையிற் போப. —வளையாபதி.

"இல்லார்வாய்ச் சொல்லின் நயம் இன்னா" —இன்னாநாற்பது.

"கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல்." —நல்வழி.

**நல்லாவின் கன்றாயி னுகும் விலைபெறூஉங்**
**கல்லாரே யாயினுஞ் செல்வர்வாய்ச் சொற்செல்லும்**
**புல்லீரப் போழ்தி னுழவேபோன் மீதாடிச்**
**செல்லாவா நல்கூர்ந்தார் சொல்.** —நாலடியார்.

5. "உயிர்க்குறுதியைத் தரும் ஒருவனது நல்லொழுக்க முடைமையை நோக்காது, அழியுந் தன்மைத்தாகிய பொருளுடைமையை நோக்கி மதித்தல் பெருங்குற்றமாதலின் 'பித்துடைய' எனக் கூறியும் அமையாது, 'பிற அல்ல' என அதன் அறியாமையைப் பின்னும் வற்புறுத்திக் கூறினர். நல்லொழுக்க முடையோர்க்கன்றி மற்றையோர்க்கு இன்சொல் சொல்லுதலும், பணிந்து நடத்தலும் இலவாதலின் அவ்விரண்டையும் எடுத்துக் கூறினர்." —தி.சு.செ

"வாய்திறவா தென்சொலினும்" என்றும், "பித்துடைய தல்ல பிற" என்றும் இரண்டிடத்தும் ஒருமை முடிபாகவே பாடமோதுவாருமுளர். இவர்கள் "ஞாலம்" என்பதற்கு உலகம் என்றே பொருளுரைப்பர். ஒருமையிற் பன்மை மயங்குவதோடு திணையும் மயங்குவதனுல் இவ்வொருமைப்பாடமே பொருந்துமென்பர். "திறவாது" என்பதை வினையெச்சமாகக் கொள்வர். ஒழுக்கத்தை உயர்வாகக் கொள்ளாமல் அநித்தியமென பொருளையே உயர்வாகக்கொள்ளுதலால் உலகினைப் பித்துடையதென்று கூறியும் அமையாமல் "பிறவல்ல" என உலகின் அறியாமையைப் பரிஷ்காரமாகக் கூறி வற்புறுத்துகின்றனர். ஆயினும் ஒழுக்கமுடையாரையே பணிக, அல்லாதாரைப் பணியற்க என்பதே ஆசிரியர் கருத்தெனக் கொள்க." —பழையவுரை.

**இன்சொல்லன் தாழ்நடையனுயினும்:**

**இன்சொல்**—"கேட்போர்க்கு மகிழ்ச்சியை விளைக்கும் மதுர வார்த்தை." —அ.கு.

"இன்சொல் இனிதீன்றல் காண்பான்" என்ற **தமிழ்மறை** ஆட்சி காண்க.

**தாழ்நடையன்** — "தாழ்நடையாவது எதிர்கொளல், இருக்கை விட்டெழுதல், வணங்குதல் முதலியன." —அ. கு.

"எதிர்சென்று முகமன் கூறி யிருக்கையு நல்கியுண்டே
வதிசய மெனவிளவி யன்பொடு முகமலர்ந்து
துதிபுரிந் துபசரிக்கும் தொழிலினுற் செலவொன்றில்லை
யதிர்கட லுலகுளோர்த மன்பெலாம் வரவாமாதோ."

என்ற **நீதிநூற்** செய்யுளை நோக்குக.

"பணிவுடைய னின்சொல னுதலொருவற்
கணியல்ல மற்றுப் பிற."

என்ற **வள்ளுவர்** வாக்கானும் இன்சொல்லுடைமையும் பணிவுடைமையும் ஒருங்கே சேர்ந்து செல்லுதல் உணரப்படும்.

**ஒன்றில்லாரேனும்:**

**ஒன்று(ம்)** - "இஃது எண்ணுகுபெயராய்ப் பொருளை யுணர்த்தி நின்றது." —சி. மு.

"ஒன்று என்னும் வரையறைப் பண்பு இங்குச் சிறுமையை யுணர்த்தியது; அதனீற்றில் இழிவுசிறப்போடு முற்றுப்பொருள் தரும் உம்மை தொக்கது." —ஏ. எஸ். ஜே.

"ஒன்று என்றது எண்ணலளவை யாகுபெயர்; அஃது அறத்திற்கும் இன்பத்திற்குந் துணைக்கருவி மாத்திரையாய் நின்ற அச்சிறப்புடைப் பொருண்மேல் நின்றது. ஒன்று மில்லானேல் என உம்மை வருவித்துரைப்பாரு முளர்." —வி. கோ. சூ.

"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்"

என்பதனுல் பொருட்செல்வத்தின் இன்றியமையாமை விளங்கும்.

**வன்சொல்லி னல்லது வாய்திறவா:**

**வன்சொல்லின்**— வல்+சொல்-வன்சொல். கேட்போர்க்கு வெறுப்பினை விளைவிக்குங் கடுஞ்சொல்.

**என்சொலினும்:**

"கடிந்து பேசினுங் கைவிடாரென்பது தோன்ற "என் சொலினு' மென்றார்." —அ. கு.

"**என்** — வினைப்பெயர்; 'என்னுனும் விளம்பரிது' என மூன்றனுருபேற்றும், 'என்னுக் கடைவுடையேன் யான்', 'என்னுக்கோ வளர்கின்றதே' என நான்கனுருபேற்றும் வரும். உரு பேற்பது பெயரேயன்றி வினையன்றென அறியமாட்டாத ஒரு வர் குறிப்பு வினைமுற்றென்பர்." —கோ. இ.

**கைத்துடையான் காற்கீழொதுங்குங் கடன் ஞாலம்:**

"கையிலுள்ளது கைத்து; இது குறிப்பு வினைப்பெயர்."
—சி. மு.

**கைத்துடையான்** — "பொருளுடையான் — ஏழாம் வேற் றுமைத் தொகையாகவும், இடைநின்ற அத்துச்சாரியை முதல் அகரங் கெட்டதாகவுங்கொண்டு கையிற் பொருளுடையா னெனப் பொருள் கூறினும் பொருந்தும்." —கோ. இ.

"செல்வரையும் வறிஞரையும் முறையே உடையாரெனவும் இல்லாரெனவுங் கூறுதல் வழக்கு" —வி.கோ.சூ.

"கைத்துண்டாம்போழ்தே கரவாதறஞ்செய்மின்."
—நாலடியார்.

"முன்னர்ப் பொருளில்லாதவனை இன்சொல்லன் தாழ் நடையனென்று கூறியவற்றிற்கு மறுதலையாக இங்கே கைத் துடையானுக்கு வன்சொல்லன் மீதூர்ந்த நடையினனாயினும் என்பவற்றை வருவித்துப் பொருளுரைக்க." —உ.வே.சா.

**காற்கீழ்** — "என்றமையால் அவனுக்கு அடிமையாகி என் றுரைப்பினும் அமையும்."

**கடன் ஞாலம்** — "கடல்-கள் + தல்; கள் - தோண்டு; சகர ரால் தோண்டப்பட்டமையின் கடல் காரணப்பெயராயிற்று."
—வி.கோ.சூ.

க்டு என்பது மிகுதிப்பொருட்டாதலின், கடுதல் - மிகுந் திருத்தல்; அஃதாவது நிலப்பகுதியினும் (நீராகிய பகுதி) மிகுந் திருத்தலால் கடுதல் கடல் எனப்பட்டது என்று பொருள் கொள்ளலாம் போலும்.

ஞாலம் இடவாகுபெயராய் மக்களை உணர்த்தியது.

**பித்துடைய அல்ல பிற:**

**பித்துடைய**—"நல்லதன்பாலுள்ள நன்மையுந் தீயதன்பா லுள்ள தீமையு முள்ளவாறு பிரித்துணராமை பற்றிப் 'பித்து டைய' எனக்கூறினார்". —அ.கு.

இன்சொலாலன்றி இருநீர் வியனுலகம் வன்சொலா லென்று மகிழாது என்பதறிந்தும் வறிஞரைக் காணின் கடுஞ் சொற் கூறல் பித்துடைமையே யன்றோ!

"பித்துடைய அல்லபிற கடல் ஞாலம்" எனக்கொண்டு கூட்டி, "பைத்தியகுண முடையவரன்றிப் பிறிதுடையராகாத சமுத்திரத்தாற் புடை சூழப்பட்ட இப்பூமியின்கணுள்ள மாக்கள்" என உரை கூறுவர் திரு. வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்.

இது **தன்மைநவிற்சியணி.**

Though he may be courteous in speech, and humble in his behaviour, they will not open their lips to a poor man except in harsh words. Whatever a rich man may say they will crouch beneath his feet. Surely, this world surrounded by the sea is full of madness. —H. S.

The world will talk harshly to him who has not wealth, although he be kind and humble; whereas they will shelter themselves under the feet of the wealthy though he may be the reverse in manner. Men are subject to a species of insanity. The inhabitants of the sea-girt earth are not good. —C. M.

People will not open their lips to a poor man except in harsh words, although he be courteous in speech and humble in behaviour. Whatever a rich man may say, they will crouch beneath his feet. Surely the inhabitants of the sea-girt earth are full of madness. —S. W.

However sweet in speech and humble in behaviour the poor get only harsh words; (one gets only harsh words if he is but devoid of wealth); the sea-girt earth crouches beneath the feet of the wealthy however rudely they speak. Is this not madness? —T. B. K.

The sea-girt world will seek shelter under the feet of a moneyed tyrant, however grating be his words of greeting. But they will not open their mouth save in harsh accents to one, who though of kind words and modest behaviour, is not possesed of pelf. Ah! they are not mad for all that! --K. S.

---

## 12. புலவர் வறுமை

இவறன்மை கண்டு முடையாரை யாரும்
குறையிரந்துங் குற்றேவல் செய்ப—பெரிதுந்தாம்
முற்பக லோலாதார் நோற்றாரைப் பின்செல்லல்
கற்பன்றே கல்லாமை யன்று.

1. இவறன்மை - ஈயாத்தன்மை (உலோபத்தன்மை) உடையராதலை, கண்டும் - அறிந்திருந்தும், உடையாரை - செல்வமுடையாரை, யாரும் - மற்றையோர் யாவரும், குறையிரந்தும் - தத்தங் குறைகளை வாய்விட்டுக் கூறிப் பொருளிரந்தும், குற்றேவல் - (அச்செல்வர்) ஏவிய சிறு பணிகளையும், செய்ப - செய்து முடித்துக் (கைகட்டி நிற்பார்கள்); பெரிதும் - மிகுதியும், தாம் - தாங்கள், முற்பகல் - முற்பிறப்பில், நோலாதார் - (செல்வம் பெறுவதற்கு ஏற்ற) தவஞ் செய்

யாதவர்கள், நோற்றாரை - (முற்பிறப்பிற்) பெருந் தவஞ் செய்த வர்களை, பின் செல்லல் - (இவ்வாறு) பின் தொடர்ந்து செல்லுதல், கற்பு அன்றே - கல்வி யறிவுடைமையே யாம்; கல்லாமை - அறிவின்மை அன்று - அன்றாம்.

2. உடையாரை இவறன்மை கண்டும் யாரும் குறைபிரந் தும் குற்றேவல் செய்ப; தாம் முற்பகல் பெரிதும் நோலாதார் நோற்றாரைப் பின்செல்லல் கல்லாமை யன்று, கற்பன்றே.

3. மேலைத் தவத்தளவே யாரும் செல்வமாதலால் பிச்சை புகினுங் கற்றலே நன்று.

4. "இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்" —குறள்.

"ஆகா தெனினு மகத்துநெய் யுண்டாகின்
போகா தெறும்பு புறஞ்சுற்றும்—யாதுங்
கொடாஅ ரெனினு முடையாரைப் பற்றி
விடாஅ ருலகத் தவர்" —நாலடியார்.

"கரும வரிசையாற் கல்லாதார் பின்னும்
பெருமை யுடையாருஞ் சேறல்—லருமரபி
னோதை மரற்று மொலிகடற் றண்சேர்ப்ப
பேதைமை யன்ற தறிவு." —நாலடியார்.

5. "உலோப குணமுடையவரைப் பின்பற்றிச் செல்லல் அறியாமை என உலகினர் கூறுங் கூற்றை மறுப்பார் முன்னு னில் தவமுடையவரைத் தவமில்லார் பின்பற்றிச் செல்லல் முறையாதலின் "கற்பன்றே கல்லாமை யன்று" என்றார்.
—இ. சு. செ.

"உலோபியராயினும் செல்வரை உலகம் பாராட்டுமென்பர். இஃது உலோபியரைப் புகழ்வதுபோலப் பழித்தபடி."
—உ. வே. சா.

"தவமுடையாரை வேண்டுதல் கல்விக்கு அழகு என்றமை யாற் பொருளுடையாரை வேண்டுதல் அழகன்று என்பது பெறப்படும்."
—இள.

**இவறன்மை கண்டும் உடையாரை:**

**இவறன்மை**—இவறலாகிய தன்மை. 'பற்றுள்ளம்' என்பர் **திருவள்ளுவர்.**

"இவறலது தன்மையாவது குணங்களெல்லாம் ஒருங்குள வாயினும், அவற்றைக் கீழ்ப்படுத்தித் தான் மேற்படவல்ல வியல்பு என்பர் **பரிமேலழகியார்.** உலோபகுணம் தீயகுணம் யாவற்றினுள்ளும் மிகத் தீயதாம். இது பற்றியன்றே,

> "பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு
> மெண்ணப் படுவதொன் றன்று."

என்றார் **திருக்குறளினும்.** —வி. கோ. சூ.

"இவறன்மை—பொருளை வேண்டுமிடத்து விடாது பற்று தலைச் செய்யுமுள்ளம். இதனை வடநூலார் உலோபமென்ப."
—அ. கு.

"இவறன்மை—கேட்டபொழுது பொருள் கொடாமை. இது 'இவறலும் மாண்பிறந்த மானமும்' என்றவிடத்து ஆசிரியர் **பரிமேலழகியார்** "இவறலும்" என்பதற்கு "வேண்டிய வழிப் பொருள் கொடாமையும்" என்று உரை கூறுதலின் வைத்து அறியப்படும்." —இள.

**கண்டும்**—"உலோபத்தன்மை யுடையராயிருத்தலை அறிந்த போது அவரை யணுகுதல் கூடாதாதலால், 'கண்டும்' என்ற வும்மை உயர்வு சிறப்பு." —கோ. இ.

**உடையார்** - செல்வரை உடையாரென்றல் உலகவழக்கு.

**யாரும் குறையிரந்தும் குற்றேவல் செய்ப:**

**யாரும்**—"யாவரும் என்பதின் மரூஉ. உம்மை முற்றும் மையாதலால் யா வினுப்பொருளை ஒழித்து எஞ்சாமைப் பொருளை உணர்த்தியது." —ஏ.எஸ்.ஜே.

**குறையிரந்தும்**—குறை-குறைபட்ட பொருள்களுக்கு ஆகு பெயர். செல்வர்பாற் பொருள்வேண்டிக் குறையிரத்தல் இழி

வாழுமென்பது. "பல்லெலாந் தெரியக்காட்டி, பருவரன் முகத்துக் கூட்டிச், சொல்லெலாஞ் சொல்லிநாட்டி. துணைக்கரம் விரித்து நீட்டி, மல்லெலா மகல வோட்டி மானமென்பதனை வீட்டி" இரத்தல் "அந்தோ, இழிவிழி வெந்த ஞான்றும்!" என்ற குசேலோபாக்கியானச் செய்யுளாலும் இஃது ஒருவாறுணரப் படும்.

**குற்றேவல்**—குற்றேவல் என்ற இழிவுசிறப்பும்மை விகாரத் தாற் றொக்கது. குறுமை ஏவல்-குற்றேவல்.

"குற்றேவல்—சிறிய ஏவல்களை. அவர் வேண்டாமே தாமே சென்று ஏவல் புரிவர் (நாலடியார்-337). 'இஃது அறியாமை யல்லவா?' என்று கேட்போருக்கு விடையிறுப்பார் போன்று அதற்கு ஒரு காரணங் கற்பிக்கின்றார் ஆசிரியர்." —உ.வே.சா.

**பெரிதுந்தாம் முற்பகல் நோலாதார் பின்செல்லல்:**

"**முற்பகல் நோலாதார்** - முற்பிறவிகளில் தவஞ் செய்யா தவர். முற்பகல்-முன்னாள். இங்கே - முற்பிறவியைக் குறித்தது; பகல்-ஆகுபெயர். முற்பிறப்பில் தவஞ் செய்யாதார் செல்வ மின்றி இப்பிறப்பில் வறியராயினவர். நோற்றார்-இப்பிறப்பில் செல்வம் பெறுவதற்கேற்ற தவத்தை முற்பிறப்பில் செய்தவர்."
—உ. வே. சா.

**கற்பன்றே கல்லாமை அன்று:**

"**கற்பு, கல்லாமை** என்னுங் காரணப்பெயர்கள் முறையே அவற்றின் காரியமாகிய அறிவுக்கும், அறியாமைக்கும் ஆதலால் காரணவாகுபெயர்கள்." —கோ.இ.

"கற்பு—கற்பிக்கப்பட்டது கற்பு" —சி. மு.

"கற்பு—நியமம்." —சி.வை.தா.

**அன்றே**—"ஏ" எதிர்மறை வினாவாய் அன்றுக்கு எதிர்மறை யான உடன்பாட்டை யுணர்த்தியது.

"கற்பு அன்றே - கல்வியறிவு அன்றோ? தவம்புரிந்தாரைத் தவம்புரியாதார் வழிபடல் கல்வியறிவின் பயனன்றோ வென்றபடி.

இங்ஙனம் இருப்பவும் இதனைக் கல்லாமையின் பயனென்று கூறுதல் பிழையென்றார்.'' —உ.வே.சா.

"அன்று—அசை" —அ. கு.

உலோபிகளைப் பின்செல்வோர் புகழ்வதுபோலப் பழிக்கப் பட்டமையின் **வஞ்சப் புகழ்ச்சியணி.**

"இது தனித்தமிழ்ச் செய்யுள்." —வி. கோ. சூ.

Although they see their covetousness, all urge their wants on the rich, and perform their mean behests The submission of those who were not eminently devout in a former birth to those who were, is doubtless not from ignorance but the decree *of destiny.* —H. S.

Men will do menial offices to the rich, importuning them with suits for redress although they be found niggardly. Is it not proper that those who did not perform deeds of penance in a former birth should dance attendance on those who have so done? This is not their own ignorance. —C M.

Although rich people be found covetous, all urge their words on them and do menial service to them. It is doubtless, not from ignorance but from the decree of destiny that those who neglected religious austerities in a former birth, should serve those who practised them. —S.W.

Even knowing the rich to be niggardly, men do menial service importuning them with suits for redress; the submission of those that did not do good deeds in a former birth to those that did, is doubtless not from ignorance but by destiny. —T.B.K.

All will be at the beck and call of the wealthy and do as they bid, well-known misers though they be.

It is not folly but the fruit of learning that they who failed to do penance in the past should go behind them who did it.

—K. S.

---

## 13. கல்வியழகே யழகு

கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோ ரணிகலம் வேண்டாவாம்—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகு செய்வார்.

1. கற்றோர்க்கு - கல்வியறிவுடையோர்க்கு, கல்வி - (அக்) கல்வியினாற்பெற்ற, நலனே - அறிவே, கலன - (அவரால் விரும்பப்படும்) ஆபரணமாம்; அல்லால் - அதனை அன்றி, மற்று - பிறிது, ஓர் அணிகலம் - ஓர் ஆபரணமும், வேண்டா ஆம் - அவரால் வேண்டப்படுவதில்லையாம்; முற்ற - முழுவதும், முழுமணி - பருத்தமணிகளால் ஆகிய, பூணுக்கு - ஓர் ஆபரணத்திற்கு, பூண் - (மற்றுமோர்) ஆபரணம், வேண்டா-வேண்டப்படுவதில்லை; யாரே-யார்தாம், அழகுக்கு- அழகினுக்கு, அழகுசெய்வார்-அழகுசெய்யப்புகுவார்கள்? (ஒருவருமிலர்).

2. முற்ற முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டாவாம்; கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால் மற்றோர் அணிகலம் வேண்டாவாம், அழகுக்கு யாரே அழகு செய்வார்!

3. **கல்வியிற் சிறந்தோ ரணிகலனில்லை யாதலால் அதனை விரைந்து பெறுதல் வேண்டும்.**

"நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று.
—குறள்.

4. "இடைவனப்புந் தோள்வனப்பு மீடின் வனப்பும்
நடைவனப்பு நாணின் வனப்பும் — புடைசால்
கழுத்தின் வனப்பும் வனப்பல்ல வெண்ணோ
டெழுத்தின் வனப்பே வனப்பு."
—ஏலா

"குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்ச ளழகு மழகல்ல — நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையாற்
கல்வி யழகே யழகு" —நாலடியார்.

**கற்றோர்க்குக் கல்வி நலனே கலன்:**

**கல்வி நலனே**— "கல்வி-கற்றல்; கற்ற நூற்பொருளிற்குத் தொழிலாகு பெயராய் நின்றது. நலம் என்னும் அஃறிணைப் பெயரீற்று மகரத்திற்கு னகரம் போலியாகி நின்றது." —மோ. வே.

நலன் என நிற்றல் இயல்பு எனவும், மகரமெய்யாதல் போலியெனவுங் கூறுவர் ஒருசாரார்.

"யாண்டும் பால்பகாவஃறிணைப் பெயர்க்கண் குறிலிணையை யணைந்துவந்த மகரவொற்றீறே யிப்போலியை யடையும்." —சி. மு.

"கல்வியின் நலம் அதனறிவேயாம்" —வி. கோ. சூ.

'நலனல்லால்' எனப் பாடமோதுதல், "எனைத்துணையரேனு மிலம்பாட்டார் கல்வி தினைத்துணையுஞ் சீர்ப்பாடிலதாம்" என்னுஞ் செய்யுளோடு முரணி மாறுகொளக் கூறலென்னுங் குற்றத்தை விளைவிக்குமென்க." —சி. வை. தா.

அணிகலன் தான்உள்ள இடத்தில்—அளவுபட்ட ஓர் எல்லைக்குள்—தன் ஒளியை வீசி நிற்கும்; கல்விக் கலனோ தான் உள்ள இடத்தும், புறத்தும்—எல்லையில் தொலைக்குத் - தன் ஒளியை வீசிச் செல்லும். இதனை உணர்த்தவே 'கல்வி நலனே கலன்' என ஏகாரம் கொடுத்தோதினரென்க.

**அல்லால் மற்றோரணிகலம் வேண்டாவாம்:**

"அல்லால்—எதிர்மறை வினையெச்சம்; அல்-பகுதி; ல்-சந்தி ஆ-சாரியை; ல்-விகுதி; விகுதியின் மகரம் முதற்குறை." —தி. சு. செ.

"மற்றோர் அணிகலம் என்பதற்கு, "மற்றோர் - செல்வப் பொருளுடையார், அணிகலம் - அணிந்துகொள்ளும் ஆபரண மும்" என உரைப்பினும் பொருந்தும்." —கோ. இ.

அணிகலமும் என்னும் உம்மை விகாரத்தாற் றொக்கது.

**வேண்டாவாம்** — "வேண்டப்படா என்னும் செயப்படு பொருளை யுணர்த்தும் வினை 'வேண்டா' என மயங்கி நின்றது." —சி. மு.

"வேண்டா - பலவின்பாற் படர்க்கை முற்று; வேண்டு- பகுதி, உகரக்கேடு சந்தி, ஆ-விகுதி: இது எதிர்மறைக்கன்றி உடன்பாட்டிற்கு வாராது." —தி. சு. செ.

"வேண்டா" என்னுஞ் சொல், "அறத்தா றிதுவென வேண்டா" என முன்னோர் செய்யுளிலும் ஒருமைக்கண் பெரும் பாலும் வழங்கி வருதலால், இல் என்பது, இல்லையென்பதன் கடைக்குறைபோல, கடைக்குறையி லடக்குக. கடைக்குறை விகாரம் பெறுவிட்டால் "வேண்டாது" என வரும். இது செயப் பாட்டு வினைமுற்றாதலால் படுவிகுதி முதலியன தொகுத்தல் எனக் கொள்க." —கோ. இ.

"வேண்டும்" என்பதன் எதிர்மறை "வேண்டா" என்பது; இவ்வேண்டா என்பதூந் திணைபாலிடமெலாஞ் செல்லுமெனக் கொள்க." —வி. கோ. சூ.

**முற்ற முழுமணிப் பூணுக்குப் பூண் வேண்டா:**

**முற்ற**—இதனை "உற்ற" என்று பாடமோதி "அழுத்திச் செய்யப்பட்ட" என்று பொருள் கொள்வர் **அ. குமாரசுவாமிப் புலவர்.** இப்பாடம் "முழுவதும்" என்னும் பொருள்படும் 'முற்ற' என்னும் பாடத்திற்குரிய பொருளாற்றலினுங் குறைந்து நிற்பதை உய்த்துணர்க.

முற்ற - ஒரு காலத்தினும், என்று பொருள் கொள்வர் **ஜெகராவ் முதலியார்.** இப்பொருளும் சிறவாமை யறிக.

**முழுமணி**—"உடைத்துச் சாணை தீற்றப்பட்ட பொடிமணி களாலல்லாமல் முழுமணிகளாலேயே செய்யப்பட்ட நகையாம் என்றற்கு 'முழுமணிப் பூண்' என்றார்." —இள.

**யாரே அழகுக் கழகுசெய்வார்:**

**யாரே**—"என்பதன்கண் ஏகார வினாவிடைச்சொல் எதிர்மறைப் பொருள்கொடுத்து நின்றது." —சி. மு.

To gild refined gold, to paint the lily
To throw a perfume in the violet
To smooth the ice, or add another hue
Unto the rainbow, or white taper light
To seek the beauteous eye of heaven to garnish
Is wasteful and ridiculous excess. —Shakespeare.

"கல்வி நலனே கலன் என்பதற்கு முழுமணிப் பூணுக்குப் பூண் வேண்டா என உவமானங் காட்டினதால் எடுத்துக்காட்டுவமையணி; யாரே அழகுக்கு அழகு செய்வார் என அதனை நிலை நிறுத்தினதால் வேற்றுப்பொருள் வைப்பணி."

—ஊ. பு. செ.

"இது வடசொல் விரவாப் பாடலாத லுணர்க."

—வி. கோ. சூ.

The learned need no other ornament than the excellence of learning. Nothing is wanting to adorn an ornament sat perfectly with every precious stone. Who would beautify beauty itself? —H. S.

The learned need no other ornaments than their learning. A perfect ornament set with unbroken gems to present the best artistic effect needs no further decoration. Who is there that will endeavour to add beauty to what is passing fair? —C M.

The learned need no other ornaments than their learning. A jewel set with perfect gems needs no further embellishment. Who would beautify beauty itself? —S.W.

The learned need no other ornament than their learning; an ornament set with perfect gems needs no

further adornment. Who is there that will beautify what is already beautiful? —T. B. K.

The learned do not need any jewel other than the lustre of their erudition. No jewel can adorn an ornament full of the finest gems. Who will strive in vain to beautify beauty itself? —K. S.

---

## 14. கல்விச் செருக்கு

முற்றூ முணர்ந்தவ ரில்லை முழுவதூஉங்
கற்றனெ மென்று களியற்க—சிற்றுளியாற்
கல்லுந் தகருந் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி னால்.

1. முற்றும் - எல்லாவற்றையும், உணர்ந்தவர் - நன்கு கற்றறிந்தவர்கள், இல்லை - இலர்; முழுவதூஉம் - (ஆதலால்) யாவற்றையும், கற்றனம் - (யாம்) கற்றுவிட்டோம், என்று - என்று கருதி, களியற்க - செருக்கு அடைதலை ஒழிக; (ஏனெனில்), சிற்றுளியால் - சிறு உருவினதான கல்லுளியினால், கல்லும் - பெரிய மலைகளும், தகரும் - உடைபட்டு விடும்; தகரா - (ஆனால் அம்மலைகளோ) உடைபடா, கனங்குழாய் - கனமான காதணிகளையுடையவளே! கொல்லுலை - கொல்லனுடைய உலைக்களத்துள்ள, கூடத்தினால் - (பேருருவினதாகிய) சம்மட்டியினால்.

2. கனங்குழாய் முற்று முணர்ந்தவரில்லை; (ஆதலால்) கற்றனம் என்று களியற்க; கொல்லுலைக் கூடத்தினால் தகராக் கல்லும் சிற்றுளியால் தகரும்.

3. **கற்றது கைம்மண்ணளவு கல்லாதது உலகளவு என்பதுணர்ந்து அடங்கி மேலும்மேலும் கற்றல் வேண்டும்.**

4. "கல்வி கரையில கற்பவர் நாள்சில" —நாலடியார்.

"எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும்
எழுத்தறிவார்க் காணி னிலையாம்" —நன்னெறி.

"கடலே யனையம்யாங் கல்வியா லென்னும்
அடலே றனையசெருக் காழ்த்தி—விடலே" —நன்னெறி.

"பலகற்றேம் யாமென்று தற்புகழ வேண்டா
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங் காக்கும்
சிலகற்றார் கண்ணு முளவாம் பலகற்றார்க்
கச்சாணி யன்னதோர் சொல்" —அறநெறிச்சாரம்.

"நண்ணா லெண்ணி நுணங்க நாடிப்
பழுதின் றெண்ணிப் பகர்து மியாமெனின்
முழுது மியாரே முதுக்குறைந் தோரே."
—சிதம்பர மும்மணிக்கோவை.

5. "பெருங் கல்வியுடையவனால் வெல்லப்படாத ஒருவனை அற்பக் கல்வியுடையவன்றானும் வெல்லுவானென்பது புலப்பட இருப்புச் சம்மட்டியினாலே உடைக்கப்படாத மலை ஒரு சிற்றுளியால் உடைக்கப்படு மென்றார்." —அ. கு.

**முற்று முணர்ந்தவ ரில்லை:**

**இல்லை**—திணைபாலிடமெலாஞ் செல்லும் பொது வினை: "வேறில்லை யுண்டியார் வேண்டுந் தகும்படும், வினைபெயரெச்சம் வியங்கோள் பத்துந்திணைபா லிடமெலாஞ் செல்லுமென்ப." —இலக்கணக் கொத்து.

**முழுவதூஉங் கற்றனமென்று களியற்க:**

**முழுவதூஉம்** — "முழுவது: உரிச்சொல். இது பண்பாய் நின்று நிலை யுணர்த்தி, அவ்வாகுபெயராய் நின்றது. முழுமை பகுதி. அளபெடை இன்னிசை நிறைத்தற்கண் வந்த உயிரளபெடை."
—தி. சு. செ.

**கற்றனம்**— "தனித் தன்மைப்பன்மை வினைமுற்று. அவர் தஞ் செருக்கினை இச்சொல்லாற்றல் காட்டுதல் காண்க."
— வீ. கோ. சூ.

"ஒருவன் தன்னில் தன்னைப்பற்றிக் கருதும்போதும், பேசும்போதும் தன்னைத் தனிப்பன்மையாக வைத்தல் இயல்பாதலால் 'கற்றனம்' என்பது வழாநிலையேயாம்." —கோ. இ.

**களியற்க**—"களியல் பகுதி. வியங்கோட் பொருளிலும் எதிர்மறையொருமை யேவற்பொருளிலும் வரும்." —தி. சு. செ

**சிற்றுளியாற் கல்லுந் தகரும்:**

**கல்லும்**—கல் - ஆகுபெயர். உம்மை உயர்வுசிறப்பு. "கல்லுத் தகரும்" எனப் பாடங்கொண்டார் சி. வை. தாமோதரம் பிள்ளை.

**தகரா கனங்குழாய் கொல்லுலைக் கூடத்தினால்:**

**கனங்குழாய்**—"கனங்குழாய்" என்பது மெலிந்து நின்றது. இது முகநூஉ முன்னிலை.

கொல்—"ஆயுதத்தின் பெயர், அதை யுடையானுக்கு ஆகுபெயர்." —ஊ. பு. செ.

"சொல்லால் அஃறிணையும் பொருளால் உயர்திணையுமான பெயர்ச்சொல்." —ஏ. எஸ். ஜெ.

"கொல் - கொல்லன்; விகுதி கெட்டுப் பகுதியளவாய் நின்றது. இங்ஙனம் வருதலைக் "கொல் உலை வேற்கண் நல்லார்" என்னும் **நைடதப்** பாட்டானும் அறிக. உலை உலைக்களத்துக்கு வருதலும் அதன்கண் உள்ளது. கூடம் என்பது சம்மட்டியை உணர்த்துதலும், 'கூடம் எடுத்து அங்கைத் தலத்தால் அறைதிர்' (நைடதம்) என்பதன்கண் அறியப்படும்". —இள.

"முதல் வாக்கியமாகிய 'முற்று முணர்ந்தவரில்லை' என்னும் பொதுப்பொருளும், இறுதி வாக்கியமாகிய 'கொல்லுலைக் கூடத்தினாற் றகராக் கல்லும், சிற்றுளியாற் றகரும்' என்னுஞ் சிறப்புப் பொருளும், இடைவாக்கியமாகிய 'முழுவதூஉங் கற்றனமென்று களியற்க' என்னும் பொதுப் பொருளைச் சாதித்தலின் 'இது வேற்றுப்பொருள்வைப்பணியாம். இதுவுந் தனித்தமிழ்ச் செய்யுள்." —வி. கோ. சூ.

There are none who understand everything. Exult not in the idea that your learning is universal. The rock will give way to the small chisel of the mason: it will not, O thou! adorned with massive ornaments, yield to the blacksmith's hammer. —H. S.

There is none who knows everything. Be not proud that you have learnt all (that can be learnt). O thou! adorned with heavy ear-rings, even the hard rock can be broken by a small chisel. It cannot be broken by the blacksmith's hammer at the forge. —C. M.

No one knows everything; exult not therefore in the vain thought that you have learnt everything; O thou! adorned with earornaments, the rock that yields not to the blacksmith's hammer yields to the stone-mason's chisel. — T. B. K.

Do not exult in the completeness of your scholarship: for there is none that knows all. (You may be check-mated even by an inferior.) The stone that does not break under the big hammer of the forge may give way to the hit of a small chisel. —K. S

---

## 15. கற்கையவா

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க — தம்மினுங்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே யிவர்க்குநா மென்று.

1. தம்மின்-தம்மைக்காட்டிலும், மெலியாரை-பொருள் குறைந்தவர்களை, நோக்கி-(ஒப்பிட்டுப்)பார்த்து, தமது-தம்முடைய, உடைமை-

செல்வம், அம்மா பெரிது - ஓ ஓ மிகுதியாகும், என்று - என்று (ஒவ்வொருவரும்), அகம்-உள்ளம், மகிழ்க-களிப்பாராக! தம்மினும்-தம்மைக் காட்டினும், கற்றாரை - மிகுதியாகப் படித்தறிந்தவர்களை, நோக்கி - (ஒப்பிட்டுப்) பார்த்து, கருத்து - உள்ளம், அழிக - உடைவாராக! கற்றதெல்லாம் - நாம் கற்ற கல்வியனைத்தும், எற்றே - எத்தன்மையவாம், இவர்க்கு - இவருடைய கல்விப் பெருக்கத்தின் முன், என்று - என்று கருதி.

2. தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை அம்மா பெரிதென்று அகமகிழ்க; தம்மினும் கற்றாரைநோக்கி நாம் கற்றதெல்லாம் இவர்க்கு எற்றே என்று கருத்தழிக.

3. பெற்றது போதுமென்று அமைந்து மகிழ்க; கற்றது போதுமென் றமையாது மேலும்மேலும் கற்க.

4. "உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்." —குறள்.

5. "பொருமை முதலிய தீக்குணங்கள் கெடத் தம்மினுஞ் செல்வமுடையாரை நோக்கி யடங்கவேண்டும் என்பார் 'எளியாரை நோக்கித் தமதுடைமை அம்மா பெரிதென் றகமகிழ்க' எனவும், தாம் கற்றது அமையும் என ஒழியாது மேலுமேலுங் கற்கவேண்டுமென்பார் 'கற்றாரை நோக்கிக் கருத்தழிக' எனவுங் கூறினார்." —தி. சு. செ.

செல்வத்துக்குப் பெயராய் வரும் உடைமை என்பதைக் கூறினர், செல்வ நிலையிலும் இங்ஙனமே தம்மின் மெலியாரைக் கண்டு அகம் மகிழ்தற்கும், பெரியாரைக்கண்டு கருத்தழிதற்கும். 'அகம் மகிழ்க' என்றார், அம்மகிழ்ச்சியைப் புறத்திற் காட்டலாகா தென்றற்கு. 'அழிக' என்றார், படித்துவிட்டோம் என்னும் செருக்கின்பால் உள்ள வெறுப்பைத் தோற்றுதற்கு."
—இள.

"அழுக்கா றொழித்தற்கு உபாயங் கூறவந்தவர், தம்மினுஞ் செல்வரை நோக்கின் ஒரொரு சமயத்தேனும் அழுக்காறு நிகழுமா மென்று கருதி, 'தம்மின் மெலியாரை நோக்கி ... ... அகமகிழ்க' என்றும், கல்விப் பொருளை மேன்மேலும் அவாவ வேண்டுமென்பது ஒருதலையாகலானும், தம்மின் கற்றிலாரை

நோக்குமிடத்துச் செருக்குக் கொள்வதற்கு ஏதுவாகலானும், 'தம்மினுங் கற்றாரை நோக்கிக் கருத்தழிக' என்றுங் கூறினர்.''
—பழைய உரை.

**தம்மின் மெலியாரை நோக்கி:**

மெலியார்—பண்படியாகப் பிறந்த குறிப்பு வினையாலணையும் பெயர். வறுமையால் வருந்தி மெலிந்தோர் என்று பொருள் படும்.

**தமதுடைமை அம்மா பெரிதென் றகமகிழ்க:**

உடைமை—''செல்வம் 'இவறன்மை கண்டும் உடையாரை' என்று முன்னும் வந்தது. இச்செய்யுள் உள்ளக்கருத்தை நோக்கியதாதலால் உடைமை என்பதைப் பண்புப்பெயராகக் கொண்டு உடையராந்தன்மை என்று பொருள் செய்க. இது ''எம்மையுடையார் எமையிகழார்'' என்னும் சிவஞான முனிவரவர்கள் திருமொழி (சிவஞானமாபாடியம்) யாலும். 'உடைமையுள் இன்மை' என்னுந் திருவள்ளுவர் திருமொழி (குறள்) யாலும் விளங்கும். அத்திருவள்ளுவர் திருமொழியிலுள்ள 'உடைமை' என்பதற்கு ஆசிரியர் பரிமேலழகியார் 'உடையனாந் தன்மை' என்று பொருளுரைத்தார்.'' —இள.

அம்மா—வியப்பிடைச் சொல்.

அகம் மகிழ்க—திணைவழுவமைதி.

**தம்மினும் கற்றாரை நோக்கிக் கருத்தழிக:**

கருத்தழிக—என்பதுந் திணைவழுவமைதி.

''ஈண்டுள்ள 'அகமு'ம் 'கருத்து'ம் 'ஒவ்வொருவரும்' என்னுந் தோன்றா எழுவாயின் வினைகளாய 'மகிழ்க', 'அழிக' என்பனவற்றோடு முறையே முடிந்தன; என்னை? ''உயர்திணை தொடர்ந்த பொருள்முத லாறு மதனொடு சார்த்தி னத்திணை முடிபின'' என்றாராகலின்.''
—வி. கோ. சூ.

''தாங் கற்றதே பெரிதென்னுங் கர்வம் கற்றதைக் கெடுத்தலன்றிப் பின்னுங் கற்கவிடாமைபற்றிக் 'கருத்தழிக' என்றார்.

"செருக்குற அழியுங் கற்ற கல்வி" என்பது திருவிளையாடற் புராணம்."
—அ. கு.

**கற்றதெல்லாம் எற்றே யிவர்க்கு நாமென்று:**

**கற்றதெல்லாம்**—"ஒருமையிற் பன்மை வந்த பால்வழுவமைதி. எல்லாம் என்பது முழுமைத் தன்மையையும் ஏற்று அளவின் தன்மையையுங் குறித்தது."
—இள.

**எற்றே**—"மிகவற்பமானதென்பது தோன்ற 'எற்றே' என்றார்."
—அ. கு.

"ஏகார விஞ எதிர்மறையை யுணர்த்திற்று." —சி. மு.

"இச் செய்யுளிற் சொல்லப்பட்ட இரண்டு கருத்துக்களையும் ஒன்றற் கொன்று உவமையாகக் கொண்டக்கால் இஃது எடுத்துக்காட்டுவமையணியின் பாற்படும். இது தனித்தமிழ்ச் செய்யுள்."
—வி. கோ. சூ.

Contemplate those who are poorer than yourselves, and rejoice in the greatness of your possessions. Contemplate those who are more learned than yourselves, and destroy self-conceit, exclaiming what is all our learning to these !
—H. S.

Observing the condition of persons poorer than yourself, feel glad at heart that your lot is comparatively happy. Be sorry when you see persons cleverer than yourself, by reflecting on their superiority. —C. M.

Look at those who are poorer than yourselves and rejoice in the greatness of your possessions. Look at those who are more learned than yourselves, and destroy self-conceit, exclaiming what is all our learning to these !
—S. W.

Beholding those poorer than yourself, rejoice that your lot is happier; but beholding those that are better

off, reproach yourself that all you have learnt is nothing by comparison with theirs. —T. B. K.

For the wealth, look at the less fortunate and feel contented that you are placed better than they; for learning, look up to your superiors and feel humbled by a sense of the comparative inferiority of your intellectual equipment. —K. S.

---

## 16. எல்லார்க்கும் நன்றும் பணிதல்

கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
செல்வமுஞ் செல்வ மெனப்படு—மில்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோற் றாமுந்
தலைவணங்கித் தாழப் பெறின்.

1. கல்வியுடைமை - கல்விச் செல்வம், பொருளுடைமை - பொருட்செல்வம், என்று - என்னும், இரண்டு செல்வமும் - இரு செல்வங்களும், செல்வம் - (உண்மைச்) செல்வங்கள், எனப்படும் - என்றே (அறிவுடையோரால்) பாராட்டப்படும்; (எப்போதெனில்) இல்லார் -(அவ்விரு செல்வங்களும்) தம்மிடம் இல்லாதார், குறையிரந்து- (அவ்விரண்டையும் பெறுதலின்கண் தத்தமக்குள்ள) குறைபாடுகளை யெடுத்துச் சொல்லி, தம்முன்னர் - (இருவகைச் செல்வமும் படைத்த) தம்மெதிரில், நிற்பபோல் - நிற்றலை யொப்ப, தாமும் - (இரு செல்வங்களும் படைத்த) தாங்களும், தலைவணங்கி - தலையால் வணங்கி, தாழப் பெறின் - பணிதலியலுமாயின்.

2. தம்முன்னர் இல்லாதார் குறையிரந்து நிற்பபோல், தாமும் தலைவணங்கித் தாழப் பெறின் கல்வியுடைமை பொருளுடைமை யென்றிரண்டு செல்வமுஞ் செல்வமெனப்படும்.

3. கல்விச் செல்வமும் பொருட் செல்வமும் பணிவுடைமையாற் சிறப்புறுவனவாம்.

4. "எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து." —குறள்.

"செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின்." —குறள்.

"அடக்க முடையா ரறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா." —மூதுரை.

"கற்றறிந்தார் கண்ட அடக்கம்" —பழமொழி.

"நளிகடற் றண்சேர்ப்ப நல்கூர்ந்த மக்கட்
கணிகல மாவ தடக்கம்." —நாலடியார்.

5. "கற்றோரும் செல்வரும் வணக்கமுடையராதல் வேண்டும் என்று கூறுவார், வணங்குவதற்கு உபாயங் கூறியபடி. 'அறிவோர்க்கழகு கற்றுணர்ந் தடங்கல்' (வெற்றிவேற்கை) என்பதனால் கற்றோருக்கும், 'எல்லார்க்கும் நன்றாம் பணிதல்' (குறள் 125) என்பதனால் செல்வருக்கும் பணிவுடைமை வேண்டுமென்று பெரியாரும் பணித்தனர்." —உ. வே. சா.

"தாழ்ந்து நடப்போனுடைய செல்வமே தனக்குரிய நன்மதிப்பினைத் தப்பாது பெறுமென்னுங் கருத்தினை யடக்கித் 'தலைவணங்கித் தாழப் பெறின்' 'செல்வமுஞ் செல்வமெனப்படு' மென்றார். பணிவில்லாரிடத்துள்ளதுஞ் செல்வமெனப்படினும் செருக்கென்னும் அழுக்கடைந்து வேறொன்றாக எண்ணப்படு மென்க." —அ. கு.

"இருவகைச் செல்வங்களில் ஒன்றேனும் உடையோர் அச்செல்வக் களிப்பால், தம்மை மறந்து நடப்பின் பழிபாவங்களிற் புகுத்துமாதலிற் பணிந்து நடக்கவேண்டும் என்பார் 'தலைவணங்கித் தாழப்பெறின்' எனவும். பணிந்து நடப்போர் செல்வம் இம்மையிற் புகழும், மறுமையிற் சுவர்க்காதி யின்பமுந் தருதலில் 'செல்வ மெனப்படும்' எனவுங் கூறினார்." —தி. சு. செ.

"செல்வத்தாற் கல்வியும், கல்வியாற் செல்வமும் ஒன்றுக்கொன்று துணையாய் நின்று அவ்விரண்டும் ஓங்கிப் பொலியு

மாதலின் அவ்விரண்டும் ஒருவற்கு வேண்டற்பாலவாம் என்பது இந்நூலாசிரியர் கருத்து. இது இதற்குமுன்வந்த 10, 11-ஆம் செய்யுட்களாலும் விளங்கும். பொருளுடைமையால் விளையுஞ் செருக்கெழுச்சியைக் கல்வியுடைமை தாழச் செய்யுமாதலின் 'தாழப் பெறின்' என்றார். பொருட் செல்வத்தை உண்மைப் பொருட் செல்வமாக்குவது கல்வியுடைமையாதலால் அதனை முற்கூறினார். அன்றியும் இல்லையென்று வருவாரை இன்சொன் மொழிந்து தாழ்ந்து எதிர் அழைப்பது முன்னும், பொருள் தருவது பின்னுமாயே நிகழ்வதால், அம்முறையே தாழ்மை பயக்கும் கல்வியுடைமையை ஈகை பயக்கும் செல்வமுடைமைக்கு முன்னிறுத்தினார் என்றலுமாம். இங்ஙனம் தாழ்மையும் ஈகையுமான பயன்களைப் பெற்றபொழுதே கல்வியுடைமையும் செல்வமுடைமையும் உண்மைச் செல்வங்களெனப்படும் என்றற்குச் 'செல்வமுஞ் செல்வமெனப்படும்' என்றார்.'' —இள.

**செல்வமுஞ் செல்வமெனப்படும்:**

''**எனப்படும்** என்பது 'இல்வாழ்வா னென்பான்' என்புழிப்போலச் சிறப்புப்பற்றி நின்றது.'' —வி. கோ. சூ.

**தலைவணங்கித் தாழப் பெறின்:**

''செருக்கடங்கித் தாழப்பெறுதல் அருமையாதலின் 'தாழப் பெறின்' என்றார். ஈண்டுத் 'தாழ' வென்னுஞ் செயவெனெச்சம் தொழிற்பெயர்ப் பொருள்பட்டு நிற்றல் காண்க.'' —வி.கோ.சூ.

''தலைவணங்கித் தாழப்பெறின் என்றார் கல்வியுடைமை செல்வமுடைமை என்னும் இரண்டாலும் விளைவதாம் செருக்கை அவ்வப்போதும் அடக்கிக்கொண்டேவரல் வேண்டுமென்பதற்கு.'' தாழ்தலை யுடையவர் கொடையை யுடையவராயிருப்பராதலால் 'தாழப்பெறின்' என்பதனோடு நிறுத்தினார். அங்ஙனந் தாழ்தலின் அருமையும் பெருமையுந் தோன்ற, 'கீழோராயினுந் தாழவுரை' என்னும் முதுமொழி (கொன்றை வேந்தன்) இங்குக் கருதக்கூடியது.'' —இள.

''அடக்கம் அமரருள் உய்க்கும் ஆதலால் செல்வத்தின் அருமைதோன்றத் 'தாழப்பெறின்' என்றார்.'' —பழைய உரை.

"இது உய்த்துணர்வணி. இது தனித்தமிழ்ச் செய்யுள்."
—வி. கோ. சூ.

The wealth, which consists in the possession of learning, and the possession of riches, may be termed wealth indeed, if its possessors bow the head with humility, as the destitute who stand begging before them. —H. S.

If the learned or the rich should be humble like the unlearned or the poor who stand in their presence representing their grievances, then alone shall they be said to possess real wealth and learning. —C. M.

Learning and wealth are esteemed as true wealth only when the possessors are as humble as the poor who standing before them beg for them. —T. B. K.

There are two species of riches, learning and wealth. Both deserve the name and are worth having, if the rich in either bend low in a spirit of true humility just like the poor standing suppliant before them. —K. S.

---

## 17. பெரியோர் பணிவு

ஆக்கம் பெரியார் சிறியா ரிடைப்பட்ட
மீச்செலவு காணி னனிதாழ்ப—தூக்கின்
மெலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழுந் துலைக்கு.

1. ஆக்கம் - (கல்வி, பொருளாகிய இரு) செல்வவளத்தில், பெரியார் - மிகுந்தவர்கள், சிறியார் இடைப்பட்ட - (அவ்விருவகைச் செல்வமுங்) குறைந்தவர்களிடத்தே உண்டாகிய, மீச்செலவு - வரம்பு

கடந்து நடக்கும் நடக்கையை, காணின் - காண்பார்களாயின், நனி - மிகவும், தாழ்ப - தாழ்ந்து போவார்கள்; தூக்கின் - தூக்கிப்பிடித்தால், மெலியது - எடை குறைந்தபொருளுள்ள தட்டு, மேன் மேல் - மேலும் மேலும், எழ - எழுவதற்கு, செல்லச் செல்ல - உயரும்பொழுதெல்லாம், வலிது - எடை மிகுந்த பொருளுள்ள தட்டு, அன்றே - அல்லவோ, தாழும் - தாழ்ந்துபோகும், துலைக்கு - தராசின்கண்.

2. துலைக்கு தூக்கின் மெலியது மேன்மேல் எழச் செல்லச் செல்ல வலிதன்றே தாழும்; (அதுபோலவே) சிறியாரிடைப் பட்ட மீச்செலவு காணின் ஆக்கம் பெரியார் நனிதாழ்ப.

3. கல்வியுஞ் செல்வமும் உடையார்க்குச் சிறப்பை யளிப்பது அவையில்லாதார் வரம்புகடந் தொழுகுமிடத்தும் செருக்கின்றித் தாழ்மையுடன் நடந்துகொள்வதேயாம்.

4. "பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்" —குறள்.

"சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம்
பெரியோ ராயிற் பொறுப்பது கடனே" —வெற்றிவேற்கை.

"கற்றறிந்த நாவினர் சொல்லார்தஞ் சோர்வஞ்சி
மற்றைய ராவார் பகர்வர்—பனையின்மேல்
வற்றிய வோலை கலகலக்கு மெஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை யொலி" —நாலடியார்.

5. "ஆக்கம் என்றது இருவகைச் செல்வத்தையும். இருவகைச் செல்வங்களு ளொன்றேனுங் குறைவறப் பெற்றோர் அவற்றாலாய பயன் முற்றும் அறிந்தவராதலின், பணிந்து நடத்தல் அவர்க்கியல்பு என்பார் 'பெரியார் தாழ்ப' எனவும், அவற்றிற் சிறியோர் அவற்றாலாய பயன் முற்றும் அறியாராதலின் வரம்பிகந்து நடததல் அவர்க்கியல்பு என்பார், 'பட்ட மீச்செலவு' எனவும் கூறினர்." —இ. சு. செ.

**ஆக்கம் பெரியார்:**

**ஆக்கம்** - "ஆக்கம் - ஆக்குதல்; அது தன்னைச் சேர்த்துக் கொண்ட ஒருவனை மேன்மேலும் உயர்வாக்குதல் என்னும்

பொருளிற் காரியவாகுபெயராய்க் கல்வியையும் செல்வத்தையும் உணர்த்திற்று." —இள.

"செல்வமெனப் பொருள் கொள்ளப்படூஉ மெவ்விடத்துங் 'கல்வியுடைமை, பொருளுடைமை' என்னுஞ் செய்யுளான் உணர்த்தியவா றிருவகைச் செல்வத்தினையுங் குறித்தன ரென்க." —சி. வை. தா.

"ஆக்கம் - அறிவின் அமைதி." —உ. வே. சா.

**சிறியாரிடைப்பட்ட மீச்செலவு காணின் நனி தாழ்ப:**

**மீச் செலவு:** "அளவுக்கு மீறி நடப்பது. செலவு-நடக்கை; இது தொழிற் பெயர்; இஃது இப்பொருட்டாதலைச்,

"சேவடி படரும் செம்மல் உள்ளமோடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையுஞ் செலவு"

என்ற (திருமுருகாற்றுப்படை) இடத்துக் காண்க. —இள.

"மீச்செலவு-தமக்குரிய அளவு கடந்து சொல்லினுஞ் செய லினும் மேலே போதல்." —அ. கு.

**நனிதாழ்ப**-உரிச்சொற்றொடர். தாழ்தல்-பணிந்து நடத்தல்.

**தூக்கின்:**

தூக்கல்-நிறுத்துப் பார்த்தல்.

"நெருங்கு; நெருக்கு, இறங்கு, இறக்கு என்பனபோலத் தூக்கின் என்பதில் "தூங்கு" என்னுந் தன்வினைப்பகுதி வலித்தலாகின்றது. தூங்குதல் - தொங்குதல்; தூக்குதல் - தொங்கச் செய்தல்." —கோ. இ.

**வலிதன்றே, தாழுந் துலைக்கு:**

**அன்றே** - "தேற்றப்பொருள் தருவதோரிடைச்சொல்." —கோ. இ.

துலேக்கு - "நான்காவது ஏழாவதனிடப்பொருளாதலின் வேற்றுமையுருபு மயக்கம்." —வி. கோ. சூ.

இது வேற்றுப்பொருள்வைப்பணி.

If men of *real* dignity perceive presumption in the conduct of their inferiors, they will behave with the more humility. In weighing while the lighter rises higher and higher, does not the heavier sink down the scale? —H. S.

Those who are rich in wisdom will bear with patience the improper conduct of the unwise. Does it not appear on examining, that the lighter weight in a scale-pan rises higher and higher, while the heavier falls lower? —C. M.

When men of real dignity see presumption in their inferiors, they behave with greater humility; for while the lighter scale-pan goes up higher and higher, the heavier one sinks lower and lower. —T. B. K.

True aristocrats will bow at the supercilious conduct of the upstarts. Of the scales of the balance, while what is light flies up and on upward, what is weighty goes down. —K. S.

---

## 18. தற்புகழ்ச்சியால் வருங் கேடு

விலக்கிய வோம்பி விதித்தனவே செய்யும்
நலத்தகையார் நல்வினையுந் தீதே—புலப்பகையை
வென்றன நல்லொழுக்கி னின்றேம் பிறவென்று
தம்பாடு தம்மிற் கொளின்.

1. விலக்கிய - (செய்யத் தகாதனவென்று அறநூல்களால்) விலக்கப்பட்ட செயல்களை, ஓம்பி-செய்யாமல் தவிர்த்து, விதித்தனவே-

செய்யத் தக்கனவென்று வரையறுக்கப்பட்டவற்றையே, செய்யும்-செய்தொழுகும், நலத்தகையார் - சான்றோரது, நல்வினையும் - நற்செயலும், தீதே-தீச்செயலேயாகிப் பயனற்றதாகும்; (எப்பொழுதெனின்,) புலம் பகையை-ஐம்புலன்களாகிய பகையையும், வென்றனம் - வென்று விட்டோம், நல் ஒழுக்கில் - நல்லொழுக்கத்தில், நின்றேம் பிற - வழுவாதிருந்து வந்துள்ளேம், என்று-என, தம்பாடு-தம்முடைய பெருமையை, தம்மிற்கொளின் - தாமே மதித்துச் செருக்குறுவாராயின்.

2. விலக்கிய ஓம்பி விதித்தனவே செய்யும் நலத்தகையார் நல்வினையும், புலப்பகையை வென்றனம், நல்லொழுக்கில் நின்றேம் என்று தம்பாடு தம்மிற் கொளின் தீதே.

3. **தற்புகழ்ச்சியால் அறச் செயல்களும் பயனற்றனவாகி விடும்.**

4. "பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்" —குறள்.

"தன்னை நயந்தொருவன் செய்த தருமங்க
ளென்ன பயந்தனவோ" —பாரத வெண்பா.

"சடமதைக் கழுவவுன்னிச் சகதியிற் றோய்தல் போலுஞ்
சுடரினைத் தூண்டவேண்டி யூதியே தொலைத்தல் போலும்
மடமையிற் றன்னைத்தானே புகழுவோன் வசைகளெல்லாம்
புடவியே யெடுத்துரைக்கப் பூணுவ னிந்தையாமே."
—நீதி நூல்.

"எம்மை யறிந்திலிர் எம்போல்வா ரில்லென்று
தம்மைத்தாங் கொள்வது கோளன்று." —நாலடியார்.

5. "இச்செய்யுளிலும் அடுத்த செய்யுளிலும் தற்புகழ்ச்சியால் விளையுந் தீங்கு கூறப்படும்." —உ. வே. சா.

"தன்னுயர்ச்சி கருதலாகிய செருக்கு மனத்தினை மாசுபடுத்திப் பாவமும் பழியுங் கேடும் பயத்தலால், 'நல்வினையுந் தீதே' யென்றார்." —அ. கு.

**விலக்கிய வோம்பி விதித்தனவே செய்யும்:**

**விலக்கிய**—"விலகு என்னுந் தன்வினைப்பகுதி விலக்கென இரட்டினதென்றுவது, விலங்கு என்னுந் தன்வினைப்பகுதி

நகரமெல்லொற்றுக் ககரவல்லொற்றாதலாகிய விகாரம் பெற்ற தென்றுவது பகுதி கூறுக." —கோ. இ.

"விலக்கிய ஓம்பி விதித்தன செய்தலே அறமாகும்; அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம்." —உ. வே. சா.

**ஓம்பி**—வாராமற் பாதுகாத்து என்னும் பொருட்டு.

**நலத்தகையார் நல்வினையுந் தீதே:**

**நலத்தகையார்**—நன்மையாகிய தன்மை நிறைந்த பெரியார்-சான்றோர்.

**தீதே**—"இந்திரன் 'நின்னை யொப்பார் யார்?' என்று வினவிய காலையில் தன்னை யொப்பவரில்லையெனத் தன் தவவொழுக்கத்தை நன்குமதித்துக்கொண்ட யயாதியிடத்து நல்வினை தீதாதல் காண்க." —கோ. இ.

**புலப்பகையை வென்றனம்:**

**புலப்பகை**—"ஐம்புலன்களாவன: சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்; இவைக்கு முறையே பொறிகள்: வாய், கண், மெய் செவி, மூக்கு." —சி. வை. தா.

"இவை வடநூலாரால் சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்ற ஐந்து விடயம் எனப்படும். அவை மனத்தை முத்தி நெறியிற் போகவிடாமல் தம்மை அநுபவிக்கும் பொருட்டுத் துன்பத்தாலும் பாவத்தாலும் வரும் பொருள்களின்மேல் போக விடுதலால் 'புலப்பகை' என்றார்." —கோ. இ.

"அவை வீட்டை யடையத் தடைசெய்வனவாதலின் அவற்றைப் பகையாக உருவகஞ் செய்தார்." —வி. கோ. சூ.

**வென்றனம்**—"புலப்பகையை வெல்லுதலாவது, தீய ஒழுக்கங்களில் இந்திரியங்களைப் புகுத்தாது விலக்கல். மனத்திற் குற்றமில்லாது நடத்தலே அறமாதலின், 'தம்பாடு தம்மிற் கொளின் நல்வினையுந் தீது' என்றார்." —இ. சு. செ

தம்பாடு தம்மிற் கொளின்:

"தம் பெருமையைத் தாமே நினைத்தலும் குற்றமென்பது படி"
—உ. வே. சா.

இது இன்மைநவிற்சியணி.
—ஊ. பு. செ.

Even the good works of moral men, who shun what is to be avoided, and practise what has been enjoined, become evil, if, proudly boasting that they have conquered the enmity of the senses, and stood steadfastly in a virtuous course, they themselves dwell on their own merits.
—H. S.

Even the good acts of the worthy, who avoid the forbidden, and perform the enjoined deeds only, are evil, should they be puffed up with self-complacent vanity, at their having triumphed over the hostile senses and preserved themselves steadily in the paths of virtue. —C. M.

Even the good actions of the virtuous, who avoid what is forbidden and practise what is enjoined, become evil, if they proudly boast of their own merits, saying "We have conquered the enmity of the senses and stood steadfastly in a virtuous course." —S. W.

Even the acts of the virtuous who avoid what is forbidden and perform only what is enjoined would turn evil, should they boast of having triumphed over the hostile senses and stood steadfastly in the path of virtue.
—T. B. K.

Even the good deeds of the good-natured, who strictly keep to the moral law of right and wrong will really look ill if done with sense of self-importance in their conquest of the senses and rectitude of conduct. —K. S.

---

## 19. தற்புகழ்ச்சியின் இகழ்ச்சி

தன்னை வியப்பிப்பான் றற்புகழ்த றீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்ப
நயவாமை யன்றே நலம்.

1. தன்னை - தன்னை, வியப்பிப்பான் - (பிறர்) நன்கு மதிக்கும்படி செய்யக்கருதி, தற்புகழ்தல்- (ஒருவன்) தன்னைத்தானே பெருமைப் படுத்திப் புகழ்ந்து கொள்ளுதல், தீச்சுடர் - விளக்கை, நல் நீர் - தண்ணீரை, சொரிந்து - வார்த்து, வளர்த்தற்று - எரியச் செய்தலை யொக்கும்; தன்னை - தன்னை, வியவாமை -(தானே) பெருமைப்படுத்திக் கூறிக்கொள்ளாமை, அன்றே-அல்லவோ, வியப்பாவது-நன்மதிப்பாகும்; இன்பம் - (வினைப்பயனால் தனக்கு இன்பம் வந்துழி அந்த) இன்பத்தை, நயவாமை - (அனுபவியாநின்றே மனத்தால்) விரும்பாததிலே, அன்றே - அல்லவோ, நலம் - இன்பத்துள் இன்பமாகும்!

2. தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர் நன்னீர் சொரிந்து வளர்த்தற்று; வியப்பாவது தன்னை வியவாமை யன்றே! நலம் (ஆவது) இன்பம் நயவாமை யன்றே!

3. தன் மேம்பாடு கருதித் தற்புகழ்தல் இகழ்ச்சியையே விளைக்கும்.

4. "தன்னை வியந்தான் விரைந்து கெடும்" —குறள்.

"வியவற்க வெஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை" —குறள்.

"தன்னுடைப் பெருமிதத்தினை வியந்தவர் தாழ்ந்து
மன்னுயிர்த் தொகை நகைதர வருந்துவர் கண்டீர்"
—மாபாரதம்.

"கற்றறிந்தார் கண்ட அடக்க மறியாதார்
பொச்சாந்துந் தம்மைப் புகழ்ந்துரைப்பர்—தெற்ற
அறைகல் லருவி அணிமலை நாட
நிறைகுட நீர்தளும்ப லில்." —பழமொழி.

"கற்றனவுங் கண்ணகன்ற சாயலு மிற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்தும் தானுரைப்பின்
மைத்துனர் பல்கி மருந்திற் றணியாத
பித்தனென் றெள்ளப் படும்." —நாலடியார்.

"நின்பெருந் தன்மை நீயே நவிற்றுதல்
மன்பெரும் புலமைத் தன்றே"—திருவாரூர் நான்மணிமாலை.

5. முன்பாட்டில் ஒருவர் தம் புகழைத் தாமே நினைத்தல் குற்றமென்றவர் இப்பாட்டில் அதனைத் தாம் கூறுதலும் குற்றமென்பதை உதாரண முகத்தால் விளக்கினார்."
—உ. வே. சா.

"கல்வி செல்வங் குடிப்பிறப்புக்களால் பிறர் நன்கு மதிக்கத் தன்னைப் புகழ்வோன் அப்புகழ் பெறாது பழி பெறு வான் என்பார் 'தீச்சுடர் நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்' எனவும், மனம் அடங்கி நிற்போன் பெறுவது இன்பமேபோல அவற்றால் அடங்கி நிற்போன் பெறுவது புகழே என்பார் 'தன்னை வியவாமை யன்றே வியப்பாவது' எனவுங் கூறினார்."
—தி. சு. செ.

"தண்ணீரால் விளக்கவிதலன்றி இருளும் பரத்தல் போலத் தற்புகழ்ச்சியினால் முன்னிருந்த புகழ் கெடுதலன்றி இகழ்ச்சியும் பரக்குமென்பது தோன்றத் 'தற்புகழ்தல் தீச் சுடர் நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்' என்றார்." —அ. கு.

"தீச்சுடர் வளர்க்க விரும்பியோன் நன்னீரைக் கருவி யாகக் கொண்டு பெய்து வளர்க்கப் புக்குழி அது வளரா மையே யன்றி இருந்த தீச்சுடரும் அவியுமாறு போல, தற்புகழ்ச்சி கருவியாகக் கொண்டு தன்னை வியப்பிக்கப் புக்க பேதையும் தன்னை வியப்பியாமையே யன்றி முன்னரே தனக்குள்ள புகழையு மிழப்பான்." வி. கோ. சூ.

**தன்னை வியப்பிப்பான் றற்புகழ்தல்:**

**வியப்பிப்பான்**—பானீற்று வினையெச்சம். இதனை வினையா லணையும் பெயராகக் கொண்டு "தன்னை (யாவரும்) உயர் வாக மதிக்க நினைப்பவன்" என்று பொருள் கூறுதலுமுண்டு.

**தற்புகழ்தல்**—"தன்னை(த் தானே) புகழ்ந்து கொள்ளல் இரண்டாம் வேற்றுமைத் தொகை யாதலால் னகரம் உறழ்ந்து வாராமல் திரிந்தே வரும்." —வி. கோ. சூ

**தீச்சுடர் நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்:**

**தீச்சுடர்**—இதற்குத் தீயின் ஒளிப்பிழம்பாகிய சுடர் என்றும், விளக்கென்றும் பொருள் கொள்ளலாம்.

"மணிச்சுடர் முதலிய விருத்தலால், 'தீ' பிறிதினியைபு நீக்கிய விசேடணம்; தமிழ்நூலார் விசேடணத்தை அடைமொழி யெனவும், விசேடியத்தை அடைகொளி யெனவுங் கூறுவர்." வி. கோ. சூ.

"சில பிரதிகளிற் 'சுடர' வென்றும் ஓதப்பட்டிருக்கின்றது." —சி. வை. தா.

**நன்னீர்**—"தீச்சுடர் என்ற குறிப்பால் 'நல் நீர்' என்பது தண்ணீராயிற்று." —இள.

நன்னீர் என்பது எண்ணெயுடன் சிறிதும் கலப்பில்லா நீர் என்றலுமாம்.

**சொரிந்து**—"என்னுங் குறிப்பினால் எரியும்போது நெய் சொரிந்து தீ வளர்த்தல்போல வளருமென்று, எரியும்போது தண்ணீர் சொரிந்து அதன் வளர்ச்சியை எதிர்நோக்கினானென்று பெறப்படும். இங்ஙனங் கூறவறியாது எண்ணெய் விடுதற்கு ஈடாக ஆகலில் தண்ணீர் நிரப்பித் தீ வளர்த்தான் என்று சிறவாப் பொருள் உரைத்திட்டாருமுளர்." —இள.

**வளர்த்தற்று**—"வளர்த்தால் அற்று; வளர்த்தது அற்று என இருவகையாகப் பிரிக்கலாம்: முன்னது வினையெச்சம்; பின்னது இறந்தகாலத் தொழிற் பெயர். இதனை வினையெச்ச வுவமம் என்பர் நச்சினார்க்கினியர்." —வி. கோ. சூ.

**இன்பம் நயவாமை யன்றே நலம்:**

**இன்பம் நயவாமை**—என்பதற்குச் "சிற்றின்பத்தை விரும்பாமை" என்றும், "ஒரு சுகத்தையும் நாடாமை" என்றும்

பொருள் கூறுவர். "இன்பத்துளின்பம் விழையாதான்" என்ற குறளடிக்குப் பரிமேலழகியார் உரையுரைத்தாங்கு ஈண்டுப் பொருள் கொள்ளப்பட்டது. சிறப்பை உய்த்துணர்க. நயவாமையே இன்பமாவதென்பது,

"இன்பம் இடையறா தீண்டும் அவாஎன்னுந்
துன்பத்துள் துன்பம் கெடின்."

என்ற குறளானும் இனிது விளங்கும்.

**நலம்**—ஈண்டு இன்பம்.

"இன்பம் நயவாமை யன்றே நலம் என்பதை வியவாமை யன்றே வியப்பு என்பதற்கு உவமையாகக் கொள்ளலுமாம்."
—இள.

"ஒருவர் கெடுக்காமல் தானே கெட்டுவிடு மென்பது குறிப்பெச்சம்."
—வி. கோ. சூ.

"ஒருவன் தன்னை வியப்பித்தல் கூடாதென்பதற்கு ஏனைய வாக்கியங்களை எடுத்துக்காட்டினமையால் எடுத்துக்காட்டணி யென்க."
—பழைய உரை.

To praise oneself in order to attract admiration, is like feeding the flame with pure water. Is not the absence of self-admiration that which is to be admired? Is not happiness, freedom from the desire of pleasure? —H. S.

The self-praising of a man who desires to secure the esteem of the world, is like endeavouring to kindle light by pouring water. Estimableness consists in abstainment from self-commendation; and true happiness in not seeking happiness for its own sake. —C. M.

To praise oneself with a view to gain the esteem of the world is like feeding a flame with pure water. Is it not admirable to abstain from self-admiration and is it not true happiness to abstain from desiring? —T. B. K.

Self-praise with a view to elicit admiration is like pouring water for oil into a lamp to brighten the flame. It is indeed the absence of self-display that will excite real wonder. Not to seek self-pleasure is the best virtue. —K. S.

---

## 20. பெருஞ்சுட்டுப் பெறும் வழி

*பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்*
*மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்*
*சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து*
*யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்.*

1. *பிறரால் - மற்றவர்களால், பெருஞ்சுட்டு - நன்கு மதிக்கப் படுதலை, வேண்டுவான் - விரும்பும் ஒருவன், யாண்டும் - எவ்விடத்தும், மறவாமே - மறந்துவிடாமல், நோற்பது - நோன்பைப்போல் இயற்றி வருவதாகிய, ஒன்று - ஒரு செயல், உண்டு - உள்ளது; (அஃதாவது) பிறர்பிறர் - மற்றையோருடைய, சீர் - பெருமைகள், எல்லாம் - எல்லாவற்றையும், தூற்றி - பரக்க எடுத்துக் கூறி, சிறுமை - (அவர்களுடைய) குறைபாடுகளை மட்டும், புறங்காத்து - அங்ஙனம் எடுத்துக்கூறுதலைத் தவிர்ந்து, யார்யார்க்கும் - எல்லோரிடத்திலும், தாழ்ச்சி - பணிவை (வெளிப் படுத்துஞ்), சொலல் - சொற்களையே சொல்லுதலாம்.*

2. *(இச் செய்யுளமைப்பு கொண்டுகூட்டுப் பொருள்கோள் வேண்டிற்றிலது.)*

3. **பிறர்பழி தூற்றாமையும், இன்சொல்லும், தாழ்நடையும் நன்மதிப்புப் பெறுவிக்கும் கருவிகளாம்.**

4. *“ தன்புகழ உந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு*
*மின்புறூஉ மின்சொ லவர்க்கு”* —குறள்.

"கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு" —குறள்.

"படிறும் பயனிலவும் பட்டி யுரையும்
வசையும் புறனு முரையாரே யென்று
மசையாத வுள்ளத் தவர்" —ஆசாரக்கோவை.

5. "நோற்பது ஒன்று உண்டு; அது தாழ்ச்சி சொலல் என்க. இது மக்களாகப் பிறந்தார் யாவருக்கும் கூறிய அறிவுரை." —உ. வே. சா.

"பிறர் குற்றங்களை மறைத்துக் குணங்களை மாத்திரம் எடுத்துக் கூறுதல் புகழ் பெறுதற்குச் சாதனம் என்பார், 'மறவாமே நோற்பதொன்றுண்டு' என்றார்." —தி. சு. செ.

"பிறரைப் பற்றிய நல்ல செய்திகளையெல்லாம் மறைக்காமல் வெளியே பரப்பிக் கெட்ட செய்திகளை அங்ஙனம் பரப்பாமற் காத்துக்கொள்ளும் உயர்ந்த செயல் கடவுளுக்கு நோன்பெடுக்கும் வணக்கச்செயலோடு ஓராற்றால் ஒத்ததாம் என்பது குறிப்பு. மேற் (19-ஆம்) செய்யுளாலும் இச் செய்யுளாலும் பெறப்படுவது தன்னைப் பிறர் மதிக்கவேண்டுமென்று எண்ணுபவன், தன்னைத் தான் புகழ்ந்துகொள்ளாமல் தன்னைத் தாழ்மையாகவே உரைத்துக்கொண்டு பிறரை மட்டும் அவர்பாற் காணப்படும் உயர்ந்த செயல்களால் அவரைப் புகழவைத்து, அவர் தாழ்ந்த செயல்களை வெளிப்படுத்தாமல் மறைக்கக் கடவன் என்பது." —இள.

இனி, மேல் 11-ஆம் செய்யுளில் "இன்சொல்லன் றாழ்நடையனாயினு மொன்றில்லானேல் வன்சொல்லினல்லது வாய்திறவா" என்று கூறியதற்கு, ஈண்டு "யார் யார்க்குந் தாழ்ச்சி சொலல்" பெருஞ் சுட்டுப் பெறுதற்கு வழியாம் என்று கூறிப்போந்தமை முரணாகாதோ எனின், ஆகாது; என்னை? வன்சொல்லினல்லது வாய்திறவாக் கடன் ஞாலம் தன் சிறுமை புறங்காத்துச் சீர்மட்டும் யாண்டும் புகழ்ந்துரைக்கப் படுதல் கண்டக்கால், அப்புகழ் கூறுவோனைத் தான் புகழ்ந்துகூற விழைதல் கடப்பாடாகக் கொள்ளுமாதலின் என்க. இன்சொ லினிதின்றல் கண்டும் எவன்கொலோ வன்சொல் வழங்குவது!

**பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான்:**

**பிறரால்:** "மூன்றும் வேற்றுமை யுருபு கருத்தாப் பொருளது; இது சுட்டு என்னும் முதனிலைத் தொழிற் பெயரோடு முடிந்தது." —வி. கோ. சூ.

**பெருஞ்சுட்டு:** "ஒருவனிடத்துள்ள பெருமையை, அவனைச் சுட்டுதலின் மேலேற்றிப் பெருஞ்சுட்டென்றது ஒரு மரபு வழுவமைதி." —கோ. இ.

"சுட்டு—இங்கு ஒருவன் நலங்களைச் சுட்டி எண்ணுதலான மதிப்புக்கு வந்தது." —இள.

Digito monstrari என்று இலத்தீன் மொழியில் ஒரு தொடர் உள்ளது; அதற்கு "விரலாற் சுட்டிக் காட்டப்படும் பெருமை வாய்ந்தவர்" என்று பொருள். "பெருஞ் சுட்டு" என்று இவ்வாசிரியர் ஆண்டுள்ள சொற்றொடர்க்கும் இலத்தீன் மொழிச் சொற்றொடர்க்கு முள்ள ஒப்புமை வியக்கத் தக்கதன்றோ !

**யாண்டும் மறவாமே நோற்ப தொன்றுண்டு:**

**யாண்டும்:** எக்காலத்தும் என்று பொருள் கொண்டோரு முளர். மறக்கத்தக்க காரண முண்டான விடத்தும் மறவாமை வேண்டும் என்பதைக் குறிக்கவே எவ்விடத்தும் என்று பொருள் கூறப்பட்டது,

"யாண்டும் - இதன்கண் உம்மை முற்றுப் பொருளது. யாண்டும் என்றதற்குக் கீழோரிடத்தும் என்றமையான் ஏனையோரைக் கூறவேண்டாமை தானே முடிந்தது எனலு மொன்று." —வி. கோ. சூ.

**யாண்டு** - இது யா, என்னும் வினுவடியாகப் பிறந்த பெயரெனச் சொல்லப் படுவதுண்டு. ஒரே வேற்றுமை யேற்றலின் இடைச் சொல்லென்பதே தகுதி. ஸம்ஸ்கிருதத்தி லிருப்பது போலத் தமிழிலும் இருவகையிடைச் சொற்கள் உண்டு. பொருளை யுணர்த்தாது பெயர் வினைகளைச் சார்ந்தே வருவன

சில: அவை எ, உம், முதலியன. பொருளை யுணர்த்திப் பிர தானமாய் வருவன சில: அவை முன், பின், அங்கு முதலியன எனக் கொளல் வேண்டும்." —ஞா. பு. செ.

"**நோற்பது** - என்றார் நோன்பு போல எண்ணிச் செய்து வருக என்பதற்கு." —இள.

"உளங்கொண்டு அயர்வின்றிச் செய்யத் தகுவதாதலா லும் வினையும் பயன் பெரியதாதலாலும் இச் செயலை நோற்ற லென்றார்." —உ. வே. சா

**பிறர்பிறர் சீரெல்லாந் தூற்றி:**

**சீர் எல்லாம்** - பால் வழுவமைதி.

**தூற்றி** - "தூற்றுதல் என்பது பெரும்பாலும் கெட்ட செய்தி களை வெளியிற் பரப்புதற்கே வருவது வழக்கு. ஆனால் அச் சொல்லை இங்கு நல்ல செய்தியை வெளிப்படுத்தற்குக் கூறினர்; அக்கெட்ட செய்திகளைப் பரப்புவது போல் அவ்வளவு விரை வோடும் அவாவோடும் எங்கும் இந்நல்ல செய்திகளைப் பரப்பு தல் வேண்டுமென்றற்கு." —இள.

**சிறுமை புறங்காத்து யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்:**

"**தாழ்ச்சி** - வணக்கத்தைப் புலப்படுத்தும் சொற்களை; "வணங்கிய வாயினர்" (**குறள்** 419.)" —உ. வே. சா.

**புறங்காத்து** - என்பது தொடர்மொழி வினை; "புறங்கா" தனி வினைப்பெயர். —சி. மு.

"'உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ் கொண்டு புகல்வதவர் குற்றமே' ஆகலின், 'பிறர்பிறர் சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காக்க' என்றார்." —பழைய உரை.

"தாழ்ந்து" என்று பாடங்கொண்டார் சி. வை. தாமோதரம் பிள்ளை.

"**யார்யார்க்கும்** - யாவரொருவர்க்கும்." "அசைநிலை பொரு ணிலை யிசைநிறைக் கொருசொல் லிரண்டு மூன்றுநான் கெல்லை

முறை யடுக்கும்." (நன்னூல்: பொதுவியல் சூ. 44.) "ஒருபொரு ளிரு சொற் பிரிவில வரையார்" (தொல்காப்பியம் : எச்சவியல் சூ. 64.) —சி. வை. தா.

"கல்வி செல்வம் குடிப்பிறப்புகளிற் சிறந்தோரும் ஏனை யோரும் அடங்குதற்கு 'யார்யார்க்கும்' என்றார்."—தி.சு.செ.

"இது தனித்தமிழ்ச் செய்யுள்" —வி. கோ. சூ.

For him who desires much notice from others there is one act of penance which he must never forget to practise: continually to dwell upon all the merits and conceal the defects of others, and to address all with humility. —H. S.

He who desires to secure the esteem of others, should always adhere to this principle without forgetfulness, "That he should extol the virtue and conceal the defects of others, and talk humbly with all." —C. M.

He who seeks the esteem of others should unforgettingly adhere to a vow of extolling the virtues of others, of concealing their defects and addressing all with humility.
—T. B. K.

He who seeks to win the high regard of others should always observe and never forget the vow to publish all their excellences, to conceal their shortcomings and politely address one and all he meets. —K. S.

## 21. கற்றபடி நிற்றல்

கற்றுப் பிறர்க்குரைத்துத் தாநில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை—சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல்.

1. கற்று - (பல நூல்களையும் வருந்திக்) கற்றறிந்து, பிறர்க்கு-மற்றவர்களுக்கு, உரைத்து - (படித்தவாறே ஒழுகுதல் வேண்டும் என்று நெறி) புகட்டி, தாம் - (அவ்வாறு கூறுபவராகிய) தாங்களே, நில்லார்- (அந்நெறியில்) நில்லாமலிருப்பவர்களாகியிருந்தும், வாய்ப்படூஉம் - (அவர்) வாயினிடத்துண்டாகின்ற, வெற்றுரைக்கு - பயனில் மொழிக்கும், உண்டு - உளதாகும், ஓர் - ஒரு, வலியுடைமை - ஆற்றல்; (அது தான் யாதெனின்), சொற்ற - (கற்றதன்படி யாங்கள் ஒழுகுதல் வேண்டும் என்று எமக்கு) அறிவுறுத்திக் கூறிய, நீர் - நீவீர், நில்லாதது - (அந்நன்னெறிக்கண்ணே அமைந்து) நில்லாதிருக்கின்றமை, என் - எதனாலோ, என்று - என, நாண் - வெட்கம், உறைப்ப - மிகுதியாக வருத்தும்படி, நேர்ந்து - எதிர்நின்று, ஒருவன் - ஒருவன், சொல்லாமே- இடித்துக் கூறுதற்கிடங்கொடா வண்ணம், சூழ்ந்து - நன்காராய்ந்து, சொலல் - சொல்லுதலேயாம்.

2. சொற்றநீர் நில்லாதது என்னென்று ஒருவன் நேர்ந்து நாணுறைப்பச் சொல்லாமே சூழ்ந்து சொலல் (ஆகிய) ஓர் வலியுடைமை, கற்றுப் பிறர்க்குரைத்துத் தாம் நில்லார் வாய்ப்படூஉம் வெற்றுரைக்கு உண்டு.

3. "கற்றபின் நிற்க அதற்குத் தக."

4. "கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக." —குறள்.

"ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்." —குறள்.

"எப்பிறப் பாயினு மேமாப் பொருவற்கு
மக்கட் பிறப்பிற் பிறிதில்லை—அப்பிறப்பில்
கற்றலுங் கற்றவை கேட்டலுங் கேட்டதன்கண்
நிற்றலுங் கூடப் பெறின்." —அறநெறிச்சாரம்.

5. "நூல்களைக் கற்று அவற்றின்வழி நில்லார் கூறும் வார்த்தை பயனில் வார்த்தை யென்பார் 'வெற்றுரை' எனவும், பிறர்க்குப் போதிக்குமிடத்து அவற்றை வற்புறுத்திக் கூறு தொழிதல் வேண்டுமென்பார், 'சூழ்ந்து சொலல்' எனவும், இதுவன்றி வேறு வன்மையில்லை யென்பார் "ஓர் வலியுடைமை யுண்டு" எனவும் புகழ்வது போலப் பழித்துக் கூறினர்."

—தி. சு. செ.

"சூழ்ந்து சொலல் ஒரு வலியுடைமை யென்க. சூழ்ந்து சொல்லலாவது நீங்கள் அவ்வாறு நடத்தல் வேண்டுமென்று எதிரிருப்பாரை மட்டுஞ் சுட்டிச் சொல்லாமல், தன்னையும் அவர்களோடு சேர்த்துக்கொண்டு 'நாமெல்லாம் அவ்வாறு நடத்தல் வேண்டு' மென்று தன்மைப் பன்மையாற் கூறுவது போல்வன. இங்ஙனங் கூறுவதுமுண்டென்று அப் பிடிற் றொழுக்கத்தை இழித்தபடியாம்."

—இள.

"கல்வி கற்றதற்குப் பயன் நன்னடக்கையா யிருக்க, அது வில்லாமல் தன்னை யாரும் ஆட்சேபிக்காமல் தந்திரமாய்ப் பேசுவதுதான் அயோக்கியருக்குப் பயனாகிறது என்று இகழ்ந்து கூறினர்."

—உவ. பு செ.

மேற்காட்டிய மூன்று கருத்து விளக்கங்களும் ஒன்றற் கொன்று தெளிவுரையாய் நின்று, கற்றபடி நில்லா ஒருவன் படிறனென்றும், அவன் சொல்லும் சொற்கள் பயனில் சொற்களென்றும், அப்பயனின்மையை மாற்றிப் பிறர் தன்னைப் பழித்துரையா வண்ணம் தன்னையும் எதிர் நிற்பாரோடுட் படுத்தி வஞ்சகமாய்க் கூறும் வகையால் அறிவுரை பகர்ந்து பயன்கொள்ளும் ஆற்றலுடையவனாகின்றான் அவன் எனவும் எடுத்துக் காட்டியமை காண்க. இஃது ஒரு சாரார் கூறும் உரையும் அவ்வுரையின் தெளிவுமாகும். இஃது அறிவுரை கூறப்புகுந்தோனுக்கு வலியுடைமை கற்பித்ததாம்.

இனி, "நாண் உறைப்ப - (கூறிய) அவர்க்கு வெட்க முண்டாகும்படி, ஒருவன் நேர்ந்து - ஒருவன் எதிர்ப்பட்டு, சொல்லாமே - வெளிப்படையாய்ச் சொல்லாமல், சூழ்ந்து சொல்ல் - குறிப்பாயேனுஞ் சொல்லுதல்" என்றுரைத்துத் 'தாம் கூறிய படி நடவாதவருடைய சொல்லுக்குச், சொற்றநீர் நில்லாத

தென்?' என்று பிறர் சொல்லுதலே பயன் என்பதாம்.'' என்று தொகுத்துரை கூறினர் சி. **முத்தைய பிள்ளை.** இவ்வுரையின்படி அறிவுரை கூறப்புகுந்தோனுக்கும் அவன் கூறிய அறிவுரைக்கும் ஆற்றலின்மை கூறி, அறிவுரை கேட்ட பிறர்க்குக் "குற்றங்காணும்'' அறிவுடைமை மட்டுங் கற்பிக்கப் பட்டமை காண்க. இது மற்றொரு சாரார் உரை.

இனி, "பிறர்க்கு நெறி யுபதேசித்த நீவிர் அந்நெறியி னில்லாதது யாது காரணமோ வென்று ஒருவன் வெட்க முண்டாகத் தம்மை யெதிர்த்துப் பேசாதபடி **ஏனையோர்** ஆராய்ந்து பேசுதலாம்.'' என யாம் மேலே இச் செய்யுளுக்கு உரை கூறியாங்கே உரைத்து, "இச்செய்யுளுக்கு வேறு மிரு வகை யர்த்தம் பண்ணுவாருளர். ஆயினும் அவை சிறப்பில வாதலின் இங்ஙன் றரா தொழிகின்றனம்'' என்று குறிப்புங் கொடுத்தார் **சி. வை. தாமோதரம் பிள்ளை.** இவ்வுரையாற் கற்றபடி நிற்றலில்லா ஒருவன் கூறும் அறிவுரைகள் அவனுக்கு நற்பயன் றராமையோடு, அவன் "பேதையிற் பேதை'' யென் பதை யறுதியிட்டுக் காட்டிவிடினும், அவ்வுரைகளைக் கேட்ட பிறர் அவ்வாறே தாமும் பிழைபடாது காத்துக்கொள்ளும் அறிவைப் புகட்டுதலாகிய நற்பயனொன்றை அவர்மாட் டளிக்கும் வலியுடைமை வாய்ந்தனவா யிருக்கின்றன என்பது தெளிவுறும். இதுவே 'வெற்றுரைக்கு(ம்) உண்டோர் வலி யுடைமை' என்று ஆசிரியர் கூறியதன் கருத்தாதல் தெளியப் படும். கூறியோனை நோக்குங்கால் வெற்றுரையேயாயினும், கூறப்பட்டோரை நோக்குங்கால் வலியுடைமை வாய்தல் இதன்வழி பெறப்பட்டது.

**தாநில்லார் வாய்ப்படூஉம் வெற்றுரை:**

**வாய்ப்படூஉம்**—"என வாளா கூறியது வெற்றுரையின் இழிவு தோன்ற நின்றது.'' —தி. சு. செ.

"படூஉம்'' இன்னிசை நிறைப்ப வந்த **உயிரளபெடை''** —வி. கோ. சூ.

"**வாய்**—இழித்தலில் வந்தது.'' —கோ. இ.

"**வெற்றுரை**—விழலன் மொழிகள்,'' —சி. வை. தா.

"ஆரவார மாத்திரைக்கே யன்றிக் கல்வியின் பயனாகிய நன்னெறிக்குக் காரண மாகாமையின் 'வெற்றுரை' யென்றார்."
—அ. கு.

"சொற்கள் பயனுள்ளவையாயினும் ஒழுக்கத்தில் நில்லார் வாய்ப்பட்டமையானே அச்சொற்களை 'வெற்றுரை' என்றார்."
—வி. கோ. சூ.

**சொற்றவர் நில்லாது தென்னென்று நாணுறைப்ப :**

**சொற்ற**—செய்தவென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்.

**உறைப்ப**—"உறைத்தல் என்பது வருந்தும்படி நன்றாகத் தாக்குதல். 'உறைப்பின் வீழ ஒதுங்கும் இடம் இன்மையின்' என்பது **கந்தபுராணம்.** 'நான் சொல்வது உன் உடம்பில் உறைக்கவில்லையா?' என்பது வழக்கு." —இள.

"நாக்கின் புலனை மனத்தின்மே லேற்றி 'உறைப்ப' என்றார்." —கோ. இ.

**சொல்லாமே சூழ்ந்துசொலல் :**

"**சூழ்ந்து**—ஆலோசித்துக்கொண்டு. ஆலோசித்துச் சொல்லுதலாவது கேட்பாரோடு தம்மையுங் கூட்டித் தன்மைப் பன்மையால் கூறுதலாம்." —கோ. இ.

"சூழ்ந்து—ஆராய்ந்து. ஆராய்தலாவது, தன்னைக் கடிந்து கூறுவான் அங்கே இல்லாதிருத்தலை ஆராய்ந்தறிதல்."
—உ. வே. சா.

இது **வஞ்சப் புகழ்ச்சியணி.**

"**இது தனித்தமிழ்ச் செய்யுள்**" —வி. கோ. சூ.

The empty speech of those, who do not themselves persist in what they have learned, and taught to others, has weight only in one respect; in the indirect reproof of those who do not put them to shame by asking directly, "Why is it that you, who have taught others, do not practise yourself *what you teach* ?". —H. S.

The empty words of those who, having learnt the sciences, teach others, but themselves follow not their own teaching, should possess this virtue, that they should be uttered after such deep reflection as to prevent another from asking this question to their shame, "Why don't you, who have inculcated this maxim, follow it ?" —C. M.

The empty words of those, who having learnt much, teach others precepts, which they themselves follow not, have value only in one respect, that which consists in the indirect reproof of others, who do not put them to shame by asking directly "Why follow you not your own counsel ?" —T. B. K.

Is there any moral force in empty words which lie in the mouth of the lecturer who does not stand up to what he learns and teaches ? In counseleing others, be on guard, lest you be stormed with the shaming query "why do you not practise what you preach ?" —K. S.

---

## 22. மெய்ந்நூலறிவை விலைப்படுத்துதல்

*பிறர்க்குப் பயன்படத் தாங்கற்ற விற்பார்*
*தமக்குப் பயன்வே றுடையார்—திறப்படூஉந்*
*தீவினை யஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார்*
*கோவினை வேலை கொளல்.*

1. பிறர்க்கு - (உரியரல்லாத) பிறருக்கு, பயன்பட - (இம்மையிற் புகழும், மறுமையில் துறக்கமும் ஆகிய) பயனுண்டாகுமாறு, தாம் - தாம், கற்ற - (வருந்திக்) கற்றுணர்ந்த (மெய்ந்நூற்) பொருள்களை, விற்பார் - (தாம் கற்றதற் கேற்ப ஒழுகாமலிருப்பதுடன், பொருள் கருதி) விலைப்படுத்துவோர், தமக்கு - (அத்தகைய செய்கையால்) தமக்கு,

பயன் - விளையும் பலன், வேறு - வேறொன்றை, உடையார் - உடையராவார்; (அது), திறம்படூஉம் - (பல) வகைப்பட்ட, தீவினை - கொடுந்தொழிலைச் (செய்வதற்கு), அஞ்சா - அஞ்சாத, விறல் - ஆற்றலை, கொண்டு - படைத்து, தென்புலத்தார் - (காலமுடிந்து) தென்றிசைச் சென்றுள்ள மூதாதைகளுக்கு, கோவினை - தலைவனான கூற்றுவனை, வேலைகொளல் - (தங்களை நரகத்திலிருத்தி வருத்தி ஒறுக்கும்படி) வேலை வாங்குதலேயாம்.

2. தாம் கற்ற பிறர்க்குப் பயன்பட விற்பார், திறப் படூஉந் தீவினை விறல்கொண்டு அஞ்சா தென்புலத்தார் கோவினை வேலை கொளல் (ஆகிய) வேறு (ஒரு பயன் உடையார்).

3. கடவுளைப் பாடாது பொருள் கருதிக் கல்வியறிவில்லாத செல்வரைப் பாடுதலும், அத்தகையார்க்கு மெய்ந்நூல்களைக் கற்பித்தலும் தீயனவாம்.

5. “கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்.” —குறள்.

“பசும்பொன்கொண்டு நூல் பயிற்றுமவர் மனையருந்திற்
சாந்திராயணங் கொளல் வேண்டும்” —காசிகாண்டம்.

“ஆணவ மாயை காமிய முயிர்க ளமலனு மசாதி
மெய்ப் பொருளை
மாணவ காவிப் பொருள்களை யிவற்றை வயக்குறும்
வாக்கியந் தம்மைப்
பேணுறுபருவ மடுத்தவர்க் கல்லாற் பெறும்பயன்
புகழ்முத லொன்று
காணிய கொடுப்போ ரவரொடு நரகங் காணியாக்
கைக்கொள்வர் விரைந்தே.” —தணிகைப் புராணம்.

5. “பக்குவர்க்கன்றி அபக்குவர்க்குப் பொருளின் பொருட்டு அறிவுநூற் பொருளைப் போதித்தல் தீயசெயல் என்பார் ‘தீவினையஞ்சா விறல் கொண்டு’ எனவும், அத்தீய செயல் பழிபாவங்களைப் பெருக்கி நரகத்திற் புகுத்தும் என்பார் ‘தென்புலத்தார் கோவினை வேலை கொளல்’ எனவும் கூறினர்.” —தி. சு. செ.

"கற்பார் பொருள் காணார் காசு பணங் காணிலுனே, விற்பா ரவர்பானீ மேவாதே" (தமிழ்விடுநாது: 184) என்பதி லும் விற்றலினிழிவு புலப்படுத்தப்படுகின்றது."

—உ. வே. சா.

"இது நல்ல தன்மையில் இல்லாத செல்வர்களை அவர் களிடம் பொருள் பெறுவதற்காகப் பாட்டுப்பாடும் புலவர் களைக் குறித்தது. தம்மைப் படைத்துப் புலவராக்கி எப்போ தும் புறம்புறந் திரிந்து பாதுகாக்கும் எல்லாம் வல்ல கடவுளைத் தாம் வருந்திக் கற்றதன் பயனாக வாயாரப் பாடாமல் அருகே அணுகுதற்கும் தகுதியற்ற பொல்லாச் செல்வந்தரைப் பரிந்து பாடுதல் ஒரு தீவினை; அதுவுமன்றி அவரை அளவுக்குமேற் புகழ்ந்து பாடுதலோடு ஒப்பும் உயர்வும் அற்ற இறைவனோடு அவ் வொப்பும் உயர்வும் பொருந்த உரைத்துப் பணம் பறித் தல் மற்றொரு தீவினை; ஆதலினால் நமனால் ஒறுக்கப்படுவா ரென்க."

—இள.

"நன்னூல் முதலிய நூல்களிற் 'பொருள் நனிகொடுப் போன்' முதலானவர்க்கு நூலை போதிக்கலாம் என்றிருத்த லால் இங்கே 'பிறர்க்குப்......தாங்கற்ற' விற்பதனால் ஆசிரியர் கருத்து என்னவெனில் இலக்கண முதலிய கருவி நூல்களைக் கற்பிப்பதல்ல, ஆன்மார்த்த நூல்களை எனக்கொள்க."

—பழைய உரை.

"This verse appears to censure those who communicate their knowledge for money. But the profession of school master etc. does not seem to be generally considered unlawful or even disreputable. The most probable interpertation is that which lays stress on பிறர்க்குப் பயன் பட those who sell learning so as to benefit others' implying that they do not benefit by it themselves and refers 'கற்ற' to religious instruction." —Rev. H. Stokes.

**பிறர்க்குப் பயன்படத் தாங்கற்ற விற்பார் :**

**பிறர்க்கு** - கல்லாச் செல்வரும், தகுதியில்லா மாணவர் களும் 'பிறர்' என்று குறிக்கப்பட்டனர்.

"நல்லறிவு நல்லொழுக்கம் முதலியவற்றிற்குப் புறம்பான" வர்களைக் குறித்திடுவார் 'பிறர்'க்கென்றார்" —இள.

**பயன்பட** - இதனைப் பிறரிடமிருந்து தாம் பொருள் பெறுதலாகிய பயனென்றும், தாம் கற்ற நூல்களால் அடைய வேண்டிய மெய்ப்பயனை அடைய விழையாமல் பொருள் வருவாய் கருதிப் பிறருக்குக் கற்பித்து அதனால் (அப்) பிறர் அடையும் பயனென்றும் இருவகையாகக் கொள்ளலாம்.

பொன்னுக்குப் பாடும் இழிவும், உரியராகாதார்க்கு அறமுணர்த்தலாகிய இழிவும் ஆகிய இருவகை யிழிவும் குறிக்கப்பட்டன.

"பிறர்க்குப் பயன்பட - தமக்கும் பிறர்க்கும் பயன்படுவதை எண்ணாமற் பிறர்க்கே பயன்படும்படி." —உ. வே. சா.

**கற்ற** - கற்றவற்றை என விரியும். கற்றனவாவன - கற்ற மெய்ந்நூலறிவுகள். "ஈண்டு நூலென்றது இலக்கண முதலிய கருவி நூலையன்று, நிகமாகம முதலிய முதனூலை யென்க."
—சி. வை. தா.

**விற்பார்** - பொருளுக்கு விலைப்படுத்துவோர்; அஃதாவது பொருளைப் பரிசாகப் பெறக்கருதிப் பாடுதலும், கூலியாகப் பெறக்கருதி முறையே கற்பித்து வருதலுமாம்.

"கொடுக்கிலாதானைப் பாரியே யென்றும்", மிடுக்கிலாதானை வீமனே யென்றும், விசயனே யென்றும் கூறுதலும், அவன்மாட்டுத் தெய்வப் புகழ்ச்சியை யேற்றிச் சொல்லுதலும் பிறவும். இது,

"கல்லாத வொருவனைநான் கற்றா யென்றேன்
காடெறியு மறவனைநா டாள்வா யென்றேன்
பொல்லாத வொருவனை நல்லா யென்றேன்
போர்முகத்தை யறியானைப் புலியே றென்றேன்
மல்லாரும் புயமென்றேன் சூம்பற்றோளை
வழங்காத கையனைநான் வள்ள லென்றேன்
இல்லாத சொன்னேனுக் கில்லை யென்றான்
யானுமென் குற்றத்தா லேகின்றேனே."

என்னும் இராமச்சந்திர கவிராயர் பாடலாலும் நன்கு விளங்கும்.

**தமக்குப் பயன் வேறுடையார் :**

''பயனைப் பின் இரண்டடிகளிற் கூறுவார். யமதண்டத்தை அடைவதே அவர் பெறும் பயன் என்றபடி.''
—உ. வே. சா.

பயன் நரகில்படும் யாதனை ஆதலால் அதனை 'வேறு பயன்' என்றார்.
—கோ. இ.

**திறப்படூஉந் தீவினை யஞ்சா விறல் கொண்டு:**

**திறப்படூஉம் தீவினை** - என்பதனைத் ''தாங்கற்ற விற்பா'' ருக்காகி உரை கூறுதலுமுண்டு. அவ்வாறு கூறுங்கால் 'திறப்படூஉந் தீவினைக்கு' மேல் 'விற்பார்' என்பதற்குக் கொடுக்கப்பட்ட குறிப்பைக் கொடுத்துக் கொள்க.

''வகைப்பட்ட தீவினையாவன: நற்குண நற்செயல்களில்லானென அறிந்தும், பொருளுடையானை அவையுடையானாகக் கூறலாலாம் பொய்யும், தெய்வங்களிடத்துள்ள குணத்தையும் செயலையும் எடுத்து இவன்மேலேற்றுதலாலாம் களவும் முதலியவை.''
—கோ. இ.

''தீவினையஞ்சாவிறல் - தீவினை செய்தற்கஞ்சா மனவைரம்''
—சி. வை. தா.

''**விறல்**—என்றது இகழ்ச்சிக் குறிப்பு'' —உ. வே. சா.

**கொண்டு** - ''கொண்ட என்பது கொண்டு எனத் திரிந்தது. இது 'வானின்றுலகம்' என்பதிற்போல நின்றது.'' —இள.

**தென்புலத்தார் கோலினை வேலைகொளல்:**

**தென்புலத்தார்**—''படைப்புக்காலத்து அயனாற் படைக்கப்பட்டதோர் கடவுட்சாதி; அவர்க்கிடம் தென்றிசையாதலின் தென்புலத்தாரென்றார்.'' —வி. கோ. சூ.

"தென்புலத்தாரைப் பிதிரர்கள் என்று கூறுவது வடநூன் மரபு. "தென்புலத்தார் - இறந்த உயிர்கள்; இவைகள் தெற்கிடத்தில் இருக்கின்றன என்னும் வழக்குப்பற்றித் தென்புலத்தார் என்றார்." —இள.

வேலைகொளல் - "தம்மாற் செய்யப்பட்ட பாவங்காரணமாகத் தென்புல மழைத்தல், பாவங்களை யாராய்தல், விசாரணை செய்தல், பலவித நரகில்விட்டுப் பலவித தண்டஞ் செய்தல் முதலிய அத்துணை வேலைகளை யெல்லாம் அவனைக்கொண்டு தமக்குச் செய்வித்தல்." —அ. கு.

Those who sell to others the advantages of the *mysteries* which they have learned, reserve an advantage of another description to themselves; the receiving the labours of the king of the dead, with the hardihood that defies the terrors of an evil life. —H. S.

Those who impart spiritual instruction to others for gold, thus rendering their knowledge useful to them, derive a further advantage, namely, the strength of mind to slight the pain anticipated and make the regent of the dead a servant (to carry off their own lives). —C. M.

Those who sell learning to benefit others reserve an advantage of another kind to themselves—the worrying of the king of the dead with a hardihood that defies the terrors of doing evil. —T. B. K.

Scholars who prostitute their learning for the profit of others have a different end for themselves. It is finding grim work against themselves for the God of the nether regions with a boldness undaunted by their deepening sin. —K. S.

## 23. கல்லாதார் அடக்கமின்மை

கற்பன வூழற்றார் கல்விக் கழகத்தாங்
கொற்கமின் றூத்தைவா யங்காத்தல்—மற்றுத்தம்
வல்லுரு வஞ்சன்மி னென்பவே மாபறவை
புல்லுரு வஞ்சுவ போல்.

1. கற்பன—(கற்கத்தக்க) நூல்களைக் கற்பதற்கு ஆன, ஊழ் - ஆகூழை (நல்வினை), அற்றார் - இல்லாதவர், கல்விக்கழகத்து - கல்வியைப் பயிலும் இடத்தில், (அஃதாவது கற்றோரவையில்), ஒற்கம் - (நா) அடக்கம், இன்று - இல்லாமல், ஊத்தைவாய் - அழுக்குப்படிந்த தம் முடைய வாயை, அங்காத்தல் - திறந்துபேச முனைதல் முதலிய, மற்றுதம் - தம்முடைய, வல்உரு - வலிதங்கிய பெரிய உருவத்தைக் (கண்டு), அஞ்சன்மின் - (அவையோரே!) அஞ்சாதிரும், என்பவே - என்று சொல்லுவனவேயாம்; (அன்றி, அஞ்சின் அஃது எதைப்போல்வ தெனில்,) மா பறவை - (கொல்லைப் புனத்தே பயிரைத் தின்றழிக்க வரும்) விலங்குகளும் பறவைகளும், புல்லுரு - (காவல் கருதிச் செய்து வைக்கப்பட்டுள்ள) புல்லினாலாய உருவைக்கண்டு, அஞ்சுவபோல் - மருள்வதைப் போலும்!

2. கற்பன ஊழற்றார் கல்விக் கழகத்தாங்கு ஒற்கமின்றி ஊத்தைவா யங்காத்தல், மாபறவை புல்லுரு அஞ்சுவபோல், மற்றுத்தம் வல்லுரு அஞ்சன்மின் என்பவே.

3. **கல்வியறிவில்லாதார் புரைபடப் பேசுதலினும் பேசாதிருத்தல் நன்று.**

4. "நுண்மா ணுழைபுல மில்லா னெழினலம்
மண்மாண் புனைபாவை யற்று." —குறள்

"யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு." —குறள்.

"கல்லாது நீண்ட வொருவ னுலகத்து
நல்லறி வாள ரிடைப்புக்கு - மெல்ல
இருப்பினு நாயிருந் தற்றே யிராஅ
துரைப்பினு நாய்குரைத் தற்று." —நாலடியார்

" புல்லாப்புன் கோட்டிப் புலவ ரிடைப்புக்குக்
கல்லாத சொல்லுங் கடை." —நாலடியார்.

5. "தம் உருவத்தைக் கண்டு அஞ்சியிருப்பாரைத் தம் சொல்லால் தமது அறியாமையைத் தாமே வெளிப்படுத்தி அவ்வச்சத்தைப் போக்குவரென்றார்." —உ. வே. சா.

"கல்வி பயில்வதற்கும் ஆகூழ் வேண்டுமாகலின் அக் கல்லாதாரைக் 'கற்பன ஊழற்றா' ரென்றும், அக் கல்வியறி வில்லார் சொல்வன சிறவாமையாற் 'கல்விக் கழகத் தங்காத்த' லென்றும், அவர் வாயடக்க முளராக வேண்டுமாதலின் 'ஓற்கமின்' றென்றும், அவர் கல்விபயிலாத இழிவுபற்றி 'ஊத்தை வா' யென்றும், நெடும்பகல் கற்க வருந்தாமையான் 'வல்லூரு' என்றும், அவை உவமைமுகத்தாற் காட்டுவார் 'மாபறவை புல்லூரு வஞ்சுவ போல் அஞ்சன்மின்' என்றுங் கூறினார் " —வி. கோ. சூ.

"கற்றார்முன் கல்லாதார் உரையாட எழல், மாபறவை முன் புல்லூருத் தோன்றலை நிகர்க்கும்; பெரும்பான்மையுங் கற்றார் மெலியவுடலையும், கல்லாதார் வலியவுடலையு முடைய வராதலின் கல்விக் கழகம் கல்லாதார் வல்லூருவுக் கஞ்சும் என்பதாம்."

—சி. மு.

"கல்வியாலன்றி நீரால் வாய் புனிதப்படாது என்பார் கல்லார் வாயை "ஊத்தை வாய்" எனவும், அவர்கள் கற்றோர் சபையில் வாயைத்திறக்கில் தோற்றத்தாலுள்ள மதிப்புக் கெட்டு அவமதிப்படைவார் எனவுங் கூறினர்." —தி. சு. செ.

"கல்லாதவர் பேசுஞ் சொற்கள் சிறந்த பொருள் தாராமை யால் அவை சொல்லுதலல்ல வென்பார் 'அங்காத்த' லென்றும், கல்வி பயிலாத இழிவு தோன்ற வாயென்றமட்டி லமையாமல் 'ஊத்தை' என அடைகொடுத்து "ஊத்தைவா" யென்றும் நித்திரையையும், சுகத்தையும் வேண்டாமல் கல்வி பயின்றோர் போலாது, அவ்விரண்டையும் வேண்டிச் செய்துகொண்டோ ராதலால் அவருடம்பை அவர் கூற்றாக 'வல்லூரு' என்றுங் கூறினர்."

—கோ. இ.

"புல்லுரு என்பது கம்பு தினை முதலியன விளைந்து கதிர் முற்றிய கொல்லைகளில், விலங்குகளும், பறவைகளும், "யாரோ ஒரு காவற்காரன் கையிற் கொம்பு வைத்திருக்கிறான்" என்று நினைத்து அஞ்சும்படியாக, அக்கொல்லைக்காரர்கள் புல்லினாற் செய்துவைக்கும் உருவம். விலங்குகளும் பறவைகளும் அவ் வுருவத்தின் உண்மையை அறிந்துகொண்டால், எப்படி அவை கள் அஞ்சாது செல்லுமோ அப்படி அதைப் போலக் கல்லாத வர்கள் தங்கள் வாய்திறந்து பேசுவதனால் தங்கள்பாற் கல்வி நலமில்லை யென்பதைக் காட்டிக் கொள்கின்றார்களாதலின், மற்றவர்கள் 'இவர்கள் எவரோ கற்றவர்கள் போலிருக்கிறது' என்று நினைத்து அச்சப்படாமல் நடப்பார்கள் என்க. ஆகவே, கல்லாதவர்கள் பேசுவது தமமிடத்திற் கல்வியில்லை யென் பதைக் காட்டி எதிரிலிருப்பவர்களை 'அச்சப்படாதிருங்கள்' என்று கூறுவது போலிருக்கிறது என்றார்." —இள.

"உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார்—மடவரால்
கண்ணளவாய் நின்றதோ காணுங் கதிரொளிதான்
விண்ணளவா யிற்றோ விளம்பு."

என்னும் நன்னெறிச் செய்யுளின் கருத்து இச்செய்யுளில் எதிர் முகத்தால் விளக்கப்பட்டமை காண்க.

**கற்பன ஊழற்றூர்:**

**கற்பன**—"வினையாலணையும் பெயர், கற்பதின் காரணம் என்னும் பொருளதாய் ஊழ் என்பதோடு இருபெயரொட்டுப் பண்புத்தொகையாயிற்று." —ஊ. பு. செ.

"கற்பன - கற்க வேண்டிய நூல்களைக் கற்றற்குரிய, 'கற்பன' வென்பதனீற்றில் நேர்ச்சிப் பொருள் பயக்கும் நான் கனுருபு தொக்கது." —வி. கோ. சூ.

"கற்பன - கற்கப்படுவன; அவை நூற் கருத்துக்கள். இந் நூலாசிரியர் குமரகுருபர அடிகள், இந்நூல் முழுதும் கல்வி யைப் பன்மையாகவே கூறுகின்றார். 'தாங்கற்ற விற்பார்', 'கற்ற தெல்லாம்', 'எத்துணையவேனும் இலம்பாட்டார் கல்வி', வருந்தித் தாங் கற்றன', 'கெடும் பகற்கற்ற அவையத்து உதவா

துடைத்து', 'எத்துணையவாயினுங் கல்வி' என்று இச் செய்யுட்கு முன்னும், 'கல்வி......சேரா', 'கற்றன கல்லார் செவிமாட்டி' என்று பின்னும் வருதல் காண்க." —இள.

ஊழ்—"முறைமை: அது செய்த முறை தவறாது வரும் வினைக்குப் பண்பாகு பெயராம்" —கோ. இ.

"பாலாற் கழீஇப் பலநா ளுணக்கினும்
வாலிதாம் பக்க மிருந்தைக் கிருந்தன்று
கோலாற் கடாஅய்க் குறினும் புகலொல்லா
நோலா வுடம்பிற் கறிவு"

என்னும் நாலடியார்ச் செய்யுளான் ஆகூழினாலன்றிக் கல்வியறி வெய்தாது என்பது பெறப்படும்.

அற்றார்—"உறு" என்ற தனி வினையினின்றும் "உற்றார்" என்ற வினை தோன்றினது போல, "அறு" என்ற தனிவினையி னின்றும் "அற்றார்" என்ற வினை தோன்றிற்று." —சி. மு.

கல்விக் கழகத்தாங்கு:

கல்விக் கழகம்—"கழகமென்பது கல்வி, சூது, ஆயுதம், மல் இவை பயிலும் இடங்களுக்குப் பெயராயினும் கல்வி என்னும் அடையால் புலவர் சபையை உணர்த்தியது." —கோ. இ.

ஆங்கு—அசைநிலை.

ஒற்கமின் றாத்தைவா யங்காத்தல்:

"ஒற்கம்—தொழிற் பெயர்; ஒல்கு - பகுதி, அம் - புடை பெயர்ச்சி விகுதி, உகரக்கேடு சந்தி, குற்றியலுகரம் ஆதலால் லகரத்திரிபும் சந்தி." —கோ. இ.

"ஒல்குதலுக்குக் காரணமாயிருப்பது ஒற்கம், அல்லது வெட்கம். ஒல்கல் - அடங்கல்." —சி. மு.

**இன்று**—"இன்றி என்கிற எதிர்மறை வினையெச்சத்தின் திரிபு." —ஊ. பு. செ.

**ஊத்தைவாய்**—“அருவருக்குஞ் சொற்கள் தோன்றுதற்கு இடமாதல் பற்றி ‘ஊத்தைவா’ யென்றார்.” —அ. கு.

“தூய்மையற்ற வாய்; பயனற்ற சொற்களைக் கூறும் வாயென்பது பொருள்.” —உ. வே. சா.

**அங்காத்தல்**—அங்கா - பகுதி.

“அங்காத்தல் என்பதன் குறிப்புக் கொண்டு அதற்குக் கற்றாரொருவர் பேசும்பொழுது அவைக்கண் இடையிடையே வாய்திறந்து பேசுதல் என்று பொருள் கூறுப. முதலிய எனப் பட்டவை கற்றார்போற் காட்டிக் கொள்ளும் உடற் புனைவு முதலியவற்றை.” —இள.

**முற்றுத்தும் வல்லுரு அஞ்சன்மின் என்பவே:**

**வல்லுரு**—வன்மை + உரு—வல்லுரு.

“இரவும் பகலும் கற்றவர்கள் ‘செவிக்குணவில்லாதபோது சிறிது வயிற்றுக்கு மீயப்படும்’ என்பதுபோலத் தேக சௌக்கியத்தை விரும்பாமல் இளைத்திருப்பர். கல்லாதவர் அங்ஙன மன்றி உண்ணுவது முறங்குவதுமாகக் காலங்கழிப்பாராதலின் அவர் உடலை ‘வல்லுரு’ என்றார்.” —பழைய உரை.

“உருவின் மிக்கதோ ருடம்பது பெறுதலுமரிது” (**சீவக சிந்தாமணி**) என்ப ஆகலான் எழினலம் வாய்ந்த உருவமும் பயனுடைத்தே எனினும் நூலறிவு இல்வழிச் சிறப்பின்றென் பதாம்.

**என்ப**—“என்று பன்மையாற் கூறினமையின் அங்காத்தல் முதலியன என்று பல வினைமுதல்கள் வருவிக்கப்பட்டன.” —இள.

“புல்லர்கள் பேசும்போது தாம் அடங்கியிராமல் இடையிடையே பல முறை பேசலால் அவர் பேசுதல் பலவாயிற்று.” —கோ. இ.

**மாபறவை புல்லுரு வஞ்சுவபோல்:**

மாபறவை—"சில பிரதிகளில் 'மாப்பறவை' என்றிருக்கின்றது." —சி. வை. தா.

"அஃறிணை யும்மைத் தொகையாதலால், இவ்வாறு பன்மையீறு பெறுதும், மாபறவைகளெனப் பன்மையீறு பெற்றும் வரும்" —கோ. இ.

"உம்மைத் தொகையாதலாற் பகரஞ் சந்தியாலிரட்டியாது நின்றது." —சி, மு.

புல்லுரு—மூன்றும் வேற்றுமை யுருபும் பயனும் உடன்றொக்க தொகை.

"புல்லுருவாவது, தானியங்களைச் சிதையாமல் மிருகங்களும் பறவைகளும் பார்த்துப் பயந்தோடும்படி புல்லாற் செய்து வைக்கப்படும் பாவை" —அ. கு.

"கொல்லா வம்புஞ் சமர்க்களத்திற் குனியா வில்லுங் கொண்டு நிற்கும் புல்லாடவனே." —திருவருணைக்கலம்பகம்.

இதனைச் "சோளக் கொல்லைப் பொம்மை" என்பர்.

இது தற்குறிப்பேற்றவணி. இதற்கு உவமையணி யங்கம்" —வி. கோ. சு.

The ceaseless chattering, in the learned assembly, of the coarse lips of those who were not destined to learning, tells us not to fear their othewise powerful appearance, as the beasts and birds fear a figure of straw. —H. S.

That a person not learned in the sciences, should audaciously open his impure mouth in the assembly of the wise, seems as if he would tell his audience not to fear his stout appearance, like the birds frightened by scare-crows of grass. —C. M.

The shameless foul utterance in a learned assembly by those debarred by fate from all learning, merely serves

to dissipate fear caused by their formidable figure—the fear that birds have when they look at a scare-crow.

—T. B. K.

Persons not destined to possess true learning should not open their dirty mouth before the council of savants. If they do so they will be proclaiming, " like the beasts and birds taking frght at the scare-crow (or figure of straw) you shall not be afraid of our pompous (but really hollow, appearance. —K. S.

---

## 24. கல்விநலன் அறிவுடையார்க்கே

*போக்கறு கல்வி புலமிக்கார் பாலன்றி*
*மீக்கொ ணகையினார் வாய்ச்சேரா—தாக்கணங்கும்*
*ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்*
*பேடு கொளப்படுவ தில்.*

1. போக்கு - (பொருட் செல்வத்தைப்போன்று) இழத்தல், அறு- அற்ற, கல்வி - கல்விகள், புலம் - அறிவில், மிக்கார்பால் - சிறந்தாரிடத்து, அன்றி - அல்லாமல், மீக்கொள் - மேற்கொண்டொழுகும், நகையினார்வாய் - நகையாடலை யுடையார் மாட்டு, சேரா - சேர்ந்து பயன்படாவாம்; (அஃதெதுபோலவெனின்). தாக்கணங்கும் - மோகினியும், ஆண் - ஆண் தன்மையை, அவா(வு)ம் - விரும்புதற்கு ஏதுவாகிய, பெண்மை - பெண்ணின் தன்மையாகிய தனிப்பேரழகினை, உடைத்து - (பெண்ணொருத்தி) உடையவள் (ஆக), எனினும் - (இருந்தாள்) ஆயினும், பெண்ணலம் - அப் பெண்ணின்மாட்டுத் துய்க்கப்பெறும் இன்பத்தை, பேடு - (ஆணும் பெண்ணுமல்லாத) பேடொன்று, கொளப்படுவது - துய்த்துப் பெறுவது, இல் - இல்லையாயினாற் போலாம்.

2. தாக்கணங்கும் ஆணவாம் பெண்மை பெண் உடைத் தெனினும் (அப் பெண்) நலம் பேடு கொளப்படுவதில்; போக் கறு கல்வி புலமிக்கார் பால் அன்றி நகை மீக்கொளீஇயினார் வாய்ச்சேரா.

3. நுண்ணறிவினோர்க்கே கல்வி பயன்படும்.

4. “கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.” —குறள்.

“அவ்விய மில்லா ரறத்தா றுரைக்குங்கால்
செவ்விய ரல்லார் செவிகொடுத்துங் கேட்கலார்
கவ்வித்தோ றின்னுங் குணுங்கர்நாய் பாற்சோற்றின்
செவ்வி கொளறேற்று தாங்கு.” —நாலடியார்.

5. அறிவுடையாருக்கே கல்வி வன்மை உண்டாகும் என்பது கருத்து. கற்பிக்கப்படாதாருள் ஒருவனுக அறிவில்லான் ‘ஏழை’ என்னும் பெயராற் கூறப்படுதல் காண்க.
—உ. வே. சா.

“ஆன்ற அறிவும் அருளும் உடைய பெரியா ரெல்லாரும் மிக ஆழ்ந்து ஆராய்ந்து காட்டிய கல்விப் பொருளை அவரைப் போலவே மிக அமைந்த நோக்கமும் ஆழ்ந்த கருத்தும் உடையாராய் மற்றவரின் நெஞ்சம் செல்லுதலன்றிப் பெருந்தன்மை பொருந்திக் கற்பாராதலினுல் அப்பெருந்தன்மை வாயாது விளையாட்டிற் பொழுது கழிக்கும் வினைர்களிடம் அக்கல்விப் பொருள்கள் சேரா என்றார்.” —இள.

“மற்றையின்பந் தோன்றி அழிதல்போலக் கல்வியாலாய இன்பந் தோன்றி யழியா தென்பார் ‘போக்கறு கல்வி’ எனவும், அவ்வின்பங் கற்றோரிடத்துப் பயன்படும் அன்றி மற்றையோரிடத்துப் பயன்படாது என்பார், ‘பெண்ணலம் பேடு கொளப் படுவதில்’ எனவுங் கூறினர். —தி. சு. செ.

போக்கறு கல்வி:

போக்கறு—“போக்கு-ஒழியத்தக்கது, அது குற்றம்.”
—இள.

“போக்கு:- தொழிலாகுபெயர்; இனித் தன்னை மிக வருத்தியுட்கொண்ட மனத்தினின்றும் போய்விடுதலிற் போக்கென்றுரெனினும் அமையும்.” —வி. கோ. சூ.

"போக்கு - குச் சாரியை பெற்று நின்ற போகென்னு முதனிலை திரிந்த தொழிற்பெயர், கழியவேண்டிய குற்றத்துக் கானமையால் தொழிலாகுபெயரென்க." —கோ. இ.

"போக்கு - வினையடிப் பகுபதப் பொருட்பெயர். போகுந் தொழிலினாற் பெறப்படு மிழத்தல் 'போக்கு' எனப்பட்டது."
—சி. மு.

மேல், உரையில் போக்கு என்பதற்குப் "பொருட் செல் வத்தைப் போன்று இழத்தல்" என உரைத்தது, "வைப்புழிக் கோட்படா வாய்த்தியிற் கேடில்லை மிக்க சிறப்பின் அரசர் செறின் வவ்வார்" என்ற நாலடியார் கருத்தையொட்டி எனக் கொள்க.

கல்வி—கல்விகள். பன்மையாகக் கொண்டுரைத்தமைக்கு, மேல் 23-ஆம் செய்யுளில் "கற்பன" என்பதற்குக் கொடுத்த குறிப்புக்களை நோக்குக.

**மீக்கொணகையினார் வாய்ச் சேரா:**

**மீக்கொள் நகையினார்வாய்**—"மீக்கொள் நகை - மேலேறிய நகை: அல்லது நகையை மீக்கொள்வார் எனப் பிரித்துக் கூட்டினுங் கூட்டலாம். நகை - முதனிலைத் தொழிற் பெயர். வாய் - ஏழனுருபு." —ஊ. பு. செ.

"மீக்கொணகையினார் - இது வடநூன் முடிபு; இதனை "நகை மீக்கொள்வார்" என முன்பின்னாக நிறுத்தி விகுதி பிரித்துக் கூட்டித் தமிழ் முடிபாக்கி யுரைத்தாம்."
—வி. கோ. சூ.

"நகையினார் - என்றூர் விளையாட்டுத் தன்மையுடையவரை"
—இள.

"நகையினா ரென்றது கற்றலிற் கருத்தைச் செலுத்தாமல் நகைத்து வீண்பொழுது போக்குவாரை." —உ. வே. சா.

"நகையினார் - பிரபுக்கள்; நகை - ஒளி. ஒளியாவது தாமுள ராய் காலத்து அதிகாரம், செல்வம், நன்குமதிப்பு முதலியவை களாலே மேம்பட்டு விளங்குதலுடைமை." —அ. கு.

"சிரித்தையோ சிரைக்குலைத்தையோ என்றபடி மீக்கொண்கையினர் அறிவிலாரென அறிக." —பழைய உரை.

**தாக்கணங்கும் ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும்:**

**தாக்கணங்கு**—இதற்கு "அழகிற் சிறந்த இலக்குமி" என்று பொருள்கொண்டு, "குமரியைக் குமரி கூடி இன்பம் பெறுதல் கூடாமையின் இலக்குமியுந் தான் ஆடவனாகப் பிறந்து கூடி இன்பம் பெற விரும்பும் அத்துணைச் சிறப்புடைய தென்பது" என உரைத்தார் **அ. குமாரசாமிப் புலவர்.**

"தாக்கணங்கு மாணவாம்" என்பதற்குத் திருமகளினது மாட்சிமையை யுடையதாகிய வெனவும், திருமகளும் அவாம் மாண் பெண்மை யெனவும், பொருள் கூறலாம்." —சி. வை. தா.

"தாக்கணங்கு - காமநெறியால் தீண்டி உயிர் கொள்ளும் தெய்வப்பெண். இலக்குமி என்று பொருள் கொள்வாருமுண்டு. அத் தெய்வப் பெண்ணும் தன் செயல்விட்டுக் காமங்கொள்ளும் அழகென்பது போல, இலக்குமி என்றதிற் பொருள் அவ்வாறு சிறவாமையால் அஃது உரையன்றென்க." —கோ. இ.

"தாக்கணங்கு - காமநெறியால் ஆடவரைத் தீண்டி வருத்துவதோர் தெய்வம். இதனை யுலக வழக்கில் மோகினிப் பசாசம் என்பர். "நோக்கினா ளேக்கெதிர் நோக்குத ருக்கணங்கு, தானைக்கொண் டன்ன துடைத்து" எனத் **திருக்குறளினும்,** "மூப்புடை முதுமைய தாக்கணங்குடைய" என **மணிமேகலையி** னும், இச்சொல் பயின்றுவருதல் காண்க. 'தாக்கணங்கும்' என்னும் உம்மை உயர்வுசிறப்புப் பொருளது." —வி. கோ. சூ.

"தாக்கு அணங்கும் பெண்மை என்று சேர்த்து வினைத்தொகையாகக் கொண்டு தாக்கி வருத்துகின்ற பெண்மைத் தன்மை என்று உரை கூறுக." —இள.

இவ்வாறுரைத்து "ஆண் அவாம்" என்பதையும் அப் பெண்மையுடன் கூட்டி வினைத்தொகையாக்கி யுரைக்கும் உரை சிறவாமை காண்க.

**ஆண்** அவாம்—"ஆண்மை - ஆளுந்தன்மை; பெண்மை - கட்புலனும் அமைதித்தன்மை" என்பர் ஆசிரியர் **நச்சினார்க்கினியர்.**

"மிகப் பேரழகுவாய்ந்த மோகினித் தெய்வமும் தனது பெண் தன்மையை யடைவதற்கு விரும்புமாறு செய்யவல்ல கழிபேரழகுடைய பெண்கள் என்பார், "தாக்கணங்கு மானை வாம் பெண்மை யுடைத்தெனினும்" என்றார். இக்கருத்தினைப் "பெண்டிரு மாண்மை வெஃகும் பேதுறு முலையினாளை" என்னுஞ் **சிந்தாமணிச்** செய்யுளடியிற் காண்க. **உயர்வு நவிற்சியணி** பற்றி யிங்ஙனங் கூறினார். அவாம் - அவாவும் எனற்பாலது 'அவாம்' என நின்றது." —வி. கோ. சூ.

"ஆண் அவாம் என்பது இடக்கரடக்கல்; பவ்வீ என்பது போல." —ஏ. எஸ். ஜே.

**உடைத்து**—" இவ்வினை தன் எழுவாயாகிய பெண் என்பதனோடு ஏலாதெனினும், பெண்மகளது கட்புலனும் அமைதித் தன்மைபற்றி அஃறிணை வினைகொடுத்து முடித்தாரென்க. இது சிறப்பின் உயர்திணை யஃறிணையாய் வந்த திணைவழுவமைதி." —வி. கோ. சூ.

**பெண்ணலம் பேடு கொளப்படுவதில் :**

**பெண்ணலம்** — "ஒரு பெண்ணைப் பிறர் கண்டவுடன் விரும்பச் செய்வது அழகே ஆதலால், அச்சிறப்புக் கருதி அதனை வினைமுதலாக்கிக் கூறினார்." —கோ. இ.

"பெண் - ஆடவர் முதலாயினோரால் பேணப்படுதலிற் பெண்ணெனக் காரணக் குறியாயிற் றென்பர் சிலர். நலம் என்பது காமச் செவ்வியுமாம்." —வி. கோ. சூ.

"பேடு, மிக்க அழகுடைய பெண்ணைப்போன்ற தோற்றம் உடையதாயினும் பெண்ணால் வரும் இன்பத்தைத் தரும் இயல்புடையதன்று என்றபடி." —உ. வே. சா.

"இச்செய்யுள் **எடுத்துக்காட்டுவமையணி.**" —பழைய உரை.

Inexhaustible learning is attainable only by those who excel in observation; not by those who smile in vain self-conceit. Though a woman possess charms which *Lachmi* might envy, they cannot be enjoyed by an Hermaphrodite. —H. S.

Knowledge that can never be lost belong only to persons endowed with vast intellectual powers; but it will never be the portion of the frivolous who indulge in excessive laughter. The hermaphrodite cannot enjoy the charms of a damsel, though she be so beautiful, as to induce even the goddess of beauty to sigh for manhood. —C. M.

Imperishable learning is attainable only by the intelligent; not by those who exult in vain-glorious laughter. Though a woman possesses charms which even Lakshmi (the Goddess of Beauty) might envy, they cannot be enjoyed by an hermaphrodite. —T. B. K.

Flawless scholarship is within the reach of students of profound intellectual acumen, and not of outstanding material glory. The pleasures of woman-hood are not enjoyable by an asexual, though gifted with such a fair feminine form as to infatuate even the decoying Siren. —K. S.

## 25. கல்லார்க்கு அறமுரைத்தல்

*கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறூஉங்*
*குற்றந் தமதே பிறிதன்று—முற்றுணர்ந்துந்*
*தாமவர் தன்மை யுணராதார் தம்முணரா*
*ஏதிலரை நோவ தெவன்.*

1. *கற்றன* - (தம்மால் வருந்திக் கற்றுணரப்பட்ட) நூற் பொருள்களை, *கல்லார்* - (கல்வி யறிவில்லா) மூடர்களுடைய, *செவி* - காதுகளில் *மாட்டி* - வற்புறுத்தி நுழைத்து, (அதன் பயனாக அவரால்), *கை உறூஉம்* - சிறுமை யடைதற்குக் காரணமாகிய, *குற்றம்* - பிழை, *தமதே* - (செய்யும் வினையின் பயனை ஓரா அறிவின்மை பூண்ட) தம்மால் விளைந்ததே, *பிறிதன்று* - பிறரொருவரால் விளைந்தது அன்று; *முற்றுணர்ந்தும்* - எல்லாம் தெரிந்திருந்தும், *தாம்* - (கற்றறிந்த) தாம், *அவர்* - (கல்லார் ஆகிய) அம்மூடர்களுடைய, *தன்மை* - (மூட) இயற்கையை, *உணராதார்* - அறிந்துகொள்ளும் ஆற்றலில்லாத இவர், *தம்* - (கற்றன புகட்டும்) தம்மை, *உணரா* - அறிந்து மதியாத, *ஏதிலரை* - (அம் மூடரை யுள்ளிட்ட) அயலாரை, *நோவது* - நொந்து கொள்வது *எவன்* - எதனாலோ?

2. கல்லார் செவி கற்றன மாட்டிக் கையுறூஉங் குற்றம் தமதே; பிறிது அன்று; தாம் முற்றும் உணர்ந்தும், அவர் தன்மை யுணராதார், தம்முணரா ஏதிலரை எவன் நோவது?

3. **கற்குந் தகுதியுடைமை யறிந்தே கல்வி புகட்டல் வண்டும்.**

4. "காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு." —குறள்.

"அருளி னறமுரைக்கு மன்புடையார் வாய்ச்சொல்
பொருளாகக் கொள்வர் புலவர்—பொருளல்லா
ஏழை யதனை யிகழ்ந்துரைக்கும் பாற்கூழை
மூழை சுவையுணரா தாங்கு." —நாலடியார்.

" * * * மிக்க
கனம்பொதிந்த நூல்விரித்துக் காட்டினுங் கீழ்தன்
மனம்புரிந்த வாறே மிகும்." —நாலடியார்.

யாதொர் புந்தியை
யறிவிலார்க் குரைப்பவர் அவரிற் பேதையோர்."
—கந்தபுராணம்.

5. "வடநூலாருள்ளே வரருசி என்பவரும் நீதிரத்தினம் என்னும் நூலிலே, 'நூற்றுக் கணக்கான வேறு துக்கங்களைத் தரினுந் தருக. மூடர்க் குபதேசித்தலை மாத்திரம் என் தலையிலே எழுதாதே, எழுதாதே!' என்று வேண்டினர் பிரமதேவனை."
—அ. கு.

"தாம் கற்ற நூற்பொருள்களைத் தமது தன்மையை யறியும் அறிவில்லார்க்குக் கற்பித்தல் குற்றம் என்பார் பிரிநிலைப் பொருளில் வந்த "ஏ" தந்து 'குற்றந் தமதே பிறிதன்று' எனவும், முழுதும் அறிந்த தாம், அவரது தன்மையை யறியாமையால் வரும் அவமதிப்புத் தமது குற்றத்தால் வந்ததெனக் கருதி யடங்கல்வேண்டும் என்பார், 'ஏதிலார் நோவதென்' எனவுங் கூறினர்."
—தி. சு. செ.

"மூடர் திறம் இவ்வளவென்று தெரிந்துகொள்ள மாட்டாமல் நூற்பொருள்களை அவர்களுக்குச் சொல்லுகிறவர் அம் மூடரால் அவமதிக்கப் படுவார்க ளாதலால், அது இவர்கள் குற்றமேயாம் என்றபடி."
—ஞா. பு. செ.

"நன்றாய்ப் படித்து எல்லாந் தெரிந்திருந்துங் கூட, தம் அறிவுரைகளை அம் மூடர்கள் ஏற்றுக் கொள்வார்கள் அல்லது ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என்று அறிந்துகொள்ளாமற் போனால், அம் மூடர்கள் எவ்வாறு "இவர்கள் படித்தவர்கள், ஆதலால் இவர்களுக்கு மதிப்புக் கொடுத்து இவர்கள் கூறும் அறிவுரைகளை ஏற்றுக் கொளல் வேண்டும்" என்று தெரிந்து கொள்வார்கள் என்பது இதன் உட்கோள்." —இள.

**கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறூஉங் குற்றம் :**

**கற்றன**—"செயப்பாட்டு வினைப்பொருண்மையில் **வந்த** பலவின் படர்க்கை யிறந்தகால வினையாலணையும் பெயர்."
**—வி. கோ. சூ.**

**கல்லார்**—"கல்லார் என உயர்திணைப் பொருளாகக் கூறிப் பின்னர், "பிறிது" என அஃறிணைப் பொருளாகக் கூறியது செய்யுளின்கண் வந்த திணைவழுவமைதி." —தி. சு. செ.

**செவிமாட்டி**—"செல்லத்தக்க நல்வழியிலே விடாமைபற்றி 'மாட்டி' என்றார்." —அ. கு.

"மாட்டி" - "செவி கொடாதிருக்கையில் பொறுமையோடும் வலியச் சொல்லி." —மோ. வே.

"செவிமாட்டி - செவிமாட்டுதலால்; மாட்டி என்பதன் சொல்லாற்றல் தம்முடைய அறிவுநூற் பொருளை அம் மூடர்கள் விரும்பாராகவும், அவர்கள் விரும்பவில்லை என்பதைத் தாமும் தெரிந்திருந்தும், வேண்டுமென்றே வலிந்து அறிவுறுத்துதலை விளக்கிற்று." —இள.

"மாட்டி என்னும் சொல்லாற்றலால் மூடர் கேட்பதற்கு இணங்காமையும், கற்றோர் அவரை இணக்கினமையும் தோன்றுகின்றன." —கோ. இ.

"செவிமாட்டி", "கையுறாஉம்" என்ற தொடர்மொழி வினை செவியிற் சொல்லி, கையிற் பெறப்படும் என்னும் பொருள்பட நின்றன." —சி. மு.

**கையுறாஉம்**—"கை - சிறுமை; அதனை யுறுதலாவது தாம் அவரான் அவமதிக்கப்படுதல்." —வி. கோ. சூ.

கையுறாஉம் - "அவரால் அவமதிக்கப்படுவதாகிய."

—சி. மு.

**முற்றுணர்ந்துந் தாமவர் தன்மையுணராதார்:**

**முற்றுணர்ந்தும்**—"முற்றும் எனற்பால வும்மை விகாரத்தாற் றொக்கது; 'உணர்ந்தும்' இதன்கண் உம்மை எதிர்மறை" —வி. கோ. சூ.

* "Give not that which is holy unto the dogs, neither cast ye your pearls before swine, lest they trample them under their feet, and turn again and rend you." (St. Mathew)

"புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க, நல்லவையு ணன்கு செலச்சொல்லு வார்" என்ற திருக்குறள் முடிபும், "வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்" என்ற சிலப்பதிகார முடிபும் போன்ற நூன்முடிபுகளை நன்குணர்ந்தவர்."
—அ.கு.

**தாமவர் தன்மை யுணராதார்**—"தாமவர் தன்மை யுணராமையாவது தாம் நீதிகளைச் சொல்லக் கோபிப்பரென்றறியாமையாம்."
—வி. கோ. சூ.

**தம்முணரா ஏதிலரை நோவதெவன்:**

**தம்முணரா**—"அவர் தம்மை யுணராமையாவது இவர் நமக்கு உறுதி கூறுவோ ரென்றறியாமையாம்." —வி. கோ. சூ.

"கல்லாத நாம் பணிந்துநடக்குங் கல்விப்பெருமையுடையாரெனவும், நமக்கு உறுதிமொழிகளைக் கூறுபவரெனவும் அறியாமை."
—கோ. இ.

ஏதிலர்—"தம்மோடு தொடர்புறுதற்கு ஏதொரு ஏதுவுமில்லாதவர்; அவர் பிறர்."
—இள.

"இது வடசொல் விரவப்பெறாத தனித்தமிழ்ச் செய்யுளாதல் காண்க."
—வி. கோ. சூ.

If learned men incur disrespect, while forcing instruction into the ears of the ignorant, the fault is their own. If with all their knowledge they do not know their neighbours' qualities, why should they be hurt at these ignorant neighbours for not knowing their merits? —H. S.

The fault of subjecting one's self to the contempt of the ignorant by driving into their ears what one has learnt, is his own fault; it is not another's. Why should he who knows everything feel pain when another does not appreciate his worth, although he himself did not discover their character? —C. M.

If learned men force instruction into the ears of the ignorant and thereby incur disrespect, the fault is their own. Why blame others when with all their wide learning they know not the nature of those others? —T. B. K.

If the learned suffer by addressing their learning to the ears of the illiterate, they are themselves to blame and not others; for, with all their knowledge they have failed to understand the nature of their addressees. How can they then reproach the people too ignorant to know and appreciate them? —K. S.

---

## 26. மேன்மக்கள் பெருமை

*வேத்தவை காவார் மிகன்மக்கள் வேறுசிலர்*
*காத்தது கொண்டாங் குவப்பெய்தார்—மாத்தகைய*
*அந்தப் புரத்தது பூனை புறங்கடைய*
*கந்துகொல் பூட்கைக் களிறு.*

1. வேத்தவை - அரசவையை, காவார் - (அடுத்து எதிர்நோக்கிக்) காத்திரார், மிகன்மக்கள் - மேன்மக்கள், (எனினும் உரிய சிறப்புக்களை அடையப்பெற்று மகிழ்ந்திருப்பர்); வேறுசிலர் - (மேன்மக்களல்லராய) வேறு சில புன்மாக்கள், காத்து - (அரசவையைக்) காத்துக்கிடந்தும், அதுகொண்டு - அதன் பயனை, உவப்பு - உளமகிழ்ச்சியை, எய்தார் - அடையப்பெறார்; மா - பெரும், தகைய - தகுதி வாய்ந்த, அந்தப் புரத்தது - அந்தப்புரத்தையே காத்துத்திரியு மியல்புடையது, பூனை - பூனை, (ஆயினும் அச்சமின்றி உணவுபெற்று மகிழும் பெருமையை அஃ தடையமாட்டாது); புறங்கடைய - கடைவாயில் (கடந்து உள்ளே செல்லாமல்) நிற்கும் இயல்பினை யுடையன, கந்து - கட்டுத்தறியை, கொல் - முறித்தழிக்கும், பூட்கை - வலிமை வாய்ந்த, களிறு - யானைகள் (ஆயினும் அவை பரிந்து உணவு முதலிய அளிக்கப்பெற்று மகிழ்ந் திருக்கும் பெருமையுடையன).

2. பூனை மாத்தகைய அந்தப்புரத்தது; கந்துகொல் பூட்கைக் களிறு புறங்கடைய; மிகன்மக்கள் வேத்தவை காவார், வேறு சிலர் காத்து அதுகொண்டு உவப்பெய்தார்.

3. **கல்வியிற் சிறந்தோரைச் சீருஞ்சிறப்புந் தாமே தேடிச் சென்றடையும்.**

4. "மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்." —மூதுரை.

"பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னு மறிஞரைத்தா மற்றொவ்வார்." —நன்னெறி.

"ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்." —புறநானூறு.

5. "இது முதல் 15-பாட்டுக்களால் அரசியல் கூறப்படும். அரண்மனை வாயிலில் நிற்கும் யானை போர்க்காலத்திற் போர் செய்தற்குப் பயன்படுதலும், அந்தப்புரத்திலுள்ள பூனை சோர்வறிந்து அங்குள்ள சிறந்த உணவுகளை மட்டும் உண்பதற் கன்றி வேறெதற்கும் சிறிதும் பயன்படாமையும் போல, பெரியார் அரசனுக்கு அருகில் இராவிடினும் தக்க சமயத்திற் பயனளித்தலும், சிறியோர் இடைவிடாமற் காத்திருந்தும் உண்டி முதலிய பயனைத் தாம் அடைதலன்றி யாதோர் உயர்வும் அடையாததோடு அவமதிப்பை அடைதலும் இங்கே அறிதற்பாலன," —உ. வே. சா.

"யானை புறங்கடை நிற்பினுஞ் சிறப்படையுமாறுபோல மேலோராயினோர் அரசவை யடையாராயினுஞ் சிறப்பெய்துவ ரெனவும், பூனை அந்தப்புரத்தின்கண்ணதே யாயினுஞ் சிறப் படையாதவாறுபோலக் கீழோராயினோர் அரசவை யடைந்துஞ் சிறப்பெய்தாரெனவுங் கூட்டிக்கொள்ளக் கிடத்தலின் இஃது எதிர்நிரனிறைப் பொருள்கோள்." —வி. கோ. சூ.

"இச் செய்யுளான், வலிய யானையானது வீட்டிற்குப் புறத்தினிற்பதாயினும் அரசன் மனையோ டந்தப்புரத்து வாசம் பண்ணும் பூனையினுஞ் சிறப்புடையதுபோல, மேலோர் அரச

சபையைக் காவாராயினு மதனைக்காக்கு மெளியவரினுஞ் சிறப்புடையரென மேன்மக்கள் சிறப்புணர்த்தப்பட்டது.''

—சி. வை. தா.

"கற்றறிவுடையார் அரசசபையைக் காவாதிருப்பினும் அவரா லுபசரிக்கப்படுவார் என்பதையும், அவ்வறிவில்லார் காத்திருப்பினும் அவரா லுபசரிக்கப்படார் என்பதையும் உவமைமுகத்தால் விளக்கினர்.'' —தி. சு. செ.

பண்டெல்லாம், கற்றோர் தமக்குப் பெருமையாகக் கொண்டவை அரசரை யணுகி அவரால் நன்குமதிக்கப்பட்டு அரசவையில் இருத்தலையும் அளவிறந்த பரிசில்களைப் பெறுதலையுமேயாம். இந்நாளிலும் கல்வியிற் சிறந்த புலவர்களைத் தேர்ந்து பட்டம் முதலிய சிறப்பையளித்து அரசர்கள் பெருமைப் படுத்துதலை எந்நாட்டிலுங் காண்கின்றோம். வேத்தவையினுங் கற்றுரவையினும் தலையிருக்கை பெறுதலே பெருஞ் சிறப்பாகத் தமிழ்மக்களாற் கருதப்பட்டு வந்தமை,

"தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்''

என்னுந் தமிழ்மறையால் நன்கு விளங்கும்.

**வேத்தவை காவார் மிகன்மக்கள்:**

**வேத்தவை**—"வேந்து + அவை; எதுகை நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது. வேந்து விகுதி பெறாத ஆண்பாற் பெயர்; நம்பி, ஆடூஉ, விடலை, கோ, வேள் என்பனபோல.''

—வி. கோ. சூ.

**காவார்** — "அரசனுடைய அவையில் இருந்தால்தான் பெருமை வருமென்று நினைத்து அந்த அரசவையைக் காத்துக் கொண்டிருக்கமாட்டார். (அதனால் அவர்க்கு வருத்தமென்பதும் ஒன்றில்லை). 'காவார்', 'காத்தது' என்பன அரசனிடத்தில் அலுவல் பெறாதிருத்தலையுங் குறித்தன. அலுவலைக் 'காவார்'; 'காத்தது' என்னுஞ் சொற்களாற் கூறினர், அவ்வலுவல் அரசனிடத்ததேயானாலும் காத்துக்கிடப்பதாகிய இழிவை யுடையதேயாம் என்றற்கு.'' —இள.

**மிகன்மக்கள்**—"கல்வியறிவொழுக்கங்களால் மிகுந்தவர். அங்ஙனமல்லாதாரை இடக்கரடக்கி 'வேறு சிலர்' என்றார்; மக்கள் - ஒருமையில் சொல்; இதனை நித்திய பகுவசன மென்பர் வடநூலார்." —**வி.** கோ. சூ.

"மக்கள் - மக - பகுதி, அ - தொகுத்தல், கள் - விகுதி; இவ் விகுதி பகுதிப்பொருள் விகுதியில் வருதலின் பலர்பாலி லும் பலவின்பாலிலும் வரும்; தன்மை முன்னிலைகளில் வரின் இடவழுவமைதியாகக் கொள்க." —தி. சு. செ.

"கல்வி அறிவு கேள்வி ஒழுக்கங்களால் மிகுந்தவராத லால் மேலோரை 'மிகன்மக்க' ளென்றும், அவை யில்லாதா ராதலால் கீழோரை 'வேறு சில' ரென்றுங் கூறினர்." —கோ. இ.

**வேறு சிலர் காத்ததுகொண்டாங் குவப்பெய்தார்:**

**காத்ததுகொண்டு**-காத்ததினாலும் என உரைப்பாரும் உளர். இவ்வுரைக்குக் 'காத்து' வினைமுதல் வினையைக் காரியத்தின் மேலேற்றிக் கூறும் இறந்தகால வினையாலணையும் பெயர்.

"காத்து, அது, கொண்டு என்று பிரிக்கினுமாம்." —சி. வை. தா.

**ஆங்கு**—அசை. "அவ்விடத்து" என்று பொருள்கொள் ளினுமாம்.

**உவப்பெய்தார்**:—"உகப்பெய்தார்" எனப் பாடங்கொண்டு, உகப்பு - உயர்வு; "உகப்பே யுயர்தல் (தொல் - உரி - 8); சிலர் உகப்பெய்தார்" எனப் பொருள் குறித்தார் உ. வே. சாமி நாத ஐயர்.

**மாத்தகைய அந்தப்புரத்தது பூசை:**

**மாத்தகைய**—"மிகவும் சம்பிரமத்தை யுடைய," "பெருஞ் சிறப்புடைய," "பேரழகினை யுடைய," "பெருமையை யுடைய," "பெருந் தன்மையுடைய" என்றும் பொருளுரைக்கப்பட் டுள்ளன.

**அந்தப்புரத்தது**—"இது வடசொல்; அரசனது உரிமை மகளிரிருக்கும் காவல்கொண்டதோரிடம்." —வி. கோ. சூ.

"அந்தப்புரம் என்பது "உள் வீடு" என்னும் பொருள் படும். "அந்தர், புர" என்னும் ஆரிய மொழிகள் சேர்ந்து "அந்தப்புரம்" என்னும் வடமொழி யாயின." —சி. மு.

"அந்தப்புரம் என்பது பிறரெல்லாம் கிட்டுதற்கு அரிதான வீட்டின் உள்ளறை; ஆவது பெண்மக்கள் இருப்பிடம்; அஃது எல்லாரும் கிட்டுதற்கு அருமையான அரசவைக்கு உவமையாக வந்தது." —இள.

**பூனை**—பூனை.

உருவினும் இயல்பினும் ஒன்றுக்கொன்று நேர்மாறான இரண்டு உயிர்களைக் கல்வியிற் சிறந்தோரையும் சிறவாதோரையும் குறிக்க எடுத்துக்கொண்ட ஆசிரியர் திறம் வியக்கற்பாற்று.

**புறங்கடைய கந்துகொல் பூட்கைக் களிறு:**

**புறங்கடைய**—இடமடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று.

"புறங்கடைய என்னுங் குறிப்புமுற்று து என்னும் ஈறு குறைந்தது. பன்மையெனவைத்துக் களிறென்னும் பால்பகா வஃறிணைப் பெயரைப் பன்மையாக் கொள்ளவுமாம்."

—ஞா. பு. செ.

"களிறு புறங்கடைய - உயர்வுபற்றி ஒருமைப்பால் பன்மைப் பாலாய் வந்த வழுவமைதி; துவ்விகுதி தொகுத்த தெனக் கொண்டு வழாநிலையாகிய ஒருமை எனினும் ஒக்கும்."

—கோ. இ.

**பூட்கை**—"மேற்கோள்; இதற்குப் புழைக்கையை யுடைய எனவும், கிம்புரிப் பூணணிந்த எனவும் பொருள் கூறுவாரு முளர். மேற்கோள் என்பது எடுத்த தொழிலைச் சாதிப்பதற் கேற்ற ஆற்றலுடைமை. "ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" யென்றார் நக்கீர தேவரும்." —வி. கோ. சூ.

"பூட்கை - துவாரமுடைய கை; இது அன்மொழித் தொகையால் யானைக்குப் பரியாயமாய் வருதல் காண்க."
—தி. சு. செ.

இஃது எடுத்துக்காட்டுவமையணி.

The noble wait not in attendance at the royal court; and there are some others, who have no enjoyment in waiting there. The cat frequents the splendid zenana, while the hollow-handed elephants, which can tear up the pillars to which they are bound, remain without the gate. —H. S.

The great will not dance attendance at the Court of the king. The mean will rejoice to stand in waiting at the Court. The cat lives in the splendid apartments of the palace. The powerful elephant which breaks the post to which it is tied stands at the entrance. —C. M.

The noble dance not attendance at the Royal Court and yet are honoured; there are others who wait there for ever and are not honoured; the cat frequents the inner courts where queens reside, while the valiant elephant that can tear up the pillar to which it is tied, remains outside the gate. —T. B. K.

High-souled men do not like to be hangers on of the royal court; whereas men of an inferior cast are not satisfied with the gains of waiting at one spot, but aspire to additional posts. The petty cat creeps even within precincts of the grand royal harem, while the majestic elephant resenting restraint, moves outside the palace gate. —K. S.

# 27. இறைமாட்சி

குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயும்—அறவோர்க்
கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூ ணிறை.

1. குலமகட்கு - நற்குடிப் பிறந்த (கற்புடை) நங்கைக்கு தெய்வம் - தெய்வமாவான், கொழுநனே - (அவள் தன்) **கணவனேயாம்**; புதல்வர்க்கு - மக்களுக்கு (தெய்மாவார்), தந்தையும் - அவர்களுடைய தந்தையும், தாயும் - தாயுமேயாம்; அறவோர்க்கு - அறநிலைநிற்போர்க்கு, அடிகளே - (அவர்தம்) ஞானகுருவே, தெய்வம் - தெய்வமாவார்; அனைவோர்க்கும் - யாவருக்கும், தெய்வம் - (ஒருபடித்தாக) தெய்வமாக விளங்குபவன், இலைமுகம் - இலைபோன்ற முக வடிவையுடைய, பைம்பூண் - பசிய பொன்னாலாகிய அணிகளைத் தரித்த, இறை - அரசனேயாம்.

2. குலமகட்குக் கொழுநனே தெய்வம்; புதல்வர்க்குத் தந்தையுந் தாயும் (தெய்வம்), அறவோர்க்கு அடிகளே தெய்வம்; அனைவோர்க்கும் இலைமுகப் பைம்பூண் இறை தெய்வம்.

3. **மனைவிக்குக் கணவனும், மக்கட்குப் பெற்றோரும், சான்றோர்க்குக் குருவும் தெய்வமாவார்; யாவர்க்கும் அரசனே தெய்வமாக இருந்து ஆவன புரிதல் வேண்டும்.**

4. "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை." —**குறள்.**

"முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்." —**குறள்.**

"அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்."
—**கொன்றைவேந்தன்.**

'அரசனே யுலகினுக் குயி ரரசனே தரும
மரசனே பெருங் கடவுளு மவனிலை யென்னில்
விரைசெய் மாலையாய் மின்னனார் கற்பு மெய்ப்பொருளு
முறைசெய் முன்னரிற் றீர்தரு மென்கொலோ வுளவாம்."
—**மகாபாரதம்.**

5. "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்" என்பவாகலிற் 'குலமகட்குத் தெய்வங் கொழுநனே' என்றும், "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்பவாகலின், 'மன்ற புதல்வர்க்குத் தந்தையுந் தாயும்' என்றும், "குருவே சிவமெனக் கூறினன் நந்தி" என்பவாகலின், 'அறவோர்க் கடிகளே தெய்வ'மென்றும், "திருவுடை மன்னனைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்" என்பவாகலின் 'அனைவோர்க்குந் தெய்வம் இலைமுகப் பைம்பூணிறை' என்றும் கூறினர்."

—வி. கோ. சூ.

"பெண்களைக் கற்பின்வழி நிறுத்தலும் புதல்வரைத் தந்தை தாயார் வழி நிறுத்தலும், பிரமசரிய முதலிய நிலையில் நிற்போரை யந்நிலையில் வழுவாது நிறுத்தலும் அரசன் செயலாதலின், 'இறை அனைவோர்க்குந் தெய்வம்' என்றார்."

—தி. சு. செ.

"கணவன், தாய்தந்தையர், ஆசிரியர், அரசன் என்பார், இறைவன் உயிர்கட்கு எவ்வகையான உதவி செய்கின்றானோ அது போன்ற உதவியையே உடனிருந்து அன்போடு அவ்வப் போதும் தம் மனைவி மக்கள் மாணவர் குடிமக்கள் என்பார்க்குச் செய்தலின் அவரெல்லாம் அவர்கட்குத் தெய்வமாவா ரெனப்பட்டார்."

— இள.

"உலகபால ருருவாய் நின்று உலகங் காத்தலின் அரசனை 'இறை' என்றும் 'அனைவோர்க்குந் தெய்வம்' என்றுங் கூறினர்."

—கோ. இ.

குலமகட்குத் தெய்வம் கொழுநனே:

குலமகட்கு—"குலத்திற் குரிமைபற்றிக் கற்புடையாள் குலமகளெனப் பட்டாள்."

—அ. கு.

"மகள் - மக பகுதி, ள் விகுதி. மக - இளமை."

—ஏ. எஸ். ஜெ.

தெய்வம்—"தைவமென்னும் வட சொற் சிதைவு."

—வி. கோ. சூ.

"தேய்" என்னும் பகுதி யடியாகப் பிறந்த தமிழ்ச் சொல்லே தெய்வ மென்பார் **மறைமலையடிகளார்.**

"தெய்வம் என்பது தெய்வம் போலப் பார்க்கத் தக்கவர்கள் என்பதற்கு," —இள.

*வாள் விழிக்குல மங்கைய ரன்பர்பொற்*
*றாள் விளக்கிய தண்புனற் கங்கையைக்*
*கேள் வரேகிளர் தேவர்கண் மூவரில்*
*ஆளு மெய்ம்மை யடிகளென் றெண்ணுவர்.* —**காசிகாண்டம்.**

**கொழுநன்**—"பண்படியாகப் பிறந்த பெயர். கொழு - பகுதி, ந் - பெயரிடைநிலை, அன் - ஆண்பால் விகுதி. கொழு - பற்றுக்கோடு; அஃது இலக்கணையால் ஆதரவை யுணர்த்தியது. உழுநர், பாடுநர் என்பவற்றிலும் பெயரிடைநிலை காண்க." —ஏ. எஸ். ஜெ.

**மன்ற புதல்வர்க்குத் தந்தையுந் தாயும்:**

**மன்ற**—"மன்ற தேற்றப் பொருளில் வந்த இடைச்சொல். அது இடையில் நின்று ஏனை யிடங்கட்குப் பிரிந்து செல்லுதலிற் பிரிநிலை. மன்ற என்பதனை ஏனையிடத்துங் கூட்டிப் பொருள் கொள்க." —தி. சு. செ.

"மன்ற - அசை." —இள.

ஒருதலையாக என்னும் பொருள்படும் "மன்ற" என்ற சொல்லை அசையாகக் கொள்ளுதலே சிறப்பாகத் தோற்றுகிறது.

**அறவோர்க் கடிகளே தெய்வம்:**

**அறவோர்**—"அறவோரென்றது பிரமசரிய வறத்தோரை. அவரே குருவின்வழி நிற்பவர். மகாபாரதத்திலே சாந்தி பருவத்திலே "விரவு தேசிகன் வழிபடல் வியன்மறை யுணர்தல் பரவு நற்றவ மிரந்துணல் பகர்தன் முன்னெறியே" எனப் பிரமசரிய விலக்கணங் கூறப்பட்டது." —அ. கு.

"குலமகட்குத் தெய்வம் கொழுநனே என்றமையால் 'அறவோர்' என்றது அவரொழிந்த ஏனையோர் - பிரமசாரி வானப்பிரத்தன், சந்நியாசி." —தி. சு. செ.

"அறவோர் நல்லொழுக்கமுடைய மாணவர்கள்; மாணவர்கள் மற்றவற்றிற் பற்று வையாது கல்வியிலே கருத்தூன்றித் துறவிகள்போல் நிற்றலின்." —இள.

"அறவோர் - துறவாமல் விரதங் காப்போர்; பிரமசாரிகளெனினுமாம்." —உ. வே. சா.

அறவோர் என்பது செந்தண்மை பூண்டொழுகி அறநிலை வழுவாது நின்ற ஆசிரியர் குமரகுருபரரையே குறிக்கின்றமை காண்க.

அடிகளே—"அடிகள் ஆசிரியர்க்கு வருதலை 'அன்னை தன்னைத் தாதையை அடிகடன்னை' என்னுங் கந்த புராணத் திருமொழியிற் காண்க." —இள.

**அனைவோர்க்குந் தெய்வம் இலைமுகப் பைம்பூணிறை:**

அனைவோர்க்கும்—"குலமகள், புதல்வர், அறவோர் என்பவர்கட்கு இன்னின்னார் தெய்வமென்று கூறிவிட்டமையின் அவரொழித்து மற்றையோரையே 'அனைவோர்க்கும்' என்றார்; அவ்வனையோர் என்பது இல்வாழ்வார் என்க." —இள.

யாவருக்கும் என்று பொருள் கோடலே சிறப்பாம்.

இலைமுகப் பைம்பூணிறை—"வெற்றிலைபோலும் படத்தினையுடைய சர்ப்பமாகிய பசிய ஆபரணங்களைத் தரித்த கடவுளாகிய சிவபெருமான் எனப் பொருள் கூறுவாருமுளர்; ஈண்டு அரசியல் அதிகாரப்பட்டமையின் அது பொருந்தாமை யுணர்க. பைம்பூண் - இவ்வாறு பசுமையாகிய பொன்னாற் செய்த பூணினைக் கூறியது ஒருவகைக் குறிப்பாகிய மரபு வழுவமைதி." —வி. கோ. சூ.

"இலைமுகப் பைம்பூண் - வெற்றிலைச் சரப்பணி." —தி. சு. செ.

"இலைமுகப பைம்பூண் - பத்திராவலி என்னும் ஆபரணம்; அதாவது வெற்றிலைச் சரப்பணி - வெற்றிலை போன்ற இலைகளின் நுனிவடிவாய்ப் பொன்னாலியற்றப்பட்ட ஓர்வகை மாலை." —பழைய உரை.

"வலியரால் எளியார் கேடடையாது காத்தல்பற்றி அரசனை 'அனைவோர்க்குந் தெய்வ'மென்றார்." —அ. கு.

"வாக்குக் காயங்களாற் பாவஞ் செய்யுமவர்களை ஒறுத்துச் சுவர்க்கம் புகுவிக்க ஏதுவாய் நிற்பவனாதலின் அரசன் தெய்வமெனப்பட்டான்." —பழைய உரை.

"இஃது எடுத்துக்காட்டுவமையணி." —வி. கோ. சூ.

"ஒப்புமைக் கூட்ட அணி." —ஊ. பு. செ.

To well-born women, their husband is a god; to children, their father and mother; to the virtuous, their spirinal preceptor is a god; and a god to all, is the king, adorned with leaf-like ornaments of pale gold. —H. S.

The husband is the god of the chaste wife; the parents are the gods of the children; the spiritual tutors are the gods of their disciples; and the Soverign, adorned with leaf-like ornaments is the god of all. —C. M.

To the chaste woman born of a good family her husband is a god; to the children their father and mother are gods; to the virtuous disciples their Guru (Spiritual preceptor) is a god; and a god to all is the king, adorned with leaf-like ornaments of gold. —S. W.

To a chaste woman her husband is her god; so are parents to their children, Gurus to their disciples and the King adorned with leaf-like ornaments of pure gold, to all the world. —T. B. K.

To a lady of honour, her lord is her god; for children, father and mother are their gods. To celebate pupils their spiritual preceptor is their god. The king adorned with his insignia is the god for all. —K. S.

---

## 28. ஆளுந்திரு

*கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி*
*புண்ணியத்தின் பாலதே யாயினுந்—தண்ணளியால்*
*மன்பதை யோம்பாதார்க் கென்னும் வயப்படைமற்*
*றென்பயக்கு மாணல் லவர்க்கு.*

1. கண்ணில் - (தம் கண்ணின்) பார்வையினாலேயே, சொலி - (செயற்பாலனவாகத் தாங் கருதுவதைப் பிறர்க்கு) அறிவித்து, செவியின் - காது வாயிலாகவே, நோக்கும் - (அறியற்பாலனவற்றைப் பிறர் கூறக்கேட்டு) நேரிற் பார்த்ததுபோல அறிந்துகொள்ளும், இறைமாட்சி - அரசுரிமை மேம்பாடு, புண்ணியத்தின் பாலதே - (முன் செய்த நல்வினைக்குரிய) ஆகூழின் வழிவந்ததே, ஆயினும் - எனினும், தண்ணளியான் - தண்மை பொருந்திய அருளினால், மன்பதை - மக்கட் குழாத்தை (குடிமக்களை), ஓம்பாதார்க்கு - பாதுகாவாத பேரொலியரசர்க்கு, என்னும் - என்ன பயனைத் தருவதாகும்? (ஒரு பயனுந் தாராது); [அஃது எது போல்வதெனின்] வயம் - வெற்றியை யளிக்க வல்ல, படை - (வாள்) ஆயுதம், என் - என்ன, பயக்கும் - பயனைத் தருவதாகும், ஆணல்லவர்க்கு - ஆணல்லாத பேடிகளும் பெண்டிருமாயினார்க்கு? (ஒரு பயனுந் தாராததைப் போலும்.)

2. ஆணல்லவர்க்கு வயப்படை மற்றென் பயக்கும்? (அதுபோல) கண்ணிற் சொலிச் செவியினோக்கும் இறைமாட்சி புண்ணியத்தின்பாலதே யாயினும், தண்ணளியான் மன்பதை யோம்பாதார்க்கென்னும்?

3. **ஆளுந்திரு அருளினாலன்றிச் சீர்கெடும்.**

4. "கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
முடையானும் வேந்தர்க் கொளி." —குறள்.

"தன்னுயி ராமென வுலகிற் றங்கிய
மன்னுயி ரனைத்தையும் புரக்கு மாட்சியான்." —நீதிநூல்.

"இல்லானுக் கன்பிங் கிடம்பொரு ளேவல்மற்
றெல்லா மிருந்துமவற் கென்செய்யும்?" —நன்னெறி.

"நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள
நின் தண்மையுஞ் சாயலுந் திங்களுள
நின் சுரத்தலும் வண்மையு மாரியுள" —பரிபாடல்.

5. "படை நன்றாயிருந்ததாயினும் பேடியின் குற்றத்தால் அது பயனடையாதவாறுபோல், நல்ல நாடு வாய்த்ததாயினும் ஆள்பவனுடைய குற்றத்தால் அவன் அரசாட்சி சிறப்படையாதென்பது கருத்து. "தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை, வாளாண்மைபோலக் கெடும்"(குறள்: 614) பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத், தஞ்சு மவன்கற்ற நூல்" (குறள்: 727) எனப் பிறரும் ஒருபொருளைப் பெற்றும் அது பயன்படாமையை விளக்குதற்கு இந்த உவமையைக் கூறுதல் காண்க." —உ. வே. சா.

"இரகசியங்கள் பிறராலறியப்படாற் பங்காறு மென்பது பற்றிக் 'கண்ணிற் சொலி' என்றும், இருந்துழியிருந்து காரியங்களைக் கேட்டு அறிதல் பற்றிச் 'செவியி னோக்கும்' என்றுங் கூறினர்." —அ. கு.

"இலக்கணையால் வாயினது வினையாகிய 'சொல்லி' என்பதைக் கண்ணின் மேலேற்றியும், கண்ணினது வினையாகிய "நோக்கு" மென்பதைக் காதின்மேலேற்றியுங் கூறியது அரசச்செல்வத்தினது பெருமை தோன்றற்கு.' —கோ. இ.

"தமது பரிசனங்களை யரிய தொழிலிற் புகுத்தப் பார்வையாற் குறிப்பித்தல் வாயாற் சொல்லுதலோடு ஒக்குமென்பார் "கண்ணிற் சொலி" எனவும், தமது நாட்டில் நடப்பனவற்றை ஒற்றரால் கேட்டறிதல் கண்ணாற் பார்த்தலோடு

ஒக்கும் என்பார் 'செவியி னேக்கும்' எனவும், யாவுந் தன் னடிப் படுத்து நடத்தும் அரசச் செல்வம் முற்பிறப்பிற் செய்த அறப்பயன் என்பார் 'புண்ணியத்தின் பாலது' எனவும், அப்பயனைச் செல்வக் களிப்பால் மறக்கின் அச்செல்வம் பயன் படாது என்பார் 'என்னும்' எனவுங் கூறினர்." —தி.சு.செ.

"வெற்றியைத் தருவதான ஆயுதம் வீரன்கையில் இருந் தால் பயன்படுவதன்றி அலியின் கையிலிருந்தால் பயன்படாத வாறு போல் அரசச் செல்வமானது நல்வினையின் பயனாகக் கிடைப்பதொன்றாயினும், உயிர்களை அருளுடனே பாதுகாக் கின்ற அரசர்களிடத்துப் பயன்படுமேயன்றி மற்றையர் வசத் திலிருந்தால் யாதொருபயனும் உண்டாவதில்லை ... ... ... ... அரசச் செல்வம் பெற்றதற்கழகு அரசாட்சியிடைபட்டவர்களை அருளுடனே ஆதரிப்பதாமென்க" —பழையவுரை.

**கண்ணிற் சொலிச் செவியினேக்கும் இறைமாட்சி :**

**கண்ணிற் சொலி**—"தன்கீழ் வேலை செய்வோரையும் குடி மக்களையும் 'அடங்கி யிருங்கள்' என்று வாயாற் சொல்லாமல் தனக்குள்ள அக்கருத்தை அவர்கள் தன் பார்வையினுலேயே அறிந்துகொண்டு அடங்கிக் கிடக்குமாறு பார்த்தலைக் 'கண் ணிற்சொலி' என்றார். வாயின் வேலையைக் கண் செய்தலால் கண்ணுக்குச் சொல்லுந் தொழிலை யேற்றினர்." —இள.

"கண்ணிற் சொல்லுதல் - குறிப்பால் அறிபவர்க்குக் காரியங்களைக் கண்ணுற் குறிப்பித்தல்." —உ. வே. சா.

**செவியினேக்கும்**—"தன்னரசு முழுவதூஉம் நடப்பனவைகளை மந்திரி முதலியோராய்ந்து சொல்லத் தானிருந்துழியிருந்து செவி வழியாக நிச்சயித்தலாற் 'செவியினேக்கும்' என்றார்." —சி. வை. தா.

செவியின் நோக்குதல் - நாட்டில் அங்கங்கே நடப்பவற்றை ஒற்றர் மூலமாகக் கேட்டு அறிந்து கொள்ளுதல். "செவியிற் கண்டு கண்ணிற்கூறி, இருநிலம் புரக்கு மொருபெரு வேந்தன்" (**சிதம்பரமும்மணிக்கோவை**) என்பர் பின்னும்." —உ.வே.சா.

**இறைமாட்சி**—"கண்ணிற் சொலிச் செவியா னேக்குவ தாகிய திறமை எல்லாராலும் இயல்வதன்றாதலால் அதனை 'மாட்சி' யெனக் கூறினர். அரசாட்சி செய்ய வேண்டு வோர் இவ்வாறு செய்யவேண்டுமாதலால் இங்ஙனம் செய்யும் ஆட்சித் திறமையில்லாதவர்கள் அரசராய்ப் பிறந்து விடுவத னல் மட்டும் ஏதும் பயனில்லை என்பதாம்." —இள.

"மாட்சி - பெருமை; அது தருதற்குக் காரணமாகிய செல்வத்தின் மேல் நிற்றலிற் காரியவாகு பெயர்." —தி.சு.செ.

"இறைமாட்சி - அரசுரிமையாகிய மேம்பாடு."
—உ. வே. சா.

**புண்ணியத்தின் பாலதேயாயினும்:**

• **புண்ணியத்தின்பாலதே**—"பாலென்பது, இருவினைப் பயன செய்தவனையே சென்றடைதற் கேதுவாகிய நியதி; இஃது ஊழெனவும் படும். இதற்குப் 'புண்ணியத்தின்' என அடை கொடுத்தமையால் ஆகூழெனப் பொருள் கூறினும். இதற்குப் போகூழென்பது மறுதலைச் சொல்." —வி. கோ. சூ.

"முற்பிறப்பிற் செய்த அறத்தின் பயனாகக் கிடைத்த தாயினும்; "பாறரவந்த பழவிறற் றாயம்" (**புறநானூறு** 75)."
—உ. வே. சா.

புண்ணிய பாவங்கள் ஆகூழ் போகூழ் எனவே பெரும் பாலும் பண்டைத்தமிழ் நூற்களிற் பயின்றுவந்துள்ளன. அறத்துறைத் தலைநூலாய திருக்குறளிற் பாவம் என்ற சொல் ஒரேவொரு முறை பயின்றுவந்துள்ளமையும், புண்ணியம் என்ற சொல் அவ்வொரு முறை தானும் பயின்றுவாராமையும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

**தண்ணளியான் மன்பதை யோம்பாதார்க் கென்னும்:**

"தண்ணளியான் மன்பதையோம்புதலாவது, இன்சொற் கூறித் தளர்ந்துழி வேண்டுவன கொடுத்துத் தன்னாலும், தன் பரிவாரத்தாலும், பகைவர் துட்டர் முதலியோராலும், கொடிய விலங்குகளாலும் பிறவற்றாலும் குடிமக்கள் வருந்தாத வண்ணம் பாதுகாத்தல்." —அ. கு.

" அளி - தொடர்பு பற்றாதே யாவர்மாட்டும் ஒப்ப நிகழ்வதோர் கருணை." —வி. கோ. சூ.

**மன்பதை**—மக்கட் டொகுதியை யுணர்த்துங் குழூஉப் பெயர். " —வி. கோ. சூ.

"மன்பதை - மக்கட் டொகுதி. பிறவுயிர்களையும் காத்தலுண்டாயினும் சிறப்புப்பற்றி மக்களை எடுத்துக் கூறினார்." —உ. வே. சா.

" மன்பதை - மக்கட் பரப்பு; இது ஒருமையில்லாத நித்திய பன்மைச்சொல். மக்கள், மாந்தர், பல, சில என்பனவும் இது போல்வன. " —எ. எஸ். ஜெ.

" குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச், சுற்றமாச் சுற்று முலகு " என்று நாயனார் ஓதுதலின் 'இறைமாட்சி தண்ணளியான் மன்பதை யோம்பாதார்க் கென்னாம்?' என்றார். " —வி. கோ. சூ.

இது " மன்பது " என்றே பரிபாடலில் வழங்குகிறது. மாப் பெருந்தொகையினராய் என்றென்றும் மாநிலத்தில் நிறைந்திருப்பது என்பதை இச்சொல் குறிக்கும்போலும்!

**வயப்படை மற்றென்பயக்கு மாணல்லவர்க்கு:**

**வயப்படை**—" செங்கோல், கொடுங்கோல், வீரக்கழல், சினவேல் என்பவற்றுட்போல ஒரு பொருட் டன்மையை மற்றொரு பொருண்மேல்வைத்துக் கூறுவதோர் மரபு வழுவமைதியா மென்க.

" வில், வாள், வேல் முதலிய போர்க் கருவிகள் " என்று உரை கூறுவாருமுளர். இஃது சிறந்த உரையன்று. இச்செய்யுளின் நான்காமடிக்குரிய குறிப்பு நோக்கியும், " வாள் வலந்தர " என்றும் " வலம்படு வாய்வாள் " என்றும் புறநானூற்றிற் காணப்படும் தொடர்கள் கொண்டும் 'வயப்படை' என்பதற்கு வெற்றியைத் தரவல்ல வாட்படை என்றே பொருள்கோடல் சிறப்புடைத்தாம்,

**ஆணல்லவர்** என்றமையால் பேடிகளும், பெண்களும் என உரைக்கப்பட்டது.

"பேடியர் கைப்படை யாதும் பயன்படாமைபற்றி 'என் பயக்கும்' என்றார்; 'பகையகத்துப் பேடிகை யொள்வாள்' என்பது வள்ளுவர்." —அ. கு.

இஃது எடுத்துக்காட்டுவமையணி.

Though men possess the royal privilege of speaking with the eye, and seeing with the ear, as the fruit of *former* virtues, of what avail is it, unless they protect the earth with their clemency? What advantage will mighty weapons afford to those, who are wanting in manly courage? —H. S.

Though princes enjoy the sovereign prerogative of speaking with the eye and seeing with the ear as the fruit of their former acts, of what use can these be if they do not protect their subjects with tender mercy? Of what avail are mighty weapons of war to a person devoid of manliness? —C. M.

Though princes speak (command) with the eye and see with their ear (spies) it is a prerogative gained by virute in a former birth; of what use is it unless they protect their subject with mercy? What can mighty weapons avail those who lack manly courage? —T.B.K.

Although the possession of sovereign power which speaks with the eye with the ear is a gift of fortune of what good is it to rulers, not protecting their subjects with warm cardiality? What effect will a mighty weapon produce when put into the hands of the unmanly? —K. S.

---

## 29. இறைகோடல்

குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்றா
மடிகொன்று பால்கொள லு மாண்பே — குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல.

1. குடி - குடிமக்களை, கொன்று - வருத்தி, இறை - வரிப் பணத்தை, கொள்ளும் - வாங்கிக் கொள்ளும், கோமகற்கு - அரச னொருவனுக்கு, கற்றா - கன்றையுடைய கறவைப் பசுவின், மடி - பால்மடியை, கொன்று - அரிந்து, பால் - (அதன்கணுள்ள) பாலை, கொளலும் - (அடியோடு) பெறலாம் என்று கருதுதலும், மாண்பே - (குற்றமற்ற) நற்செய்கையாகவே தோற்றக்கூடும்; (எனினும்) குடி யோம்பி - தம் குடிமக்களைப் பாதுகாத்து, கொள்ளுமா(று) - (வரிப் பணத்தைக்) கொள்ளவேண்டிய வகையில், கொள்வோர்க்கு - (அளவறிந்து) வாங்கிக்கொள்ளும் (தண்ணளி மிக்க செங்கோல்) மன்னரிடத் திலேயே, காண்டுமே - காண்போம், மாநிதியம் - பெருமை சான்ற பொருட்குவை, வெள்ளத்தின் மேலும் - வெள்ளம் என்னும் பேரெண் ணிற்கும் மேற்பட்டு, பல - பல(வாகப் பெருகியிருப்பதை).

2. குடிகொன்று இறைகொள்ளும் கோமகற்குக் கற்றா மடிகொன்று பால்கொளலு மாண்பே, குடியோம்பிக் கொள் ளுமா கொள்வோர்க்கே வெள்ளத்தின் மேலும் பல மாநிதியம் காண்டும்.

3. **தண்ணளியான் மன்பதையோம்பி அளவறிந் திறை கொள்ளா மன்னரிடம் பொருள் சேராது.**

4. "குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு." —குறள்.

"குடிதளர் வுற்றகாலைக் கொள்பொரு ளாறி லொன்றும்
விடுவது செய்துதங்கள் விழுக்குறை முறைசொல் வார்க்குத்
தடையறக் காட்சி நல்கித் தண்ணிய வின்சொற் காட்டி
வடுவற விடித்துச் சொல்வார் வன்மொழி பொறுத்தல்
[வேண்டும்."
—பிள்ளையார் புராணம்.

பொருத்த மழியாத பூந்தண்டார் மன்னர்
அருத்த அடிநிழ லாரை—வருத்தாது
கொண்டாரும் போலாதே கோட லதுவன்றே
வண்டுதா துண்டு விடல். —பழமொழி.

5. "முதலிரடிகளானும் குடிகொன் றிறைகோடலும், கற்றுமடிகொன்று பால்கொளலும் ஒன்றற்கொன்று நேரென்று கூறிக் குடிகொன் றிறைகொளல் மாண்புடைத் தன்றுமாறு உவமையளவாற் சாதித்தார்." —வி. கோ. சூ.

"வருத்தி வரிவாங்கும் அரசனுக்கு வருத்திப் பால்கறக்கும் செய்கையும் நல்லதாய்த் தோன்றும் என்று கூறினர், எத்துணைத் தீய்செய்கையைச் செய்தற்கும் அவன் நெஞ்சம் ஒருப்படுமென்று அவன் கொடுமையை உணர்த்துதற்கு." —இள.

மேல் 28-ம் செய்யுளில் "தண்ணளியால் மன்பதை யோம்பாதார்க்கு இறைமாட்சி என்னும்" என்று கூறியதற்கு எடுத்துக்காட்டாக இச் செய்யுள் அதனைத் தொடர்ந்தமைக்கப்பட்டுள்ளது. அறம் பல புரிவதும் பரிசிலர்க்கீவதும் நலிந்தோர்ப் புரப்பதும் மன்னனொருவனின் தண்ணளியை ஒருவாறு தெரிக்குமாயினும் குடிகள் தளர்வுற்றகாலை வரிகளை ஓரளவுக்குத் தள்ளுதலும், ஒரோவொருகால் கொள்ளாது விடுதலும் குடிமக்கள் யாவர்மாட்டும் அவன் காட்டும் தண்ணளியை நன்கு விளக்கிக்காட்டுதல் வெளிப்படை. "அடிநிழலாரை வருத்தாது, கொண்டாரும்போலாது கோடல்" என்பது பழமொழி. இஃதன்றி, வரி கொள்ளுங்கால் கடுமையாக வருத்தியும், அளவுக்கதிகமாகவும் கொண்டு அப் பொருளைக் கொண்டு கொடைமடம் பூண்டு குடிமக்களைக் காத்தல் செய்தலும் "வேந்தன் றண்ணளி" யாகாதென்பதும்,

"அடைய வடைந்தாரை அல்லவை செய்து
கொடைவேந்தன் கோல்கொடிய னாகிக் குடிகண்மேல்
கூட்டிறப்பக் கொண்டு தலையளிப்பின் அஃதன்றே
ஊட்டறுத்து வாயி விடல்."

என்னும் பழமொழிச் செய்யுளால் இனிது விளங்குதல் காண்க.

குடிகொன் றிறைகொள்ளும் கோமகற்கு:

குடிகொன்று இறை கொள்ளும்—" வருத்தி வாங்குதலாவது ஆறி லொன்றுக் கதிகமாக வாங்குதலும் வாங்கவேண்டியவை களை நெருக்கி வாங்குதலும் பிறவுமாம். குடிகள் தளர்ந்துழி ஆறிலொன்றுதானும் ஆகாதென்பது சிலநூற்றுணிபு "—அ.கு.

"குடிகொன்று - குடிகளை வருத்தி; கொல்லல் - வருத்துதல்; 'கரும்புபோற் கொல்லப் பயன்படுங்கீழ்'—'குறள்'—உ. வே. சா.

"கொன்று - ஈண்டுக் கொலைச் சொல் துன்பமிகுதியை யுணர்த்திநின்றது. 'காவாக்காற் றன்னையே கொல்லுஞ் சினம்' என்னுந் திருக்குறளினும், 'வாய்வைத்துக் கொல்லச் சுரப்பதாங் கீழ்' என்னும் நாலடியாரினும், 'என்னை யடிக்கடி கொல்லாதே' என்னும் உலகவழக்கினும் இச்சொல் இப் பொருண்மையிற் பயின்று வருதல் காண்க. இறை - இறு - பகுதி, ஐ - செயப்படு பொருள் விகுதி. இறுக்கப் படுவது (வாங்கப்படுவது) என்பது பொருள்." —வி. கோ. சூ.

கற்று மடிகொன்று பால்கொளலு மாண்பே:

" கற்று - கன்று ஆ என்பன வலித்துக் கற்று வாயிற்று. " —இள.

மடிகொன்று பால் கொளல்—" மடியைக் கொல்லுதலாவது அதனைக் கசக்கி உயிரோடு தோலுரிப்பதேபோல அதன் முலைக் காம்புகளை நோவ நோவ மிக அழுத்தி நீட்டி இழுத்தல். பால் கொள்ல் என்னுங் குறிப்பினாலேயே அவ்வானுக்குக் கன் றிருப்பது பெறப்படுமாயினும், பாலருந்தக் கன்றொன்றிருக் கின்றதே என்பதையும் நோக்காமல் அதுசெய்வன் என்பதைக் குறிக்கக் 'கற்று' என்றார். " —இள.

" மடிகொன்று பால் கொளல் என்பது தாம் கொள்ளக் கருதிய பாலினைக் கொள்ளாமையை யுணர்த்தி நின்றது. " —வி. கோ. சூ.

மாண்பே—இது வஞ்சப் புகழ்ச்சி. என்னை? ஆன்முலை யறுத்தல் அறனில் செய்கையாகும் என்பது யாவருமொப்ப முடிந்ததோர் உண்மையாகலின். இதற்கேற்பவே "குற்றமற்ற" என்ற அடை உரையில் வருவித் துரைக்கப்பட்டது.

ஒருங்கே முழுப் பயனையும் பெற்றுவிட முயலும் ஒருவனை அவன் "மடியரிந்து பால் கொள்ள முயல்கின்றான்" எனப் பழித்தல் உலக வழக்கு. அதற்கேற்பக் கொன்று என்பதற்கு அரிந்து என்றே பொருள் கொள்ளப்பட்டது. பேரவாக் கொண்டு அரிந்தானாயினும் அதனால் எண்ணிய எண்ணம் ஈடேறப்பெறாமலும், எப்பொழுதுங் கிடைக்கும் பாலும், குருதியுடன் கலந்துவிட்டமையால், பயன்படாமலும், பாலுக்குரிய கன்றும் பாலில்லாமலும் போயினமை காண்டல் ஒருதலையாகலின் "மாண்பே" என்பதற்கு நற்செய்கை போலத் தோற்றக் கூடும் என வருவித் துரைக்கப்பட்டது.

**குடியோம்பிக் கொள்ளுமா கொள்வோர்க்கு:**

**குடியோம்பி**—"தன்னையியான் மன்பதை யோம்பி" என்ற தொடர்க்கு மேல் 28-ஆம் செய்யுட்குறிப்பில் கொடுத்துள்ள குறிப்புக்களைக் காண்க.

**கொள்ளுமா கொள்வோர்க்கு:**

"அரசன் குடிகளிடம் வரிகொள்ளும் முறை, "காய் நெல்லறுத்து" **(புறநானூறு-184)** "வாய்ப்படுங் கேடு மின்றாம்" **(சீவக சிந்தாமணி-2907)** "கற்றவை களைந்து" **(திருவிளையாடற் புராணம்)** "மாநிரப்புறு" **(சேதுப் புராணம்)** என்னும் செய்யுட்களாலறியப்படும்." —உ. வே. சா.

"கொள்ளுமா கொள்ளலாவது, குடிகள் தளர்ந்த விடத்து இன்சொல் சொல்லுதல், வேண்டியன உதவல் முதலியன செய்து பின்பு அவரவர் தகுதிக்கேற்ப வரி வாங்குதல்"
—பழைய உரை.

"கொள்ளுமா கொள்ளலாவது இரத்தத்தினை அட்டையும், பாலினைக் கன்றும், தேனினை வண்டும் கவர்தல்போல வரிப்பொருள்களைச் சிறிது சிறிதாக வாங்க வேண்டுமென மநுதருமசாத்திரங் கூறியவாறே குடிகளிடரடையாமல் அருளோடு மன்போடும் கவர்தல். "குடிகளை யோம்பாது வரிவாங்குவோன் நரகமடைவான் என்பது" **பிரமாண்ட புராணம்.**" —அ. கு.

"கொள்வோற்கு" என்று பாடங் கொண்டார் உ. வே. சாமிநாதையர்.

'காண்டுமே' என்ற சொல்லினிறுதியில் உள்ள ஏகாரத்தைக் "கொள்வோர்க்கு" என்பதுடன் கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது.

**காண்டுமே மாநிதியம் வெள்ளத்தின் மேலும் பல:**

**காண்டும்**—"காண், பகுதி, டும் - எதிர்காலங் காட்டுந் தன்மைப் பன்மை விகுதி. இவ்வாறே கும், தும், றும் எதிர் காலங் காட்டுமெனல் சேனாவரையர் மதமாதல் காண்க. இவ் விகுதி இறந்த காலங் காட்டுவது "கண்டும்" என வருமிடத்தேயாம். அற்றேல் ஆசிரியர் பவணந்தியார் தமது நன்னூல் பதவியலில் "நவ்வொடுகரவும்மை" என்ற சூத்திரத்து, 'டவ்வொடுகழிவும்' என்பதனோடு நீவிர் எதிர்காலங் காட்டுமெனக் கூறியது மலைவாம் பிறவெனின், அற்றன்று 'கழிவும்' என்பதன்கணுள்ள உம்மை எதிர்வேயன்றிக் கழிவும் என எச்சவும்மையாகப் பொருள் கூறின் மலைவு யாண்டையதென மறுக்க. அன்றியும் ஈண்டைக் "காண்டும்" என்பதற்குக் கண்டோம் எனப் பொருளுரைத்தல் சாலாமையுணர்க. இவ்வாறே யிச் சொல் "இருங்கிளைச் சிறாஅர் காண்டும்" எனப் புறநானூறு 173-வது பாட்டு 9-ஆம் வரியிற் பயின்று வருமாறு காண்க."
—வி. கோ. சூ.

"காண்டும் - ஈண்டு முக்காலத்தினையும் உணர்த்திற்றென்க." —சி. வை. தா.

**மாநிதியம்**—"மாநிதியம் பெரும் பணமன்று; பெருமையுடைய பணம். என்னை? மிகுதியைக் குறித்தற்கு 'வெள்ளத்தின் மேலும் பல' வென்று பின் வருதலானும், வருத்தாது வாங்குவான் பணம் மிகுதியாதலோடு பெருமையுமுடையதென்பதை இங்குக் குறித்திடல் இன்றியமையாதாதலாலும் என்க. கொள்ளுமா கொள்வார் பணம் பெருமையுடையதாம் எனவே, அங்ஙனங் கொள்ளாதார் பணம் குறைந்து போனதோடு பெருமையும் இலதாம் என்று கொள்க." —இள.

வெள்ளம்—" வெள்ளத் தொகை, சலத்திரள் இரண்டிற்கு மாம். " —சி. வை. தா.

To a prince, who destroys his subjects to obtain his revenue, to cut open the udder of a new milched cow, to obtain her milk, would be comparatively creditable: but to those who protect their subjects before receiving their own dues, we have seen wealth overflowing like a flood. —H. S.

In a prince who exacts tribute from his subjects by oppression to obtain milk from a new milched cow by cutting its udder is comparatively good. Have we not seen the wealth of those kings increase above computation who preserve their subjects, and obtain their dues in Justice. —C. M.

To a prince who extorts tributes from his subjects cutting a cow's udder to get milk would be comparatively virtuous; but to those that protect their subjects before drawing their own revenues, wealth will come in an overflowing flood. —T. B. K.

The prince who rack-rents his people may as well cut off the udder of the mother cow for milk. It is for the rulers who raise their revenue in due manner, with a sympathetic heart, that vest riches well many times higher then freshes in the stream. —K. S.

---

## 30. கொடுங்கோன்மை

*இன்று கொளற்பால நாளைக் கொளப்பொறுன்*
*நின்று குறையிரப்ப நேர்படான்—சென்றொருவன்*
*ஆவன கூறி னெயிறலைப்பா னறலைக்கும்*
*வேடலன் வேந்து மலன்.*

1. இன்று - குறித்த நாளில், கொளற்பால - பெற்றுக் கொள்ளற் பாலனவாகிய வரிப் பொருளை, நாளை - (அன்றொருநாள் தள்ளி) மறு நாளில், கொள - பெற்றுக் கொள்ளவும், பொறுன் - பொறுக்க மாட்டான்; நின்று - (வரிப்பணஞ் செலுத்த வேண்டிய குடிகள் தன்முன் வந்து) நின்று, குறையிரப்ப - தத்தங் குறைபாடுகளை யெடுத்துக் கூறி வேண்டவும், நேர்படான் - உடன்படான்; சென்று - (அவன் முன் னர்ப்) போந்து, ஒருவன் - (அவனுக்கு வேண்டிய அமைச்சர் முதலா யினோருள் அறிவுடையான் எவனேனும்) ஒருவன், ஆவன - (தனக்கு நன்மை) பயப்பனவற்றை, கூறின் - எடுத்துக் கூற நேர்ந்தாலும், எயிறு - பற்களை, அலைப்பான் - கடித்து உறுக்குவான்; [இவ் வியல் புடைய வேந்தனொருவன்] ஆறலைக்கும் - வழிபறிக்கும், வேடு - வேட (னேயெனி)ன், அலன் - அவனுமல்லன், வேந்து - அரச(னேயெனி)ன், அலன் - அவனுமல்லன்.

2. இன்று கொளற்பால நாளைக் கொளப்பொறுன், நின்று குறையிரப்ப நேர்படான், ஒருவன் சென்று ஆவனகூறின் எயிறலைப்பான், ஆறலைக்கும் வேடலன் வேந்துமலன்.

3. பொருள் வெஃகித் தன்னளியனல்லாதவனும், செவ்வி யெளியனுமல்லாதவனுமான வேந்தன் வேடனினு மிழிந்தவ னாவான்.

4. " காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேன்
மீக்கூறு மன்ன னிலம் " —குறள்.

" முறைமைமுட் டாதுசெய்து முழுநிலங் காப்பினத்த
விறைவனைச் செங்கோல் காக்கு மெளியசெவ் வியமாகான் னு
குறைவளர் குற்ற மோரான் குணத்தொடு முறைசெய்யானை
நிறைதரு பாவந் தேய்க்கு நெடும்பகை யின்று மேலும். "
—பிள்ளையார் புராணம்.

5. "இவ்விரண்டு (இதுவும், இதற்கடுத்த 31-ஆம்) பாட்டுக்களாலும் கொடுங்கோலரசன் இயல்பு கூறப்படும். ஆறலைக்கும் வேடனுக்குரிய இயல்புடையானாயினும் குடிப் பிறப்பு முதலியவற்றால் வேடனாகக் கூறப்பெறான். இங்ஙனம் கூறினும் ஆறலை கள்வரோடு ஒப்பானென்பதே ஆசிரியர் கருத்து." —உ. வே. சா.

"நாளைகொளப் பொருளாயினும், அங்ஙனம் ஒருநாள் பொறுக்குமாறு குடிமக்கள் தமக்குள்ள குறைகளைச் சொல்லிக் கொள்ளலாமென்றாலும் அதற்கும் நேர்படான். ஏதோ நல்வினையால் நேர்பட்டானாயினும் அவர்கள் தமக்கு ஆவன கூறும்பொழுது அதனை ஏற்றுக்கொள்ளாமல் எயிறலைப்பான்; இவன் எதற்கும் பயனில்லை; என்றிவ்வாறு பொருட் டொடர்பு செய்க." —இள

"சாதி தருமமாகிய வழிப்பறித்தலையும், வாய்ப்புழி, ஒருகால் நேர்நின்று செய்யும் வேடனினும் அரச வேடத்துள்ளே மறைந்து நின்று பலமுறை தன் கீழ் வாழுங் குடிகளை வருத்திப் பறிக்கும் இவன் கொடியனாதல்பற்றி 'வேடலன்' என்றும், காட்சிக் கெளியனாதன் முதலிய இன்மைபற்றி 'வேந்துமலன்' என்றுங் கூறினர்." —அ. கு

"காட்டின்கட் பதுங்கியிருந்து வழிப்போக்கரைக் கண்டுழி ஒய்யெனவெழீஇ அவர்மேற் சென்று அவர்தம் பொருள்களைப் பறிக்குமாறு பறியாமையால், 'வேடலன்' என்றும், நாட்டின்கணிருந்தும் குடிகளின் வேண்டுகோட்கிரங்கியும் அவர்கட்குத் துன்பம் நேராதவண்ணம் தலைநின்று காவாமையான் 'வேந்துமலன்' என்றுங் கூறினர். இனி, ஆறலைக்கும் வேடன் தான் பறித்துக்கொள்ளத் தகும் பொருள்களைப் பறிக்கப்படுவார் "அவற்றை நாளை நினக்குக் கொடுப்பல்" எனினும் பொறான்; அவர்கள் அவனெதிரே நின்று "ஐய! இதுபொழுது நீ எம்மை யிடர்ப் படுத்தாது விடுத்தி; யாங்கள் மிகவு மேழையராயினேம்" என்று மிகவு மிரங்கி வேண்டிக் கொள்ளினும் அதற்குச் சிறிது மிரங்கான்; அன்றியும் அவ்வேடனுக்கு வேண்டிய மக்களுளொருவன் அவ் வழிப்போக்கர்தம் பரிதாப நிலையைக்கண்டு சிறிது நியாயஞ் சொல்லப்புகினும் அதனையுட்கொள்ளானாய்ப் பல்லைக் கடித்துப் பயமுறுத்துவான் என வேடுவன்மேலும் ஏற்றிப் பொருள்காண்க." —வி.கோ.சூ.

**இன்று கொளற்பால நாளைக் கொளப்பொருள்:**

இன்று—"இன்று நாளை என்பன (அரசன் தனக்கு வரிப் பொருள் செலுத்தற் பொருட்டுக்) குறித்த நாளையும் அதன் பின்வரு நாளையும் குறிக்கவந்தன." —ஏ. எஸ். ஜெ.

"இன்று, காலத்தை யுணர்த்துவதோ ரிடைச் சொல் லென வுணர்க." —ஊ. பு. செ.

கொளப்பொருள்—பொருள், நேர்படான் என்னும் முற்றுக் களை எச்சமாக்கி, "பொருமலும்" "இணங்காமலும்" "எயிறு அலைப்பான்" என்று கூட்டிப் பொருளுரைப்பாருமுளர்.

**நின்று குறையிரப்ப நேர்படான்:**

நின்று குறையிரப்ப—"நின்று குறையிரப்ப என்றதற்கு எதிரே நின்று குறையிரத்தல், பொறுமையாய்க் குறையிரத் தல் என்னும் இரண்டுங் கொள்க. குறையிரப்ப ஒரு சொன்னீரது; இரப்பாரைப்போல நின்று தங்குறை கூறுந் தொழிலுணர்த்திற்று. இதனை இரண்டாகப் பிரித்து இடர்ப் படுவாருமுளர்." —இள.

நேர்படான்—காட்சிக் கெளியனாய் எதிர்ப்பட்டுக் கேட்க ஒருப்படான் என்னும் பொருட்டு.

**சென்றொருவன் ஆவனகூறின் எயிறலைப்பான்:**

ஆவன கூறின்—"கொடுங்கோலரசன்பாற் சென்று அவற்கு வேண்டிய மந்திரி முதலாயினோரும் ஏதேனுங் கூறுதல் அருமை யென்பார், 'ஆவன கூறின்' என்றார். —வி. கோ. சூ.

எயிறலைப்பான்—எயிறலைத்தல் - பற்களை மெல்லுதல்; பற் கடித்தல்.

**ஆறலைக்கும் வேடலன் வேந்துமலன்:**

வேடலன் வேந்துமலன்—"வேடு, வேந்து என்பன சொல்லா லஃறிணையேனும் பொருளா லுயர்திணையாம். வேடும் அலன் எனற்பால எதிரது தழீஇய எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது." —வி. கோ. சூ.

:

"காட்டில் நின்று பறியாமையாலும், வெளிப்படையாய்ப் பறியாமையாலும் வேடனல்லன் என்றும், குடிகளிடத்தில் தண்ணளியில்லாமையாலும், முறையாகப் பாதுகாவாமை யாலும் வேந்தனல்லன் என்றுங் கூறினர்." —இள.

"வேந்தும் அலன் - (அரசவியல்பு இல்லாமையால்) அரசனுமல்லன். அரச இயல்பாவான: காண்போர்க்கு எளிய சமயத்தனும் கண்டால் முகமலர்ந்து இன்சொற் சொல்லு தலுமாம்." —தி. சு. செ.

இது வேற்றுமையணி.

"இது தனித் தமிழ்ச் செய்யுள்" —வி. கோ. சூ.

He, who will not wait till tomorrow, to receive that which becomes due to-day; who will not attend, when one stands to beg redress; and who will gnash his teeth with impatience when one may approach to offer wise advice, is neither a vedan who robs on the highway, nor a king. —H. S.

What is due to-day he will not wait to receive tomorrow. He will not listen to the grievances of the distressed who appeal to him. He will grind his teeth when wise counsels are offered to him. Such a person is neither a king nor a vedan who plunders in the highway. —C. M.

He who will not wait till the morrow to receive what is due to-day, who is inaccessible to those who seek redress, who merely gnashes his teeth with impatience at good advice is not a king; is not even a highway robber. —T. B. K.

The tyrant who does not wait till tomorrow for the revenue that is due to-day and does not grant any prayer but dashes the teeth of anyone rising to tender him practical advice is not only not a prince but worse than a highway robber. —K. S.

## 31. அரசச் செல்வ மயக்கம்

முடிப்ப முடித்துப்பின் பூசுவ பூசி
உடுப்ப வுடுத்துண்ப வுண்ணு—இடித்திடித்துக்
கட்டுரை கூறிற் செவிக்கொளா கண்விழியா
நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம்.

1. முடிப்ப - முடித்தற்குரிய மலர் முதலியவற்றை, முடித்து - (தலையில்) முடித்துக்கொண்டும், பின் - அதன்பின், பூசுவ - பூசுதற்குரிய கலவைச் சாந்து முதலியவற்றை, பூசி - (மெய்யிற்) பூசிக்கொண்டும், உடுப்ப - உடுத்தற்குரிய ஆடை முதலியவற்றை, உடுத்து - அணிந்துகொண்டும், உண்ப - உண்ணுதற்குரிய உணவு வகைகளை, உண்ணு - (வயிறார) உண்டும், (உயிர்த்தன்மை காட்டி), இடித்திடித்து - (அமைச்சர் முதலாயினோர்) பன்முறை நெருங்கிக் கழறிக் கழறி, கட்டுரை - (உறுதி பயக்கும்) அறிவுரைகளை, கூறின் - கூறினால், செவிக்கொளா - காதுகள் (இருந்தும்) ஏற்றுக்கொள்ள மாட்டாமலும், கண்விழியா - கண்கள் (இருந்தும் எதிர்நிற்போரைத்) திறந்து ஏறெடுத்துப் பாராமலும், (இருக்கின்ற இயல்பினையுடைய அரசரென்னும் உயிர்கள்), நெடு உயிர்ப்போடு - பெருமூச்சோடு, உற்ற - கூடிய, பிணம் - பிணங்களேயாம்.

2. (கொண்டுகூட்டு வேண்டிற்றிலது.)

3. **தந்நலமே குறியாகக்கொண்டு குடிநலம் ஓம்பாத அரசர்கள் நடைப்பிணங்களாவர்.**

4. "இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்" —குறள்.

"அரிசனம் பூசிமாலை யணிந்து பொன்னுடை சாத்திப்
பரிசனம் பின்புசெல்லப் பாரகர் பரிக்கக் கொட்ட
வரிசின்ன மூதத் தொங்கல் வந்திட வுணர்வுமாண்டு
பெரியவர் பேச்சுமின்றிக் கிடத்தலாற் பிணத்தோ டொப்பர்"
—சிவஞானசித்தியார்.

5. "முடித்தல், பூசுதல், உண்ணல் ஆகிய உயிருள் பொருளின் தொழிற் பண்பும், செவிக்கொளாமை கண்விழி

யாமையாகிய உயிரில் பொருளின் தொழிற் பண்பும் உளரா யிருத்தலால், அவ்வரசர்களை, 'நெட்டுயிர்ப்போடுற்ற பிணம்' என்றார்."
—வி. கோ. சூ.

"முடிப்பதும் பூசுவதும் உடுப்பதுமான செயல்களெல்லாம் உயிரிருப்பதுபோற் காட்டுகின்றன. ஆனால் கேளாமையும் பாராமையும் உயிரில்லாததுபோற் காட்டுகின்றன. உயிருக்கு முதன்மையான தன்மை அறிவேயாமாதலின் அதன் செய்கைகளான கேட்பதும் பார்ப்பதும் இல்லாத அரசர்களைப் 'பிணம்' என்றே கூறல்வேண்டினார். ஆனால், அவ் விறந்த பிணத்தினின்றுஞ் சிறிது வேற்றுமை காட்டுதற் பொருட்டு 'நெட்டுயிர்ப்போ டுற்றபிண' மென்றார்." —இள.

**முடிப்ப முடித்து:**

"முடிப்ப—முடியிலணியப் படுவன." —அ. கு.

**உண்ப வுண்ணு:**

**உண்ணு**—'செய்யா' என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம்.

**இடித்திடித்துக் கட்டுரை கூறில் செவிக்கொளா கண்விழியா:**

**இடித்திடித்து**—இடித்தலாவது - கழறல். கழறல் - நயந்துங் கடிந்தும் உறுதி பயப்பனவற்றை விடாது எடுத்துக் கூறுதல்.

"நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு"

என்னுங் குறளையும் நோக்குக. இடித்திடித்து - பொருணிலை யடுக்கு.

**கட்டுரை**—"பொருள் பொதிந்த சொல்; உறுதியையுடைய சொல்லுமாம் என்பது ஆசிரியர் அடியார்க்குநல்லாருரை."
—இள.

**கூறின்**—"கூறுதலே அரிதென்பார், 'கூறின்' என்றார்."
—வி. கோ. சூ.

"கூறின் என்ற விடத்து இழிவு சிறப்பும்மை தொக்கு நின்றது. —இள.

செவிக்கொளாமை—"முறை வேண்டினார்க்குங் குறை வேண்டினார்க்கும் அவ்வவர் வேண்டியாங்கு, வேண்டுகோளைக் காதினிற் பன்முறை கேட்டும் நலம் புரியாமை." —வி. கோ. சூ.

கண்விழியாமை—"காட்சிக்கரியனாய்ப் பெருந்துயி லுடையனா யிருத்தலே யன்றித் தம்மெதிர் வந்து நிற்போரையும் ஏறிட்டுப் பார்த்து அவர் வேண்டியன புரியாமை." —வி. கோ. சூ.

நெட்டுயிர்ப்போடுற்ற பிணம்:

நெட்டுயிர்ப்பு—நெடுமை + உயிர்ப்பு - ஈறுபோய்த் தன்னொற் றிரட்டியது.

பிணம்—"பெருஞ் செல்வம், பெருந் தலைமை, பெருங் காமம் முதலியவைகளிலே பெரிதும் மயங்கிச் செய்வனவுந் தவிர்வனவு மறியாமை பற்றிப்பிணமென்றார்." —அ. கு.

"'நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம்' என்றதனால், மற்றப் பிணங்களுக்கும் இத்தகைய கொடுங்கோலரசர்களுக்கும் உள்ள வேறுபாடு கூறப்பட்டது." —உ. வே. சா.

இஃது இல்பொரு ளுவமவணி.

இது தனித்தமிழ்ச் செய்யுள். —வி. கோ. சூ.

A king, who, after crowning his head with chaplets, rubbing his body with unguents, clothing himself in rich robes, and feasting on rich viands, will not lend his ear, nor open his eyes, though addressed with reiterated earnestness, is but a corpse endued with breath. —H. S.

Persons who decorated with sweet smelling garlands of flowers and sandal waters; arrayed in rich vestments, and partaking excellent food, hear not the vigorous and reiterated counsels of the wise are not better than corpses endowed with breath. —C. M.

After crowning his head with garlands, anointing his body with unguents and clothing himself in rich robes and feasting on costly viands, a king who lends not his ears nor open his eyes to repeated cries of distress is but a corpse endowed with breath. —T. B. K.

He is none but a breathing corpse, who decks his hair with fair flowers, rubs his person with sweet scents, clothes himself with nice garments and partakes of rich dainties; but all the same turns a deaf ear to the thunders of repeated remonstrances and hardly opens his eye. —K. S.

---

## 32. செங்கோன்மை

*ஒற்றிற் றெரியா சிறைப்புறத் தோர்துமெனப்*
*பொற்றோ டுணையாத் தெரிதந்துங்—குற்றம்*
*அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று*
*முறையிடினுங் கேளாமை யன்று.*

1. ஒற்றின் - வேவுகாரரால், தெரியா - கண்டறிதற்கரிய (நங் குடிமக்களின் குற்றங் குறைகளின் உண்மைகளை), சிறைப்புறத்து மறைவிடங்களில் இருந்து, ஓர்தும் - (நாமே) அறிந்து தெளிவோம், என - என்று (துணிந்து), பொன் - அழகிய, தோள் - தம் தோள்களே, துணையா - துணையாகக் (கருதிச்சென்று), தெரிதந்தும் - (ஒருவாறு) கண்டறிந்த பின்னரும், குற்றம் - (ஒருவரிடத்துள்ள) குற்றங் குறைகளின் உண்மைகளை, அறிவரிது - துணிவுபெற அறிந்து முடிவு செய்தல் அருமை யுடைத்தென்று, அஞ்சுவதே - குற்றங் காண்டலுக்குப் பின்வாங்குவதே, செங்கோன்மை - முறைமையான அரசாட்சியாம்; (அவ்வாறன்றிச்) சென்று - குடிமக்களே நேரில் வந்து, முறையிடினும் - தங் குறைகளைச் சொல்லி யிரந்தாலும், கேளாமை - காது கொடாமை, அன்று - முறைமையன்றாம்.

2. (கொண்டுகூட்டு வேண்டிற்றிலது).

3. குடிகள் தாமே வந்து முறையிட்டுக்கொள்ளாத முன்பே அவர்கள் மாட்டுள்ள குற்றங் குறைகளை ஆராய்ந்து முறை செய்தலே செங்கோன்மையாம்.

4. "ஒற்றினு னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில்." —குறள்.

"குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்." —குறள்.

"எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்." —குறள்.

"ஒற்றினு லொற்றிப் பொருடெரியு மாண்பினிதே
முற்றுன் றெரிந்து முறைசெய்தன் முன்னினிதே
பற்றிலனுய்ப் பல்லுயிர்க்கும் பாத்துற்றுப் பாங்கறிதல்
வெற்றிவேல் வேந்தற் கினிது." —இனியவைநாற்பது.

5. "அரசர் தம் பிரஜைகள் குற்றத்தைத் தாம் எவ்வளவு வருத்தப்பட்டு அறியினும், அப்படி அறியும் தம்மறிவினுங் குற்ற மிருக்கு மென்றெண்ணுவதே அவர்க்குச் செங் கோன்மை." —ரி. மு.

"இச்செய்யுள், அரசனுவான் குடிமக்களின் நலங்களை அவர்களிருக்குமிடத்தில் வேவுகாரர்களை அனுப்பிவரச்செய்து அவர்கள் வாயிலாகத் தெரிந்துகொள்வது மன்றி, அவர்களாலும் தெரிந்துகொள்ளப்படாத உண்மைகளைத் தன் தோளே துணையாகத் தானே நேரிற் சென்று அறிவதும், அங்ஙனம் அறிந்த விடத்தும் அவர்பாலுள்ள குற்றங்களை அறியா தொழிவதுமே நல்ல அரசாட்சி முறையா மன்றி, அவ்வாறு தன் ஒற்றர்களாதல் அல்லது தானுதல் போய் அவர் நலங்களை அறியா தொழிந்தாலும், அக் குடிமக்களாக வாவது தன்னிடம் வந்து முறையிட்டுக் குறையிரக்கும்போது கூட அதனைக் கேளாமலிருப்பது முறையன்றும் என்பது துணர்த்திற்று." —இள.

**ஒற்றிற் றெரியா:**

**ஒற்றின்**—"ஒற்று - சொல்லா லஃறிணையும் பொருளா லுயர்திணையுமாம்; அன்றி, முதனிலைத் தொழிலாகுபெய ரெனலு மொன்று. ஒற்றர்: அரசனுக்குத் தன்னாடு செலுத் துங்காலும் பிறர் நாடு கொள்ளுங்காலும் இன்றியமையாத வராய்ப் பகை நொதுமல் நட்பென்னும் மூன்று திறத்தார் மாட்டும் வேறுபாடு தோன்றும லொன்றியிருந்து நிகழ்ந்தன வற்றைக் கரந்துறைந்து பிறர் தம்மை யுணராவண்ணம் அறிய வல்லோர்."
—வி. கோ. சூ.

**தெரியா**—இரண்டனுருபு தொக்கு ஈறுகெட்ட எதிர் மறை வினையாலணையும் பெயர். இதற்கு 'உண்மைகள்' என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது.

**சிறைப்புறத் தோர்துமெனா:**

**சிறைப்புறத்து**—"சிறை என்பதற்கு மதிலென உரைப்பி னும் பொருந்தும். அது வழக்குக்கு வருவோருடைய வீட்டு மதில்."
—கோ. இ.

**ஓர்தும்**—தனித் தன்மைப் பன்மை. மேற் பதினான்காஞ் செய்யுளுரையில் "கற்றனம்" என்பதற்குத் தந்துள்ள குறிப்பு நோக்குக.

**பொற்றோள் துணையாத் தெரிதந்தும்:**

**பொற்றோள்**—"பொன்: இதனைக் கருவியாகுபெயராய்க் கொண்டு பொன்னாலாகிய ஆபரணங்களை யணிந்தவென் றுரைப்பினும் அமையும்."
—வி. கோ. சூ.

"பரிசநம் இல்லாமல் தாமே போதலால் தமது தோளே துணை" என்றார்.
—தி. சு. செ.

"போமிடத்துத் தனக்கு ஏதேனுந் திங்குவரினும் போரிட்டுக் 'கண்டு வருவன் என்பதற்குப் "பொற்றோள் துணையா" என்றார்."
—இள.

**தெரிதந்தும்**—"இறந்தகால வினையெச்சம்; தெரி என்னும் முதனிலையோடு தர என்னும் முதனிலை புணர்ந்து இரண்டும் ஒரு சொல்லின் தன்மைப்பட்டு நின்ற 'தெரிதா' பகுதி, த் சந்தி, த் இறந்தகால இடை நிலை, உ வினையெச்ச விகுதி. தா என்னும் முன்னிலை செய்தந்து, அயர்தந்து என வேறு முதனிலைகளோடும் வருதல் காண்க." —கோ. இ.

இதன்கண் உம்மை உயர்வுசிறப்பு.

**குற்றம் அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை:**

"**குற்றம்**— ஆவன: கடன்கோடல் - நிட்சேபம் முதலியவற்றால் நிகழ்வன." —தி. சு. செ.

குற்றம் - சாதி யொருமை.

**அறிவரிது**—அறிவு - தொழிற்பெயர்.

**அஞ்சுவதே**—"குற்றங்களை யறிந்த விடத்துத் துன்பஞ் செய்தல், பொருட்கோடல், கொல்லுதல் என்னும் மூவகை யொறுப்பும் அரசன் செய்யவேண்டுதலின் தாங் தெரிந்ததை மந்திரி முதலியோர்க்குக் கூறி யாலோசித்துச் செய்யவேண்டும் என்பார் பிரிநிலை 'ஏ' தந்து 'அறிவரிதென் றஞ்சுவதே' எனக் கூறினர்." —தி. சு. செ.

**செங்கோன்மை**—"செங்கோல் - செவ்விய கோல்; அது உவமிக்கப்படு முறைமேல் நிற்றலின் உவமை யாகுபெயர்." —தி. சு. செ.

"அடையடுத்த உவமையாகுபெயர்; இதனைப் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த வன்மொழித் தொகை யெனலுமாம்." —வி. கோ. சூ.

**முறையிடினுங் கேளாமை யன்று:**

**முறையிடினும்**—"அரசன் தானே விசாரணை செய்து அறிவதே நீதியாகப் பிறர் அறிவித்துழியுங் கேட்டறிந்து செயற்பாலன செய்யாமை பெரிதும் அநீதியே என்பது தோன்ற 'முறையிடினும்' என்றார்." —அ. கு

உம்மை உயர்வுசிறப்பு.

இது தனித்தமிழ்ச் செய்யுள்.

The duty of him who holds a sceptre, is to fear on account of the difficulty of detecting wrong; even though, assured that it cannot be ascertained by spies, he has in person made private inquiry, his own arm adorned with gold being his only protection; not to refuse to listen, though men come and complain of it. —H.S.

The justice of a king consists in his endeavouring to ascertain the truth in person, (suspectful of the repersentations of spies) concealed in secret places, unattended and alone, and in hesitating to act, with the persuasion that to detect the faults of others is not an easy task. But to remain inexorable in spite of the petitions of the distressed, is not justice. —C. M.

To wield the sceptre equitably is to hesitate to act on account of the difficulty of detecting wrong; even though the king saying "matters cannot be known with certainty by means of spies we will inquire into them in person" goes abroad in secret and endeavours to ascertain the truth, his own arm, adorned with golden ornaments, being his own protection, (*i. e.*, he goes abroad unattended and alone) not to refuse to listen when complaints are actually brought. —S. W.

The justice of the king consists in not being content with the information of spies but endeavouring to ascertain the truth in person, concealed and unattended in secret places; and in hesitating to act before mature deliberation, knowing that the discovery of the truth is not an easy task; but to remain deaf to repeated petitions of distress is not doing justice. —T. B. K.

It is of the right wielding of the 'royal rod' to apprehend the possibility of missing the guilty, even after a clear finding of facts, on a personal inquest incognito outside the court, with-out merely relying on espionage. The contrary is to be deaf to the appeals volunteered of the aggrieved. —K. S.

---

## 33. அரசன் முதறிவு

*ஏதிலார் யாதும் புகல விறைமகன்*
*கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு நேர்நின்று*
*காக்கை வெளிதென்பா ரென்சொலார் தாய்க்கொலை*
*சால்புடைத் தென்பாரு முண்டு.*

1. ஏதிலார் - அயலார், யாதும் - யாதெனினும், புகல - சொல்லக் கடவர்; இறைமகன் - (அதனைக் கேட்டு முறை செய்யவேண்டியவனாகிய) அரசன், கோது - (அவர்தங் கூற்றுக்களிற் பொதிந்துள்ள பொய்ம்மை யாகிய) குற்றத்தினை, ஒரீஇ - களைந்து நீக்கி, கொள்கை - (உண்மைப் பொருளை) அறிந்து கோடலே, முதுக்குறைவு - பேரறிவாம்; (என்னை ?) நேர்நின்று - (காக்கை யொன்றின்) எதிரிலே நின்று கொண்டு, காக்கை - (அக்) காக்கை, வெளிது - வெண்மை நிறமுடையது, என்பார் - என்று சொல்வோர், என் - வேறு எதனைத்தான், சொலார் - சொல்ல மாட்டார் ? தாய்க் கொலை - தாயைக் கொல்லுதலும், சால்புடைத்து - நேர்மையுடைத்தே, என்பாரும் - என உறுதிகூற முன் வருவோரும், உண்டு - உளர் (ஆதலின்).

2. நேர் நின்று காக்கை வெளிதென்பார் என் சொலார் ! தாய்க் கொலை சால்புடைத்து என்பாருமுண்டு; (ஆதலால்) ஏதிலார் யாதும் புகல; இறைமகன் கோது ஒரீஇக் கொள்கை முதுக்குறைவு.

3. எதனையும் ஆராய்ந்து பார்த்து உண்மை அறிந்து முறை செய்வதே அரசர் கடமை.

4. "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு." —குறள்.

"எவ்வுரை யெவர் சொற்றாலுந் தன்னறி வேற நோக்கி
யவ்வுரை யுண்மை யன்மை யறிபவ ரறிவுளோராம்
கைவரு முலகிற்றத்தங் கருமத்துக் கேற்பச் சொல்வர்
அவ்வகை யுணரக் காதை யறைகுவன் கேட்டி மன்னே."
—மகாபாரதம்.

"வெண் காக்கை விண்டா மரைமலர் செவ்வேழ மிவை
கொண்டாரிலரோ குவலயத்துப்—பண்டறிவின்
மண்பதை மாற்ற மறுவொரீஇக் கொள்ளலனத்
தின்பான்மை கொண்டே யிறை."

5. "குடிமக்கள் வழக்கிட்டுக்கொண்டு ஒருவர்மே லொருவர் அழுக்காறு முதலியவற்றாற் பொருந்தாதனவுங் கூறுவராதலால், அரசனுவான் அவர் கூற்றுக்களை அப்படியே எடுத்துக் கொள்ளாமல் அவற்றிற் பொருந்துவனவே எடுத்துக் கொள்ளுமாறு கூறிற்று." —இள.

"விதிசை என்னும் நகரிலே ஒருவனிறந்துவிடப் பலருங் கூடி அபரக்கிரியை செய்யும்படி அப் பிணத்தைச் சுடுகாட்டுக்குக் கொண்டுவந்தார்கள். அங்கே பசியோடு வந்த ஒரு கழுகு அப் பிணத்தை உண்ணக் கருதி, 'நீங்கள் கொடிய பிசாசுகளுலாவும் இக் காட்டிலே இம் மாலைக் காலத்திலே நின்று அகப்படாமல் ஓடுங்கள்!' என்றது. அவர்களும் ஓடினார்கள். அதனை நரியொன்று தானுண்ணக் கருதி, 'சிறிது நேரம் நின்று பாருங்கள்! அவ்வுயிர் மீண்டும் வரும்' என்றது. அதனை நம்பி அவர்கள் திரும்பி வருதலைக் கழுகு கண்டு 'ஆயிரத்து முந்நூறு வருடம் வரையில் யானறிவேன்; இறந்தவர் பிழையார்' என்றது. அவர்கள் பின்னும் நம்பிப் போயினர். அதனை நரிகண்டு இறந்து பிழைத்தவர் சிலரைச் சொல்லித் தடுத்தது:" இது மகாபாரத மேற்கோட் செய்யுளிற் குறிக்கப்பட்ட கதை. —அ. கு.

"பிறர் தம் வாய்க்குவந்த வெல்லாவற்றையும் புகல்வார்; அவற்றின்கட் பொய்யும் மெய்யுங் கலந்திருக்குமாதலின் அவற்றை "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்,

மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்னும் நாயனார் கூற்றின் படி. யாராய்ந்து உண்மை யுணர்தல் கடனும் என்பார் இங் ஙனங் கூறினர்." —வி. கோ. சூ.

"உலகத்தார் தங்கள் தங்கள் கருமத்துக் கிசையக் கூறு வதைப் பகுத்தறியு மறிவில்லாதவன் அரசனெனப்படான்."
—அ. கு.

**ஏதிலார் யாதும் புகல:**

ஏதிலார்—"பகைவர்: மந்திரி முதலாயினோர் அரசனுக்கு அயலார் அல்லாமையால், 'ஏதிலார்' என்பதற்குப் பகைவர் என்றனம்." —தி. சு. செ.

"ஏதிலார் - குடிமக்கள்" —சி. வை. தா.

**யாதும் புகல**—"பொய்யாவது மெய்யாவது போலி நியாய மாவது சொல்லினு மென்பது தோன்ற 'யாதும் புகல' என்றார். புகல என்பது அகரவீற்று வியங்கோண் முற்று." —அ. கு.

"யாதும் என்னுமும்மை முற்றுப் பொருளோடு இழிவு சிறப்பில் வந்தது." —கோ. இ.

'புகல' என்பதைப் 'புகலவும்' என்று கொண்டு, "சொன்ன போதிலும்" என உரை கூறலுமொன்று.

**இறைமகன் கோடோரீஇக் கொள்கை முதுக்குறைவு:**

**இறைமகன்**—இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

**ஓரீஇ**—"சொல்லிசை நிறைத்தற்கண் வந்த உயிரள பெடை." —தி. சு. செ.

**முதுக்குறைவு**—"வினைமுதற் பொருண்மையில் வந்த ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத் தொடராயினும் ஒரு சொல்லின் தன்மை பட்டுக் கூரறிவுக்காயிற்று. முதுமை - வன்மை."
—கோ. இ.

"முதுக்குறைவு ஒரு சொன்னீர்மைத்தாய்ப் பெரிய அறிவினை உணர்த்திற்று. 'முதுக்குறைவி' (சிலப்பதிகாரம்) என்பதற்கு ஆசிரியர் அடியார்க்கு நல்லார் 'பெரிய அறிவையுடையாள்' என்றது காண்க," —இள.

"கொள்கை முதுக்குறைவு என முடிக்க, ஒருவர்க்கு அறியாமையே முதுமையாதலின். அஃது, அறிவு வளர்ந்து வரவரக் குறைதலின் 'முதுக்குறைவு' எனக் காரணக்குறி யெய்திற் றென்பாரு முளர்." —வி. கோ. சூ

"முதுக்குறைவு: முதுக்கு - (முதுமை + கு - பண்பின் விகுதி.), உறைவு - அதில் இருத்தல். இரண்டுமொழியு மொருமொழித் தன்மைப் பட்டது. அறிவில் மூத்திருத்த லென்பது பொருள்." —ஊ. பு. செ.

முதுக்குறைவு: முதுமை குறைதல்; அதாவது முன்னுள்ள அறியாமை நீங்கல்." —தி. சு. செ.

நேர் நின்று காக்கை வெளிதென்பா ரென்சொலார்:

காக்கை—"தொழிலடியாகப் பிறந்த பெயர்ச்சொல்; கா - பகுதி, கு - சாரியை, ஐ - வினைமுதற் பொருண்மை விகுதி; ககரத்தோற்றமும் உகரக் கேடும் சந்தி. பொருள்: மற்ற பறவைகள் போலாமல் தனக்கு இரையாயினவற்றைக் கண்டபோது மறைக்காமல், தன் இனத்தை அழைத்து உடனுண்ணுதலும், இனத்திலொன்றுக்குப் பிறரால் துன்பம் நேரிட்டால் இரங்குதலும், தன்னால் இயன்றமட்டும் அவர்க்கு ஊறு செய்ய முயலுதலுமாகிய காத்தலை யுடையதென்பது. இச்சொல் ஆரியத்தின் சிதைவெனினு மொக்கும். உயிரோம்புதலிற் சிறந்த பொருளென்பது பொருளெனின், உயிருள்ள சரப்பொருள்களில் தன்னுயிரைக் காப்பதில் ஒவ்வொன்றும் சிறந்ததே அன்றிச் சிறவாத தொன்றுமில்லை யாதலால் அது பொருளன்றென்க." —கோ. இ.

"வானுயரும் புள்ளாகி மாநிலத்தோரன்பு செயத், தானமரு நல்லதனுப் படைத்து - மேன்மையாற், பெற்ற கருமேனி கொண்டு பேருலக மெங்கணும், உற்றுயிர் 'கா' வென்ற வுரை யளித்து - வெற்றி கொண், டெல்லார்க்குங் கோவாய் இருந்

தமிழே பேசியுல. கெல்லாந் தமிழ்கூறு மேற்றத்தாற் - பல்லோரும்; தாமுண்ணு முன்னர்த் தனை நினைந்தவ் வின்னடிசில், ஏமமுடனேற்க வென்றுரைக்கும் - சேம முற்றுத், ... ... ... தன்னினத்தை யெல்லாமூண் தானுண்ணும் வேளையில் இன்னுரையா லேயழைத் தின்பூட்டித்—தன்னுடனே; ஒக்கவணைத் துத்தமிழர் ஒப்புர வீதென்னத், தக்க செயலாற் றலைநின்று" என்று ஓரறிஞர் "காக்கைவிடுதூது" என்னும் அரியதொரு சிறு நூலிற் காக்கையை வியந்து பாடியுள்ளார்.

**தாய்க்கொலை சால்புடைத்தென்பாரு முண்டு :**

**தாய்க்கொலை**—"செயப்படுபொருளில் வந்த ஆறும் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர் - கொலை - தொழிற்பெயர்."

—கோ. இ.

"தாய்க்கொலை: இதனை இரண்டாம் வேற்றுமைத் தொகையாகக் கோடலே தமிழ் மரபாகவும், அதனை அறிதற் பேறடையாத சிலர் ஆறும் வேற்றுமைத் தொகைத்தொழிற் பண்புத் தற்கிழமைப் பொருட்டாக வுரைப்பர்." —வி. கோ. சூ.

இது தனித் தமிழ்ச் செய்யுள். —வி. கோ. சூ.

While others assert everything, the wisdom of the prince is to receive their assertions, rejecting what is false. What will not men say, who standing opposite to a crow, will call it white? There are some who will even say, that the murder of a mother is noble. —H. S.

The true wisdom of a king lies in rejecting what is false in the representation of others and accepting what is true. What will they not say, who maintain in the face of the startling reality, that the crow is white! There are some who will approve even matricide. —C. M.

While many assert anything, the wisdom of a prince consists in accepting what is true therein, eschewing what is false. There are men who standing opposite to the crow, declare it to be white; likewise there are those who commend matricide. —T. B. K.

It is wisdom for the Prince to sift indiscriminate testimony of strangers to truth and reject the defective part of it, what else will not the people say who with their eyes open, call the black crow, white? Also, there are people who will depose to the propriety of matricide.

—K. S.

---

## 34. கீழ்மக்க ளியல்பு

கண்கூடாப் பட்டது கேடெனினுங் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகும்—மண்டெரி
தான்வாய் மடுப்பினு மாசுணங் கண்டுயில்வ
பேரா பெருமூச் செறிந்து.

1. கண்கூடா - கண்ணுக்கெதிரே, பட்டது - (வந்து) தோன்றிற்று, கேடு - (தாம் உறற்பாலதாய) கெடுதியானது, எனினும் - என்றாலும், கீழ்மக்கட்கு - (அறிவற்ற) கீழோராயினோர்க்கு, உண்டோ - உண்டாகுமோ, உணர்ச்சி - (அதனினின்றும் நீங்குதல் வேண்டும் என்ற) நல்லுணர்வு? இல்லாகும் - இல்லையேயாம்; மண்டு - மூண்டெழுகின்ற, எரிதான் - தீயானது, வாய்மடுப்பினும் - தம்மை வாயிலிட்டுக் கொள்வது போன்று சூழ்ந்தெரிந்து வந்தாலும், மாசுணம் - பெரும்பாம்புகள், கண்துயில்வ - உறங்கிக்கிடக்குமே யன்றி, பேரா - (தாம் மண்டலித்திருக்கும் இடம்) விட்டு நீங்காவாம், பெருமூச்சு - பெருமூச்சு, எறிந்து - விட்டுக்கொண்டு.

2. கேடு கண்கூடாப் பட்டது எனினும் கீழ்மக்கட்கு உணர்ச்சி உண்டோ? இல்லாகும்; மண்டெரிதான் வாய் மடுப்பினும் மாசுணம் பெருமூச்சு எறிந்து கண்டுயில்வ; பேரா.

3. கீழோராயினோர் தமக்குக் கேடு வந்துகொண்டிருக்கிறதென்று கண்டவிடத்தும் அதனினின்றும் நீங்கும் வகையைக் கருதாது உணர்வற்றிருப்பர்.

4. "நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்." —குறள்.

"மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில்." —குறள்.

5. "முன்னும் பின்னும் அரசரதியல்பு கூறப்படுதலின் கீழ்மக்கள் என்றது மந்திரி முதலாயினோர் அறிவின்வழி நில்லாத அரசரை என்க." —தி. சு. செ.

"கீழோர் பிறர்க்குத் தீங்கு செய்து அது காரணமாகத் தாமும் தீங்குற்றுழி அதைத் தவிர்த்துக் கொள்ளவல்ல அறிவுடையராகா ரென்பதாம். பிறர் நன்மை நாடுதலைத், தந் நன்மை நாடுதற்குக் கருவியாக வுபயோகிக்கவு மறியாது அவர்க்குத் தீங்கிழைத்தலே கீழோரியல்பென உய்த்துணர வைத்தார். 'கீழ்மக்கட்கு உண்டோ உணர்ச்சி' என்பதனுனே தாங்கள் முதற்கண் கேடெய்தியதனுல் அனுபவஞான முற்றிருந்தும் அதனைத் தக்கவாறுபயோகித்து மீட்டும் பிறர்க்குத் தீங்கிழையாமலும் அது காரணமாகத் தாம் தீங்கெய்தாமலும் அத் தீங்கினின்றும் நீங்கிக் கொள்ளவல்ல அறிவுடையராதலும் இலர் என்பது பெற்றும்." —வி. கோ. சூ.

"மேன்மக்கள் கேடு நேரிடுவதானுல் அதை அறிந்து தடுக்க முயல்வார்; கீழ்மக்களோ நேரிட்ட காலத்தும் அதைத் தடுக்க முயலாதிருப்பர்." —கோ. இ.

**கண்கூடாப் பட்டது கேடெனினும்:**

**கண்கூடா** — "கண்கூடு - பிரத்தியட்சம்; 'கண்ணுக்குக் கூடுதல்' எனத் தொக்கின்ற நான்காம் வேற்றுமையின் பயனிலையாகிய முதனிலைத் தொழிற்பெயர் பெயர்ச் சொல்லோடு கூடி யொருசொற்றன்மைப் பட்டுத் தொழிலாகு பெயராய் நின்றது." —தி. சு. செ.

**பட்டது**—புலப்பட்டது, பொருந்தியது, பார்க்கப்பட்டது, வந்தது எனப் பலவாறு பொருள் கூறப்பட்டுள்ளது.

கேடு—"முதனிலை நீண்டுதிரிந்த தொழிற்பெயர்; அஃது ஈண்டுக் காரியவாகுபெயராய்த் துன்பத்தை யுணர்த்திற்று."
—வி. கோ. சூ.

"வீடு, பாடு முதலியனவும் இத்தகையன." —ஏ. எஸ். ஜெ.

"இக் கேட்டின் குறியை அடிப் (35 - ஆம்) பாட்டில் விளங்க உணர்க. —கோ. இ.

எனினும்—"வரக்கடவதாகிய தீங்கினை முன்னரறிந்து காத்தலே அறிவுடையார் செயலாக வந்தும் உணராமை பற்றி 'எனினும்' என்றார்." —அ. கு.

'ஆயினும்' என்னாது 'எனினும்' என்றமையான் தாமே தம் அரச போகமயக்கத்தால் உணராவழியும், தம் நம்பிக்கைக் குரிய அமைச்சர் முதலானோர் எடுத்துக் கூறுங் காலத்தும் உணரமாட்டாத இயல்பினர் என்பது பெறப்படும்.

**கீழ்மக்கட் குண்டோ உணர்ச்சி மற்றில்லாகும்:**

**கீழ்மக்கள்**—அறிவில்லா அரசர்களைக் குறிக்கும். 'கீழ் மக்களை' 'மாசுணத்திற்கு' ஒப்பிட்டு அம்மாசுணம் பெருமூச் செறிந்து கண்துயில்வ என்றமையான் கீழ்மக்களாகிய அறி வில்லா அரசர்களும் கவலையின்றி உறங்கிக்கிடப்பதே இயல் பாகவுடையர் என்பது உய்த்துணரப்படும். இது,

"காழாய கொண்டு கசடற்றார் தஞ்சாரற்
றாழாது போவா மெனவுரைப்பின் - கீழ்தா
னுறங்குவா மென்றெழுந்து போமாம்."

என்ற **நாலடியார்** செய்யுளானும் பெறப்படும்.

உணர்ச்சி—"கேடு வருமென்றும் அதனை நீக்க உபாயந் தேட வேண்டுமென்றும் அறிதல்." —உ. வே. சா.

மற்று—அசை.

**மண்டொரிதான் வாய்மடுப்பினும்:**

**மண்டு எரி**—'மண்டுதல்' மேன்மேலும் மூண்டெழுதல்; நெருங்குதலாகும்.

**வாய் மடுப்பினும்** — வாயால் உண்ணினும். மடுத்தல் - இடைப்படுத்தல்.

மேல் இந்நூல் 64 - ஆம் செய்யுளில் ஆசிரியர்,

"வரவா வாய்மடுத்து வல்விராய் மாய
எரிதழன் மாயா திரா."

என்று ஆண்டுள்ளமையுங் காண்க.

**மாசுணங் கண்டுயில்வ:**

**கண் துயில்வ**—"கண் என வேண்டாது கூறினர் வருங் கேட்டை உணராமல் நித்திரித்தலாகிய இழிவை உணர்த்தற்கு."
—கோ. இ.

'மாசுணங் கண்டுயில்வ'—இதனை "உயர்திணை தொடர்ந்த" என்னும் நன்னூல் விதியின்கண் ஆசிரியர் **சங்கர் நமச்சிவாயப்** புலவர் "சொற்றொறு மிற்றிதன் பெற்றி" என்பதனானே, "கிணறு நீரூறிற்று" "மாடு கோடுகூரிது" என அஃறிணையோடு சார்த்தின் அஃறிணை முடிபினவாதலுங் கொள்க. எனக் கூறுநிற்றலின் அமைவுடைத்தாமாறு காண்க.
—வி. கோ. சூ.

இஃது, **எடுத்துக்காட்டுவமையணி.**

Though ruin be before their eyes, will fools perceive it? No, they will not: though thick flames envelope their body, the sleeping rock serpents will not arouse, from their loud-breathing slumbers.
—H. S.

Will fools rouse themselves to a sense of danger although it be plainly visible? They cannot see. Although a conflagration may be blazing around, the mountain serpents will awake not form their deep breathing slumbers.
—C. M.

Even if it be before their eyes, fools perceive not their own ruin; though thick flames envelope their body, the sluggish rock-snakes do not rise up from stertorous slumbers.
—T. B. K.

Even when the danger is evidently imminent with the base-minded be struck with a sense of apprehension? No. They are like the boa which, though surrounded by overwhelming fire, sleep and snore without moving from its lie.
—K. S.

---

## 35. கெடுவது காட்டுங் குறி

*நட்புப் பிரித்தல் பகைநட்ட லொற்றிகழ்தல்*
*பக்கத்தார் யாரையு மையுறுதல்—தக்கார்*
*நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்*
*கெடுவது காட்டுங் குறி.*

1. நட்பு - நண்பரை, பிரித்தல் - வேறுபடுத்திப் பகையாக்கிக் கொள்ளலும், பகை - பகைவரை, நட்டல் - நட்பாக்கிக் கொள்ளலும், ஒற்று - ஒற்றர்களை, இகழ்தல் - (பொருட்படுத்தாது) இழித்துரைத்தலும், பக்கத்தார் - தன்னருகே இருக்குநராய அமைச்சர் முதலாயினோர், யாரையும் - யாவர்மாட்டும், ஐயுறுதல் - (எடுத்ததும்) ஐயுறவு கொள்ளலும், தக்கார் - மேதகவுடைய பெரியோர்தம், நெடுமொழி - உறுதி மொழிகளை, கோறல் - ஏற்றுக்கொள்ளாது கடந்து நடத்தலும், குணம் - தன்னியல்பு, பிறிதாதல் - வேறுபடுதலும், கெடுவது - (ஓரரசன்) இனிக் கெட்டழியப் போகுமாற்றினை, காட்டும் - முன்னரே காட்டுகின்ற, குறி - குறிகளாம்.

2. (கொண்டுகூட்டு வேண்டிற்றிலது)

3. நட்புப் பிரித்தல் முதலிய ஆறும் அரசர்க்குக் கேடு பயப்பனவாம்.

4. "தேரான் தெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும்." —குறள்.

"பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்." —குறள்.

"எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்." —குறள்.

"கேடுவரும் பின்னே மதி கெட்டுவரு முன்னே."
—முதுமொழி.

5. "தனக்குத் தளர்வு வந்தவிடத்துப் பொருளுதவல், போர்முகத்துத் துணைசெய்தல் முதலியவற்றைச் செய்து தாங்கும் நட்பினரைப் பகைக்கிற் பெருங் கேடாதலாலும், பகைவர் அயலினர் நட்பினர் என்னும் மூவகை யோரிடத்து நிகழும் நன்மை தீமைகளை யறிதற்குக் கண்களாயுள்ள வேவுகாரரை யவமதிக்கில் தோற்பு அடைதலாலும், பரிசனங்களைச் சீந்தேகிக்கில் அவர்கள் தம்மிடத்து வைத்த தொழில்களை விடுதலாலும், தீயனகண்டா லவற்றைக் களைதற்கு நெருங்கி யறிவுறுத்தும் பெரியோர் சொற்களைக் கேளாதொழியில், தன்னைக் காத்தல் ஒழிதலாலும், குடிகளை யுயரச்செய்து தன்வழிப் படுக்கும் அறநீதிகளில் மாறுபடிற் குடிகளையிழத்தலாலும், நட்புப் பிரித்தல் முதலிய அறுவகைத் தொழில்களையும் 'கெடுவது காட்டுங் குறி' என்றார்." —தி. சு. செ.

"பாரதத்தின்கட் கூறப்படும் துரியோதனனது செயல்களை இச்செய்யுளுக்கு இலக்கியமாக எடுத்துக் கூறலாம். அவன் பாண்டவரைப் பகைத்துக் கொண்டமையும், சகுனி முதலாய தீயரை நட்டமையும், அசுவத்தாமனாதியோரிடத்து ஐயப்பட்டமையும், கண்ணன் வீடுமன் கூறிய உறுதிமொழிகளைக் கேளாமையும், பாஞ்சாலியை அரசவையில் மானபங்கஞ் செய்யக் கருதினமையும் அவன்றன் கேட்டிற்கு உற்பாதங்களாயினமை காண்க: அவைபற்றி யன்றே யவன் கெட்டானென்பது."
—வி. கோ. சூ.

**பகைநட்டல்** — "நெடுங்காலம் பகையா யுள்ளாரை, நட்பாக்கிக் கொள்ளுதல். 'முற்றன்னைக் காய்வானைக் கைவாங்கிக் கோடலும் ... சாவவுறுவான் றொழில்' **திரிகடுகம்.**" —உ.வே.சா

**ஒற்றிகழ்தல்** — "ஒற்றுயுள்ளார்க்கு வேண்டுஞ் சிறப்புச் செய்யாது விடுதல். பகைவர் முதலியோரிடத்து நிகழ்வன அறிதலிலே கண்போன்றிருத்தலின் இகழ்த லாகாதென்க."
—அ. கு.

**பக்கத்தார் யாரையு மையுறுதல்:**

**பக்கத்தார்**—"எப்போதுஞ் சமீபத்திலிருத்தல் பற்றி மந்திரிகள் 'பக்கத்தா' ரெனப்பட்டார்; அமாத்தியர் என்பதும் அப் பொருட்டு. 'பக்கத்தார் - அமைச்சர்; உழையிருந்தான்'— குறள் 638."
— உ. வே. சா.

**தக்கார் நெடுமொழி கோறல்:**

**தக்கார்**—"என்றது அமைச்சர் புரோகிதர் முதலியோரை."
—அ. கு.

"தக்கார் இறந்தகால வினையாலணையும் பெயர். தகு என்னும் முதனிலை இரட்டியதே இறந்தகாலங் காட்டியது."
—கோ. இ.

**நெடுமொழி**—"பெருமையுடைய மொழி; அது அறிவுரை."
—இள.

"நெடுமொழி - பொருளால் விரிந்த சொல் ஆதலின் உறுதி மொழிமேல் நின்றது; ஏனையிடங்களில் வரின், 'தமது மேம்பாடு சொல்லல்' எனப் பொருள்படும்."
—தி. சு. செ.

"நெடுமை - பெருமை; பெருமையைத் தருமொழியை நெடுமொழி என்றது ஓர் குறிப்பு ஆகிய மரபுவழுவமைதி."
—கோ. இ.

**கோறல்**—இகழ்தல், கேளாதொழிதல், மீறல், அலட்சியம் பண்ணுதல் எனப் பலபட இச்சொல்லுக்குப் பொருள் கூறப் பட்டுள்ளது.

"கொல்தல் கோறலெனத் திரிந்தது"
—சி. வை. தா.

கோறல் - இலக்கணை

"தக்கார் நெடுமொழி கோறல்—உரியராயினோரது மேன்மையை யழித்த லெனினுமாம்." —சி. வை. தா.

"நெடுமொழி கோறல் - நெடுங்காலத்திற்குப் பயன்படுவன வான செவியறிவுறூஉ, வாயுறைவாழ்த்து முதலியவற்றை அவமதித்தல்; 'மெய்ம்மொழி மற்றென்மொழி பிழையாதாகும், பின்வழி நுமக்குப் பெரும்பயன் றருமே'' —சிதம்பரச் செய்யுட் கோவை. —உ. வே. சா.

"தக்கார் நெடுமொழி கோறலாவது தக்கோரிடத்துத் தான் அவர் சொற் கேட்டு நடக்கப் புகுவதுபோல நடித்து வஞ்சித்து அவர்பால் உறுதிமொழி பெற்று, அதன்பின்னர் அவர்தங் கட்டுரைகள் தனது எண்ணங்களுடன் மாறுபடல் கண்டு அவற்றைத் தன் நண்பராயினார்முன் இகழ்ந்துரைத்தலே யன்றி அவற்றின்படி நடவாது வரம்புகடந்து சேறலாம் என்பாருமுளர்." —வி. கோ. சூ.

**குணம் பிறிதாதல்**—"அங்கிய குணங்களை யடைதல்: அங்கிய குணங்களாவன: வேட்டை விருப்பு, சூதாடல் விருப்பு, கூத்து முதலியனவும், துரோகம், பொறாமை, நிந்தை முதலியனவுமாம்." —அ. கு.

"அறநீதிகட்கு மாறுபடுதல்" —தி. சு. செ.

**கெடுவது காட்டுங் குறி:**

**குறி**—"அஃறிணையியற் பெயர். இவற்றுள் ஒவ்வொன்றுமே தனித்தனி கேடு பயக்கவல்ல குறியாம்; ஆதலின் குறியென் பதனைத் தனித்தனி கூட்டியுரைக்க வெனலுமொன்று. இவ்வாறு ஒருமைப் பெயரை வாக்கியபேதமாகத் தனித்தனி கூட்டி முடிப்பதனைத் தேர்வடமிழுப்பார் போலப் **பிரத்தியேக பதாந் நுவயம்** என்பார் வடநூலார்." —வி. கோ. சூ.

"நட்புப் பிரித்தல் முதலிய ஆறையும் உடையார்க்குக் கேடுவரும் என்க. அன்றிக் கெட்டகாலம் வருமாதல் அவனை இவ்வாறெல்லாம் பிரித்தல் முதலியன செய்யுமாறு அஃது ஏவு மென்றுங் கொள்க." —இள்.

The estrangement of friends, the receiving of enemies into friendship, to scoff at a spy, and to suspect all associates, to despise the continued advice of the wise, and become changed in disposition, are signs of approaching ruin. —H.S.

To alienate the affection of friends, to contract friendship with foes, to mock at spies, to suspect the fidelity of friends, to reject the efficacious advice of the wise and to become changed in temperament are omens of approaching ruin.
—C. M.

Estrangement of friends, befriending enemies, scoffing at spies, suspecting every one, despising the good advice of the wise, a change in disposition, these are indications of approaching ruin. —T. B. K.

Alienting friends, befriending foes, disregarding spies, suspecting ministers, neglecting the last Council of the worthy and change of temper for the worse; all these are indications of impending perdition. —K. S.

---

## 36. பெரியாரைப் பிழையாமை

*பணியப் படுவார் புறங்கடைய ராகத்*
*தணிவில் களிப்பினாற் றாழ்வார்க்—கணிய*
*திளையாண் முயக்கெனினுஞ் செய்தன்றே மூத்தாள்*
*புணர்முலைப் போகங் கொளல்.*

1. பணியப் படுவார் - தம்மால் வணங்கி எதிர்கொள்ளப்படுந் தகுதியினோர், புறங்கடையராக - (தம்மைக் காண்பது கருதித்) தமது தலைவாயிலின்கட் போந்துளாராகவும், தணிவு - அமைவு, இல் - அற்ற, களிப்பினால் - செல்வமகிழ்ச்சியினால், தாழ்வார்க்கு - (விரைவில் இருக்கைவிட் டெழுந்து சென்று அவரை எதிர்கொள்ளாது) காலந்தாழ்க்கும்

அரசர்க்கு, அணியது - (அது போழ்து) அடுத்திருப்பது, இளையாள் - இளையவளாகிய திருமகளது, முயக்கு - சேர்க்கை, எனினும் - என்று தோற்றினும், சேய்த்து - தொலைவில் உள்ளது, அன்று - அன்றாகும், மூத்தாள் - மூத்தவளாகிய மூதேவியினது, புணர்முலை போகம் - நெருங்கிய சேர்க்கை யின்பத்தை, கொளல் - (அவர்) துய்த்தல்.

2. பணியப் படுவார் புறங்கடையராகத் தணிவில் களிப்பினால் தாழ்வார்க்கு இளையாள் முயக்கு அணிய தெனினும், மூத்தாள் புணர் முலைப் போகங் கொளல் சேய்த்து அன்று.

3. **செல்வச் செருக்கினாற் பெரியோர்ப் பிழைத்தோர் விரைவிற் கேடடைவர்.**

4. "எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்." —குறள்.

"இகழ்ச்சி யிற்கெடு வார்களை யெண்ணுக
மகிழ்ச்சி யின்பத்தின் மைந்துறும் போழ்தெனப்
புகழ்ச்சி நூலுட் புகன்றனர்." —சூளாமணி.

"பெருத்திடு செல்வம்வந் துற்ற போதுகண்
ணுருத்தெரி யாமலே யொளி மழுங்கிடும்
மருத்துளதோ வெனில் வாகடத் திலை
தரித்திர மென்னுமோர் மருந்திற் றீருமால்." —சிந்தாமணி

5. "தம்மாற் பணியப் படுதற்குரியர் தம்பால் வரும் பொழுது அவரை எதிர்கொள்ளுவதற்குத் தம்முடைய பாக்கிய மகிழ்ச்சியாற் றாழ்பவர் விரைவாகக் கேட்டை யடைவர்."
—சி. மு.

"இனித் தம்மைப் பலர் தலைவாயிலின்கட் போந்து வணங்கப் பெருமகிழ்ச்சியடைந்த செல்வருக்கு அது கழிய வருங்காலம் தூரமன்று என்னும் பொருள்பட வுரை கூறுவாரு முளர். இவ்வாறு பொருள் கூறுவதனாற் போந்த பயனின்மையானும், அன்னணங் களித்திருப்பார் இளையாள் முயக்கொழிந்து மூத்தாள் புணர்முலைப் போகங் கொளற்கு அவர் தாம் பெருமகிழ்ச்சி யடைந்தமை தக்க காரண மன்மையானும், 'பணியப்படுவார்' என்னும் செயப்பாட்டுவினைப் பிர

யோகமே அது பொருளன்றென்பதற்குத் தக்க சான்றுமாக லானும் அது போலியுரை யென்க. இனிப் பணியப்படுவார் புறங்கடையராதல் கண்டு பெருமகிழ்ச்சி யோடுஞ் சென்று அவரை வணங்குவார்க்கு மூத்தாள் புணர்முலைப் போகங் கொளல் சேய்த்தே எனினும் இளையாள் முயக்கு அணியது என்று மாட்டி வேறுபொருள் கூறுவாரு முளர். அப் பொருட்கு அன்று, ஏ, அசைகள்." —வி. கோ. சூ.

**பணியப் படுவார் புறங்கடையராக:**

**பணியப்படுவார்** — செயப்பாட்டு எதிர்கால வினையாலணை யும் பெயர்.

"பணியப் படுவார் - தம்மால் வணங்கத்தக்க அந்தணர், சான்றோர், அருந்தவத்தோர், தாய், தந்தை, தமையன் முதலி யோர். **(புறப்பொருள் வெண்பாமாலை 221.)**" —உ. வே. சா.

**புறங்கடையராக**—ஈண்டுத் தலைவாயில் என்பது பொருள். மேல் 2-ஆம் செய்யுளில் "புறங்கடை" என்பதற்குக் கொடுத் துள்ள குறிப்பினைப் பார்க்க.

**தணிவில் களிப்பினால் தாழ்வார்க்கு:**

**தணிவு**—போதுமென அமைதல், குறைவு, அடங்குதல், அளவு, என்றெல்லாம் பொருளுரைக்கப்பட்டுள்ளது.

**களிப்பு**—"களிப்பாவது அதிகாரம் குலம் செல்வம் முதலிய வற்றால் யாவரினுந் தம்மை மிக்கோ ரெனக் கருதும் மயக்கம்." —அ. கு.

"களிப்பு - கள்ளுண்டலால் வரு மறதி; செல்வத்தால் தம்மை மறந்திருத்தல் கூடும் ஆதலில் அம்மறதியைக் 'களிப்பு' என்றார்." —தி. சு. செ.

*தணிவில் களிப்பு* - "தணிவில், எழுவாய்த் தொகாநிலைத் தொடர், இது பால்வழுவமைதி. 'இல்களிப்பு' பண்புத் தொகைநிலைத் தொடர், விரிந்தால் 'இன்மையாகிய களிப்பு' என விரியும். சொல்லியல் அறியார் ஒருவர் இதனை ஈறுகெட்ட பெயரெச்சத் தொகாநிலைத் தொடர் என்பர். பெயரெச்சம்

ஈறுகெட்டதானால் உண்ணுக் குதிரை என்பதுபோல இல்லாக் களிப்பென வருமேயன்றி 'இல் களிப்' பென வாராமையாலும், வருமென்பாரானுல் மெல் விரல், வல்லொலி என வருவன வற்றையும் பெயரெச்சத் தொடரெனக் கொள்ள வேண்டுமாதலாலும், அவ்வாறு சொல்வதற்குக் காரணம் அறியாமையே ஆம்.''
—கோ. இ.

இனிச் செல்வம் மிகுந்தகாலை களிப்பாகிய செருக்கு மூடுதல் இயல்பென்பது,

"சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம் வந்துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுளோர் மூகராவார்.''

என்னும் குசேலோபாக்கியானச் செய்யுளானும்,

"ஏர்பெறு மிருநிதிச் செருக்க தெய்திடிற்
தேர்செவி யுடையவர் செவிட ராகுவர்.''

என்னும் விவேகசிந்தாமணிச் செய்யுளானும் அறியப்படும்.

"அறிவிலார் செல்வம் பெற்ற லளவிலா வகந்தைப் பேயும்
பிறிதுகண் தெரியா நோயும் பிடித்திடும்.''

என்னும் திருக்குற்றலத் தலபுராணச் செய்யுளும் இப்பொருட்டே

தாழ்வார்க்கு — தாழ்தல் - உடனே செல்லாது காலம் நீட்டித்து நிற்றல்.

"தாழ்வார்க்கு - எதிர் செல்லுதலின்றித் தம்பால் வரும் வரையில் தங்கியிருப்பார்க்கு.'' —உ. வே. சா.

பணிதற்குரியார் போந்தவழி, காலந் தாழ்த்தாது இருக்கை விட்டெழுந் தெதிர்சென்று அழைத்துவந் துபசரித்தல் அறிவுள்ள செல்வர் கடனும் என்பது, "இருத்தபல் துவாரகக் கந்தை ஏழைப் பார்ப்பா"னுகிய குசேலன், "வகுத்த பல்லுலகும் போற்ற மாற்றலர் கூற்றார் மேவச் செகுத்தரசாளுங் கண்ணச் செம்ம"லைக் காண்பன் துவாரகை சென்று அரண்மனை வாயிலடைந்துழி, அவன் போந்தமையை யறிவித்த வாயிற் காவலரை நோக்கிக், கண்ணன் "போயழைத்திடுமினின்னே, போயழைத்

திடுமினின்னே, போயழைத்திடுமினின்னே என விரைபொருளிற்'' சொன்னமையாலும், பின் குசேலன் வருவதைக் கண்டுழிச்,

"சிந்தையுண் மகிழ்ச்சி பொங்கச்
சிரமிசைக் கரங்கள் கூப்பிச்
சந்தமார் நிலத்தின் வீழ்ந்து
தாழ்ந்தெழீஇக் குடந்தம் பட்டு
முந்துதா னெயு மொடுக்கி
முன்னர்நிற் பாரை நோக்கி
வந்தகாரிய மென்"

எனப் பணிவுடன் வினவினான் என்றமையானும் அறியப்படும்.

**அணியது இளையாள் முயக்கெனினும்:**

**இளையாள்**—"இளையாள் மூத்தாள் - என்பன பாற்கடலுட் பின்னும் முன்னுந் தோன்றினமை பற்றி வந்தபெயர்கள்."
—வி. கோ. சூ.

"வான் சிறந்த, சீதேவி யாருடனே செய்யதிருப் பாற் கடலில், மூதேவி யேன்பிறந்தாண் முன்" என்பன தனிச் செய்யுளடிகள்.

**முயக்கு** — முயங்கென்னும் முதனிலை திரிந்த தொழிற் பெயர்.

**புணர்முலைப் போகங் கொளல்** — "என்புழி 'வளமெலாம் போக வரல்' எனச் சர்வகலாசாலையாரிற் சிலர் பாடமோதா நின்றார். அஃது இளையாள் முயக்கு எனக் கூறியதற்கேற்ப மூத்தாள் போகம் எனக் கூறுதலே எவ்வாற்றானுஞ் சிறப்புடைத்தாகவும், பொருட் பொலிவுடைத்தாகவும் அதனை அறிய கில்லாதும் அதனைத் தக்கவாறு மாற்றகில்லாதும், தமக்குத் தோன்றியவாறு அவ்வயிற் பொருணலமழிய மாற்றியதாய் முடியுமா றுணர்க." —வி. கோ. சூ.

"தொலையாத போகங்கொளல்" என்று பாடங்கொண்டு "தொலையாத" என்னும் இச்சொல் இதற்கு முன்வெளிப்பட்ட நூல்களிலெல்லாங் காணப்படா திருந்தது. திருவருளால் இஃதோர் ஏட்டுப்படியிற் கண்டெடுக்கப்பட்டது" என்றும்

அடிக்குறிப்புக் கொடுத்துள்ளார் இளவழகனார். தொலையாத என்பதற்கு ஒழியா என்றும் அவர் பொருளுரைத்துள்ளார்.

இது பிறிது மொழிதல் என்னும் அலங்காரம். —கோ. இ.

இது விரோத அணியுள் அடங்கும். —தி. சு. செ.

The men, who are sunk in immoderate delights while those who ought to be honoured are waiting at the gate; though now they embrace the goddess of prosperity, are not far from the enjoyment of the charms of the close bosom of her elder sister, adversity. —H. S.

Those who by the pride of their wealth, pay not proper respects to the worthy, deserving of obeisance, will soon have to be wedded with the sister of Lakshmi, although they now enjoy the company of Lakshmi herself. —C. M.

While those who ought to be honoured are waiting at the gate, there are some who from the pride of wealth do not go to meet and receive them as their guests; although now the latter embrace the goddess of fortune they are not far from the enjoyment of the charms of the close bosom of her elder sister, the goddess of ill-luck. —S. W.

Those who, on account of their ever increasing arrogance, hesitate to receive men worthy of respect and make them wait at their gates, are instinctively drawn to easy association with the Goddess of Misfortune. —T. B. K.

For them who are prostrate with unabated joy regardless of the respectable superiors waiting at their doors, it may be that they are at present in ermbaces of the nymph of Fortune; but let them bear in mind that the clasp of the nemesis of misfortune is in no way distant from them. —K. S.

## 37. ஈகை

கண்ணோக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா—வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே
சலியாத கற்ப தரு.

1. கண்ணோக்கு - கண்ணினது (குளிர்ந்த) பார்வையே, அரும்பு ஆ - முகையாகவும், நகை முகமே - மலர்ந்த முகமே, நாண் மலர் ஆ - புதுப்பூவாகவும், இன்மொழியின் - இனிய சொல்லாலியன்ற, வாய்மையே - உண்மையே, தீம் - இனிய, காய் ஆ - காயாகவும், வண்மை - வள்ளன்மையாகிய பெருங்கொடையே, பலம் ஆ - பழமாகவும், நலம் - (இத்தகைய) நன்மை, கனிந்த - மிகுந்த, பண்புடையார் - நற்குணமுடையவர்கள், அன்றே - அல்லரோ, சலியாத - (குறிப்பறிந்து கொடுத்தலில்) தளர்வில்லாத, கற்பதரு - கற்பக மரத்தை யொப்பவர்!

2. (கொண்டுகூட்டு வேண்டிற்றிலது)

3. இன்சொல்லும் இனிய முகமும் உடையவனாய் உள்ள முவந்து குறிப்பறிந்து கேளாமுன் கொடுப்பவனே வள்ளலாவான்.

4. "முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானா
மின்சொ லினதே யறம்." —குறள்.

"இன்சொல் விளைநிலனா ஈதலே வித்தாக
வன்சொற் களைகட்டு வாய்மை யெருவட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதி ரீனவோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய்." —அறநெறிச்சாரம்.

"ஏற்றார்கட் கெல்லாம் இசைநிறப்பத் தாமுடைய
மாற்றார் கொடுத்திருப்ப வள்ளன்மை." —பழமொழி.

"பரிசிலர் வேண்டிய பரிசுமற் றெல்லாம்
வரிசையோ டளிப்பது வள்ளியோர் கடனே."
—பண்டார மும்மணிக் கோவை.

5. "ஈகையின் இலக்கணம் இதிற் கூறப்படும். கண்ணோக்கும் நகைமுகமும் அகத்தின் உவப்பை வெளிப்படுத்துவன,

மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றாலும் விரும்பிச் செய்வது ஈகையென்று கொள்க.'' —உ. வே. சா.

''ஈகையுடையாரைக் கற்பகதருவென உருவகஞ் செய்த தற்கேற்ப விருந்தினரைக் கண்டவழி உளதாம் இனிய நோக்கினை அரும்பாகவும், இன்முகத்தை நாண்மலராகவும், இன்சொல்லைத் தீங்காயாகவும், கொடையைப் பலமாகவும் கூறுதலின் இது முற்றுருவகவணியாம். இச் செய்யுளின்கண் அரும்பு, மலர், காய், பலம் எனச் சொல்லத்தொடங்கிய பொருள்களை முறை வழுவாது சொல்லுதலின் இஃது **அரதன மாலையணியாம்;** இதனை ரத்நாவளி அலங்காரமென்பர் வடநூலார். செல்வமுடையார்க்கே ஈகைக்குணஞ் சிறந்ததாதலினாலும் 'அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ், செல்வச் செவிலியா னுண்டு' எனத் **திருவள்ளுவநாயனார்** அருளுதலினாலும் 'நலங்கனிந்த பண்பு' என்றார்.'' **—வி.கோ.சூ.**

''தம்மிடத்து வரும் யாசகர் தூரத்திலேயே திரும்பிப் போகாதபடி பார்க்குங் குளிர்ந்த பார்வையை அரும்பாகவும், நெருங்கும்படி காட்டுகின்ற முகமலர்ச்சியை மலராகவும், நெருங்கியபின் யாது வேண்டுமென வினவுகின்ற உண்மையாகிய இன்சொல்லைத் தீங்காயாகவும், பின் கொடுக்கும் கொடையைப் பழமாகவும், கொடுப்பவரைக் கற்பகத் தருவாக வும் உருவகஞ் செய்தமையால் இது **முற்றுருவகம்.**'' —கோ. இ.

''வறியரைத் தூரத்திற் காணும்போதே குளிர்ந்த பார்வை வேண்டுதலின், 'கண்ணோக் கரும்பா' எனவும், அதுகண்டு வந்தவிடத்து இனிய முகங்காட்ட வேண்டுதலின், 'நகை முகமே நாண்மலரா' எனவும், அவர தாற்றாமை நீங்க இன்சொற் சொல்லுதலும் கொடுத்தலுஞ் சிறிது வேறுபடினுந் தம்முளொக்கு மாதலின் 'தீங்காயா', 'பலமா' எனவுங்கூறினர்.''
—தி. சு. செ.

**கண்ணோக் கரும்பா:**

**கண்ணோக்கு**—''அருட்பார்வைக்கே சிறப்பாக வழங்குதலை 'என்மேற் கண்ணோக்கம் வை' என்பதிற் காண்க.'' —இள.

**அரும்பு**—முகை, மொக்கு, முகிழ், மொட்டு என்பன ஒரு பொருட் சொற்கள்.

**நகைமுகமே நாண்மலரா:**

**நகைமுகமே**—இனிய முகம், மகிழ்ச்சியான முகம் என்றும் பொருளுரைக்கப்பட்டுள்ளது.

**நாண்மலர்**—நாள்தோறும் பூக்கும் புதுப்பூ. இவ்வாறு கூறுது மலர் என வாளா கூறின் அது பார்வையும், நிறமும், மணமுங் குறைந்து காணப்படுதல் கூடுமாதலினுலும், அது போல ஈவோனின் இன்முகத்திலும் அத்தகைய குறைகள் காணப்படுதலுங் கூடுமாதலினுலும் அவற்றை விலக்கிய தாகாது.

**இன்மொழியின் வாய்மையே தீங்காயா:**

**இன்மொழியின் வாய்மையே**—"என்பதை மற்றவற்ரோடு ஒத்து நிற்றற் பொருட்டு முன்பின்னுக மாறுக. இங்கு வாய்மையென்றது உள்ளும் புறம்பும் ஒத்து நிற்றலே."

—இள.

"வாய்மை - வாயின் தன்மை, அதாவது சொல். அது தலைமைபற்றி உண்மைக்கு வழங்கியது." —ஏ. எஸ். ஜெ.

**தீங்காயா**—திரு. சி. முத்தையப் பிள்ளை யவர்கள் பதிப்பிலும் திரு. சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் பதிப்பிலும் இஃது "ஈர்ங்காயா" என்று ஓதப்பட்டள்ளது. இவ்விருவருக்கு முற்பட்ட காஞ்சிபுரம் திரு. சபாபதி முதலியாரவர்கள் பதிப்பிலும் பிற்பட்ட பதிப்பாசிரியர்கள் பலர் பதிப்புக்களிலும் "தீங்காயா" என்றே ஓதப்பட்டுள்ளது. "ஈர்ங்காயா" என்பதும் ஈரமுள்ள, அஃதாவது இனிமை வாய்ந்த, காயாக என்றே பொருள்படுமாயினும், ஓசை நயம் நோக்கி இப்பாடத்தைக் கொள்ளுதலே சிறப்பாகத் தோன்றுகின்றது.

"தீங்காய்: இதைத் தீம்+காய் எனப் பிரித்தால் உரிச்சொற்றொடர்; தீ+காய் எனப் பிரித்தால் மதுரமற்ற காய் எனப் பொருள் நேருதலால் கூடாதென மறுக்க. தீஞ்சுவை, தீம்பாளிதம், தீங்கனி முதலியவுமிவ்வாறே. தீங்காய் - பண்புத் தொகை." —ஏ. எஸ். ஜெ.

**வண்மை பலமா:**

**வண்மை**—"வண்மை என்பதை, சொல்லின் முடிவின் அப் பொருண் முடித்தல், என்னும் உத்திபற்றி ஈற்றில் நிறுத்தினார், இச் செய்யுளின் முதன்மையான கருத்து அதுவாதலின். கண்ணோக்கு நகைமுகம் இன்மொழி ஏனவரும் ஏனைய மூன்றும் இவ்வண்மையைச் சிறப்பிக்கவந்தனவென்று கொள்க. இங்ஙனம் கருத்திருத்திச் செய்யுளியற்று முறையை **மாணிக்கவாசகப் பெருமானா**ரியற்றிய **திருச்சிற்றம்பலக்கோவையாரின்** முதற் பாட்டிலும், அதற்குப் **பேராசிரியர்** கூறும் உரையிலுங் கண்டு கொள்க." —இள.

**பலம்**—பழம் என்ற தமிழ்ச் சொல்லே பளம், பயம் என்று திரிந்து வழங்குவதுபோல் பலம் என்று திரிந்து வடசொல்லாக வழங்குவதாயிற்று. ஆங்கிலத்தில் **ப்ளம்** (plum) என்று நிற்றலுங் காண்க.

**நலம்கனிந்த பண்புடையாரன்றே:**

"உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு"

என்னும் திருக்குறளால் நலங்கனிந்த பண்பின் சிறப்பு இனிது விளங்கும்.

**சலியாத கற்ப தரு:**

"தெய்வலோகத்திலுள்ள கற்பகம் கற்பகம் அன்று; வள்ளல்களே கற்பகதரு என்றபடி." —உ. வே. சா.

**சலியாத**—"இனிக் கற்பதரு கேட்டபொருளைக் கேட்ட பின்னர்க் கொடுப்பதாமாதலிற் குறிப்பறிந்து கொடுக்க வல்ல இப்பண்புடையோரோடு வேற்றுமை தோன்றக் கற்பதரு என்பதனைச் 'சலியாத' என்னும் அடைமொழியினாற் றழீஇனார். ஈகைக்குண முடையாரைக் கற்பதரு எனக் கூறியது உயர்வு பற்றிக் கூறிய திணைவழுவமைதி. 'கற்பதரு', ஈண்டு வலி மிகாமை இரண்டும் வட சொல்லாதலின்." —வி. கோ. சூ.

கற்பதரு—"வேண்டியவைகளைக் கற்பிப்பதாகிய மரம்; வடமொழிப் பண்புத்தொகை." —ஊ. பு. செ.

"கற்பகமென்பது கற்பமெனவும் ஆரியத்தில் வழங்கும்." —கோ. இ.

The nobly generous, whose glance is a bud; their smiling countenance, a fresh-blown blossom; the truth of their courteous speech, the sweet young fruit; and munificence, the ripe fruit; are not these the real inexhaustible *Calpa-tree*? —H. S.

With the look of the eye for the blooming bud, the smiling countenance for the full-blown flower, sweet words of truth for the unripe fruit, and generous munificence for the delicious fruit, persons who possess such virtues are like inexhaustible heavenly ambrosial tree. —C. M.

The nobly generous whose glance is the bud, whose smile is a fresh-blown blossom, the truth of whose sweet words is the fruit and whose munificence is as the ripeness thereof—they are the real unwearying *Kalpa* tree, of divine gifts. —T. B. K.

People fraught with the gentle, whose look is the bud, whose smiling countenance is the bloom; whose words of genuine kindness are the friuts in growth and whose gift is the ripe result are indeed the perennial plants of ambrosia. K. S.

## 38. செழுங்கிளை தாங்குதல்

வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பிற்
றூங்குங் களிறோ துயருறா—ஆங்கதுகொண்
டூரு மெறும்பிங் கொருகோடி யுய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று.

1. வாங்கும் - தான் வாங்கி உட்கொள்ளுகின்ற, கவளத்து - உணவுருண்டையினின்றும், ஒருசிறிது - சிறியதொருபகுதி, வாய்தப்பின் - வாயினின்றுந் தவறிக் கீழே சிந்திவிடுமாயின், (அதுபற்றி), தூங்கும் - அசையு மியல்பினையுடைய, களிறோ - யானைகளோ, துயர் - வருத்தம், உறா - அடையா; ஆங்கு - அவ்வாறு சிந்திய இடத்திலுள்ள, அதுகொண்டு - அச்சிறு பகுதியாகிய உணவைப் பெற்று, ஊரும் - ஊர்ந்து செல்லும் இயல்பினையுடைய, எறும்பு - எறும்புகளுள்ளே, இங்கு - இந்நிலவுலகத்தில், ஒருகோடி - பன்னூற்றுக் கணக்கானவை, உய்யும் ஆல் - பிழைத்திருக்கும், ஆரும் - நிறைந்த, கிளையோடு - தம் சுற்றத்தோடு, அயின்று - (தாமும்) உண்டு.

2. வாங்கும் கவளத்து ஒருசிறிது வாய்தப்பின் தூங்கும் களிறோ துயருறா; ஆங்கு அதுகொண்டு ஊரும் ஒருகோடி எறும்பு, இங்கு ஆரும் கிளையோடு அயின்று உய்யும்.

3. செல்வர்க்கழகு தன் செழுங்கிளை தாங்குதல்.

4. "சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்." —குறள்.

"காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள." —குறள்.

"வழங்கலுந் துய்த்தலுந் தேற்றாதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வம் - தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப வதுவன்றோ
நாய்பெற்ற தெங்கம் பழம்." —பழமொழி.

"செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே." —புறநானூறு.

5. "அரசனுடைய வருவாய் சிறிது குறைந்தாலும் அதனால் அரசனுக்குத் துன்பம் உண்டாகாது. ஆனால், அது கொண்டு வேறு பலர் பிழைப்பரென்பது கூறப்படும். "அத்தி முதலெறும்பீறான வுயிர்" (தனிப்பாடல்) என்பவாதலின் அவ் விரண்டையும் இயைபுபட அமைத்துக் கூறியது அறியத்தக்கது இச்செய்யுள் அரசர்க்குக் குறிப்பாக நீதி கூறியபடி; இது பிறிதுமொழிதலென்றும், நுவலாநுவற்சி யென்றும், ஒட்டணி யென்றும் கூறப்படும்." —உ. வே. சா.

"செல்வர்க்குச் சிறிது பொருள் அழியினும் துன்பமில்லை; அதைக் கொண்டு எளியோர் பலர் பிழைப்பர் என்னுங் கருத்தைப் பிறிது நவிற்சியணியாகக் கூறினர்." —வை. பு. செ.

"இது தமது செல்வத்திற் சிறிது உலகினர் பலரும் அனுபவித்தற் கமையினும் அதனைக்கண்டு அரசர்கள் மன நோவார் என்பதனை யுணர்த்தலில் ஒட்டணி; பிறிது நவிற்சியணி யெனினும் நுவலாநுவற்சியணி யெனினும் ஒக்கும்." —தி. சு. செ.

"தமதாளுகைக்கு ளடங்கிய அரசரும் குடிகளும் கட்டுகின்ற இறைப்பணமாகிய தமது செல்வப் பொருளிற் சிறிது இழந்துவிட்டால் அதைக்குறித்துப் போரரசர்கள் துன்பப் படார்; பொருளுக்காக முயல்கின்ற எளியர் பலர் அவ்விழந்த பொருளைப் பெற்றுத் தமது குடும்பத்தோடு சீவனஞ் செய்வரென்னும் பொருள் தரலால் இது பிறிதுமொழித லென்னும் அணி; ஒட்டணி யெனினும் பொருந்தும். இப்பொருளைச் சொல் லிலக்கணத்தார் குறிப்பெச்சம் என்பர்." —கோ. இ.

"யானையின் ஒரு கவளம் ஒருகோடி யெறும்புக்கு உணவாவது போலச் செங்கோலோச்சி யுலக முழுதாண்ட அரசர் குடிகளிடத்து வாங்கும் பகுதிப்பணத்திற் சிறிது செலவிடுவாராயின் அதனைக்கொண்டு பல கோடி மக்கள் உயிர்வாழ்வர் என்னும் உபமேயக் கருத்து இச் செய்யுளாற் போதருதலின் இது புனைவிலி, புகழ்ச்சியணியாம்; இதனை ஒட்டணி யெனத் தண்டியாசிரியரும், பிறிதுமொழிதல் எனப் பரிமேலழகியாருங் கூறுநிற்பர்." —வி. கோ. சூ.

**வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்:**

**வாங்கும்** — "வாங்குங்கவளம் என்ற விடத்து, பாகன் கொடுக்க யானை உணவுருண்டையை வாங்கியுண்ணும் என்னும் பொருள்பட நிற்கும்." —இள.

**கவளம்**—"ஒரு கைப்பிடி யுணவு; இது கபளம் என்னும் வடசொற் சிதைவு." —வி. கோ. சூ.

கவளம்—"ஒருமுறை வாய்க்கொள்ளும் உணவினளவு."
—அ. கு.

"கவளம் எனில் உணவுருண்டை. அவ்வுருண்டை அதை உண்பார் ஒருதடவை விழுங்கும் அளவுக்குப் போதியதாய் உருட்டப் பட்டதாகும். பொதுவாகக் கவளம் என்பது சமைத்த அரிசியால் (சோற்றால்) உருட்டிய அல்லது, சமையாத அரிசியோடு சர்க்கரை பழம் தேன் முதலிய ஒட்டுப் பொருள்கள் சேர்த்துப் பிசைந்து உருட்டிய, அல்லது மாவில் மேற்சொல்லிய ஒட்டுப் பொருள்கள் சேர்த்துருட்டிய ஓர் உணவு உருண்டையைக் குறிக்கும். ஒரு தடவை ஓருயிர் விழுங்கும் எந்த உணவையும் கவளம் எனச் சொல்வாரும் உண்டு."
—இள.

"வாங்குங் கவளம்" என்றமையால் குடிகள் செலுத்தும் இறைப்பொருள் என்பது குறிக்கப்பட்டது.

**ஒருசிறிது**—

"ஒன்றென்னும் வரையறைப் பண்பு சிறுமை என்னும் பொருள்பட நிற்றலால் வருமொழிப் பகுதியோடு ஒருபொருட் பன்மொழியாய் நின்றது." —கோ. இ.

"ஒருசிறிது என்பது ஒருபொருட் பன்மொழி. இது செவிக்கின்பந் தோன்றப் பொருள் சிறந்து நிற்கையால் மரபு வழுவமைதி. ஒருகோடி என்பதும் அது." —ஏ. எஸ். ஜெ.

**வாய்தப்பின்** — "தப்புதலருமை நோக்கி 'வாய்தப்பின்' என்றார். வாய்தப்பின் - ஈண்டு வலி மிகாமை 'யாழமுன்னர்' என்னும் (நன்னூல்) விதியின் கண் 'மேல்' என்ற மிகையானே 'வாய் புகுவதனினுங் கால் பெரிதுங் கடுக்கும்' என்புழிப்போல அமையுமென்க." —வி. கோ. சூ.

**தூங்குங் களிறே துயருறு:**

**தூங்கும் களிறு** — "இதற்குத் தூங்குங் கையையுடைய களிறு எனப் பொருள் கூறுவாருமுளர். களிறு: பால் பகா வஃறிணைப் பெயர். ஊற்றின்பத்தால் களிப்ப தென்பது பொருள்; களி - பகுதி, று - பெயர் விகுதி. தூங்குமென்ற அடையானே களிறு செருக்கித் திரியுமென்பதூஉம் பெற்றாம்."
—வி. கோ. சூ.

மாதங்கம், எறும்பி, உம்பல் என்பனபோன்ற இருபத்து நான்கு பெயர்கள் யானைக்குளவாக நிகண்டிற் குறிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் **தூங்கல்** என்பதும் ஒன்று என்பது ஈண்டுக் குறிக்கற்பாற்று.

**துயருறு** — "பெருஞ் செல்வமுடையார்க்கு ஓரற்பத் தொகையைத் தரும வழியிலே விடுதல் ஒன்றிழந்தது போலாகித் துன்பங் கொடாதென்பது 'தூங்குங் களிறே துயருறு' என்பதனாற் பெறப்படும்."
—அ. கு.

**ஆங்கது கொண்டு** — "அதுகொண்டு, முற்றுகரவீற்றுச் சுட்டுப் பெயர் ஆதலால் வலிமிகவில்லை." —ஏ. எஸ். ஜே.

**ஊருமெறும்பிங் கொருகோடி யுய்யுமால்:**

**ஊரும் எறும்பு**—"ஊருமென்ற அடையானே எறும்புகள் முயன்று இரைநாடித் திரியும் என்பது பெற்றாம்." —வி.கோ.சூ.

**ஒருகோடி**—"ஈண்டளவின்மையைக் குறிக்க நின்றது."
—வி. கோ. சூ.

**உய்யுமால்** — ஆல் அசை.

**ஆருங்கிளையோடு அயின்று**—"என்பதனானே யானை அவ்வாறயிலாதென்பது பெற்றாம்." —வி. கோ. சூ.

"கிளை முதனிலைத் தொழிற்பெயர். அது அவ்வாகு பெயராய் மரக்கோட்டை யுணர்த்தி, அது கிளைபோன்ற சுற்றத்திற்கு உவமையாகு பெய்ராயிற்று; எனவே இஃது இருமடியாகுபெயர்." —ஏ. எஸ். ஜெ.

இங்கு, அரசனை யானைக்கும், ஏழைக்குடிகளையும் அவன் சுற்றத்தாரையும் எறும்பிற்கும் ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது. ஒருகோடி எறும்புகள் சேர்ந்தாலும் யானை யொன்றின் பெருமைக் கீடாகாமையும், யானை இருக்கும் இடந்தேடி வந்து உணவு கொடுக்கப் பெறும் வசதி வாய்ந்திருப்பதும், எறும்பு கள் அலைந்து முயன்று உணவு தேடும் சிறுமை யுடைத்தா யிருப்பதும் அறிந்துமகிழற் பாலனவாம்.

The drowsy elephant will not grudge the few grains which may fall from the ball of rice that it is receiving; the creeping ants will pick them up, and ten million living creatures will subsist, feasting with their crowded progeny. —H. S.

The reeling elephant will not be sorry if a small quantity of rice, drop from its mouth out of a mouthful it receives by its trunk, although a crore of crawling ants with all their relatives will subsist on that small quantity. —C. M.

The restless elephant suffers no loss by a small quantity of rice falling off from the mouthful that it receives; but a crore of crawling ants finds that with all their families a plentiful feast. —T. B. K.

The strolling elephant may not care a jot if a tittle of its morsel slip down. But that tittle will suffice to feed fat a crore ants with their kith and kin. —K. S.

---

## 39. நன்குமதிப்பு

மாகஞ் சிறுகக் குவித்து நிதிக்குவை
ஈகையி னோக்கழுத்த மிக்குடைய—மாகொல்
பகைமுகத்த வெள்வேலான் பார்வையிற் றீட்டும்
நகைமுகத்த நன்கு மதிப்பு.

1. மாகம் - வானமும், சிறுக - சிறிதாகக் காணும்படியாக, குவித்து - (பெரும் பொருட்குவை) குவித்து, நிதிக்குவை - திரண்ட பொருளை, ஈகையின் - (அள்ளி அள்ளிக்) கொடுத்தலினும், ஏக்கழுத்தம், - தலையெடுப்பை, மிக்கு - மிகுதியாக, உடைய - உடையனவாம்; (எவையெனின்) மா - (விலங்கிற் பெரிய) யானையை, கொல் - கொல்லும், பகை - (அதன் பிறவி எதிரியாகிய) சிங்கத்தின், முகத்த - (வீரஞ் செறிந்த) பார்வை அமைந்த, ஒள் - ஒளிபொருந்திய, வேலான் - வேற்படையையுடைய அரசன், பார்வையில் - (தன் நுண்புலனாகிய) அருட்பார்வையால், தீட்டும் - (வரைந்து வைத்ததுபோற்) காட்டிச் செய்யும், நகை - மகிழ்ச்சிநகையோடுகூடிய, முகத்த - முகத்தானியன்ற, நன்குமதிப்பு - நன்குமதிக்கற்பாடுகள்.

2. மாகொல் பகை முகத்த ஒள்வேலான், மாகஞ் சிறுகக் குவித்து நிதிக்குவை ஈகையின், பார்வையில் தீட்டும் நகை முகத்த நன்குமதிப்பு ஏக்கழுத்தம் மிக்குடைய.

3. **அரச வீகையினும் அறிவுசெறிந்த அரச நன்குமதிக்கற்பாடே சிறந்ததாம்.**

4. "நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்கால்
கண்ணல்ல தில்லை பிற." —குறள்.

5. வெள்வேலா னென்றமையின் அரச னென்பது கொள்ளப்படும். அவனது நன்குமதிப்பினால் பலருடைய பாராட்டும் நல்லுதவியும் பெறுதலின் ஈகையினுஞ் சிறந்ததென்றார்." —உ. வே. சா.

"அரசனிடத்திலே அளவற்ற பெரும் பொருளைப் பரிசாகப் பெறுவதிலும் அவனாலே நன்குமதிக்கப்படும் பேறு பெறுதல் ஒருவர்க்கு மிக்க இறுமாப்பினைக் கொடுக்கும். அரசன்பால் குறையிரந்து நிற்கும் ஒருவனுக்கு அவ்வரசன் அளவற்ற பொருட் குவியலை அளிக்கிறான் என வைத்துக்கொள்வோம். அவ்விதம் பொருட்குவை பெற்று அகன்றபின் அரசன் தன்னிடம் வந்து அவனைப்போற் குறையிரந்த பல்லாயிரக் கணக்கான வறியருள் ஒருவனாய் எண்ணி அக்கணமே அவனை மறந்து விடுவன். ஆனால் அங்ஙனமின்றி எப்பொழுதும் அரசன்றயவு அவனுக்கிருப்பின் அவன் யாருக்கும் அஞ்ச வேண்டியதில்லை. அவனை நாடி வருவோர் அநேகர் இருப்பர்.

அதனால் அவனுக்கு எப்போதும் மனமகிழ்ச்சி இருந்து வரும்." —இள.

"அரசன் தன் வினைசெய்வோர் முதலாயினோர்கள் தகுதிக் கேற்ப வுபசரித்தல் அவர்கட்கு வரையாது கொடுத்தலினும் மிகவும் மகிழ்ச்சியைச் செய்யும்." —தி. சு. செ.

**மாகம் சிறுகக் குவித்து நிதிக்குவை ஈகையின்:**

**மாகம் சிறுக**—"இது மஹாகம் என்னும் வடசொற் சிதை வென்பர்: ஆதலின் 'இடையுரி வடசொலின்' என்ற (**நன்னூல்**) விதியான் வலியியல்பாயிற்று. மற்றைய நான்கு பூதங்களையுந் தன்னகத்தடக்கிக் கொண்டிருப்பதனான் 'மா' என்னும் அடை கொடுக்கப்பட்டது. 'சிறு' என்பதனோடு குவ்விகுதி சேர்ந்து 'சிறுகு' எனத் தெரிநிலை வினைப்பகுதி யாயிற்று. இவ்வாறே பெருகு, குறுகு, அணுகு முதலிய சொற்கள் வருதலுங் காண்க." —வி. கோ. சூ.

"வெளியிட மெல்லாம் பிடித்துப் பரந்து கிடக்கும் பெருங் குவை யென்பது அறிவித்தற்கு 'மாகஞ் சிறுக என்றார்." —அ. கு.

**நிதிக்குவை**—பலவினீட்டத் தற்கிழமைப் பொருளின்கண் வந்த ஆறும் வேற்றுமைத் தொகை. ஒன்றன் கூட்டத் தற்கிழமைப் பொருளதென்பாரு முளர்.

அரசனிடமிருந்து பெறப்படும் பெரும் பொருட்குவையும் அவன்றன் நன்மதிப்பிற் கீடாகாதென்னுங் கருத்து நோக்கி, 'நிதிக்குவை' என்றது 'ஈகை' என்பதனுடன் சேர்த்துப் பொரு ளுரைக்கப்பட்டது. மற்ற வுரைகார ரெல்லாம் அதனைக் 'குவித்து' என்பதற் குரியதாகக் கொண்டே உரைத்துள்ளார் கள்.

**ஏக்கழுத்த மிக்குடைய:**

**ஏக்கழுத்தம்**—"எடுத்த கழுத்தினையுடைமை; அஃதாவது தலையெடுப்பு. இது பெரும்பாலுஞ் செருக்குடையோர்பால் நிகழ்வது; ஈண்டுச் சிறப்பென்னும் பொருள்பட்டு நிற்கின்றது.

'ஏக்கழுத்தப்போல வினிதன்றே' எனச் சிந்தாமணியினும், 'ஏக்கழுத்தந் தாளசைப்பு' என ஆசாரக் கோவையினும் இச் சொல் பயின்றுவருதலை யறியாதார் 'எக்கழுத்தம்' எனப் பாடங் கொண்டிடர்ப் படுப." —வி. கோ. சூ.

"எழுங்கழுத்தம் என்பது 'எக்கழுத்தம்' என மருவி நின்றது." —சி. மு.

"எக்கு கழுத்து என்பது ஈறு தொகுத்தலாய் எக்கழுத் தென்றாகி எக்கிய கழுத்தை யுடையவன் என்னும் பொருளில் அம் விகுதி வந்ததெனக் கொள்ளலாம்; எக்குதல் - உயர்த்தல்; இறுமாத்த லென்பது திரண்ட பொருள்." —ஊ. பு. செ.

"எக்கழுத்த முடைமையாவது அரசன் கண்ணோட்ட மிருப்பதால் இனி நமக்கு யாதுங் குறைவில்லை, எவர்க்கும் அச்சமில்லை என்று தோன்றும் உள்ளக் கிளர்ச்சியும் அக் கிளர்ச்சியா லேற்படும் இறுமாப்பும்." —இள.

**மிக்கூடைய**—"மிக்குடைய எனப் பன்மையாற் கூறினார் மதிப்பின் பன்மை பற்றி." —உ. வே. சா.

மிக்கு—முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

**மாகொல் பகைமுகத்த ஒள் வேலான்:**

"பகைப் புலத்துள்ள (தன் பகைவராகிய) மிருகங்களை யெல்லாம் கொல்லுந் திறனுடைய ஊன்படிந்த வேலேந்திய அரசன்." —இள.

"மா—இது பலபொரு ளொருசொல்லாயினும் அரசன் படையிற் சிறந்தது யானையே யாதலான் இதற்கு யானையெனப் பொருளுரைத்தாம் ... பகையை வேலின்மேலேற்றி உடை யானது தன்மையை உடைமையின் மேலேற்றியதோர் மரபு வழுவமைதியாம்." —வி. கோ. சூ.

"பெரிய பகையினைத் தன் கண்ணே யுடைய ஒளி தங்கிய வேலைக் கையிலே தரித்த அரசனது." —சி. வை. தா.

பகைப் புலத்துள்ள யானையைக் கொன்ற நிணந்தோய்ந்த வேலேந்திய அரசன்." —தி. சு. செ.

(இவ்வுரையில் "ஒள்வேலான்" என்பது "வெள் வேலான்" எனக் கொள்ளப்பட்டுள்ளமை குறிக்கற்பாற்று. "வெள் வேலான்" என்று பாடங் கொண்டார் திரு. உ. வே. சாமிநாதையர்.)

"(தன் தோற்றத்தினாலேயே பகைவராகிய) மிருகங்களைக் கொல்லக்கூடிய பகைத் தன்மையைத் தன் முனையிலுள்ள பிரகாசமான வேலையுடைய அரசன்." —சி. மு.

சிங்கத்தின் தன்மையைத் தன்னிடமுடைய எனப் பொருள் வருவித்துரைத்தார் திரு. அ. குமாரசுவாமிப் புலவர். அவரைப் பின்பற்றியே மேல் உரைகொள்ளப்பட்டது.

**பார்வையில் நீட்டும் நகைமுகத்த நன்குமதிப்பு:**

**பார்வையில் நீட்டும்**—"அவரவர் தகுதிக் கேற்ப வரையறை செய்து குறித்தலைப் 'பார்வையிற் றீட்டும்' எனவும், உயிரது கருத்தறிந்து அது மகிழின் மகிழ்தலும், கோபிக்கிற் கோபித்தலு முடைமையால் உடையான் றொழிலை யுடைமை மேலேற்றிப் 'பார்வையிற் றீட்டும் நன்கு மதிப்பு' எனவுங் கூறினார்." —தி. சு. செ.

**நன்குமதிப்பு** - நன்மதிப்பு. "மிக்குடைய" என்று கூறிய பயனிலைக் கேற்ப நன்குமதிக்கற்பாடுகள் எனப் பன்மையிற் பொருளுரைக்கப்பட்டது.

"கல்வி அறிவு கேள்விகளைக் குறித்து ஒருவனைக் காணும் போதெல்லாம் செய்வதைப்பற்றி நன்குமதிப்புப் பல ஆயது." —கோ. இ.

"மாகஞ் சிறுகக் குவித்து" என்றமையால் இஃது உயர்வு நவிற்சியணி.

The smiling approbation. which is expressed in the glance of the prince, whose bright javelin threatens the death of wild

beasts, is a prouder thing, than the gift of a heap of treasure, large enough to diminish the sky. —H. S.

The smiles of esteem in the countenance of a king, who holds the brilliant lance, inflicting death on all animals, are more agreeable and delightful than the profuse munificence of one who devotes to charity his hoard of riches towering above the skies. —C. M.

The smile of approbation expressed in the glance of a prince whose bright spear deals death to elephants is a prouder thing, than even a gift of treasure heaped high enough to reach the sky. —T. B. K.

The favours of joy-inspiring esteem impressively dealt by the royal glance of the holder of the bright elephant-killing lance has a glorious prominence transcending the gift of bounties out of a huge store of riches rising so high as to belittle the sky. —K. S.

---

## 40. புகழுடம்பு பெறும் வழி

களைகணாத் தம்மடைந்தார்க் குற்றுழியு மற்றோர்
விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார்—தளர்நடைய
தூனுடம் பென்று புகழுடம் போம்புதற்கே
தானுடம் பட்டார்க டாம்.

1. களைகண் ஆ(க) - புகலிடமாகக் கருதி, தம் - தம்மை, அடைந்தார்க்கு - வந்தடைந்தவர்களுக்கு, உற்றுழியும் - (சிறிது துன்பம்) நேர்ந்தவிடத்தும், மற்று - வேறு, ஓர் விளைவு - எப்பயனை யேனும், உன்னி - கருதி, வெறு உடம்பு - (அவர்கட்குப் பயனுக்குதலை விடுத்து வேறு நல்) பயன்றற இவ் (ஊன்) உடம்பினை, தாங்கார் - பேணிப் பாதுகாத்து

வாழ நினையார்; தளர்நடையது - (பிணி, மூப்பு முதலியவற்றால்) தளர்ந் தழியு மியல்புடையது, ஊன் - இறைச்சியாலாகிய, உடம்பு - இவ் வுடம்பு, என்று - என்று கருதி (அதனை வெறுத்து), புகழுடம்பு - (அவ்வாறு தளரும் இயல்புடைத்தல்லாத) புகழாலாகிய உடம்பை, ஓம்பு தற்கேதான் - (அடைந்து அதனைப்) பாதுகாப்பதற்கே, உடம்பட்டார் கள் தாம் - துணிந்து தலைநின்ற மேதகவுடையார்.

2. ஊன் உடம்பு தளர் நடையது என்று புகழுடம்பு ஓம்புதற்கே உடம்பட்டார்கள், தாம் தம் கிளைகளைத் தம் அடைந்தார்க்கு உற்றுழியும் மற்றோர் விளைவுன்னி வெற் றுடம்பு தாங்கார்.

3. **பூத உடம்பினும் புகழுடம்பே சிறப்புடைத்து.**

"அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு." —குறள்.

"நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது." —குறள்.

4. "சாதல்வந் தடுத்தகாலுந் தனக்கொரு சாதலின்றிப்
பூதல மிருக்குங்காறும் புகழுடம் பிருக்கும்."
—பிள்ளையார் புராணம்.

"மலரவன் செய்
வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு." —இந்நூல் எ-ஆம். செய்யுள்.

"எவ ரெனினு மிடருற் றனராகி
ஓவில் குறையொன் றுளரே லதுமுடித்தற்
காவி விடினு மறனே." —கந்தபுராணம்.

5. "புகழுடம்பு அடைதற்கு வழி இதனாற் கூறப்படும். புகழுடம்பு ஓம்புதற்கு உடன்பட்டார்கள் வெற்றுடம்பு தாங் கார், உடல் நீத்தேனும் பிறருக்கு உதவுவரென்றபடி. ததீசி முனிவர், சிபி முதலியோர் வரலாற்றால் இந்த உண்மை விளங்கும்." —உ. வே. சா.

"பூதவுடம்பு பழியினும் புகழுடம் பழியாமையான், 'ஊனுடம்பு தளர் நடையதென்று புகழுடம்போம்புதற்கே யுடம்பட்டார்' என்றும், அன்னார் தம்மை யடைந்தார்க்குத் துன்பம் வந்தெய்தினும், உடம்பு நல்கினும் வாழ முயலாது அவர் பொருட்டுத் தமது யாக்கையையும் இழப்பாராதலாற் 'களைகணுத் தம்மடைந்தார்க் குற்றுழியும் வேறோர் வினைவுன்னி வெற்றுடம்பு தாங்கார்' என்றுங் கூறினர்." —வி. கோ. சூ.

"புகழுடம்பினை வளர்க்க வுடன்பட்டார்க்குப் பூதவுடம் பாற் பயனில்லை யென்பார் 'வெற்றுடம்பு' எனவும், அப் பூதவுடம்பினை வளர்க்க வுலகவின்பங் கருதார் என்பார் 'மற் றோர் வினைவுன்னித் தாங்கார்' எனவுங் கூறினர்." —தி.சு.செ.

"அரசர்க் கரசன் சிபி புறாவின் பொருட்டுத் தன்னுயிர் கொடுத்ததும், தேவர் துன்ப நீங்கத் ததீசி முனிவர் தம் முது கெலும் பீந்ததும், பேபர் தன் மகன் பிழைக்க வேண்டி அவ னுக்கு வந்த காய்ச்சலை ஒரு பெரியோர் கூறியபடி தான் ஏற்றுத் தனது மகனுயிர் காப்பாற்றியதும், புகழுடம்பு விரும்பு வார் தம் ஊனுடம்பைப் பொருட்படுத்தார் என்பதற்குத் தக்க சான்றுகளாம்." —இள.

**களைகணுத் தம் மடைந்தார்க் குற்றுழியும்:**

**களைகண்**—"நீக்குமிடம்; துன்பத்தை நீக்கும் இடம் எனப் பொருள்மேல் நிற்றலின் உவமையாகுபெயர்," —இள.

**உற்றுழியும்**—" இதன்கண் அகரம் தொகுத்தல் விகார மாய் நின்றது. இதன்கணுள்ள உம்மை தம்மைக் களைகணு வந்தடைந் தார்க்குத் துன்பம் நேரிடுதல் மிகவும் அருமையென் பது காட்டி நின்றமையின் எதிர்மறைப் பொருளதாம்; இதனை யுயர்வு சிறப்பிற்றென்பாரு முளர்." —வி. கோ. சூ.

**மற்றோர் வினைவுன்னி வெற்றுடம்பு தாங்கார்:**

**மற்றோர் வினைவு**—"வினைவாலாகிய பயன்மேல் நிற்றலிற் காரணவாகு பெயர்." —தி. சு. செ.

"மற்றோர் வினைவாவது—குடும்பப் பாதுகாப்பு, உலக வின்பம் அநுபவித்தல் முதலியவாம்." —ஏ. எஸ். ஜெ.

விளைவு என்புழி விளைவும் என உம்மையை வருவித்துரைத்தாம்.

"மற்றோர் விளைவு உன்னி - உடம்பால் அடையும் காம நுகர்ச்சி போன்ற வேறோர் இழிந்த பயனைக் கருதி."

—உ. வே. சா.

வெற்றுடம்பு — "அழிதன்மாலைத் தாகலின் 'வெற்றுடம்' பெனப் பட்டது." —வி. கோ. சூ.

"மலரவன் செய் வெற்றுடம்பு மாய்வன போல்" என இவ் வாசிரியரே மேலுரைத்துச் சென்றமை காண்க.

**தளர்நடையது ஊனுடம் பென்று:**

"தளர் நடையது — அழியுந் தன்மையுடையது."

—உ. வே. சா.

**ஊனுடம்பு**—"ஊன் - ஊ என்பது னகரச்சாரியை பெற்று நின்றது, ஆ, மா, கோ என்பனபோல்." —கோ. இ.

மூன்றும் வேற்றுமை யுருபும் பயனும் உடன் தொக்க தொடராகவும், இருபெயரொட்டுப் பண்புத் தொகையாகவும் கொள்ளலாம்."

**புகழுடம் போம்புதற்கே:**

இசைபட வாழ்தலே உயிர்க்கு ஊதியமாம் என்பர் நாயனர்.

**தானுடம் பட்டார்க டாம்:**

**உடம்பட்டார்கள்** — எதுகை நோக்கி உடன்பட்டார்கள் என்பது "உடம்பட்டார்கள்" என மரீஇயிற்று.

**தான், தாம்** என்பன கட்டுரைச் சுவைபட வந்த அசைகளுமாம்.

"இச்செய்யுள் தனித்தமிழ்ச் சொற்களா னியன்றமை காண்க." —வி. கோ. சூ.

"இது வீரச் சுவை." —கோ. இ.

Those will not spare their worthless bodies, in the hope of any future profit, should anything happen even to such as are under their protection; who, sensible how frail is the body of flesh, have determined to preserve the body of glory. —H. S.

Those who have resolved to cherish the body of the fame, perceiving the frailness of the body of flesh, will not hesitate to sacrifice their lives, although to the detriment of worldly pleasures, while, persons attached to worldly pleasures will be beset by calamities. —C. M.

Those who, perceiving how frail is the body of flesh have determined to preserve the body of fame, will not spare their worthless bodies in the hope of any future profit, should anything happen even to such as are under their protection.

—S. W.

Those bent on cherishing the body of fame knowing the frailty of the body of flesh will not hesitate to sacrifice themselves to the detriment of worldly enjoyment. Persons attached to worldly pleasures are beset with calamities. —T. B. K.

---

## 41. மானமிழத்தல்

தம்முடை யாற்றலு மானமுந் தோற்றுத்தம்
இன்னுயி ரோம்பினு மோம்புக—பின்னர்ச்
சிறுவரை யாயினு மன்ற தமக்காங்
கிறுவரை யில்லை யெனின்.

1. தம் உடை - தம்முடைய, ஆற்றலும் - வலிமையையும், மானமும் - பெருந்தகைமையையும், தோற்று - இழந்து, தம் - தமது, இன்னுயிர் - இனிமையாகிய உயிரினை, ஓம்பினும் - காப்பாராயினும், ஓம்புக - காத்துக் கொள்ளட்டும், (அஃதமையும்); பின்னர் - (அப்படிக்

காக்கத் தொடங்கிய) பின்பு, சிறுவரை ஆயினும் - ஒரு கணப்பொழுதே னும், மன்ற - ஒருதலையாக, தமக்கு - (காத்து வரும்) தமக்கு, ஆங்கு - காத்துவருமிடத்து, இறுவரை - சாங்காலம், இல்லையெனின் - இல்லை யாயின்.

2. பின்னர்ச் சிறுவரை ஆயினும் தமக்கு ஆங்கு இறு வரை மன்ற இல்லை எனின் தம்முடை ஆற்றலும் மானமும் தோற்றுத் தம் இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக.

3. **உயிரினுஞ் சிறந்தது மானமுடைமை.**

4. "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின்." —குறள்.

"மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து." —குறள்.

"கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
யிடம்வீழ்ந்த துண்ணா திறக்கு—மிடமுடைய
வானகங் கையுறினும் வேண்டார் விழுமியோர்
மான மழுங்க வரின்." —நாலடியார்.

"மான வருங்கல நீக்கி யிரவென்னு
மீன விளிவினான் வாழ்வேன்ம—லீனத்தா
னூட்டியக் கண்ணு முறுதிசேர்ந் திவ்வுடம்பு
நீட்டித்து நிற்கு மெனில்." —நாலடியார்.

"மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே." —இனிய
[நாற்பது.

"கூனொடு வெதிரே பங்கு குருடுபே ரூமை யானோர்
ஊனம தடைந்த புன்மை யாக்கையோ டழியு மம்மா
மானம தழிந்து தொல்லை வலியிழந் துலகில் வைகு
மேனையர் வசையின் மாற்ற மெழுமையு மகல்வ துண்டோ."
—கந்தபுராணம்.

5. "இதுமுதல் மூன்று செய்யுட்களால் நிலையாமை கூறப் படும். இவ்வுடல் நிலையாதாதலின் இதன் அழிவுக்கு அஞ்சாது மானத்தைக் காத்தல் வேண்டுமென்பது கருத்து." —உ.வே.சா.

"இறப்ப வருவழி இளிவந்தன செய்தாயினும் உய்க வென்னும் வடநூல் (மனு) முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையும் தூக்கி அவை செய்யற்க என்பதாம்" எனப் பரிமேலழகியார் மானம் என்னும் குறளதிகாரத்துக் கூறியுள்ளமை இங்கு உடன்பாடாதல் காண்க.

"பிறந்தபோதே இறப்பு உண்மையாகலின் வலியும் மானமும் இழக்காது வாழ வேண்டும்." —இள.

"தமக்கு இறத்தலில்லை யென்னும் நிச்சயத்தை யடைந்தவர் மாத்திரம் தன் வலிமையையும் பெருமையையு மிழந்தேனும் தம்மைக் காப்பது ஒருவாறு நியாயமாகலா மென்பதாம்."
—சி. மு.

**தம்முடை யாற்றலு மானமுந் தோற்று:**

**தம்முடை:**—"ஈறு குறைந்த ஆறும் வேற்றுமைச் சொல்லுருபு. இவ்வாறு கொள்ளாமல் குறிப்புப் பெயரெச்சத் தீறு தொகுத்தல்பெற்ற தென்பது போலிப் புலமை என்க."
—ஏ. எஸ். ஜெ.

**ஆற்றலும்:**—ஆற்றல் – போர்முகத்துப் பகைவர்க்குப் புறங் காட்டா உடல்வலிமை.

**மானமும்:**—"மானம் எஞ்ஞான்றுந் தந்நிலையிற் றாழாமையும் தெய்வத்தாற் றாழ்வு வந்துழி உயிர்வாழாமையுமாம்."
—பரிமேலழகியார்.

"இழிதொழில் செய்து பிறரால் அவமதிக்கப்படலும் தண்டிக்கப்படலும் மானம் இழத்தலாம்." —இள.

> "ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே
> கெட்டா னெனப்படுதல் நன்று."

என்றன்றே வள்ளுவர் வகுத்தார்!

**தோற்று:**—"தோற்றல் ஈண்டு இழத்தற் பொருள் பயந்து நின்றது. "வையைக்கோன், கண்டளவே தோற்றானக் காரிகை

சொற்செவியிலுண்டளவே தோற்ருனுயிர்" எனச் சிலப்பதி காரத்தினும், "நளன் சூதாட்டத்திற் செல்வமனைத்தையுந் தோற்ருன்" என உலகவழக்கினு மிச்சொல் இப்பொருண்மையிற் பயின்றுவருதல் காண்க. 'தோற்று' என்புழித் தோற்றும் என இழிவுசிறப்பும்மை வருவித் துரைத்தலுமொன்று."

—வி. கோ. சூ.

**தம் இன்னுயிரோம்பினு மோம்புக:**

**இன்னுயிர்**—"தம்முயிர் தமக்கு வேம்பன்மையானும், உடல் போல் உயிர் அழிதன்மாலைத்தன்றி நிலைபேறுடைமையானும் 'இன்னுயிர்' எனப்பட்டது."

—வி. கோ. சூ.

"ஆற்றலும் மானமுந் தோற்று உயிர்வாழ விரும்புதல் உயிர்விடுந் துணிவில்லாமையா லாதலின் அவ்வுயிர் 'இன்னுயி' ரெனப் பட்டது."

—கோ. இ.

**ஓம்பினும்**—"உம்மை ஓம்புதல் கூடாதென்னும் பொருள் தருதலால் எதிர்மறையும்மை.

"உயிர் காத்தற் பொருட்டுத் தமது வலியு மான்மு மிழப்பினு மவ்வுயிர் அதனல் நிலைபெருதாதலின் அத் தொழிலாற் பயனில்லை என்பார் 'ஓம்பினும்' என இழிவு சிறப்பும்மை தந்தார்."

—தி. சு. செ.

**பின்னர்ச் சிறுவரை யாயினும்:**

**சிறுவரை** "சிற்றளவையுடைய காலத்தை யுணர்த்தலால் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப் பெயர்ச்சொல்."

—ஏ. எஸ். ஜெ.

**ஆங்கு**—அசையாகக் கொண்டாருமுளர்.

**மன்ற தமக்காங் கிறுவரையில்லை யெனின்:**

**இறுவரை** "ஈறு என்னும் பண்புப் பெயர்ச்சொல் முதல் குறுகிக் காலங் கரந்த பெயரெச்சமாய் நின்றது; வினைப் பகுதி யிலக்கண மறியார் 'இறு' என்பது 'ஈறு' என முதனிலை திரிந்த தொழிற்பெயராயிற்றென்பார்."

—தி. சு. செ.

"மரண மென்பதை மெய்யுணர்ச்சி யுடையோ ரன்றி யேனையோர் மெய்யெனத் துணிவராதலான் 'மன்ற தமக்காங் கிறுவரையில்லையெனின்' என்றார்." —வி. கோ. சூ.

"பிறந்த உயிரெல்லாம் என்றேனும் ஒருநாள் இறந்தே தீரும். இறவாத உயிர் எதுவும் மண்ணிலில்லை. ஆசிரியர் **குமரகுருபர அடிகள்** தம் முதற்செய்யுளிலேயே இவ்வுண்மையை விளம்பி மண்ணிற் பிறந்தார்க்கெல்லாம் மரணம் உண்டாகையால் 'எம்பிரான் மன்று வழுத்தாததென்னே! நமரங்காள். என வருந்தினர்." —இள'

If any would save their sweet lives, by sacrificing courage and honour; let them do so, provided even then they can be secure from death, for ever so short a time. —H. S.

Should the mean be certain that death will not come upon them for even a moment it may not be absurd in them to lose their strength and honour, for saving their lives. —C. M.

If there be those that desire to live their lives at the sacrifice of courage and honour, let them do so, provided they can be secure from death even for a second of time. —T. B. K.

Let them if they like save their sweet life by losing their prowess and honour, if at least for a brief spell of time, their is absolute certainty that death will not approach them. —K. S.

## 42. சாவஞ்சாமை

கலனழிந்த கற்புடைப் பெண்டிரு மைந்து
புலனொருங்கப் பொய்யொழிந் தாருங்—கொலைஞாட்
மொய்ம்புடை வீரரு மஞ்சார் முரண்மறலி [பின்
தும்பை முடிசூ டினும்.

1. **கலன்**-(அணிகலங்களுட் சிறந்த) மங்கல நாணை, அழிந்த-இழந்து மெய்ந்நலனழிந்த, கற்புஉடை - கற்புடைய, பெண்டிரும் - கைம்பெண்களும், ஐந்துபுலன் - ஐம்புலன்களும், ஒருங்க - (தம்வயப்பட்டு ஒடுங்குமாறு) அடங்கி நிற்க, பொய் - பொய்யாகிய நிலையற்ற உலக வாழ்வை, ஒழிந்தாரும் - துறந்தவர்களும், கொலை - கொலைத் தொழில் நடைபெறும், ஞாட்பின் - போர்க்களத்தில், மொய்ம்பு உடை - கலங்காத வலியுடைய, வீரரும் - வீரர்களும், அஞ்சார் - மனங் கலங்கமாட்டார், முரண் - வலிமை படைத்த, மறலி - கூற்றுவன், தும்பை - (போர் தொடுத்தற்கு அறிகுறியாக) தும்பை மாலையை, முடி - தன்முடிமீது, சூடினும் - மிலைந்து வருவானாயினும்.

2. முரண் மறலி முடி தும்பை சூடினும், கலன்ழிந்த கற்புடைய பெண்டிரும், ஐந்து புலன் ஒருங்கப் பொய் ஒழிந்தாரும் கொலைஞாட்பின் மொய்ம்புடை வீரரும் அஞ்சார்.

3. கற்புடை மகளிர்க்கும், மெய்யறிவுடைய துறவிகட்கும் சுத்த வீரர்கட்கும் மரணம் துரும்பாம்.

4. "கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை." —குறள்.

"சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றியது
தான்வந்து முற்று மெனலாற்
சகமீ திருந்தாலும் மரணமுண் டென்பதைச்
சதாநிஷ்டர் நினைப்பதில்லை." —தாயுமானவர்.

5. "கற்புடைய அமங்கலிகளும் துறவிகளும் போர்வீரரும் மரித்தற்கு மஞ்சாது தம்மானத்தினைக் காப்பரென்பது கருத்து."
—அ. கு.

"உயிர்போலக் கருதித் தாம் வழிபட்ட கணவரை யிழந்த பெண்களும் தேகத்தாலாகிய மறுமைப்பயனைப் பெற்ற பெரியோரும் வெற்றியை மெய்ப் பொருளாகக் கருதிய சுத்தவீரரும் தம் உயிர்க்கஞ்சா ராதலின் 'முரண் மறலி தும்பை முடி சூடினும் அஞ்சார்' என்றார். —தி. சு. செ.

"கணவரை இழந்து கற்புநிலை தவறாத பெண்கள் இயல்பாகவே தம் வாழ்நாளில் வெறுப்புற்றிருப்பர். அன்றி, தம் கணவர் இருக்குங்கால் தாம் வாழ்க்கையில் இன்பமாய்க் காலங் கழித்ததும், அன்னார் இறந்தபின் தம் உலக வாழ்க்கை தமக்கு எப்போதும் மகிழ்ச்சியற்றிருப்பதுங் கண்டு மரணத்துக்குச் சித்தமா யிருப்பார்கள். ஐம்புலன் வென்ற துறவிகட்கு உலகப் பற்றே யிராதாகையால் அவர்களும் மரணத்தை மகிழ்ச்சியோடு எதிர்நோக்குவர். சுத்த வீரர் வீரசுவர்க்கம் விரும்பிப் போரில் தம் பகைவருடன் எதிர்த்து நிற்குங்கால் தம் உயிரைத் துரும்பாக மதித்துத் தமக்கு அல்லது எதிரிக்கு வெற்றி காணுமளவும் வீரமுடன் சண்டை செய்வர். தாம் தோற்க நேர்ந்துழி மானங் காப்பான் தம் இன்னுயிரை அக் கொலைக்களத்திலேயே கூற்றுவனிடம் ஒப்படைப்பர்." —இள.

**கலனழிந்த கற்புடைப் பெண்டிரும்:**

**கலன் அழிந்த**—மொழி யிறுதிப்போலி. "சிறப்புப்பற்றி மங்கலநாணை யுணர்த்திற்று." —வி. கோ. சூ.

"அழிந்த கலன்: தமக்கு அழகைச் செய்வதினின்றுங் கெட்டுப்போன நகை" —சி. மு.

கற்புடை பெண்டிர்க்குப் "பொற்றாலியோ டெவையும் போம்" என்னும் உலக வழக்கு நேர்க்கற்பாலது.

**ஐந்து புலனொருங்கப் பொய் யொழிந்தாரும்:**

**ஐந்துபுலன்**—"சுவையொளி யூறு ஓசை நாற்றம்" என்ற ஐம்புலன்கள். இவ் வைம்புலன்களிலும் மனத்தைச் செல்ல விடுத்துப் பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் மருளுடையதே இல்வுலக வாழ்க்கை. அவ்வாறு செல்ல விடாது உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காக்கும் ஆற்றல் படைத்தவரே மெய்யுணர்ந்த துறவியார்.

புலன்வழிச் சேறும் சிறுமையினை,

"வளைவாய்த் தூண்டிலி னுள்ளிரை விழுங்கும்
பன்மீன் போலவும்
மின்னுபு விளக்கத்து விட்டில் போலவும்
ஆசையாம் பரிசத் தியானை போலவும்
ஓசையின் விளிந்த புள்ளுப் போலவும்
வீசிய மணத்தின் வண்டு போலவும்
உறுவ துணராச் செறுவழி."

என்று பட்டினத்தடிகள் பாங்குறத் தீட்டியுள்ளார்.

ஒருங்க: இதனை "நொருங்க" என்று கொண்டு "அடங்க" எனப் பொருளுரைத்துள்ளார் சி. வை. தாமோதரம் பிள்ளை.

"ஒருமையுள் ளாமைபோல் ஐந்தடக்கலே" இங்கு 'ஒருங்க' எனக் குறிக்கப்பட்டதாம்."

பொய் யொழிந்தாரும்—"உலக இன்பம் நிலைபெறாதழிதலால் அதனைப் "பொய்" என்றார்." —கோ. இ.

"பொய் யொழிதலாவது, ஒருபொருளினை மற்றொரு பொருளாகக் கற்பித்து வழங்குங் கற்பனையை யொழித்து அதனுண்மையை யறிதல்." —தி. சு. செ.

"பொய் - பொய்மையாகிய இன்பத்தின்மேலது ஆதலால் பண்பாகு பெயராகிய குறிப்பினாற் பொருளறியுஞ் சொல்." —ஏ. எஸ். ஜ

"பொய் கடிந்தாரும்" என்று பாடங் கொண்டார் உ. வே சாமிநாதையர்.

கொலைஞாட்பில் மொய்ம்புடை வீரரும்:

கொலைஞாட்பு — "ஞாட்பினுண் மறைந்து நடுவறு வரத் தால்" எனக் கல்லாடத்தினுங் கூறுதல் காண்க." —வி. கோ. சூ

"வந்தார் மணஞாட்பின்" (காஞ்சிப் புராணம்) என்புழி. கூட்டம் என்னும் பொருள்பட நிற்பதுபோலாது நண்ணாருடன்,

பொருதும் ஞாட்பு எனத் தெரித்தற்கே "கொலை ஞாட்பு" எனக் குறித்தார்.

"உடம்பின் நிலையாமையை எப்பொழுதும் உள்ளத்திற் கொண்டிருத்தல் பற்றி வீரர், 'காஞ்சி சான்ற வயவர்' (பதிற்றுப் பத்து) எனப்பாராட்டப்படுதல் காண்க." —உ. வே. சா.

**அஞ்சார் முரண் மறலி:**

**மறலி** — "மறல் + இ; மாறுபாடுடையோன் என்பது உறுப்புப் பொருள். 'வாள்வரி வேங்கையு மான்கண மறலா' என்றார் சிலப்பதிகாரத்தினும். அறியார் இதனை 'ம்ரு' என்னும் வடசொற் றுதுவினடியாகப் பிறந்ததெனக் கூறி மயங்குவர்." —வி. கோ. சூ.

"மறலி - மறத்தொழில் செய்வதால் மறலி எனப் பட்டான்." —இள.

"மறலி - ஒருவரானும் மறுத்தல் இல்லான்." —ஏ.எஸ்.ஜெ.

**தும்பைமுடி சூடினும்:**

'தும்பை முடிச்சூடினும்' என்று பாடங் கொண்டார் உ. வே. சாமிநாதையர்.

"போருக்குச் செல்லுவோருடைய செயல். ஆதலால் தும்பை முடிசூடினும் என்பதற்கு உயிர் கவரும்படி வந்தாலும் என்பது பொருளாகக் கொள்க. இது காரணத்தைக் காரியமாகக் கூறுவதோர் வழக்கு." —ஏ. எஸ். ஜெ.

"தும்பை என்னு முதற்பொருள் சினைப் பொருளாகிய மலர்க்காதலிற் பொருளாகு பெயராகியும், அது தன்னாலாகிய மாலைக் காதலிற் கருவியாகு பெயராகியும் நிற்றலால் இருமடியாகு பெயர்." —தி. சு. செ.

"தும்பை—போர் செய்யுங் காலத்துச் சூடுகின்ற மலர் மாலை. இதனைச் 'செங்களத்து மறங்கருதிப் பைந்தும்பை தலை மலைந்தன்று' எனவும், 'போர் கருதித் துப்புடை தும்பை

மலைந்தான்றுகளறுசீர் வெப்புடைத்தானை யெம்வேந்து' எனவும் புறப்பொருள் வெண்பாமாலையானும், 'அதிரப்பொருவது தும்பை யாம்' என்னும் பாட்டியலானும் உணர்க.'' —வி. கோ. சூ.

''அரசருடைய கலங்காமையை எடுத்துக் கூறுவோர் மற்ற இருவரையும் உடன் கூறினமையின் இது ஒப்புமைக் கூட்ட அணி.'' —கோ. இ.

Virtuous matrons, who have laid aside their ornaments in widowhood; those, who having done away with falsehood, have brought the five senses to agree; and warriors, who, in the slaughterous field of battle, retain their courage; fear not, though grim Yaman assume the chaplet of *Drona* flowers.

—H. S.

Virtuous widows who have renounced their ornaments, sages who subduing their senses have relinquished the false pleasures of the earth and the heroes who stand undaunted in the field of battle, will fear not though the mighty regent of the dead appears before them adorned with a garland of thoombay* flowers. —C. M.

Virtuous matrons who have renounced their ornaments in widowhood, sages who subduing their senses have renounced the false pleasures of the earth and dauntless heroes who stand firm in the bloody field of battle, these three fear not the grim king of death even though he appears before them adorned with a garland of *Thumbai* flowers. —T.B.K.

Widows who head a chaste life having put off their adornments, saints who have renounced false pleasures having suhducd their seuses and veliout heroes fighting in the thick of a morral cambat have no fear of yama, even if the cames purproby equipped for waging war with them. —K. S.

* The wearing of which is a sign of challenge.

## 43. மெய்ப்பயன் கொண்டார்

புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறுங்
கழிமுடை நாற்றத்த வேனும்—விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோடு தற்கு.

1. புழு - புழுக்கள், நெளிந்து - நெளியப்பெற்று, புண் - புண்கள், அழுகி - அழுகி, யோசனை - நெடுந்தொலை, நாறும் - நாறுகின்ற, கழி - மிக்க, முடைநாற்றத்தவேனும் - தீ நாற்றத்தை யுடையனவாயினும், விழலர் - (உடம்பினாலாய பயனை யுணராத) வீணர், விளிவு - (அவ்வுடம்புகள்) செத்துப்போதலை, உன்னி - நினைத்து நினைத்து, வெய்துயிர்ப்பார் - பெருமூச்செறிவர்; மெய் - உடம்பினாலாய, பயன் - (அறப்) பயனை, கொண்டார் - (இன்னதென அறிந்து) கொண்ட அறிஞர், சுளியார் - முகத்தைச் சுளித்தலும் செய்யார், சுமை - உடம்பாகிய சுமையை, போடுதற்கு - போட்டுவிடுதல் கருதி.

2. விழலர் புழு நெளிந்து புண் அழுகி யோசனை நாறும் கழிமுடை நாற்றத்தவேனும், விளிவுன்னி வெய்துயிர்ப்பர்; மெய்ப்பயன் கொண்டார் சுமை போடுதற்குச் சுளியார்.

3. **உடம்பெடுத்ததனாலாய உண்மைப் பயன் உணர்ந்த அறிஞர் சாவிற்கு அஞ்சார்.**

4. "சத்திய வாக்குள்ளவனாயும், ஞான வைராக்கியங்களோடு கூடியவனாயும், தேகமாத்திர மிச்சமாயுள்ளவனாயும் (சந்நியாசி) வசிக்கவேண்டும்." —நாரத பரிவிராஜகோபநிஷத்.

"வேலைக்காரன் தனக்கு யஜமானன் சம்பளம் கொடுக்கும் நாளை எதிர்பார்ப்பதுபோலத் தன் தேகநாச காலத்தை (சந்நியாசி) எதிர்பார்த்திருக்கவேண்டும்."

—மநுதர்மசாத்திரம்.

"உயிர்க்குறுதி யெல்லா முடம்பின் பயனே
அயிர்ப்பின்றி யாதியை நாடு." —ஔவை குறள்.

"மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை." —குறள்.

"கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேங்காற் றுயராண் டுழவார்
வருந்தி யுடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்காற் பரிவ திலர்." —நாலடியார்.

மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை அவையுள்வழி
பற்றா வினையாய்ப் பலபல யோனிகள்
அற்றா யுழலு மறுத்தற் கரிதே. —வளையாபதி.

5. ஆகவே, புன்னுனிமே னீர்போல் நிலையாமை யுடைத்து இவ்வியாக்கை யென்றெண்ணி இன்னினியே செய்க அறவினை என்பது சொல்லெச்சம்.

"உடம்பின் தூய்தன்மையும் அதனாற் பயன் கொண்டார்தது மேன்மையும் கூறப்படும்." —உ. வே. சா.

"இப்பாட்டின் முழுமைக்கும் அருணகிரிநாதர் தக்க சான்றாகிறார். அவர் மெய்ப்பயன் காணுமளவும் உலகப்பற்றில் மிகுதியும்பற்றிக் கண்டபடி திரிந்தலைந்து, காம வேட்கையால் பல கன்னியரைச் சேர்ந்து, கைப்பொருளெல்லாஞ் செலவாகி, "புழு நெளிந்து புண்ணழுகி யோசனை நாறுங் கழிமுடை நாற்ற' முற்ற பெருநோய் வந்தபோதும் மெய்ப்பயன் அறியாதிருந்தமையால், தாமடைந்த பெருநோய்க் காகவேனும் தம் வறுமை நிலைக்காகவேனும் வருந்தாமலில்லை. தம் அக்காளை நாடி......................பொருள் கேட்டதும்... ................ அவ்வமயம் அருணகிரிக்கு மெய்ப்பயன் விளங்கவும், அவர் உடனே உயிரை வெறுத்துச் சுமைபோடச் சுளியாது, திருவண்ணமலைக் கோபுரமீதேறிக் குதித்ததும் நோக்கற்பால. —இள.

**புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறும்:**

**நெளிந்து**—"நெளிய வென்னும் செயவெனெச்சத் திரிபு." —வி. கோ. சூ.

**புண்**—உடம்பிற் செறிந்து நிறைந்த புண்கள்.

**யோசனை**—"பத்து நாழிகை யளவைக் கொண்ட தூரம். இது நெடுந்தூரம் என்பதை யுணர்த்தற்குக் காட்டியதோ ரளவைப் பெயர்." —கோ. இ.

யோசனை — காதம்; அது முப்பத்திராயிர முழ அள வுள்ளது. (32,000 முழம் 9 மைலுக்குச் சற்று மேற்பட்டது). —ஊ. பு. செ.

"யோசனை ஆறு நாழிகை வழித்தூரம்; அஃது ஈண்டு நெடுந்தூரமென்பதைக் காட்ட நிற்பதோரளவை." —வி. கோ. சூ.

"நாறு மென்னும் பெயரெச்சம் நாற்றத்த வென்னும் குறிப்பு வினைப்பெயரில் நாற்றமென்னுஞ் செயற் பெயரைக் கொண்டது." —வி. கோ. சூ.

**கழிமுடை நாற்றத்த வேனும்:**

**முடை**—"புலால் நாற்றமாகிய சிறப்புப் பெயர்; நாற்றம் - பொதுப் பெயர்; ஆதலால் முடைநாற்றம் - இருபெயரொட்டுப் பண்புத் தொகைநிலைத் தொடர்." —கோ. இ.

"எல்லாப் படியாலு மெண்ணினு லிவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை." என்பது நல்வழி.

"நாற்றத்த தேனும்" எனப் பாடங் கொண்டார் **தி. சுப்பராய செட்டியார்.**

**விழலர் விளிவுன்னி வெய்துயிர்ப்பர்:**

**விழலர்**—"வீணர் - எனவே பிறப்பின் பயனிலார்." இனி விழல் என்பது பசு முதலிய விலங்குகட்கும் பயன்படாத ஒரு வகைப் புல்லாதலின் அது போன்ற விழலர் எனப் பொருள் கூறுதலுமாம்." —வி. கோ. சூ.

விழலர் — "உவமையாகு பெயர். விழல் உள்ளீடின்றி யிருப்பதுபோல் அறிவெனும் உள்ளீடிலார் விழலுக்கு உவமை சொல்லப்பட்டார்." —இள.

விழலர்—"விருஷல' என்னும் வடமொழித் திரிபு; இழிந்தோரென்பது கருத்து." —ஊ. பு. செ.

விழல்—என்பது வெறுமை என்னும் பொருட்டு; வெறுமையை யுடையவர் விழலர். —சி. மு.

**வெய்துயிர்ப்பர்**—"வெப்பமான சுவாசத்தை விடல்." —சி. மு.

**மெய்ப்பயன் கொண்டார் சுளியார் சுமை போடுதற்கு:**

**மெய்ப்பயன் கொண்டார்—**

" அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்
பெரும்பயனு மாற்றவே கொள்க—கரும்பூர்ந்த
சாறுபோற் சாலவும் பின்னுதவி மற்றதன்
கோதுபோற் போகு முடம்பு." —நாலடியார்.

இச் செய்யுளான், யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர் தாம் பெற்ற யாக்கை நிலையாமையை புணர்ந்து எம்பிரான் மன்றினை வழுத்துதலே ஆய மெய்ப்பயனும் என்பது பெறப் படும்.

**சுளியார் சுமை போடுதற்கு**—வெறுப்பைக் குறிக்கும் முகச் சுளிவு. அதுதானும் செய்யார் என்பதால் சாவிற்குச் சிறிது மஞ்சார் என்பது இனிது பெறப்படும்.

"சுளித்தல் என்பது முதலில் முகஞ் சுருங்குதலை யுணர்த்தி அதன்பின் அதற்குக் காரணமாகிய வெறுப்பினை உணர்த்தி நின்றமையின் காரியவாகு பெயர்." —வி. கோ. சூ.

"சுமை சுமப்போன் சுமைப்பாரந் தாங்காது அதைக் கொண்டு இறக்குமிடம் வருமட்டும் வருந்தி நடந்து அவ்விடங் கண்டவுடன் மகிழ்ச்சியால் தன் தலைமீதிருக்குஞ் சுமையை இறக்கி மனமகிழ்தல்போல், உடம்பெடுத்த பயனறிந்த அறிஞர் அவ்வுடம்பாகிய சுமையைச் சுமந்து திரிய வருத்தமடைந்து அச்சுமையைப் போடுங்காலங் கண்டால் மகிழ்ச்சி கொள்வாராகையால் சுமை போடுதற்குச் சுளியார் என்றார்." —இள.

"சுமை—சும பகுதி, ஐ செயப்படுபொருள் விகுதி; சுமக்கப் படுவதென்பது பொருள்; பகுதி யீற்றகரம் கடைக்குறை; இவ் வாறே பிற, நட என்பவற்றினடியாகப் பிறை நடை யென்பன வருவதுங் காண்க. "போடு" இது போகடு என்பதன் திரி பெனவும், புகவிடு என்பதன் திரிபெனவும் இருவிதமாகக் கூறுவர்; இவற்றுள் முன்னையதே சிறப்புடைத்து."

—வி. கோ. சூ.

Fools will sigh deeply at the thought of death, though their bodies be corrupted with sores full of crawling worms, the rank odour of which may be perceived at the distance of five miles: but those who have derived the true advantage of the body, will not shudder to lay down the burden. —H. S.

Although the body be festered with sores, eaten up by worms, rank with noxious stench which diffuse itself a யோசனை distance around, the fool will have deep and painful groan at the very thought of death. Those who have rightly availed themselves of their body will not be sorry to cast off that burden. —C. M.

Fools sigh deeply at the thought of death, though their bodies be corrupted with sores full of crawling worms and the festering smell is felt at a distance of a *yojana* (about ten Miles). While those who have put their body to agood use do not shudder to shuffle off burden. —T. B. K.

The worthless set of people will gasp in awe at the thought of death; although their body is festering in gems, full of rotten saves, entting forther their rank putrid shink for a distance of miles. On the other hand the worthy who have realised for themselves the true end of birth will not wince at cashing off their burden. —K. S.

## 44. மன்பதை

இகழி னிகழ்ந்தாங் கிறைமக னொன்று
புகழினு மொக்கப் புகழ்ப-இகன்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செய்யும்
நீர்வழிப் பட்ட புணை.

1. இகழின் - (ஒருபொருளை) இகழ்வானாயின், இகழ்ந்து - (தாமும் அவனோடொக்க) இகழ்ந்து, ஆங்கு - அவ்வாறிகழ்ந்தபொழுதே, இறைமகன் - அரசன், ஒன்று - அவ்வொருபொருளை, புகழினும் - புகழ்ந்தாலும், ஒக்க - அவனோடுகூட (அவனோடொக்க), புகழ்ப - புகழ்வார்கள்; இகல் - வலிமை (பொருந்திய), அரசன் - அரசன்தன், சீர்வழிப் பட்டதே - குறிப்பினோடொட்டிச் செல்லும் இயல்புடையதே, மன்பதை - மக்கட் பரப்பு; மற்று என் செய்யும் - (ஓடு நீரோடு கூடிச் செல்லாது) வேறு என்ன செய்யும், நீர் வழிபட்ட - ஆற்று நீரின் கண் அகப்பட்ட, புணை - தெப்பம் ?

2. இறைமகன் ஒன்று இகழின் இகழ்ந்து ஆங்கு (அவ் வொன்றையே உடன்) புகழினும் ஒக்க மன்பதை புகழ்ப; (அம்மன்பதை) இகன் மன்னன் சீர்வழிப்பட்டதே. நீர்வழிப் பட்ட புணை வேறு என்செய்யும் ?

3. **மன்னனெப்படி மன்னுயி ரப்படி.**

4. குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல். —குறள்.

5. "அரசன் செல்லும் வழியே குடிகள் செல்லுமாதலின் அதனை அறிந்து நல்வழியிலே அவன் செல்லுதல் வேண்டு மென்பது குறிப்பு." —உ. வே. சா.

"அரசன் அன்று கொல்லும், தெய்வம் நின்று கொல்லும்" என்பது பழமொழியாகையால் அரசன் எவ்வழி அவ்வழி குடிகள் நடக்க வேண்டும். இன்றேல் அரசன் ஆருயிரையும் வாங்கிவிடுவான். கோவலன் தன் முற்பிறப்பில் அரசன் கட்டளையை மீறி அடைக்கப்பட்டிருந்தும், யாரும் அதைத் திறந்து தொழக் கூடாது என்று அரசனால் கட்டளை யிட்டிருந்

தும் அதை மீறிக் காளிதேவியின் கோயிலைத்திறந்து தொழுத தால் அரசன் அவனைக் கொல்லும்படி சொன்னதும் இங்கு நோக்கற்பால." —இள.

"நீரோட்டத்தி லகப்பட்ட தெப்பம் அதன் வழியே போவதுபோல அரசன் தாட்சண்ணியத்திற் குட்பட்ட ஜனம் அவனிச்சையின்படி செல்லும்; ஆதலின் அவரெல்லாம் அரச னுக்கும் குடிகளுக்கும் நன்மை செய்பவராகார் என்பது கருத்து." —ஊ. பு. செ.

**இகழினிகழ்ந்தாங்கு இறைமகன்:**

**இகழின்**—செயின் என்னும் வாய்பாட்டு எதிர்கால வினை யெச்சம். இன் விகுதி எச்சத்தையுங் காலத்தையுங் காட்டிற்று.

**ஆங்கு**—இங்கே, அப்பொழுதே; அஃதாவது இகழ்ந்து வாய்மூடு முன்னரே என்னும் பொருட்டு.

**இறைமகன்**—"இறையாகிய மகன் என விரிதலால் இரு பெயரொட்டுப் பண்புத் தொகை." —வி. கோ. சூ.

**ஒன்று புகழினு மொக்கப் புகழ்ப:**

**புகழினும்**—இதன்கண் உம்மை இறந்தது தழீஇய எச்சப் பொருளது.

**புகழ்ப**—"பல்லோர் படர்க்கை யெதிர்கால வினைமுற்று. புகழ் - பகுதி; ப விகுதி, செய்பவனையும் எதிர்காலத்தையுங் காட்டிற்று" —வி. கோ. சூ.

"பகர விகுதியே பாலிடங் காலத்தைக் காட்டியது" —கோ. இ.

**இகன் மன்னன் சீர்வழிப்பட்டதே மன்பதை:**

**இகல்**—வலிமை; மாறுபாடுமாம்.

"இகல் - முன் ஒன்றனை இகழ்ந்து, பின் அதனையே புகழும் மாறுபடுந்தன்மை." —கோ. இ.

"இகல் மன்னன் - இகலு மன்னன் எனப் பொருள் கொள்ளில் வினைத்தொகையாம். இகலுதல் - போர்செய்தல்."
—தி. சு. செ.

**சீர்வழிப்பட்டதே**—சீர் என்பதற்குக் "காந்தி" என்று பொருளுரைத்து, "காந்தியாவது அரசனுறங்கினுஞ்" சென்றுலகங்காக்கு மவனது கடவுட்டன்மை. "உறங்குமாயினும் மன்னவன்றன்னொளி கறங்கு தெண்டிரை வையகங் காக்கு மால்" என்பது சிந்தாமணி" என விரித்துரைத்தார் **அ. குமாரசாமிப் புலவர்.**

"சீர் வழிப்பட்டது - நிலைவழிப் பட்டதாம்" —சி. வை. தா.

**மன்பதை**—சொல்லளவில் அஃறிணை.

**மற்றென் செய்யும் நீர்வழிப்பட்ட புணை:**

**மற்று**—"பிறிதென்னும் பொருட்கண் வந்தது." —இ. கோ.

"செல்லும் வினையை மாற்றி நிற்றலால், வினை மாற்றுப் பொருளில் வந்த இடைச்சொல்." —தி. சு. செ.

**புணை**—புணைக்கப்பட்டது.

"இக் கருத்தினை 'நாண் வழிக் காசுபோலவும் நீர் வழி மிதவை போலவும்' என்னும் **இறையனாரகப் பொருளுரையின்** கட் காண்க." —வி. கோ. சூ.

இஃது **எடுத்துக்காட்டுவமையணி.** —வி. கோ. சூ.

வேற்றுப்பொருள் வைப்பணி என்பர். —தி. சு. செ.

If the prince speak contemptuously, they will speak likewise; and if he praise, they will praise, in epual terms; thus the world are led according to the taste of the warrior king. What else does the boat, that is borne along the current of the water? —H. S.

Contemning if the monarch contemns, and commending to his wish if he commends, the populace follow the varying tastes and humors of their sovereign. What can the vessel do when it is borne along by a violent current in the waters? —C. M.

Censuring when a monarch censures, commending when he commends, the people follow but their sovereign, even as raft that is borne along the current. —T. B. K.

---

## 45. அமைச்சு

செவிசுடச் சென்றுங் கிடித்தறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா—கவிழ்மதத்த
கைம்மா வயத்தவே பாகுமற் றெத்திறத்தும்
அம்மாண் பினவே யமைச்சு.

1. செவி - காது, சுட - சுடும்படி, சென்று - (தாமே அரசனை) அணுகி, இடித்து - (குற்றமாயினவற்றை எடுத்துக்காட்டி) இடித்துரைத்து, அறிவுமூட்டி - (உறுதி மொழிகளைக் கூறி) அறிவுறுத்தலான், வெகுளினும் - (அரசன்) சினந்தானாயினும், வாய்வெரீஇ - (அப்போது) சொல்லுதற்கு அஞ்சி, பேரா - (அறிவுறுத்தலை விட்டு) அகலார்; கவிழ் மதத்த - பெருகுகின்ற மதத்தையுடைய, கைம்மா - யானையினது, வயத்தவே - வசப்பட்டு நடப்பவர் ஆவரோ, (ஆகார்), பாகு - யானைப்பாகர்? எத்திறத்தும் - (அதுபோன்றே) எவ்வாற்றானும், அம்மாண்பினவே - அச் சிறப்புத் தன்மையுடையவரே, அமைச்சு - அமைச்சராவர்.

2. பாகு கவிழ் மதத்த கைம்மா வயத்தவே? சென்று செவிசுட இடித்து அறிவு மூட்டி வெகுளினும் வாய்வெரீஇப் பேரா அமைச்சு அம்மாண்பினவே.

3. **மிகுதிக்கண் சினமஞ்சானாய் மேற்சென் றிடித்துரைக்கும் ஆற்றல் வாய்ந்தவனே அமைச்சனாவான்.**

4. "அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன்." —குறள்.

"கதங்கொள் சீற்றத்தை யாற்றுவா னினியன கழறிப்
பதங்கொள் பாகனு மந்திரி யொத்தனன் பன்னூல்
விதங்களா லவன் மெல்லென மெல்லென விளம்பு
மிதங்கள் கொள்கிலா விறைவனை யொத்ததவ் வேழம்."
—கம்பராமாயணம்.

"அரைசர் சீறுவ ரேனு மடியவர்
உரைசெ யாதொழி யார்க ளுறுதியே."
—கலிங்கத்துப்பரணி.

"மன்னவர் செவியழன் மடுத்ததாமென
நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவ ரமைச்சர்கள்." —கந்தபுராணம்.

5. "அரசன் வெகுண்டபோதும் நீதிகூறுதல் மந்திரியின் கடமை யென்பது இதிற் கூறப்படும். அரசனை யானையாகவும், அமைச்சனைப் பாகனாகவும் கூறும் மரபு, "மதச் செருக்கால் பாகன் தோட்டியை நீவுமாறு போலக் காமக்களிப்பால் தன் அமைச்சர் கூற்றைக் கடத்தல் நோக்கி, களிறனான் என்றார் (சீவக சிந்தாமணி - நச்சினார்க்கினிய ருரை) என்பதனால் விளங்கும்." —உ. வே. சா.

"யானை தன்னியல்பி லிருக்கும்போது அதனைத் தம் வசப்படுத்தி நடத்தும் பாகர் அது மதங்கொண்டு தம்வச மடங்காமல் ஓடும்போதும் அதனை விடாது சென்று அதன் காதுகளில் அங்குசம்போட்டு இடித்து அதன் மதத்தை அடக்கி மறுபடியும் அதனைத் தன்னியல்பிற்குக் கொண்டுவருவது போல், அரசன் தன்னியல்பில் நின்றபோது அவன் மனம் போல் நடக்கும் அமைச்சர் அவன் வெகுண்டு தன்னிலை தவறுங்கால் அவன் செவிகளில் நன்மொழிகளை இடித்துரைத்து அவனுக்கு அறிவுபுகட்டி அவனை மறுபடியும் தன்னியல்பிற்குக் கொணர்வர் என்று அழகாக உவமிக்கிறார் ஆசிரியர். —இள.

"இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு உறுதி பயக்கும் அமைச்சு. 'யானை யறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் என்றும்', 'அரசனுனன்றே அமைச்சு இறாஉமன்' என்றும், கூறிய பிறரோடு இந்நூலாசிரியரும் உடம்பட்டன ரென்க." —சி. வை. தா.

**செவிசுடச் சென்றுங் கிடித்தறிவு மூட்டி:**

சுட—"காரியப் பொருட்டாகிய செயவெனெச்சம்." —வி. கோ. சூ.

மீண்டும் மீண்டும் இடிப்பதனாற் செவி சூடேறியது எனக் கொள்க.

**சென்று ஆங்கு**—ஆங்கு அசை. சென்றுங்கு எனக்கொண்டு அப்போதைக்கப்போது அணுகியவண்ணம் எனப் பொருள் கூறினும் அமையும்.

**இடித்து**—"இடித்தல் - உறுதிமொழிகளை யெடுத்து வற் புறுத்திக்கூறல்." —வி. கோ. சூ.

**அறிவு மூட்டி**—"அறிவு மூட்டல் - நல்லறிவுச் சுடர் கொளுத்தல். இப்பொருள் மூட்டி யென்னுஞ் சொல்லாற் றலினுலே வலி யுறுவதாயிற்று." —வி. கோ. சூ.

**வெகுளினும் வாய் வெரீஇப் பேரா:**

**வெகுளினும்** — இதன்கண் உம்மை உயர்வுசிறப்பினது; இஃதெதிர் மறைப் பொருட்டென்பாரு முளர். —வி. கோ. சூ.

**வாய் வெரீஇ**—வாய் இஃது அதன் சொல்லுதற்காதலால் கருவியாகுபெயர். வெரீஇ - இது சொல்லிசை நிரப்பவந்த உயிரளபெடை. —வி. கோ. சூ.

வாய் — "கருவியாகு பெயர்; இடவாகு பெயரெனல் குற்றம்." —கோ. இ.

**கவிழ் மதத்த கைம்மா வியத்தவே பாகு:**

**கவிழ் மதத்த**—"கவுண் மதத்த" என்று பாடங்கொண்டு கதுப்பிலிருந்தொழுகும் மதத்தினையுடைய என்று பொரு ளுரைத்தாரு முளர்.

**"வயத்ததே"** என்றும் பாடம்.

"யானை தன்னியல்பி னின்றபோது தன்வசப்படுத்தி நடத்தும் பாகர், அது மதத்தால் வசமழிந்து தப்பியவழி யதனைவிடா துபசரித்து அதன்வழி நடப்பர் என்பது தோன்றக் 'கவிழ் மதத்த' எனவும் 'எத்திறத்த' எனவுங் கூறினர். இவ் வுவமைக் கேற்ப அரசன் தன்னியல்பினின்றபோது அவன் வசப்பட்டு நடந்து, அதனி னீங்கியபோது அவனைக் கைவிடாது உபசரித்து அவன் வசத்தாராய் அமைச்சர்கள் நடக்கவேண்டும் என உவமேயத்துக்கும் பொருள் விரிக்க." —தி. சு. செ.

**மற்றெத் திறத்தும் அம்மாண்பினவே யமைச்சு:**

**அமைச்சு**—"இஃது "அமாத்தியர்" என்னும் வடசொற் சிதைவென்பர்." —வி. கோ. சூ.

"கூட இருப்பவர்" என்னும் பொருளில் வந்த 'அமாத்தியர்' என்னும் வடசொல் தமிழில் 'அமைச்சர்' என வந்து இடை நிலைப் போலியால் "அமைச்சர்" என நின்றது. —தி. சு. செ.

கருவியுங், காலமும், செய்கையும், செய்யும் அருவினையும் வன்கண்மையும், குடிகாத்தலும், கற்றறிவும், ஆள்வினையும், பிரித்தற்றிறனும், பொறுத்தற்றிறனும், தெரிதலும், தேர்ந்து செயலும், துணிவுரைத்தலும், மதிநுட்பமும், நாநலமும், வினைத்தூய்மையும் இன்னும் இவைபோன்ற எண்ணரிய சிறந்த குணங்கள் பலவும் வாய்ந்தவனாய் "காவற்சாகா டுகைத்தற்" கண் அரசற்கிணையாய நிலையுடையனாய், அரசனால் தேர்ந்தமர்த்தப் பெற்றுப் பணியாற்றுதற்கு அமைந்த அமைச் சனை "அமை" என்னுந் தமிழ்ச்சொல் லடியாகப் பிறந்த சொல்லாகக் கொள்வதே, கூட இருப்பவர் என்று மட்டும் பொருள்படும் "அமாத்தியர்" என்ற வடசொல்லினடியாகப் பிறந்தது என்று கொள்வதினும், சிறந்ததாகத் தோற்று கின்றது.

The keeper approaches the elephants when liquid flows from its temples in the season of frantic violence; and, as he perfects its discipline by repeated blows until its ear burns with pain, however enraged it be, flinches not in fear, but keeps the chrage: such in every respect is the nature of the king's minister. —H. S.

The ministers will not fail to approach the king and awake him to the calls of reason, assailing his ears with their counsels, undeterred by incurring his displeasure. The lusty elephant is under the sway of its *பாகன்* and the ministers of a king are also of his nature. —C. M.

The ministers approach the king and give wise counsels to him, undeterred by the fear of incurring his displeasure. The keeper has command over an elephant in rut; the ministers of a king are also of his nature. —S. W.

True ministers fail not to approach the king and rouse him to the call of reason, assailing his ears with their good counsels undeterred by fear of his anger. The lusty elephant is guided by its drive and even so, the ministers of a king are to him. —T. B. K.

---

## 46. செவ்வி தெரிந்துரைத்தல்

கைவரும் வேந்த னமக்கென்று காதலித்த
செவ்வி தெரியா துரையற்க—ஒவ்வொருகா
லெண்மைய னேனு மரியன் பெரிதம்மா
கண்ணில னுள்வெயர்ப்பி னன்.

1. கைவரும் - மிகப் பழகினவன், வேந்தன் - அரசன், நமக்கு - நம்முடன், என்று - என்று கருதி, காதலித்த - தாம் விரும்பியவற்றை

யெல்லாம், செவ்வி - சமயம், தெரியாது - (ஏற்றதுதானு என) உணர்ந்தறியாது, உரையற்க - (எவரும்) சொல்லாதிருக்கக் கடவர்; (என்னை !) ஒவ்வொருகால் - ஒரோவொரு சமயத்தில், எண்மையன் - (காட்சிக்கும், பேச்சுக்கும்) எளியவனு யிருந்தான், எனும் - ஆயினும், அரியன் பெரிது - (மற்றைக் காலங்களில்) மிகவும் அரியவனு யிருப்பான்; அம்மா - (அது மட்டுமோ) அம்மம்ம! கண் - கண்ணேட்டம் என்பது, இலன் - இல்லாதவன், (அன்றியும்) உள் - உள்ளுக்குள்ளேயே, வெயர்ப்பினுன் - சினந்துகொள்ளும் இயல்பினையு முடையான் (ஆதலின்).

2. வேந்தன் ஒவ்வொருகால் எண்மையனேனும் பெரிதும் அரியன், அம்மா! கண்ணிலன், உள் வெயர்ப்பினுன்; நமக்குக் கைவரும் என்று காதலித்த செல்வி தெரியாது உரையற்க.

3. செவ்வி யறிந்து ஏற்றன சொல்வான் அமைச்சன்.

4. பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும். —குறள்.

கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர். —குறள்.

குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல். —குறள்.

சிறப்புடை மன்னரைச் செவ்வியி னேக்கித்
திறத்தின் உரைப்பார்க் கொன்றுகாத தில்லை
விறற்புகழ் மன்னர்க் குயிரன்ன ரேனும்
புறத்தமைச்சின் நன்றகத்துக் கூன். —பழமொழி.

5. "மன்னரைச் சார்ந்தொழுகும் முறை கூறப்படும்."
—உ. வே. சா.

"இதனனே எதையுஞ் சமயமறிந்தே பேசல் வேண்டும் என்னும் பொதுநியமம் போதரா நிற்பவும், இதனை அமைச்சியலின்பாற் படுப்பாருமுளர்; அது பொருந்துமேற் கொள்க."
—வி. கோ. சூ.

"அரசன் நமக்குப் பழகினவனென்று, ஒருவன் சமயந் தெரியாமல் தனக்கு வேண்டியதைச் சொல்லிக்கொண்டால்

அக்காரியம் பயன்படாமற்போவது மல்லாமல் தானும் தண்டனை யடைவானென்பது கருத்து.'' —கோ. இ.

"அரசன் தன் கருமத்தை முடிக்கும்படி அடிக்கடி பல வடிவங்கொள்ளுவானென மனுக் கூறுதலால் முன்னர்ப் பழக்கம்பற்றிக் கைவரும் என்றெண்ணல் பழுதாம்.'' —அ. கு.

"அரசனைக் கண்டு தத்தங் குறைபாடுகளைக் கூறப் பற்பல அதிகாரிகளும், புலவர்களும், குடிகளும், அயல்நாட்டு மன்னரின் தூதுவர் முதலியோரும் தருணம் பார்த்து நிற்பர். அரசன் எல்லோரையும் உசாவி அவரவர்க்கு மறுமொழி சொல்வதில் எப்போதும் ஆவலுடையவனா யிருப்பன். மேலும் அவரவர்க்கு ஏற்ற விதம் அவரவர் குறைபாடுகள் நீக்க நெடுநேரம் ஆழ்ந்து யோசிக்க வேண்டியவனுயு மிருப்பன். அவ்வமயங்களில், அவன் மனநிலை தெரியாமல் எவ்வளவு உயிர்த்தோழரா யிருந்தாலும் காலமறியாமல், அவனிடம், ஏதாவது மொழிந்தால் அவன் சிந்தனை சிதறுண்டு அதனா லவன் சீற்றங் கொள்வானன்றோ? ஆகையால் செவ்வி யறிந் துரைக்க.'' —இள.

**கைவரும் வேந்தன் நமக்கென்று:**

கைவரும்—அமைந்தவன் என்றும் வழிபடுவான் என்றும் இதற்குப் பொருள் கூறினருமுளர்.

"கைவரும்" - ஒரு சொன்னீர்மைத்து; கைவா - பகுதி.

"கைவரூஉம்" என்று பாடங் கொள்வாருமுளர்.

**காதலித்த செவ்வி தெரியா துரையற்க:**

**காதலித்த** — "காதல் என்னும் பெயரடியாகப் பிறந்த பலரின் படர்க்கை இறந்தகால வினையாலணையும் பெயர்; காதல் என்னும் பெயரை வினைப்படுத்தும் இகர விகுதி புணர்ந்து நின்ற காதலி - பகுதி; இவ்வாறே "சித்திரம்" என்பதனடியாகச் "சித்திரி" எனவும், "கடைக்கண்" என்பத னடியாகக் "கடைக்கணி" யெனவும் வருதல் காண்க.

—வி. கோ. சூ.

**செவ்வி**—"பண்படியாகப் பிறந்த ஒன்றன் படர்க்கைப் பெயர். செம்மை - பகுதி, இ - ஒன்றன் படக்கை விகுதி. பொருள் - செம்மையுடையது. செம்மை - பக்குவம்."
—ஏ. எஸ். ஜே.

"செவ்வி - ஒருவன் தான் கொண்ட கருத்தினை யெடுத்துக் கேட்போர் உளங்கொளச் சொல்லுதற்காம் அமயம்."
—வி, கோ. சூ.

**பெரிதம்மா:**

**அம்மா** - வியப்பிடைச் சொல்.

**கண்ணிலன் உள் வெயர்ப்பினன்:**

"உறவினர் அயலினர் என நோக்காது நீதியின்வழி நிறுத்தத் தண்டித்தலும், காலம் வருமளவும் பகைவரறியாமல் உள்ளே கோபித்தலும் சாதி தருமமாதலால், கண்ணிலன் உள் வெயர்ப்பினன்' என்றார்."
—தி. சு. செ.

"கோல்நிலை கோடா வேந்தன் கோல்நிலை கோடாநிற்க உறவினர் அயலார் என நோக்காது அறநெறி நின்று அந்நெறி பிறழ்ந்தாரைத் தண்டித்தலும் காலம் வருமளவும் பகைவரறியாமல் உள்ளே சினங் கொள்ளலும் இயல்பாதலால் 'கண் இலன் உள் வெயர்ப்பினன்' என்றார்."
—இள.

**வெயர்ப்பினன்**—"கோபம் என்னுங் காரணத்தை அந்வந்தவழி யுண்டாகும் வெயர்வையாகிய காரியமாக உபசரித்தார். இது உபசாரம்."
—தி. சு. செ.

"இது வடசொற் சிறிதுங் கலக்கப்பெறுத தனித்தமிழ் வெண்பாவாதல் காண்க."
—வி. கோ. சூ.

Utter not all your desire, without observing the proper season in the belief the king is under your influence; though occasionally he may be easy to manage;—yet how difficult is he when destitute of mercy, and burning with inward rage!
—H. S.

Labouring under the delusion that the King is a friend of yours, do not request of him what you want, on unseasonabe occasions. Although occasionally easy of access he will generally be inaccessible. He is devoid of mercy and broods malignity. —C. M.

Speak not your wish to a king without knowing the proper time, believing him to be very much under your influence; for, he that is easy of access might not always be favourable; he might be devoid of mercy and bear malice. —T. B. K.

---

## 47. இறைமாண்டார் வெகுளி

பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார்
கிழமை பிறிதொன்றுங் கொள்ளார்—வெகுளின்மன்
காதன்மை யுண்டே யிறைமாண்டார்க் கேதிலரும்
ஆர்வலரு மில்லை யவர்க்கு.

1. பழமை - (அமைச்சராக இவர் நமக்கு நீண்டகாலமா யுள்ளார்) என்னுந்) தொன்மை நட்பை, கடைப்பிடியார் - உறுதியாகப் பற்றிக் கொள்ளார், கேண்மையும் - (இவர் நமக்கு) உறவினராந் தன்மை யுடையார் என்பதையும், பாரார் - நோக்கார், கிழமை - (அவை ஒழிய) உரிமையாக, பிறிதொன்றும் - வேறெதனையும், கொள்ளார் - உள்ளத்திற் கொள்ளார்; வெகுளின்மன் - (குற்றங் கண்டு) மிகுதியுங் கோபங் கொள்வாராயின், காதன்மை - (ஒருவர்மேல்) அன்புடைமை, உண்டே - உண்டோ, இறை - அரசிலக்கணத்தில், மாண்டார்க்கு - மாட்சிமைப் பட்டவர்க்கு ? ஏதிலரும் - அயலார் என்பதும், ஆர்வலரும் - அன்பிற் குரியார் என்பதும், இல்லை - இல்லை, அவர்க்கு - (அரசராகிய) அவர்க்கு.

2. மன் வெகுளின், பழமை கடைப்பிடியார், கேண்மையும் பாரார், பிறிது கிழமை ஒன்றும் கொள்ளார்; இறைமாண்டார்க்கு, காதன்மை உண்டே அவர்க்கு ஏதிலரும் ஆர்வலரும் இல்லை.

**3. நடுவுநிலைமையுடை மையா யிருத்தலே இறைமாட்சிப் பண்பாதலறிந்து அதற்கேற்க நடந்துகொள்ளல் அமைச்சர்க்குக் கடனும்**

4. ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டும்
தேரிந்துசெய் வஃதே முறை. —குறள்.

பழைய மெனக் கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும். —குறள்.

"எங்கண் இனையர் எனக்கருதின் ஏதமால்
தங்கண்ண ரானும் தகவில கண்டக்கால்
வன்கண்ண னாகி ஒறுக்க, ஒறுக்கல்லா
மென்கண்ணன் ஆளான் அரசு." —பழமொழி.

"புரைதவப் பயனோக்கார் தம்மாக்க முயல்வாரை
வரைவின்றிச் செறும்பொழுதிற் கண்ணோடா துயிர்வௌவும்
அரைசு." —கலித்தொகை.

"நீ மெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி." —புறநானூறு.

"மன்னரை யடைந்து வாழ்தல் வஞ்சகஞ் சுடையநாகந்
தன்னொடு கூடிவாழுந் தன்மை."—திருவாதவூரர் புராணம்.

"வேந்தன் சீறின் ஆந்துணை யில்லை." —கொன்றைவேந்தன்.

"இச்செய்யுட்கு, இறைமாண்டார், மன் வெகுளிற், பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார் பிறிதொரு கிழமையுங் கொள்ளார், ஆதலின் அவர்க்குக் காதன்மை யுண்டே, ஏதிலரும் ஆர்வலரும் இல்லை, என விகுதி பிரித்துக் கூட்டி முடித்தலுமொன்று; இனி இவ்வாறன்றி அரசரோடு பழகுதல் நெருப்பாற்றின்மீது மயிர்ப்பாலத்தின் வழிச்சேரல் போலுமாதலின் அவர்தம்மோடு பழகுங்கால் மிக்க கவலை யோடு பயிறல் வேண்டுமென்னுங் கருத்துப்படப் பொருள் கூறினுமமையும். எவ்வாறு கொள்ளினும் 'இறை மாண் டார்க்கு' எனவும் 'அவர்க்கு' எனவுங் கூறும் 'இரண்டு நான் கனுருபினுள் ஒன்று 'நின்றுவற்றல்' என்னுங் குற்றமுடைத்தா

மென்பது. இச் செய்யுளை அக் குற்றத்தி னீக்கக் கருதியோர் 'இன்ற மாண்டார்க்கு' என்புழி 'இறைமாண்டார்' எனப் பாடமோதுப. இப் பாடமுளதேல் இதுவே சிறப்புடைத் தென்பது வெள்ளிடைமலையென விளங்குவ துணர்க."

—வி. கோ. சூ.

மேல், இப்பாட்டிற்கு உரைவகுத்தாங்கு நிரல்முறைப் பொருள்கொளின் இக்குற்ற மில்லையாத லறிக!

"அரசர் சினங் கொள்வாராயின், அவர் அயலாரெனவும் அன்புடையாரெனவும் பாரார் என்பதற்கு, அநபாய சோழன் ஒரு பசுவின் கன்றின் பொருட்டுத் தன் புதல்வன் செய்த குற்றத்திற்காக அவனையே கீழே கிடத்தி அவன்மேற் றேரூர்ந்த கதை தக்க சான்றாகும்."

—இள.

"மேற் செய்யுளில் 'உள் வெயர்ப்பினன்' என்றார்; அவ் வுள் வெயர்ப்பின் காரியத்தை இச் செய்யுளிற் கூறினார்."

—கோ. இ.

**பழமை கடைப்பிடியார்:**

**பழமை**—"பழமையாந் தன்மை பற்றி வந்த நட்பு."

—அ. கு.

"பழமை கடைப்பிடித்தலாவது நட்டாரது பழமையாந் தன்மை பற்றி அவர் பிழைத்தன பொறுத்தலாம்......... இறுதிகாறும் விடாது பிடித்தல் என்னும் பொருளதாகிய கடைப்பிடி பகுதி. இஃது ஒருசொன்னீர் மைத்தாய் நின்றது."

—வி. கோ. சூ.

**கேண்மையும் பாரார்:**

**கேண்மை**—இது நட்பினையுங் குறிக்குமேனும் முன்னர் பழமை என்னுஞ் சொல்லான், நட்பினைச் சுட்டினமையின் இதற்கு உறவினராந் தன்மையெனப் பொருளுரைத்தாம்."

—வி. கோ. சூ.

"கேண்மை - உறவினர்; தம்வினை செய்வோர்."

— தி. சு. செ.

**கிழமை பிறிதொன்றுங் கொள்ளார்:**

**கிழமை**—"உரியவர் - தந்தை தாய் புதல்வர்." —தி. சு. செ.

"கிழமை—உரிமையாற் செய்வன. உரிமையாற் செய்வன வாவன: கருமமாயின செய்யுங்காற் கேளாது செய்தல், கெடும் வகை செய்தல், தமக்கு வேண்டிய தாமே கோடல், பணிவச் சங்க ளின்மை யென்றிவை முதலாயின. இதனுற் பழமை யாவது காலஞ் சென்றதன்று இப் பெற்றித்தாய நட்பு என்பது கூறப்பட்டது" என்ற **பரிமேலழகருரை** இங்கு நோக்கற்பாற்று.

**காதன்மை யுண்டே இறைமாண்டார்க்கு:**

**காதன்மை**—"ஒன்றின்மேல் மனமெழுந்து தாக்கும் விருப்ப மென்னும் பொருளமைந்த காதல் - பகுதி, மை - பகுதிப் பொருள் விகுதி, லகரத்திரிபு - சந்தி." —ஏ. எஸ் ஜெ.

**உண்டே**—இதன்கணுள்ள ஏகாரம் வினுவின்கண் வந்த எதிர்மறைப் பொருளது.

**இறைமாண்டார்**—மாண் - பகுதி; மாள் எனில் இறந்தார் எனப் பொருள்படுத லறிக.

**ஏதிலரும் ஆர்வலருமில்லை யவர்க்கு:**

**ஏதிலரும் ஆர்வலரும் இல்லை**—"அரசர் நடுவு நிலைமையை யுடைய ராதலின் அவர்க்கு நட்பு நொதுமல் பகை என்பன இன்மையான் அவ்வாறு கூறினர்." —வி. கோ. சூ.

இஃது ஆரியங் கலவாத் தமிழ்மொழிப் பாவாம்.
—வி. கோ. சூ.

They remember not old acquaintance; they regared not intimacy; they acknowledge not the ties of blood, or other connexion; what affection have princes in their rage? They know neither foes nor friends. —H. S.

They will not retain a recollection of old acquaintance; they will not care for the ties of friendship; they will not regared any other relationship. The kings have no mercy when provoked. With them the distinction of friend and foreigner is null. —C. M.

Old acquaintances are not remembered, friendship is not regarded, ties of blood are not acknowledged when princes grow enraged. What affections have princes in their rage? They know neither friends nor foes at such a time. —T. B. K.

---

## 48. மன்னர் புறங்கடை காத்தல்

*மன்னர் புறங்கடை காத்தும் வறிதேயா*
*மெந்நலங் காண்டுமென் றெள்ளற்க—பன்னெடுநாள்*
*காத்தவை யெல்லாங் கடைமுறைபோய்க் கைகொடுத்து*
*வேத்தவையின் மிக்குச் செயும்.*

1. மன்னர் - அரசருடைய, புறங்கடை - (அரண்மனையின்) தலைவாயிலை, காத்தும் - (பொறுமையுடன்) காத்திருந்தும், வறிதே - (அது) பயனிலதேயாயிற்று, (அதனால் இனியுங் காத்து வருவதால்) யாம் - நாம், எந்நலம் - எந்நன்மையை, காண்டும் - காணப்போகின்றோம், என்று - என்று கருதி (எவரும்), எள்ளற்க - இகழ்ந்து கைவிடா திருக்கக் கடவர்; பல்நெடுநாள் - மிகப்பல நாட்கள், காத்தவை - காத்து நின்றமை, எல்லாம் - அதனைத்தும், கடைமுறைபோய் - முடிவிற் சென்று (ஒருநாள்), கைகொடுத்து - உதவி, வேத்தவையில் - அரச சபையில், மிக்கு - மேம்பட்டிருக்குமாறு, செய்யும் - செய்து விடும்.

2. பன்னெடுநாள் யாம் மன்னர் புறங்கடை வறிதே காத்தும் எந்நலங் காண்டும் என்றெள்ளற்க; காத்தவை யெல்லாம் கடைமுறை போய்க் கைகொடுத்து வேத்தவையின் மிக்குச் செயும்.

3. **அயர்வின்றி அரசன் பணியாற்றி வருதல் வீண் போகாது.**

4. "தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்." —குறள்.

"வேண்டி வினை செயேல்" —ஆத்திசூடி.

"மன்னர் திருவு மகளி ரெழினலமுந்
துன்னியார் துய்ப்பர்." —நாலடியார்.

"வெற்றிவேல் வேந்தன் வியங்கொண்டால் யாமொன்றும்
பெற்றிலே மென்பது பேதைமையே—மற்றதனை
எவ்வ மிலராகிச் செய்க அதுவன்றோ
செய்கென்றான் உண்கென்னு மாறு." —பழமொழி.

5. "அரசரும் மகளிரும் அடுத்துநின்று சேவிப்போரையே மற்றுவர்." —அ. கு.

"அயர்வின்றி அரசன் பணியாற்றுவார் முன்னில்லாவிடினும் முடிவில் அவன் அன்பு பெறுவர்........அரசசேவை வீண்போகாது. அரண்மனை வாயில் காக்கும் காவலாளனை அரசன் வாயிற்புறத்து வந்து போகும் பல தடவைகளில் ஒரு தடவையாவது கவனியாமலிருக்க மாட்டான். பல தடவை கவனித்தும் அக்காவலாளுக்கு அன்பு காட்டாதிருக்கலாம். அவனுக்கு வாயிற் காவலினும் உயர்ந்ததோர் தொழில் அளியாதிருக்கலாம். அப்போது அரசன்பால் வெறுப்பும் தன் தொழிலில் அருவருப்பும் கொள்ளலாகாது. ஏனெனில், அரசன் பல தடவையாக அக் காவலாளின் பொறுமை எப்படி யென்று வெளிக்குக் காட்டாமலே கவனித்து வந்தாலும் வரலாம். அப்படிப் பல தடவை கவனித்ததில் காவலாளன் தன் வேலையைப் பொறுமையோடு பார்க்கிறான் என அவன் உறுதி கொண்டு விட்டால் பின் அக்காவலாளனை அரசன் கூட்டாயம் மேற்றொழில் ஒன்றில் அமர்த்துவன்." —இள.

**மன்னர் புறங்கடை காத்தும் வறிதே :**

"புறங்கடைக் காத்து வறிதே" என்று பாடங்கொண்டார். **காஞ்சிபுரம் சபாபதி முதலியார்.**

**காத்தும்**—"இதன்கணும்மை உயர்வுசிறப்புப் பொருளது; இச்சொல்லைத் தன்மைப் பன்மை யிறந்தகால வினைமுற்றாகக் கொண்டு பொருளுரைப்பாருமுளர். "காத்து" என வேறுபாட மோதுதலுமுண்டு." —வி. கோ. சூ.

"வறிது என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்றுக்கு எழுவாய் காத்தற்றொழில்; வறிது என்பதைக் குறிப்பு வினையெச்சமாகக் கொண்டு, வறிதே காத்து - யாதோருதியமும் பெறுமலே காத்து என உரைப்பினும் பொருந்தும்." —கோ. இ.

**யாம் எந்நலங் காண்டும் என்று எள்ளற்க:**

**காண்டும்**—"தன்மைப்பன்மை இறந்தகால வினைமுற்று. காண் - பகுதி, டும் - விகுதி." —தி. சு. செ.

"கண்டும்"—டும்மீற்றுத் தன்மைப்பன்மை யிறந்தகால வினைமுற்று. இவ்விடத்துக் "காண்டும்" என வேறு பாட மோதுவாருமுளர். அஃது எதிர்காலங் காட்டுமேயன்றி அவர் தாங்கருதுமாறு இறந்தகாலங் காட்டாமை யுணர்க. —வி. கோ. சூ.

மேலுரையில் "காண்டும்" என்றே பாடங்கொண்டு எதிர்காலப் பொருளுரைத்தமை நோக்குக,

**எள்ளற்க** — "நிந்தித்த லொழிக" என்பது பொருள். நிந்தித்தல் - கைவிடுதலாதலின் 'கைவிடுத லொழிக' என்றனம்." —தி. சு. செ.

"இது எதிர்மறை வியங்கோள் வினைமுற்று." —வி. கோ. சூ.

**பன்னெடுநாள் காத்தவை யெல்லாம்:**

**பன்னெடுநாள்**—"அரசனரண்மனை வாயிலிற் காத்தவர்க்குத் தாங்காத்தநாள் பலவற்றினுள் ஒவ்வொரு நாளும் பொழுது போகாமையினலே நீட்டித்தனவாகக் காணப்படும் என்பது குறித்து நின்றது. இனிப் "பன்னெடு' என்பதை ஒருபொருட் பன்மொழி யென்பாருமுளர்." —வி. கோ. சூ.

"பலநாள்; நீட்டித்த நாளாதலால் 'பன்னெடுநாள்' என்றார். இது இரண்டுதொடர் மூன்றுசொல் ஆதலின் இரண்டு தொடரும் பண்புத்தொகை நிலைத்தொடராகக் கொள்க." —தி. சு. செ.

**காத்தவை யெல்லாம்**—"நாட்களை நோக்கிக் காத்தற்றொழிலும் காத்தவை எனப் பலவாயிற்று." —கோ. இ.

"காத்தவை" எனப் பன்மையாற் கூறினார் காத்த நாட்களும் அமயங்களும் வாயில்களும் பலவாதலின்." —வி. கோ. சூ.

**கடைமுறை போய்க் கைகொடுத்து :**

**கைகொடுத்து**—"கைக் கொடுத்து" என்று பாடங்கொண்டார் **சி. வை. தாமோதரம் பிள்ளை.**

'கொடுத்து' என்பதனோடு 'கை' என்னும் முன்னடை சேர்ந்து இரண்டும் ஒருசொல்லின் தன்மைப்பட்டு நிற்றல் காண்க. —வி. கோ. சூ.

"கையை யாதரவாகக் கொடுத்து, அஃதாவது உதவி; இவ்வாறு பொருள் கொள்ளுதல் இலக்கணையாற் பொருள் கொள்ளுதல் எனப்படும்." —சி. மு.

**வேத்தவையின் மிக்குச் செய்யும் :**

**வேத்தவை**—வேந்து + அவை = வேந்தவை = வேத்தவை.

**மிக்கு**—"மிகுந்த நன்மை" என்றும், "யாவரினும் மிக்கிருக்க" என்றும், "பெருமை" என்றும், "மேன்மை" என்றும் பொருள் கூறப்பட்டுள்ளன.

Say not contemptuously, "What good have we seen in our fruitless attendance at the king's gate?" The many long days that you have waited, will at last, in turn afford a hand, to raise you to dignity in the Royal Court. —H. S.

•Do not slightingly talk of having waited in the •Entrance Chamber of the Court to no purpose. Your long attendance will speak in your favour with the Sovereign and raise you ultimately to eminence in the Court.

—C. M.

Say not contemptuously "What good has this long attendance at the king's gate been?" The many long days may offer a handle atlast to raise your dignity at the Court.

—T. B. K.

---

## 49. உலையா முயற்சி

*உறுதி பயப்ப கடைபோகா வேனு*
*மிறுவரை காறு முயல்ப—இறுமுயிர்க்கு*
*மாயுண் மருந்தொழுக்க றீதன்றா லல்லனபோ*
*லாவனவு முண்டு சில.*

1. உறுதி - (அடைதற்குரிய) நன்மையினை, பயப்ப - கொடுக்கக் கூடிய முயற்சிகள், கடைபோகாவேனும் - முற்றுப்பெற முடியமாட்டா வெனத் தோற்றினும், இறுவரை காறும் - தாம் இறக்கும் காலம் வரையிலும், முயல்ப - (மூதறிவுடையோர்) விடாது முயல்வர்; இறும் - இறக்கும் நிலையிலிருக்கும், உயிர்க்கும் - ஓருயிருக்கும், ஆயுண்மருந்து - பிழைப்பினைத் தந்து வாழ்நாளைப் பெருக்கச் செய்யும் மருந்தை, ஒழுக்கல் - வாயினுட் பெய்தல், தீதன்று - குற்றமன்று, (ஒருகால் அது நன்மையைப் பயப்பினும் பயத்தல் கூடும்); சில - சில கருமங்கள், அல்லனபோல் - (முதற்கண்) நன்மையான முடிவைத் தாராதன போற் காணப்பட்டு, ஆவனவு முண்டு - (விடாமுயற்சியின் பயனைப் பின்னர்) நன்மையாக முடிவனவும் உள.

2. இறுமுயிர்க்கும் ஆயுள்மருந்து ஒழுக்கல் தீதன்று, அல்லனபோல் ஆவனவும் சில உண்டு, ஆதலால், உறுதி பயப்ப கடைபோகாவேனும் இறுவரைகாறும் முயல்ப.

3. இடைவிடா முயற்சியால் கைகூடாதனவுங் கைகூடலாம்.

4. "கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல்." —குறள்.

"அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்." —குறள்.

"இசையா தெனினு மியற்றியோ ராற்று
லசையாது நிற்பதா மாண்மை—" —நாலடியார்.

"கற்றதொன் றின்றி விடினும் கருமத்தை
அற்ற முடிப்பான் அறிவுடையான்—உற்றியம்பும்
நீத்தநீர்ச் சேர்ப்ப! இளையானே யாயினும்
மூத்தானே யாடு மகன்." —பழமொழி.

5. "இறக்கும் வரையிலும் முயற்சி யுடையவனாயிருத்தல் வேண்டுமென்பது கூறப்படும். இடைவிடாமல் முயன்றால் ஆகாதனவுங் கைகூடும்." —உ. வே. சா.

"சாகுந் தருணத்திலிருக்கும் உயிர்க்கும் மருந்து கொடுப்பதனாலேயொரு தீங்கும் விளையாதிருத்தலேயன்றி யொருவேளை கடவுளருளால் அது பயனுடைத்தாகி நன்மை பயத்தலும் உளதாமென்னும் உவமை முகத்தால் எடுத்த காரியத்தை விடுத்த லொண்ணாதென விளக்கினார்." —வி. கோ. சூ.

**உறுதிபயப்ப கடைபோகாவேனும்:**

உறுதி—'நிச்சயம்' என்று பொருள் கொண்டார் அ. குமாரசாமிப் புலவர். 'பயன்' என்று பொருள் கொண்டார் தி. சுப்பராயச் செட்டியார்.

"உறுதி - அடையப்படுவதென்னும் பொருளில், உறு - பகுதி, த் - எழுத்துப்பேறு, இ - செயப்படுபொருண்மை விகுதி; உறு - பகுதி, தி - புடைபெயர்ச்சி விகுதி; இவ்விரண்டுறுப்பால் முடிந்த தொழிற் பெயரெனக்கொண்டு தொழிலாகு பெயரெனினும் பொருந்தும்." —கோ. இ.

"அடையப்படுவதென்னும் பொருளில் வந்தது; தொழிலாகு பெயர்." —வி. கோ. சூ.

பயப்ப—பலவின்பால் வினையாலணையும் பெயர். —இள.

"எதிர்கால வினைமுற்றுப் பெயர்." —தி. சு. செ.

"பலவின் படர்க்கை எதிர்கால வினையாலணையும் பெயர்." —கோ. இ.

"பயப்பவென்பதனை வினையெச்சமாக்கிப் பொருள் கொள்ளுதல் பொருந்தாது." —சி. வை. தா.

கடைபோகா வேனும்—"கடைபோகா என்புழிக் கடை என்பது தலைப்பிரிதல், கால்சீத்தல் என்பவற்றில் தலை கால் என்பனபோல நின்ற ஓரிடைச்சொல்." —அ. கு.

"கடைபோ - பகுதி, ஆ - எதிர்மறைப் பலவின் படர்க்கை விகுதி, கு - சாரியை, உகரக்கேடு சந்தி." —மோ. வே.

"ஒரு சொல்லின் தன்மையதாகிய பலவின் படர்க்கை எதிர் மறைத் தெரிநிலை வினைமுற்று." —ஏ. எஸ். ஜே.

இறுவரை காறு முயல்ப:

"இறுவரை காறும்—'இறு' வினைத்தொகை." —இள.

"காறு—அளவுப் பொருளுள்ளதோ ரிடைச்சொல்." —ஊ. பு. செ.

"காறு—அளவுப் பண்பு." —வி. கோ. சூ.

முயல்ப—"பலர்பாற் படர்க்கை எதிர்கால வினைமுற்று (முயல்+ப)." —தி. சு. செ.

இறுமுயிர்க்கும் ஆயுண் மருந்தொழுக்கல் தீதன்றால்:

"இறுமுயிர்க்கும்—இறும் உயிர் - எதிர்காலப் பெயரெச்சத் தொடர்." —வி. கோ. சூ.

**ஆயுண் மருந்து**—"இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனும் உடன் றொக்க தொகை. 'ஆயுள்' இஃது 'ஆயுஸ்' என்னும் வட சொற்சிதை வென்பர்." —வி. கோ சூ.

"விரிந்தால் ஆயுளைத்தரும் மருந்து என விரியும்." —கோ. இ.

**ஒழுக்கல்**—"தொழிற்பெயர்; ஒழுகு - பகுதி, இடையில் க் விரித்தல் விகாரம், உகரக்கேடு சந்தி, அல் - விகுதி."—தி.சு.செ.

"பிறவினைத் தொழிற்பெயர்; ஒழுகு என்னுந் தன்வினைப் பகுதி, இடையே ககர வொற்றிரட்டிய ஒழுக்கு - பகுதி. அல் - புடைபெயர்ச்சி விகுதி. உகரக்கேடு சந்தி." —கோ. இ.

இச் சொல்லாற்றலினனே மருந்து உட்செலுத்தப்படுவார் தாமே உண்ணமாட்டாமையாற் செலுத்துவோர்க்கு ஐயப் பாட்டினையும் அவநம்பிக்கையினையும் விளைத்து ஏதோ இறைவனருளை முன்னிட்டு ஒருவாறு முயறல்போல இறுதி வரையும் முயல்கின்றனர் என்பது பெறப்பட்டது." —வி. கோ. சூ.

**அல்லனபோல் ஆவனவுமுண்டு சில:**

"அல்லன போல் — 'அன்மை' என்னும் பண்படியாகப் பிறந்த எதிர்மறைக் குறிப்பு வினையாலணையும் பெயர்." —வி. கோ. சூ.

"போலென்னும் இடைச்சொல்லடி இறந்தகால வினை யெச்சப் பொருள்பட்டு நின்றது." —கோ. இ.

**உண்டு சில**—'சிலவுள' என்பதே வழக்காறாயினும், 'சில வுண்டு' என்றார், "வேறில்லை யுண்டைம்பால் மூவிடத்தன" என்னும் நன்னூல் வினையியல் 20-ஆம் சூத்திர விதிபற்றி யென்க. —வி. கோ. சூ.

இச்செய்யுள் உவமையணியும் ஏதுவணியுஞ் சேர்ந்த **சேர்வையணி.** —வி. கோ. சூ.

Although you may not be certain of the event persevere to the last in a good undertaking. It is not

wrong to drop tbe medicine of life into the lips of dying men; for there are somethings, which are possible, though they are like things that are not. —H. S.

Persons will persevere in their efforts as long as they live, although their noble object cannot be fully accomplished. It is not wrong to apply medicinal remedies to the dying man. Some acts although they may appear impossible may still ultimately be carried into execution. —C. M.

However uncertain of the event, persevere to the end in anything good. It is not wrong to drop the medicine of life on the lips of death, for some cases which appear to be impossible become possible

—T. B. K.

---

## 50. அறிவறிந்த முயற்சி

*முயலாது வைத்து முயற்றின்மை யாலே*
*உயலாகா வூழ்த்திறத்த வென்னார்—மயலாயும்*
*ஊற்றமி றூவிளக்க மூழுண்மை காண்டுமென்*
*றேற்றா ரெறிகான் முகத்து.*

1. முயலாது வைத்து - (தாம் எத்தகைய) முயற்சியும் செய்யா திருந்துவிட்டு, முயற்றின்மையாலே - (அம்) முயற்சியின்மையினாலே, உயலாகா - உய்வுபெற்றுக் கைகூடாத கருமங்கள், ஊழ்த்திறத்த - ஊழ் வலிப்பட்டன, (ஆதலால்தான் கைகூடவில்லை), என்னார் - என்று கொள்ளமாட்டார் (அறிவுடையோர்); (அன்றியும். அவர்) மயலாயும் - மயங்கியேனும், ஊற்றமில் - (பற்றுக் கோடின்மையால்) அசைவின்றி நிற்குந்தன்மையில்லாத, தூவிளக்கம் - ஒளி பொருந்திய விளக்கு, ஊழுண்மை, - ஊழ்வலி யுடைத்தாதலை, காண்டும் - பார்ப்போம், என்று - எனக் கருதி, ஏற்றார் - (அதனை) ஏற்றவும் மாட்டார், எறி - வீசுகின்ற, கால் முகத்து, காற்றினெதிரே.

2. முயலாதுவைத்து முயற்றின்மையாலே உயலாகா ஊழ்த்திறத்த என்னுர்; ஊழுண்மை காண்டும் என்று ஊற்ற மில் தூவிளக்கம் எறிகான் முகத்து மயலாயும் ஏற்ருர்.

3. ஊழிற் பெருவலி யாவுளவென்று மடியினை மேற்கொண் டிருத்தலும், ஊழையும் உப்பக்கம் காண்பாம் என்று அறிவுக் கொவ்வாத வகையில் முயலுதலும் கூடாவாம்.

4. "கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு." —குறள்.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்." —குறள்.

"தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்." —குறள்.

5. "முயற்சியின் சிறப்புக் கூறப்படும். ஊழை நினையா மலே முயல வேண்டுமென்பது கருத்து. வலியற்ற விளக்கு அவிந்து விடுவது தானே யென்றெண்ணிக் காற்றடிக்கும் இடத்தில் ஏற்றமாட்டார்கள்; அது சிறிது நேரமாவது எரியு மென்று கருதி அவ்வளவிற் பயன்கொள்ளும் பொருட்டு அதைப் பாதுகாப்பார்கள். அதுபோல ஊழின் வலியே கருதி வாளா விராமல் தம்மால் இயன்ற முயற்சி செய்து அம்முயற்சிக் கேற்ற பயனைப் பெற முயல்வர்." —உ. வே. சா.

"முயற்சி திருவினையாக்கும்" என்பதுணர்ந்த பேரறி வாளர், "பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந் தாள் வினை யின்மை பழி", எனவும், "தெய்வத்தா னாகாதெனினு முயற்சிதன் மெய்வருந்தக் கூலிதரும்" எனவும், "ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித் தாழா துஞற்றுபவர்" எனவும் திருவள்ளுவ நாயனுர் ஓதுதலின், "முயலாது வைத்து முயற்றின் மையாலே - யுயலாகா வூழ்த்திறத்த வென்னுர்" என்ருர்.
—வி. கோ. சூ.

"முயற்சியால் ஊழையும் வெல்லலாம் என இதற்கடுத்த செய்யுளில் ஆசிரியர் கூறுகிருர். முயற்சியுடையோர் இகழ்ச்சி யடையார், ஆகையால் ஊக்கமது கைவிடேல்." —இள.

**முயலாதுவைத்து முயற்றின்மையாலே உயலாகா ஊழ்த்திறத்த என்னுர்:**

**முயலாது வைத்து**—முயலாது எதிர்மறை வினையெச்சம்; வைத்து அசை யெனவுங் கொள்ளலாம்.

"ஈண்டு 'வை' யென்பது துணைவினை (Auxiliary verb) யளவாயே நின்றது." —வி. கோ. சூ.

"**வைத்து**—ஒரு சொன்னடை." —உ. வே. சா.

**முயற்றின்மையாலே**—முயற்று: முயல் + து. முயற்சி என்பது பொருள். முயற்றின்மை - மடி, அசைவு (Laziness).

இனி "முயலாது வைத்து" என்பதற்குத் தாமும் முயலாதிருந்து எனவும், "முயற்றின்மையாலே" என்பதற்குப் பிறரையும் அவற்றின்கண் முயலச்செய்யா திருத்தலினுலே யெனவும் பொருள் கூறலாம். எவ்வாறு கொள்ளினும் "முயலாது வைத்து" என்னும் எச்சமும், முயற்றின்மையாலே என்னும் மூன்றனுருபும், 'என்றுர்' என்பதன்கட், சொல்லெச்சமாய் நின்ற 'சொல்லார்' என்பதனெடு முடிந்தன. இவ்வாறு முடித்தலைப் புகழேந்திப் புலவர்தம் நளவெண்பாவின்கட் பரக்கக் காணலாம். —வி. கோ. சூ.

"முயற்று - முயல் - பகுதி, து - விகுதி, ல் த் இரண்டும் றகரமாகத் திரிதல் சந்தி." —தி. சு. செ.

"பாய்த்துப் பருந்தின் வீழ்வன்ன சூத்திரநிலை" என்றுற்போலத் துவ்வென்னுந் தொழிற்பெயர் விகுதி பெற்று முயல் 'முயற்று' என்றுயிற்று. கால் காற்று என்றுற்போலு மென்பாருமுளர்; அது மிகவுந் தவறென்க. —சி. வை. தா.

"முயற்று — தொழிற்பெயர்; முயல் - பகுதி, து - புடைபெயர்ச்சி விகுதி, லகரதகரங்கள் றகரமானது சந்தி. இத்துவ் விகுதி, முயன்றது முயல்கின்றது முயல்வது எனக் கால இடைநிலை பெற்ற தொழிற் பெயர்க்கும், முயலாதது என எதிர்மறைத் தொழிற்பெயர்க்கும் விகுதியாய் வருதலே பெரும்பான்மை."

—கோ. இ.

உயல் ஆகா—தப்புவன ஆகமாட்டா. —சி. மு.

"தப்பிக்கோடல் முடியாது." —வி. கோ. சூ.

"உயல் - உய் என்னும் பகுதி யடியாகப் பிறந்த தொழிற் பெயர்; 'செயல்' என்பதுபோல. ஆகா 'ஆகாது' என்பதன் து தொகுத்தல் விகாரமாய் நின்றது. இதனை ஒருமைப் பன்மை மயக்கம் எனவும், உயல்களாகா எனப்பொருள்படுத்துப் பால் பகா வஃறிணைப் பெயரெனவுங் கூறுதலுமாம்." —வி. கோ. சூ.

"**ஊழ்த்திறத்த**—ஊழ்வலிப்பட்ட கருமங்கள்." —வி.கோ.சூ.

"திறத்த - பண்படியாகப் பிறந்த பெயராயினும், பகுதியாகிய திறம் ஊழென்பதனோடு பண்புத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத் தொடராகப் புணர்ந்தது." —கோ, இ.

"ஊழ், ஆகூழ் போகூழ் என இருவகைப்படுதலின் 'ஊழ்த் திறத்த' வென்றார் என்பாருமுளர்." —வி. கோ. சூ.

"ஊழின் வழிப்பட்டனவாகிய நன்மைகள் தப்பமாட்டா; ஊழின் வலியால் வரும் நன்மைகள் எப்படியும் கிடைத்துவிடும். ஆதலின் முயற்சி வேண்டற்பாலதன்று என்பாரை மறுத்தபடி."

"**என்னார்—இதன்கண்** சொல்லெச்ச முண்மையுணர்க."
—வி. கோ. சூ.

**மயலாயும் ஊற்றமி றாவிளக்கம் ஊழுண்மை காண்டும் என்று:**

**மயலாயும்**—அதனொளி மங்கித்துழியும் என்று பொருள் கொண்டார் **சி. வை. தாமோதரம் பிள்ளை.**

**ஊற்றமில் தூவிளக்கம்**—'ஊற்றமிறு விளக்கு' எனப்பாடங் கொண்டார்கள் காஞ்சி சபாபதி முதலியார், தி. சுப்பராயச் செட்டியார், கோ. இராசகோபாலப் பிள்ளை, ஜெகராவ் முதலியார், உ. வே. சாமிநாதையர் ஆகியோர்கள்.

"ஊற்றமிறு விளக்கம் என்ற பாடங்கொண்டு அசைவின்றி நிற்றலை ஒழிந்த விளக்கினை என்றுரைப்பாருமுளர்." —இரா.

"ஊற்றமிறா விளக்கம்" எனப் பாடமோதி மறைவின்றி யிருக்குந் தூயவிளக்கு எனப்பொருள் கொள்ளல் இயை பில்லாமை காண்க. அசைவாடி நிற்றல் விளக்கிற் கியற்கை யென்பார் 'ஊற்ற மிறுவிளக்கம்' எனவும், அவ்வியல்பினை யுடைய விளக்கினைப் பெருங்காற்றுக் கெதிரே யேற்றுவோ ரிலர் என்பார் 'மயமையும்' எனவும், ஊழ்வினை யுளதென்பதை நோக்காது இடைவிடாது அறிவுடையார் முயல்வார் என்பார் 'என்றார்' எனவுங் கூறினர்." —தி. சு. செ.

"ஊற்றம், அதிகம், வலிமை, மறைவு என்பன ஒரு பொருண்மொழி." —சி. மு.

"ஊற்றம் - தொழிலடியாகப் பிறந்த பெயர்; இது இலக் கணையால் இங்கு மறைவுக் காயிற்று." —கோ. இ.

"ஊற்றம் - தொழிலடியாகப் பிறந்த பெயர். ஊன்று பகுதி, அம் - கருவிப்பொருள் விகுதி, னகரம் றகர மாதலும் உகரங்கெடுதலும் சந்திகள். இனியிதற்கு ஊற்றப்படுவது (நெய்) எனப்பொருள் கூறி அம் செயப்படுபொருள் விகுதி யெனக் கீாட்டுவாருமுளர்." —வி. கோ. சூ.

**காண்டும்** — 'டும்' விகுதிபெற்ற எதிர்காலத் தன்மை பன்மை வினைமுற்று. அறியார் இதற்கு இறந்த காலமாகவே பொருள் கூறுவர். —வி. கோ. சூ.

**பின்னீரடிகளும்** யாம் பெரிதும் முயன்றால் எதையுஞ் செய்து முடிக்கலாமென்றெண்ணி, நினைத்தபடி யெல்லாஞ் செய்தல் அடாதென விளக்கி நின்றது. விளக்கேற்றுதலாகிய காரியஞ் செய்து முடிக்க வேண்டுநர் வெள்ளிடையாகிய இருந் துழியிருந்து அதனைச் செய்யப்புகின் ஊழொடு முரணிக் காரியம் முடிக்கப்படாது போதலுணர்ந்து ஊழின் வழித்தாங் காற்றினின்றும் விலகிக் காப்பிடம் புகுதலாகிய முயற்சியைச் செய்து, அதன் பின்னர் விளக்கேற்றல் வினை செய்யப்புகின் கைகூடும் என உய்த்துணர்ந்து கொள்க......இஃது எடுத்துக் காட்டுவமை யணியின்பாற்படும். முகமென்பது தமிழ்ச் சொல்லே யென் முன்னரே நிறுவியிருக்கின்றனமாதலின் இது தனித்தமிழ்ச் செய்யுளாதல் காண்க. —வி. கோ. சூ.

The wise will not say, "Though exertion be laid aside, the decrees of fate cannot, on that account, fail". However ignorant, none will set up a clear light, without any protection in a strong wind, in order to see the reality of destiny. —H. S.

The wise will not remain quiet with the excuse that the decisions of fate will not be affected by their indolence. Who will hold a lamp in the face of the violent wind merely to test the strength of its fate? —C. M.

The wise say not that even without exertion a thing will fulfil itself by power of fate. Even the ignorant do not set up a light without protection in a strong wind trusting to power of destiny. —T B K.

---

## 51. முயற்சியுடைமை

உலையா முயற்சி களைகணா வூழின்
வலிசிந்தும் வன்மையு முண்டே—உலகறியப்
பான்முளை தின்று மறலி யுயிர்குடித்த
கான்முளையே போலுங் கரி.

1. உலையா - இடைதவிர்ந்து வீழாத, முயற்சி - முயற்சியே, களைகண் ஆ(க) - பற்றுக் கோடாகக் கொண்டு, ஊழின்; போகு ஊழினது, வலி - வலிமையை, சிந்தும் - கெடுத்து மேம்படுகின்ற, வன்மையும் - ஆற்றலும், உண்டே-உளதாம்; உலகு - உலகத்தார் யாவரும், அறிய - அறியும்படி, பால் - ஊழின், முளை - தோற்றத்தை, தின்று - தொலைத்து, மறலி - கூற்றவனின், உயிர் - உயிரையே, குடித்த - அழித்தற்குக் காரணமாயிருந்த, கான்முளையே - (மார்க்கண்டேயராகிய) சிறு குழந்தையே, போலும் கரி - சான்றாவர்.

2. உலையா முயற்சி களைகணு ஊழின் வலிசிந்தும் வன்மையு முண்டே; கரி உலகறியப் பான்முளைதின்று மறலி உயிர் குடித்த கான்முளையே போலும்.

3. **விடாது முயன்றால் ஊழையும் உப்பக்கம் காணலாம்.**

4. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர். —குறள்.

கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு. —குறள்.

முழுதுடன் முன்னே வகுத்தவ னென்று
தொழுதிருந்தக் கண்ணே ஒழியுமோ அல்லல்
இழுகினு னாகாப்ப தில்லையே முன்னம்
எழுதினான் ஓலை பழுது. —பழமொழி.

5. "உடையான் வினையை யுடைமைமேலேற்றி 'உலையா முயற்சி' யெனவும், ஊழ்வினை, தன்னைச் செய்வோன் எங்கிருப்பினும் விடாது என்பது தோன்ற 'ஊழின்வலி' எனவும், அதனைக் கெடுத்தலருமைதோன்ற உம்மை தந்து 'வன்மையும்' எனவும், தின்று பின் நீர்குடித்த லியல்பாதலின் 'குடித்து' எனவும், மறலியுயிர் கெடுத்தவன் சிவபெருமான் ஆயினும் அவன் வினை மார்க்கண்டேயர் வழிபாட்டாலாதலின 'மறலியுயிர் குடித்த கான்முளை' எனவுங் கூறினார். முன்னர்க் கூறிய முயற்சியை வற்புறுத்தப் பின்னரும் ஆகமவளவையால் அனுவதித்தார்." —தி. சு. செ.

**உலையா முயற்சி களைகணு:**

**"உலையா—**கெடாத, அசைவில்லாத, இளைத்தலில்லாத, வருந்துதலில்லாத எனப் பொருள் கொண்டாருமுளர்."

உலையா: "ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். உலையாமையாவது எடுத்த முயற்சியில் நடுவேயொரு முட்டுப்பாடு உடைத்தாக இடைதவிர்ந்து விழாமையாம்." —வி. கோ. சூ.

**ஊழின் வலிசிந்தும் வன்மையு முண்டே:**

ஊழின் — "ஊழென்றது ஆகூழை அன்று, போகூழை."
—கோ. இ.

சிந்தும் — "தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாகிய சிந்தும என்னும் பெயரெச்சம் இங்குப் பிறவினையாய் நின்றது. தன்வினையின்பால் சிந்தியது எனவரும்." —கோ. இ.

**உலகறிய:**

உலகு — "உலகமென்ப துயர்ந்தோர் மாட்டே."
—சி. வை. தா.

"உலகமென்பது தமிழ்ச் சொல்லே." —வி. கோ. சூ.

"உலகு - கதவு 'கதவம்' என 'அம்' சாரியை பெற்றது போல உலகு, 'உலகம்' என அம்சாரியை பெற்றது." —சி. மு.

"உலகு - வடமொழியில் உயிர்கள்மேல் நிற்றலில் இடவாகு பெயரன்று." —தி. சு. செ.

"உலகு - இடவாகுபெயர்." —வி. கோ. சூ.

**பான்முறைதின்று:**

"பான்முறை—பால், விதி, ஊழ் என்பன ஒரு பொருண் மொழிகள்." —சி. மு.

"இறைவன் ஒரு பிறப்பில் செய்த ஒருவன் வினையை ஆயிரங் கூறுசெய்து, ஒரு கூற்றில் ஒரு காணிக்கூறு கொண்ட வினையை மறுபிறப்பில் அனுபவிக்க இடுகிறு னென்பராதலால் ஊழைப் 'பால்' என்றார். பால் பண்பாகு பெயர்." —கோ. இ.

"பால் வாழ்நாளின் பாகத்துக்கு வந்தது. அதன் முறையாவது அதன் காரணமாகிய கருமம், அதனைத் தின்றது அது அழியப் பெற்றிருப்பது. இவையெல்லாம் இலக்கணையால் வந்தவை." —ஊ. பு. செ.

**மறலியுயிர் குடித்த கான்முளையே போலுங்கரி:**

**மறலியுயிர் குடித்த கான்முளை** — "உயிர் குடித்தவர் சிவ பிரானே யெனினும், இவர் காரணமாதல் பற்றி இவர் செய லாக உயிர்குடித்த என உபசரித்தார்." —அ. கு.

"**கான்முளை** என்பது பிள்ளை என்னும் பொருள்படும். கந்தபுராணம் மார்க்கண்டேய படலத்தால் இப்பிள்ளை மார்க் கண்டேயர் என்பது பெற்றும்." —சி. மு.

"கால் - சந்ததி; முளை - அதற்குக் காரணமாயிருப்பவன். பிரகரணத்தால் மார்க்கண்டேயன்; முளைத்தற்கு இடம் முளை; முதனிலைத் தொழிலாகு பெயர்." —ஊ. பு. செ.

"கான்முளை என்பதைக் கால் முளை எனப் பிரிக்க; ஒருவ னுடைய மரபு பெருகுவதற்கு அவன் புத்திரன் வழிபோலு தலால் கால் உவமை யாகுபெயர். முளை - தன்வயிற்றில் முளைத்தலுடையானுக்கு ஆதலால் முதனிலைத் தொழிலாகு பெயர். இது இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத் தொடர். கான்முளை என்பதை ஒரு பெயராகக் கொள்ளின் ஏழாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப் பெயர். பிதாவின் வழியில் முளைத்த லுடையானென்பது பொருள்." —கோ. இ.

**மறலியுயிர்குடித்த செய்தி**:—புத்திரப்பேறில்லாத மிருகண்டு முனிவர் தம்மனைவி மருத்துவதியோடுஞ் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து அவராற் பதினாறு வயதுமட்டும் உயிரோ டிருக்கும் மகப்பேறருளப்பெற்ற சின்னாளில் ஒரு புதல்வனைப் பெற்று அவற்கு மார்க்கண்டேயன் எனப் பெயரிட்டனர். மகனாரும் சிவபத்தி முதிர்ந்து விதிமுறைவழாது சிவார்ச்சனை புரிந்து வருநாளில், ஒருநாள் அவர்க்குப் பதினாறும் வயது முடியுங்காலமுறக்கண்ட கூற்றுவன் ஊழின்படி போந்து அவர் சிவபூசை செய்து கொண்டிருக்கும்போது, தன் பாசத் தால் வீசலும் நம் மார்க்கண்டேயர் தாம் அருச்சித்து நின்ற சிவபிரானது அருட்பெருங் குறியை ஆகமு மகமு முறத் தழுவினார். அஃதுணர்ந்து மோதுங்கலா நமனைக்கண்ட வெம் பெருமான் வெகுண்டு அருட்குறியினின்றெழீஇத் தன் றிருத் தாளினாலவனை விண்ணெனவுதைத்துக் கொன்று முனிவரைப் புரந்து என்றும் பதினாறு வயதினராம் வரமளித்தன ரென்பது." —வி கோ. சூ

**போலும் - அசை.**

"சாலும்" என்று பாடங்கொண்டார் **தி. சுப்பராயச் செட்டியார்.**

"ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'உலகம்' என்பது தமிழ்ச் சொல்லென்றே கோடலான் இது வடசொற் கலவாத தனித் தமிழ்ச் செய்யுளாமாறு காண்க. இது வேற்றுப்பொருள் வைப்பணி." —வி. கோ. சூ.

"ஊழின் முளை தின்றலும், நமனுயிர் குடித்தலும் மார்க் கண்டேயருக்கு இல்லாததினாலும், ஊழின்முளை கெடுத்தலும் நமனுயிர் வாங்கலும் அவருக்குண்டா யிருத்தலாலும் இது விட்டுவிடாத இலக்கணை. இது ஏதுவணி." —கோ. இ.

There is a power, which, with the aid of unyielding exertion, will destroy the strength of destiny. Of this, as is known to all the world, the child, who devoured the germ of fate, and drank the life of Yaman, is an evidence. —H. S.

It is possible to destroy the power of fate itself with unintermitted industry as an auxiliary. The child மார்க்கண்டேயன் who in the presence of the world baffled fate, and destroyed the regent of the dead is a sufficient evidence. —C. M.

Persistent effort will conquer destiny. The child Markandeya who as the world knows overcame destiny and conquered Yama, bears ample testimony to this truth. —T. B. K.

---

## 52. ஆள்வினைத்திறம்

காலமறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூலமறிந்து விளைவறிந்து—மேலுந்தாஞ்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை யாளப் படும்.

1. காலம் - (செய்வதற்குரிய) காலத்தினை, அறிந்து - அறிந்தும், இடம் - (செய்து முடித்தற்கேற்ற) இடத்தினை, அறிந்து - அறிந்தும், செய்வினையின் - செய்யக் கருதிய கருமத்தின், மூலம் - காரணங்களை, அறிந்து - அறிந்தும், விளைவு - பயனை, அறிந்து - அறிந்தும், மேலும் அதன் பின்னும், தாம் - (வினைமுடிக்கக் கருதியோர்) தாம், சூழ்வன - ஆராய்ந்து முடிவுகாண வேண்டியவற்றை, சூழ்ந்து - ஆராய்ந்தும், துணைமை - துணையாயிருப்பவர்களின், வலி - வலிமைகளை, தெரிந்து - அறிந்தும், ஆள்வினை - (மேற்கொண்ட) வினை (க்குரிய) முயற்சி, ஆளப்படும் - செய்யப்படும்; (அதுவே தகுதி யுடைத்தாம்.)

2. ஆள்வினை, காலமறிந்து, இடமறிந்து, செய்வினையின் மூலமறிந்து, விளைவறிந்து, தாம் சூழ்வன சூழ்ந்து, துணைமை வலி தெரிந்து ஆளப்படும்.

3. காலமும் இடமும் கருவியும் துணையும் ஆராய்ந்தறிந்து சூழ்வன சூழ்ந்து முயலுதலே தெரிந்துவினை செய்தலாம்.

4. "வினைவலியுந் தன்வலியும் மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல்." —குறள்.

"பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்தும்
இருளறு வெண்ணிச் செயல்." —குறள்.

"முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்." —குறள்.

"இடத்தோடு பொழுது நாடி யெவ்வினைக் கண்ணு மஞ்சார்
மடப்பட லின்றிச் சூழு மதியல்லார்க் கரிய துண்டோ
நடத்திடைக் காக்கை யொன்றே யாயிரங் கோடி கூகை
இடத்திடை யழுங்கச் சென்றாங் கின்னுயிர் செகுத்த
[தன்றே." —சீவக சிந்தாமணி.

"வலியே கால மிடமிவற்றான் மாற்றான் றனக்கு முனக்குமுள
பலவா நிலையும் வினைதொடங்கும் பண்புமதற்கா மிடையூறும்
விலகா ததனை விலக்குவதும் வெல்லுமாறும் வென்றதனா
லுலவாப் பயனு முதலனைத்து மோர்ந்துதெளிந்தே
[வினைசெய்க." —விநாயகபுராணம்.

"சுபமான மார்கழி மாதத்தில் அரசன் சண்டைக்குப் போதல் வேண்டும்; தனக்குப் பலக்குறை வில்லாதிருந்தால், பலகாலத்திலேயே சத்துருவின் தேசத்தை யெதிர்த்தல் வேண்டுமென்று மன மிருந்தால், பங்குனி சித்திரை மாதங்களிலும் போகலாம்; மற்ற மாதங்களிலும் தனக்கு நிச்சயமாக வெற்றியுண்டாகும் என்றும் தன் சத்துரு சதுரங்க பலமில்லாமல் துன்பப்படுகிறானென்றும் தோன்றினால் போகலாம்".
—மநுதரும சாத்திரம்.

5. "திருக்குறளில் காலமறிதல் முதலிய அதிகாரங்களில் விரிவாகக் கூறப்பட்ட நீதிகள் இங்கே ஒரு செய்யுளிற் சுருக்கிக் கூறப்பட்டமை அறியற்பாலது." —உ. வே. சா.

"இச் செய்யுள் மக்கள் யாவர்க்கும் மாண்புடைய நீதியுடைத்தெனினும் போர்த்தொழில் புரியும் புரவலர்க்கு ஆக்கப்பட்டதென் ஐயமின்றிக் கூறலாம்." —இள.

"வினைசெய்தற்குரிய காலம் வெம்மையுங் குளிருந் தம்முளொத்து நோய் செய்யாத காலமாயிருக்க வேண்டுதலின் 'காலமறிந்து' எனவும், யாருந் தந்நிலத்து வலியராதலில், 'இடனறிந்து' எனவும், முடிக்குங் கருமத்தினியல்பை முன்னேயாராயில் செய்துமுடித்த லெளிதாதலிற், செய்வினையின் மூலமறிந்து' எனவும், அதனால் நிகழ்வின்கண் வருநட்டத்தினும் எதிர்வின்கண் வரும் ஊதியம் பெரிதாக வேண்டுதலின் 'விளைவறிந்து' எனவும், அவற்றைப் பெரியாரோடு ஆலோசிக்க வேண்டுதலில் 'சூழ்வன சூழ்ந்து' எனவும், அதனை முடித்தற்குத் தம் வலியன்றித் தமக்குத் துணையாய் நின்றவரது வன்மையும் அறியவேண்டுதலில் 'துணைமை வலிதெரிந்து' எனவுங் கூறுதலால் முன்னர்க்கூறிய முயற்சியைத் தொடங்கும் உபாயம் இதனாற் கூறப்பட்டது." —தி. சு. செ.

"இது பெரும்பாலும் போர்த் தொழின் முயலும் அரசர் பொருட்டுக் கூறப்பட்டது." —அ. கு.

**காலமறிந்தாங்கு:**

**காலமறிந்து**—"காலமறிதலாவது தமக்கும் பகைவர்க்கும் ஆகுங்காலம், ஆகாதகாலம் என இருவகையையு மறிதல். தமக்காகுங் காலமாவது பொருண் முதலிய குறையின்றி மகிழ்ச்சி மிகுந்திருக்குங்காலம்." —அ. கு.

**ஆங்கு**—அசைச் சொல்.

**இடமறிந்து:**

"இடமறிதலாவது தமக்கும் பகைவர்க்கும் வெல்லுதற்குத் தக்கவிடமுந் தகாத விடமு மறிதல்." —அ. கு.

"இடனறிந்து" என்று பாடங்கொண்டார் **தி. சுப்பராயச் செட்டியார்.**

**செய்வினையின் மூலமறிந்து:**

"வினையின் மூலமறிதலாவது வினை நிகழ்ச்சிக்கு இன்றியமையாத காரணமாயுள்ள ரத கச துரக பதாதிகளுடைய வலியையும், ஏவல் செய்வோர், சேனைத்தலைவர் என்பவர்களுடைய வலியையும், உணவு, தண்ணீர் முதலிய வலியின் காரணங்களையுமறிதல். வினையின் மூலமறித லென்பதற்கு வினையினது தொடக்கம் தக்கதோ தகாததோ என அறித லென்பாருமுளர்." —அ. கு.

**மேலுந்தாம் சூழ்வன சூழ்ந்து:**

**தாம்:** அசைச் சொல்லாகவும் கொள்ளலாம்.

**சூழ்வன சூழ்ந்து**—என்பது "தொடங்குங் காரியத்திற்கு வருமிடையூறுகளையும் அவற்றினை நீக்கு முறையையும் வெல்லு முறையையு மாலோசித்தறிதல்." —அ. கு.

சூழ்வன - "செயப்பாட்டுவினை செய்வினைபோல வந்த எதிர்காலப் பலவின் படர்க்கை வினையாலணையும் பெயர்." —ஏ. எஸ். ஜெ.

**துணைமை வலிதெரிந்து:**

**துணைமை**—"குணியைக் குணமாகக்கூறுவது ஓர் மரபு வழுவமைதி." —ஏ. எஸ். ஜெ.

"**துணைமை** - துணையாந் தன்மை, இது உடையானுக்கு ஆகுபெயர்." —ஊ. பு. செ.

"துணைவலியறிதல் இருவகைப்படும், தனக்குத் துணையாவார் வலியறிதலும் மாற்றார்க்குத் துணையாவார் வலியறிதலு மென." —கோ. இ.

**ஆள்வினை யாளப்படும்:**

**ஆள்வினை:**—"இதற்கு முயற்சி என்பது பொருளானால் காரியத்தை ஆளுதற்கு ஏதுவாகிய வினையெனவும், காரியம் என்பது பொருளானால் ஆளப்படுகிற வினையெனவுங் கொள்க." —ஊ. பு. செ.

"ஆள்வினை - இடைவிடாத உடலின் முயற்சி இது வினைத் தொகை நிலைத்தொடர்." —கோ. இ.

**ஆளப்படும்** — 'ஆள்' என்னும் வினையெச்சத்தினின்று தொழிற்பெயர் கொண்டு 'படும்' என்பதைத் தேற்றப் பொருளில் வந்த தொழிற்பெயராக்கிக் 'கருமத்தை யாளுதல் வேண்டும்' எனப் பொருள் கூறினும் அமையும்." —தி. சு. செ

"செயப்பாட்டு வினையில் வந்த செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று. இருசொல்லாகக் கொண்டால் 'ஆள் வினை' என்பதைச் செயப்படுபொருளாகவும், படும் என்பதைத் தேற்றப்பொருள் தரும் தொழிற்பெயராகவுங் கொள்க. அப்படிக் கொள்ளும்போது 'ஆள்' என்பது தொழிற்பெயர்ப் பொருளதாக நிற்கும். பொருள் முயற்சியைச் செய்தலே தகுதியாம் என்பது." —ஏ. எஸ். ஜெ.

"படும் - 'வேண்டும்,' 'தகும்,' 'படும்' 'இம் மூன்றுமொரு பொருட்கிளவியாய்த் தொழிற் பெயராய்த் தேற்றப்பொருள் பட்டே நிற்குமென்க. இங்ஙனம் வருஞ் செய்யுட்கெல்லாம் நச்சினார்க்கினியர், சேனாவரையர், பரிமேலழகர், உரையாசிரியர்

முதலாயினார் முற்றும் எச்சமாயும் பொருளுரைக்கின் வழுவாம் என்று கருதி, வியங்கோட் பொருட்டென்றும், விதிப் பொருட்டென்றும், தகுதிப் பொருட்டென்றும் வேண்டுபவென்றும் தமக்கு வேண்டியவாறே பொருளெழுதிச் சொற்குணம் வாளாபோயினர்—நன்னூல் - வினையியல் - விருத்தியுரை."
—சி. மு.

இச்செய்யுள் தனித் தமிழ்ச் சொற்களா னியன்றுள்ளமை அறிக.

With a knowledge of the proper time and place, and of the root and fruit of the undertaking, after due deliberation, and with a knowledge of the strength of existing resources; an enterprize may be accomplished.—H. S.

An act should be carried into execution after weighing the time, place, the causes and the consequences thereof, and often thinking of all circumstances worthy of consideration, and estimating the strength of one's auxiliaries.
—C. M.

Knowing the suitable time, place, means and consequence, a thing should be done, done with all the resources at one's command.
—T. B. K.

---

## 53. கருமமே கண்ணாயினார்

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயினார்.

1. மெய்வருத்தம் - (பொறுத்தற்கரிய) உடலுழைப்பாலாகிய வருத்தத்தை, பாரார் - கவனியார், பசி - (உலைத்து வருத்தும்) பசியையும்,

நோக்கார் - (ஒரு பொருட்டாக) எண்ணமாட்டார், கண் துஞ்சார் - (இடைவிடா நினைப்பால்) உறக்கமுங் கொள்ளார்; எவ்வெவர் - யார் யார், தீமையும் - இழைக்கும் இடையூற்றையும், மேற்கொள்ளார் - பொருட்படுத்த மாட்டார், செவ்வி - காலத்தின், அருமையும் - அருமையை யும், பாரார் - நோக்கார், அவமதிப்பும் - (பிறர் செய்யும்) அவமதிப்பை யும், கொள்ளார் - உட்கொள்ளார்; கருமமே - (தொட்ட ஒரு) கரு மத்தை முடிப்பதிலேயே, கண்ணாயினர் - கண்ணாக விருப்பவர்.

2. கருமமே கண்ணாயினார் மெய்வருத்தம் பாரார்; பசி நோக்கார்; கண் துஞ்சார்; எவ்வெவர் தீமையும் மேற்கொள் ளார்; செவ்வி அருமையும் பாரார், அவமதிப்புங் கொள்ளார்.

3. உழைப்பையும் உணவையும் உறக்கத்தையும் ஊறு களையும் பொருட்படுத்தாது கருமத்தை முடிக்க முயலல்வேண்டும்.

4. "இன்பம் விழைவான் வினைவிழையான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண்." —குறள்.

"துன்பமுற வரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.' —குறள்.

"கோளாற்றக் கொள்ளாக் குளத்தின்கீழ்ப் பைங்கூழ்போல்
கேளீவ துண்டு கிளைகளோ துஞ்சுப
வாளாடு கூத்தியர் கண்போற் றடுமாறுந்
தாளாளர்க் குண்டோ தவறு." —நாலடியார்

"அடிநாளி லாய்ந்தெண்ணிக் கற்றுணர்ந்து
பழகியநற் கருமங்கள் செய்யுங்கா
லிடங்கால மறிதலொடு சார்புபகை யறிதலுமே
யெதையுந்தா னறிதல்
கெடுதிவரி னுங்காத்து மறதியாஞ் சோர்வின்றி
நிறை குணத்தி னுதி
முடிவென்னும் பயன்கண்டு விரைவதாந்
தற்கால முயற்சியது தானே." —நீதிசாரம்.

5. "முன்பு கூறிய வுபாயத்தாற் றொடங்கிய முயற்சி யுடையோர் அது முடியுமளவுந் தமக்கு வருந் தீங்குகளை நோக்கார் என்பது கருத்து." —தி. சு. செ.

"சரீர வருத்தம் பசி முதலியவைகளைக் கருதி அவை நீக்குதற்கு முயல்வாராயின், தொடங்கிய காரியம் இடையூறெய்தி முடிவு பெறாதென்க." —அ. கு.

"துருவன் இருண்ட காட்டில் வெயில், பனி, மழை முதலியவற்றால் உடலுக்கு ஏற்பட்ட மெய்வருத்தம் பாராமலும், பசி நோக்காமலும், கண் துஞ்சாமலும், கொடிய காட்டு விலங்குகளின் தீமையை மேற்கொள்ளாமலும் தன் கருமமே கண்ணாகித் திருமாலிடம் என்றும் அழியா வானுலகப் பதவி பெற்ற கதை இதற்குத் தக்க சான்றாகும்." —இள.

**கண்டுஞ்சார்:**

"உயர்திணையொடு சார்ந்த அஃறிணைப் பெயர் உயர்திணை முடிபேற்று நின்றது திணைவழுவமைதி." —தி. சு. செ.

"முன் கண்ணென வேண்டாது கூறியது துஞ்சாமையாகிய சிறப்புடைய தென்பதை உணர்த்துதற்கு. 'கண்டுஞ்சார்' என்பது கையொடிந்தான் என்பதுபோன்ற திணைவழுவமைதியாகிய எழுவாய்த் தொகா நிலைத்தொடர், பின்மொழியிற் பொருள் சிறந்து நின்றது." —கோ. இ.

"கண் துஞ்சு - தனிவினைப் பெயர்." —சி. மு.

**எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்:**

"எவ்வெவர்—எவர் எவர் என இரட்டித்ததில் நிலைமொழி விகாரப்பட்டது. எப்படிப்பட்ட, எல்லாரும் என்பது பொருள். தீமையை மேற்கொள்ளாமையாவது பிறர் செய்யு மிடையூறுகளுக்கு எதிர்செய்யத் தலைப்படாம லிருப்பது." —ஊ. பு. செ.

"எவர் + எவர் பன்மைப் பொருளில் வந்த அடுக்குத் தொடர்." —இள.

"எவர் எவர் என்பதற்கு நட்பினர் தீமை செய்யாராதலின் அவரொழிந்தவரைக் கொள்க. எவர் - மிக்க பகைவர், எவர் - முற்றும் அயலவர், தீமையும் - ஆகிய இவ்விருவரது தீமைகளையும் என்பது." —கோ. இ.

"இலகுவிலே நீக்கத்தக்க தீங்கினையும் பொருட்படுத்தா ரென்பது தோன்ற 'எவ்வெவர் தீமையு' மென்றார்." —அ. கு.

**செவ்வி அருமையும் பாரார்:**

"காலத்தி னருமையாவது தங் காரியத்திற் கொவ்வாது காலம் மாறுதல்." —அ. கு.

"கால வேற்றுமையாவது வெயில் பனி மழையாக வேறு படுதல்." —தி. சு. செ.

"செம்மை - பகுதி. ஒன்றன் படர்க்கை இகர விகுதிப் புணர்ச்சியில் மையீறு கெட்டதும், மகரம் வகரமானதும், வகரத் தோற்றமுஞ் சந்தி. (நன்னூல்-எழுத்து-சூத்திரம் 53.) அவ தானிக்குந் திறமில்லாத ஒருவர் செ - பகுதி யெனக் குழறுவர்; இதற்கு விதி தொல்காப்பியத்தி லுண்டென்பதற்கு அஞ்சார்." —கோ. இ.

**கருமமே கண்ணாயினர் :**

"கண்ணல் - குறித்திடல்; கண் முதனிலைத் தொழிற் பெயர், ஏ-பிரிநிலை." —கோ. இ.

"கண்ணாயினர் என்பதற்குக் கண்ணைக் கொண்டவர் என்பாருமுளர்" —அ. கு.

"காரியத்திலே கண் வைத்தவர் எனவும் உரைக்கலாம்" ஊ. பு. செ.

They regard not bodily pain; they consider not hunger; they *indulge* not their eyes in sleep; they esteem not the injury of any; they look not to the rarity of a seasonable opportunity; they care not for contempt; whose eye is *fixed on* their undertaking. —H. S.

Those who have set their whole heart in gaining an object will not regard bodily pain and hunger, will not sleep, will not take heed of the evils that others do,

will not even think of the value of time and of the injury of slanders heaped on them. —C. M.

Those that are resolved on doing a thing mind not their bodily exertion; feel no hunger, indulge not in sleep; care not for the hindrance of others; regard not the unsuitability of time and mind not the scoffs of others.
T. B. K.

---

## 54. சிறுபகை யோம்பல்

*சிறிய பகையெனினு மோம்புதல் தேற்றார்*
*பெரிதும் பிழைபா டுடையர்—நிறைகயத்*
*தாழ்நீர் மடுவிற் றவளை குதிப்பினும்*
*யானை நிழல்காண் பரிது.*

1. சிறிய - சிறியனவாய, பகை - பகைகள், எனினும் - என்றாலும், ஓம்புதல் - (அவற்றினின்றும் தம்மைக்) காத்துக்கொள்ளுதலை, தேற்றார் - உணர்ந்தறியாதவர், பெரிதும் - மிகவும், பிழைபாடு - பிழைபடுதலை, உடையர் - உடையராவர்; நிறை - நிறைந்த, கயம் - நீரையும், தாழ்நீர் - தாழுந் தன்மையையுமுடைய, மடுவிலே - மடுவின்கண், தவளை - தவளையொன்று, குதிப்பினும் - குதித்தாலும், யானை - (அம்மடுவின் கரையோரத்தில் அவ்வமயம் நிற்கும்) யானை, நிழல் - (அம்மடுவின் நீரின்மீது) தன்னிழலை, காண்பது - காணுதல், அரிது - அரிதாகிவிடும்.

2. பகை சிறிய எனினும் ஓம்புதல் தேற்றார் பிழைபாடு மிகவும் உடையர்; நிறைகயத் தாழ்நீர் மடுவில் தவளை குதிப்பினும், யானை நிழல் காண்பரிது.

3. பகை சிறியதென்று புறக்கணித்தல் அறிவுடைமையாகாது.

4. "இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த இடத்து." —குறள்.

"முட்கொ ணச்சு மரமுளை யாகவே
யுட்க நீக்கி னுகிரினு நீக்கலாம்
வட்கி நீண்டதற் பின்மழு வுந்தறு
கட்குடா ரமுந்தாங் களைகிற் பவோ." —சூளாமணி.

"பஞ்சியின் மெல்லிதேனும் பகை சிறிதென்ன வேண்டா
அஞ்சித்தற் காக்க வேண்டும் அரும்பொருளாக."
—சீவகசிந்தாமணி.

5. "சிறு பகையை இகழ்ந்து அதனைக் களையாமல் இருத்தல் தீது என்பது கூறப்படும். சிறிய பகையால் பெருந் தீங்கு விளைதல், "சிறிய ரென் றிகழ்ந்து நொய்வு செய்வன செய்யல்" (அரசியற் 32) என்று இராமன் கூற்றாகக் கம்பர் அமைத்த செய்யுளாலும் விளங்கும்." —உ. வே. சா.

"உருவிற் பெரிய யானையானலும் நீரிற் பிரதிபிம்பித்த தனது தேக நிழலை யுருவிற் சிறிய தவளையாற் காணுதலும் அரிதாதல்போலத் துணை வலி முதலிய வலியிற் பெரிய அரசரானும், அவற்றாற் சிறிய அரசரது பகைமையை முன்னறிந்து காவாராயின் அதனல் தமது பெருமையை யிழப்பர் என உவமைக் கேற்ப உபமேயத்திற்கும் பொருள் விரித்துக் கொள்க." —தி. சு. செ.

"நீர்நிலையோரத்தில் ஓர் யானை நிற்க அதன் நிழல் நீரில் காணப்படுகிறது. அவ்வமயம் ஓர் சிறு தவளை தண்ணீரில் குதிக்கிறது. குதித்தவுடன் நீர் கலங்கி யானையின் நிழல் சிதைவுறுகிறது. தவளையோ யானையினும் எவ்வளவோ சிறியது. அது குதித்தால் நீர்நிலை முற்றும் கவர்ந்து காணப்பட்ட யானைநிழல் சிதைவுறுவதுபோல் சிறிய பகைவராயிருந்தாலும் அவராலும் கேடுண்டு என்று விளக்கினர் ஆசிரியர்.

'சிறுபாம் பெனினும் பெருந்தடி கொண்டடி' என்பது பழமொழி. பூநாகம் சிறிது. அதன் விடமோ உயிரையே வாங்கிவிடும். ஒரு சிறுவன் நம்மைப் பற்றி ஒரு அவதூறு சொல்வானயின் உலகம் கேள்விப் பேச்சில் நம்புவதா யிருப்பதால் அவ்வவதூறு அப்படியே பலபேரிடைப் பரவி நமக்கு

அநேக பகைவர்களை உண்டாக்கும். ஆகையால், பகை சிறிதெனினும் வீட்டிடல் வேண்டா.'' —இள.

**சிறியபகை யெனினும் ஓம்புதல் தேற்றார் :**

"ஓம்புக தேற்றார்'' என்று பாடங்கொண்டார் **சி. வை. தாமோதரம் பிள்ளை.**

"**பகை** - சொல்லளவில், பால்பகா அஃறிணைப் பெயராயிருத்தலால் பலவின்பாலாய்ச் 'சிறிய' என்னும் பலவின் படர்க்கைக் குறிப்புவினை கொண்டது.'' —கோ. இ.

பகை ஓம்புதல் - முற்றுங் களைதல்.

"**தேற்றார்** - தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாயினும் இங்குத் தன்வினையாய் நின்றது.'' —ஏ. எஸ். ஜெ.

"தேற்றார் - தன்வினைக்கண் வந்தது, "நட்பாடல் தேற்றாதவர்'' (குறள், 187) என்புழிப் போல.'' —உ. வே. சா.

"தேற்றார் - இது பிறவினை. தேறு - தன்வினைப் பகுதி. தன்னைத்தேறச் செய்வார் எனப் பொருள் கொள்ளல் வேண்டும்.'' —ஊ. பு. செ.

**பெரிதும் பிழைபாடுடையர் :**

"**பிழைபாடு** - இரண்டு சொல் ஒருசொற்றன்மைப்பட்டு நின்ற முதனிலைத் தொழிற்பெயர்.'' —ஏ. எஸ். ஜெ.

"பாடு—முதனிலை திரிந்த தொழிற்பெயர்; படு - முதனிலை.'' —தி. சு. செ.

"**உடையர்**—செயப்படுபொருள் குன்றாத குறிப்பு வினைமுற்று.'' —ஏ. எஸ். ஜெ.

**நிறைகயத் தாழ்நீர் மடுவில் :**

"**நிறைந்த** - மிக ஆழமாகிய நீரையுடைய மடுவில்'' என்று பொருள் கொண்டார் **ஜெகராவ் முதலியார்.**

"**கயத்தாழ்**—என்பது மரபு வழுவமைதியாகிய ஒருபொருட் பன்மொழி." —ஏ. எஸ். ஜெ.

"ஆழத்தை உணர்த்தும் கயம் என்னுஞ் சொல், தாழ் என்பதோடு ஒருபொருட் பன்மொழியாய் மிகத் தாழ்ந்த என்றுரைக்கப்பட்டது. கயம் என்பதை அகழிக்கு வைத்து மடு என்பதை ஆழ்ந்த தண்ணீருள்ள இடத்துக்கு வைத்து நிறைந்த கயத்திலே ஆழ்ந்த நீரையுடைய மடுவின்கண் எனப் பொருள் கூறலுமாம்." —ஊ. பு. செ.

"கயம், மடு என்னும் இரண்டு சொல்லுங் குளம் எனப் பொருள்படினும் வடிவில் வேறுபாடுடையவை யாகலான் இருபெயரொட்டுப் பண்புத்தொகை." —இள.

"பண்புத் தொகைக்கு இடைப்பிறவால் இன்மையால் '**தாழ்நீர்**' என்பதை மடுவிற்கு அடையாக்கி ஒருசொல்லாகக் கொள்க." —கோ. இ.

"கயம் - நீர். 'குளமு மாழமு நீருங் குறையும் களிறும் பெருமையு மேன்மையுங் கயமெனல்' என்பது **பிங்கலம்**. தாழ்நீர் - கீழே ஆழ்ந்துபோகுந் தன்மை." —அ. கு.

**யானை நிழல் காண்பரிது :**

"**காண்பு**—காணுதல்; தொழிற்பெயர். 'மனங் கவல்பின்றி' (**பொருநராற்றுப்படை**, 95) என்பது போல. வலியாற் சிறிய பகைவர் பெருவன்மை யுடையாருக்கும் தீங்கிழைப்ப ரென்பது உவமையால் விளங்கும்." —உ. வெ. சா.

Those, who perceive not, that they ought to beware of even the weakest foe, are greatly in error; if a frog only leap into the deep water of the low pool, it is impossible to see the shadow of an elephant. —H. S.

Those that do not feel the necessity of being on their guard against enemies weak though they be, are highly to blame. Though the insignificant frog jump on the surface of the waters of the pool on whose banks

are elephants ever so slightly, the shadows of the elephants are not reflected by the waters. —C. M.

They err greatly who do not guard themselves against even the smallest foe. In a large pool, in deep water, a leaping frog may make it impossible to see even the shadow of an elephant. —T. B. K.

---

## 55. உட்பகை யோம்பல்

*புறப்பகை கோடியின் மிக்குறினு மஞ்சார்*
*அகப்பகை யொன்றஞ்சிக் காப்ப—அனைத்துலகும்*
*சொல்லொன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே*
*பல்காலுங் காமப் பகை.*

1. புறப்பகை - வெளிப் பகைவர், கோடியின் - கோடிக்கு மேலும், மிக்கு - மிகுந்து, உறினும் - பொருந்துவாராயினும், அஞ்சார் - (அறிவுடையோர்) அதற்காக அச்சங் கொள்ளார், அகப்பகை - (ஆனால்) உட்பகைவன், ஒன்று - ஒருவனே யிருந்தாலும் அவனை, அஞ்சி - (மிகவும்) அஞ்சி, காப்ப - (அவனால் தமக்கேதும் தீங்கு நேரிடாதபடி தம்மைக்) காத்துக்கொள்வர்; அனைத்து - எல்லா, உலகும் - உலகங்களையும், சொல் - (தம்முடைய நிறைமொழிச்) சொல், ஒன்றின் - ஒன்றினால், யாப்பார் - பிணித்துத் தம் அடிப்படுத்த வல்ல முனிவர்கள், பரிந்து - வருந்தி, ஓம்பிக் காப்ப - (தம்மை அணுகா வண்ணம்) பாது காவாநிற்பர், பல்காலும் - பன்முறையும், காமப்பகை - காமமாகிய உட்பகையை.

2. சொல் ஒன்றின் உலகு அனைத்தும் யாப்பார், காமப் பகை பலகாலும் பரிந்தோம்பிக் காப்பவே; கோடியின் மிக்கு புறப்பகை யுறினும் அஞ்சார், அகப்பகை யொன்று அஞ்சிக் காப்ப.

3. புறப்பகையினும் உட்பகை பன்மடங்கு கேடுடைத்து.

4. "எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ள தாங் கேடு." —குறள்.

"வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. —குறள்.

உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்." —குறள்.

"இம்மைப் பழியும் மறுமைக்குப் பாவமும்
தம்மைப் பரியார் தமரா யடைந்தாரில்
செம்மைப் பகைகொண்டு சேராதார் தீயரோ
மைம்மைப்பின் நன்று குருடு." —பழமொழி.

"வெள்ளம் பகையெனினும் வேறிடத்தார் செய்வதென்
கள்ளம் உடைத்தாகிச் சார்ந்த கழிநட்புப்
புள்ளொலிப் பொய்கைப் புனலூர அஃதன்றோ
அள்ளில்லத் துண்ட தனிசு." —பழமொழி.

5. "கூட இருந்து குரல்வளை அறுக்கும் கொடியோரையும், உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்யும் ஊதாரிகளையும் உடனே களைக. உறவினரென்று உள்ளதை உள்ளவாறுரைப்பது தப்பு. வெளிக்கு உறவுகாட்டி, உட்பகைவராய் இருந்து, நம் நிலைதெரிந்து, வலிமை எளிமை அறிந்து நமக்கே வாள் தீட்டும் வன்னெஞ்சர் உலகிற் பலருளர்." —இள.

"உலகைச் சாபானுக்கிரகங்களால் தம் வசப்படுத்தலின், 'அனைத்துலகுஞ் சொல்லொன்றின் யாப்பார்" எனவும், தவத்தினர்க்குக் காமம் கூடா வொழுக்க மாதலின் 'பல்காலும் பரிந்தோம்பிக் காப்ப' எனவும், முன்னே யறிந்து தம்மைக் காத்தலின் 'அஞ்சார்' எனவும், அறியவும் தம்மைக் காக்கவும் படாது கீழறுத்தலின், 'அகப்பகை யொன்றஞ்சிக் காப்ப' எனவுங் கூறுதலால் உறவினராய்த் தம்மை மறைத்தொழுகும் உட்பகைவரை யரசர் நீக்கவேண்டு மென்பது கருத்து."
—தி. சு. செ.

**புறப்பகை கோடியின் மிக்குறினும் அஞ்சார் :**

**புறப்பகை**—"புறப்பகையாவது பகையை வெளிப்படக் காட்டிப் புறத்திலிருக்கும் பகைவர்." —ஏ. எஸ். ஜெ.

"பகை-பகையுடையார்மேல் நிற்றலின் தொழிலாகு பெயர்." —இள.

**கோடியின் மிக்குறினும்**—"கோடி-மிகப் பலரென்பதற்குக் காட்டியதோரெண். மிக்கு - இறந்தகால வினையெச்சம்; மிகு - பகுதி; உ - வினையெச்ச விகுதி; முற்றியலுகர மாதலால் பகுதி ஒற்றிரட்டல் விரித்தல்; உகரக் கேடு சந்தி." —கோ. இ.

**அஞ்சார்**—"அஞ்சார் என்பதனையே கருத்தாவாகக் கொண்டு கோடியின் மிக்குப் புறப்பகை யுறினும் அஞ்சிலாராய பெரியோரெனப் பொருள் கூறினுமாம்." —சி. வை. தா.

**அகப்பகை யொன்றஞ்சிக் காப்ப :**

**அகப்பகை**—"பகைமையைப் புறத்திலே காட்டாமல் உள்ளே யிருக்கும் பகைவர். அவர் ஞாதியர், மந்திரிகள் முதலானோர்." —ஏ. எஸ். ஜெ.

"அகப்பகை - உறவுபோலக் காட்டி உள்ளாய் நிற்கும் பகை." —அ. கு.

**பரிந்தோம்பிக் காப்பலே பல்காலுங் காமப் பகை :**

**ஓம்பிக்காப்ப**—"ஒருபொருட் பன்மொழி அன்றி, விலக்கிக் காப்பரெனினு மமையும்." —சி. வை. தா.

**பல்காலும்**—"முற்றுந் துறந்தவராயினும் உயிர்க்குண மாகிய காமம் இடையே தோன்று மாதலால் 'பல்காலும்' என்றார். பல்கால் - பண்புத்தொகை; விரிந்தால் பன்மை யாகிய கால் என விரியும்; நிலைமொழி பல என்பார் நன்னூலார்." —ஏ. எஸ். ஜெ.

"புறப்பகைகளை அடக்கும் ஆண்மை யுடையார்க்கும் உட்பகையாகிய காமத்தை அடக்குதல் அருமை என்றபடி." —உ. வே. சா.

**இஃது எடுத்துக்காட்டுவமையணி.**

Those, who fear not the attack of more than ten million avowed enemies, should beware of a single secret foe ; the *Sages,* who bind the whole world by a single word, will guard, with unremitting caution, against the enemy, lust.
—H. S.

The Sages, who can sway the whole world with a single word strive to suppress the influence of lust. The wise prince therefore will fear not a crore of foes from without, but will guard himself against the more dangerous foes that are within.
—C. M.

Those that fear not a crore of outside enemies still fear one secret foe. The sages who bind the whole world with a single word guard with unremitting caution against in - born lust.
—T. B. K.

---

## 56. உட்பகை களைதல்

*புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை*
*வெளியிட்டு வேறுதல் வேண்டுங் கழிபெருங்*
*கண்ணோட்டஞ் செய்யேல் கருவியிட் டாற்றுவார்*
*புண்வைத்து மூடார் பொதிந்து.*

1. *புறம் - புறத்திலே, நட்டு - நட்புச் செய்து, அகம் - அகத்திலே, வேர்ப்பார் - புழுங்குவோருடைய, நச்சு - நஞ்சைப்போலும் பகைமை - பகைமைத் தன்மையை, வெளியிட்டு - வெளியாக்கி, வேறுதல் - வேறுபட்டுப் பிரிதலே, வேண்டும் - விரும்பத் தக்கதாம் ; கழிபெரும் - (அவ்வாறன்றி) மிகப் பெரிய, கண்ணோட்டம்-தாட்சிண்ணியம், செய்யேல் - செய்யற்க ; கருவியிட்டு - சூரியினால் அறுத்து, ஆற்றுவார் - ஆறச் செய்வார்களேயன்றி, புண் - புண்ணை, மூடார் - மூடிவையார்கள், பொதிந்து - வெளிக்காட்டாது மறைத்துவைத்து.*

2. புறம் நட்டு அகம் வேர்ப்பார் நச்சுப் பகைமை வெளியிட்டு வேருதல் வேண்டும். கழிபெரும் கண்ணோட்டம் செய்யேல். புண் கருவியிட்டாற்றுவார், பொதிந்துவைத்து மூடார்.

3. **உட்பகையை உடனே களைதல் வேண்டும்.**

4. "உட்பகை-யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்." —குறள்.

"முகத்தி னினிய நகாஅ வகத்தின்ன
வஞ்சரை யஞ்சப் படும்." —குறள்.

"தமரா யிருந்து புறம் பகைமைச் சார்பாக் காலம் வரு மளவு
மமரா நிற்கு முட்பகையை யஞ்சிக் காக்க வுறிற் கடிக
நமரா மெனவே கண்ணோடி னல்ல வமைச் சாதியைத் தேக்கு

நுமரா மினத்தைத் தணிப்பிக்கு நுன்னைக் குடியோ
டெளிதழிக்கும்." —பிள்ளையார் புராணம்.

"இன்னதே ஒற்றுமை கொள்ளாதார் தொடர்பு"
—நாலடியார்.

"எதிர்த்த பகையை இளைதாய போழ்தே
கதித்துக் களையின் முதிராதே" —பழமொழி.

"உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்." —இராமலிங்க அடிகள்.

5. "புண்ணை அறுத்து ஆற்றுமல் மூடிவைத்தவர்களை அப்புண்ணே கொல்லுவதுபோல உட்பகை உடையாரை அவர் பகைக் குணத்தை வெளிப் படுத்தி நீக்காவிடின் தம்முயிர்க்கு இறுதி செய்வர்." —ஏ. எஸ். ஜெ.

"சத்திரஞ் செய்தாற்றும் புண்ணை மூடிவைப்பில் அது உள்ளே புடைகொண்டு கெடுதி விளைத்தல்போல உட்பகையுடையோராய்க் காலம் வாய்க்குமளவும் புறத்திற் சிநேகித் தொழுகுவோரை, யவரது நடையால் மறைக்கிற் பின்பு தமக்குக் கெடுதி தப்பாது வருமாதலால் 'நச்சுப்பகைமை வேருதல் வேண்டும்' எனவும், முன்னர்க்கூறி அதனையே பின்னரும் வலியுறுத்

தற்குக் 'கழிபெருங் கண்ணோட்டஞ் செய்யேல்' எனவுங் கூறினர்." —தி. சு. செ.

**புறநட்டகம் வேர்ப்பார் நச்சுப் பகைமை :**

**புறம்நட்டு**—"நட்டு இறந்தகால வினையெச்சம். நள் பகுதி, ட் இறந்தகால வினை இடைநிலை, உ எச்ச விகுதி, ளகரம் டகரமானது சந்தி. —ஏ. எஸ். ஜெ.

"**அகம் வேர்ப்பார்**—வேர்ப்பார் - வியர்ப்பார் என்பதன் மரூஉ." —ஊ. பு. செ.

"வேர்ப்பார் என்பது காரணத்தைக் காரியமாக உபசரித்த உபசார வழக்கு. இது எதிர்கால வினைப்பெயர்." —கோ. இ.

"உயர்திணையோடு சேர்ந்த அஃறிணை யுயர்திணை முடிபேற்றது திணைவழுவமைதி." —தி. சு. செ.

**நச்சுப்பகைமை**—"நஞ்சு முன்பு தண்ணிதாயினும் பின்பு உயிர்க்கிறுதி விளைத்தலின் தொழில்பற்றி வந்த உவமைத் தொகை." —தி. சு. செ.

"கொந்து கொத்து, நந்து நத்து என வழங்குதல் போல, நஞ்சு நச்செசன வந்ததன்றிச் செய்யுள் அடிதொடை முதலிய நோக்கிவந்த வலித்தலன்று." —கோ. இ.

**வேண்டும்**—"தேற்றப் பொருள்தரும் தொழிற்பெயர்ச் சொல். படும், தகும் என்பனவும் அப்பொருளன. இச்சொற்கள் மூன்றும் வேறு, உண்டு, இல்லை என்பனபோல இருதிணை ஐம்பால் மூவிடங்கட்கும் பொதுவாய் வரும்." —ஏ. எஸ். ஜெ.

**கழிபெருங் கண்ணோட்டம் செய்யேல் :**

"கழிபெரு—ஒருபொருட் பன்மொழி." —கோ. இ.

"கழிபெரும் என்னும் ஒருபொருட் பன்மொழி கண்ணோட்டத்தின் சிறப்புணர நின்றது. கண்ணோட்டம் - தாட்சிண்ணியம். தாட்சிண்ணியமாவது கண்ணுக்கு எதிர்ப்படுவோனுடைய விருப்பம் அநுகூலமாதற்குத் துணையாகச் செல்லும்

பெருந்தகைமைக் குணம். பரிமேலழகர், கண்ணோட்டமாவது "தன்னோடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்க மாட்டாமை. இஃது அவர் கண் சென்றவழி நிகழ்வதாதலின் அப்பெயர்த்தாயிற்று" என்பர். கண்ணோட்டம் வாயிலாகப் பின்னும் உட்புகுதல் பற்றிக் 'கண்ணோட்டம் செய்யேல்' என்றார்." —அ. கு.

**கண்ணோட்டம்**—"ஒருவனுக்குப் பழகினவர்மேல் கண் சென்றபோது உண்டாவது ஆதலால் தாட்சிண்ணியத்துக்கு ஆரும் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயராயிற்று. கண்ணினது ஓட்டத்தி னுண்டாவது என்பது பொருள்." —ஏ. எஸ். ஜெ.

"கண் என்றது உட்கண், ஆதலால் மனம்" —ஊ. பு. செ.

**செய்யேல்**—"ஏவலொருமை எதிர்மறை வினை; ஏவலொரு மை எதிர்மறையைக் காட்டுவது ஏல் விகுதி." —கோ. இ.

"செய்யார்" என்று பாடங்கொண்டார் —உ. வே. சா.

"இது எடுத்துக்காட்டுவமை யணி." —கோ. இ.

"வேற்றுப்பொருள்வைப்பணி." —ஊ. பு. செ.

After discovering the venomous enmity of those, who burn with inward *hate,* while they are externally friendly, *instantly* separate from them: treat them not with too much delicacy: they, who use the knife to cure a sore, will not close it over unhealed. —H. S.

Expose the hollowness of those who harbour malignity in their hearts under the mask of friendship, and renounce them. Do not think of breaking the rules of decorum. Men will not keep sores covered but will try to heal them by incision. —C. M.

Expose and renounce without any regard the poisonous relationship of those who hide malice under cloak of friendship; an abcess is not covered up with tenderness, but cut up with a surgeon's knife and healed. —T.B.K.

---

## 57. வஞ்ச நட்பு.

**நட்பிடைக் குய்யம்வைத் தெய்யா வினைசூழ்ந்து**
**வட்கார் திறத்தராய் நின்றார்க்குத்—திட்பமாம்**
**நாளுலந்த தன்றே நடுவ னடுவின்மை**
**வாளா கிடப்பன் மறந்து.**

1. நட்பிடை - தம் நண்பரிடத்து, குய்யம் - வஞ்சித்தலை, வைத்து - (அகத்தே) கொண்டு, எய்யா - அறிதற்கரிய, வினை - தீங்கை, சூழ்ந்து - (செய்யும் வகையினை) ஆராய்ந்து, வட்கார் - பகைவருடைய, திறத்தராய் - தன்மை வாய்ந்தவராய், நின்றார்க்கு - (காலம் பார்த்துக்) காத்து நிற்பவருக்கு, திட்பம் ஆம் - வலியுடையதாகிய, நாள் - வாழ்நாள், உலந்தது - முடிந்துவிட்டது, அன்று - இல்லை; நடுவன் - (நடுவு நிலைமையுடைய) காலன், நடுவின்மை - (அத்தகைய வஞ்சகாது) நடுநிலைமை யில்லாமையை, மறந்து - கருத்திற் கொள்ளானாய், வாளா - சும்மா, கிடப்பன் - இருப்பன்போலும்!

2. நட்பிடைக் குய்யம் வைத்து எய்யாவினை சூழ்ந்து வட்கார் திறத்தராய் நின்றார்க்குத் திட்பமாம் நாளுளந்த தன்று; நடுவன் நடுவின்மை மறந்து வாளா கிடப்பன்.

3. வஞ்சக நட்புப் பூண்டோர் விரைவில் அழிந்துபடுவர்.

4. "கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு." —குறள்.

"கெடுவல் யானென்ப தறிகதன் னெஞ்ச
நடுவொரீஇ யல்ல செயின்." —குறள்.

"யானை யனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும் - யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லு மெறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கு நாய்." —நாலடியார்.

5. உட்பகையாயிருந்து தம் தலைவர்க்குக் கேடு சூழ்வார், உயிரோடு கூடியிருப்பினும் இறந்தாரோடு ஒப்பரென்பது கருத்து. அவர் உயிர்வாழக் காண்கின்றோமே யென்று வினவு

வார்க்கு 'நடுவன்...மறந்து' என்பது விடை. அத்தகையா ருடைய உயிரைக் கொள்ளாமை யமனுக்கு நடுவின்மை; நடு வின்மையால் மறந்து வாளா அவன் கிடப்பன்.—உ. வே. சா.

'நண்பர்போல் நடித்து நண்பர்க்கு வஞ்சகம் செய்வார் அதிசீக்கிரம் கேடுறுவர். மனோன்மணீயத்தில் ஜீவக வழுதிக்கு நன்மை செய்வதுபோல் புறம்பே நடித்துச் சேர அரசன் புருஷோத்தமன்பால் இரகசியமாய் ஜீவகனின் படைப்பலங் களைத் தெரிவித்து ஜீவகனுக்குக் கேடுதேடிய குடிலனெனும் அமைச்சன் இறுதியில் சிறைப்பட்டது தக்க சான்றாகும்.'--இள.

"வஞ்சகமாகச் சிநேகித்துத் தீங்கு செய்யக் கருதுவோருக்கு ஆயுள் முடிந்திலதாயினும், இடையில் அவர் முடிவாரென்பது குறிப்பெச்சம்." —கோ. இ.

**நட்பிடைக் குய்யம்வைத்து:**

குய்யம்—வட.சொற்றிரிபு.

"சிநேகத்தில் வஞ்சனை வைத்தென்றது, வஞ்சமாகச் சிநே கித்து என்றபடி." —கோ. இ.

"நட்பினிடத்தே வஞ்சனை செய்து; "நட்பிடைக் குய்யம் வைத்தான்"—(சீவக., 253)." உ. வே. சா.

**எய்யாவினை சூழ்ந்து:**

'எய்யாவினை—பிறரால் அறியப்படாத தீயசெயல்களை"
—உ. வே. சா.

"எய்யாமை - அறிவின்மைப் பொருளதாகிய பண்புப் பெயர்; எதிர்மறைத் தொழிற் பெயரன்று." —ஏ. எஸ். ஜெ.

"எய்யாவினை யென்பதைப் பண்புத் தொகைநிலைத்தொட ரென்க." —கோ. இ.

"மிகமறைவிற் செய்யப்படுவதாய்ப் பிறர்க்குப் புலப் படாமை பற்றி 'எய்யாவினை' என்றார். எய்த்தல் - அறிதல்."
—அ. கு.

**வட்கார் திறத்தராய் நின்ருர்க்கு :**

"அவர்கட்கு வேறுள்ள பகைவரோடும் சேர்ந்துகொண்டு நிற்பவர்க்கு" என்று பொருளுரைத்தார் **இளவழகனுர்.**

**வட்குதல்**—கெடுதல் ; அதனை யுடைவர் மனப்பொருள் கொண்டு பகைவர் என்னலாம்." —ஊ. பு. செ.

வட்கார் - கூசார்." —ஏ. எஸ். ஜெ.

**திட்பமாம் நாளுலந்ததன்றே :**

"**திட்பமாம்**—திட்பம் - பண்புப்பெயர்; திண், பகுதி - பம் - பகுதிப் பொருள் விகுதி, ணகரம் டகரமானது சந்தி. சொல்லியல்பு உணரமாட்டாத ஒருவர் அம் விகுதி யென்பர்; இவ்விகுதி பெற்றுவருஞ் சொற்கள் ; நலம், இலம், வளம், திண்ணம் எனச் சிலவும் ; திட்பம், தட்பம், நுட்பம், ஓட்பம், பருப்பம், செப்பம், அருப்பம், வெப்பம் என வருவனவே பலவும் ஆதலால் பம் விகுதி யென்றே கொள்க." —கோ. இ.

"அம் - விகுதி ; பம் விகுதியெனக் கூறுவாரும் உளர்." —தி. சு. செ.

"**திட்பமா**" என்று பாடங்கொண்டு திண்ணமாக, என்று பொருளுரைத்தார் **உ. வே. சாமிநாதையர்.**

"**நாளுலந்ததன்றே**—'நாள் - சாதியொருமை யாதலால் உலந்ததென்னும் ஒருமைவினைகொண்டது." —கோ. இ.

"**உலந்ததன்றே** - ஏகாரம் பிரசித்தத்தைக் காட்டுகிறது. ஆகவேவஞ்சனையாக்ச் சிநேகிப்பவர்க்கு உடனே ஆயுசு அழியும், ஆகில் ஏன்சாகவில்லை யென்ருல் யமன் மறந்து சும்மா விருக்கிருன் போலும் எனத்தற்குறிப்பேற்றமாக் கருத்துக்கொளல் வேண்டும்.' —ஊ. பு. செ.

**அன்றே**—என்பதற்கு "அல்லவா" என்று வினுப்பொருளிற் பொருளுரைத்து, அவருடம்பு வீழாத தென்னையெனின் என்று வருவித்துரை செய்தார் **அ. குமாரசுவாமிப் புலவர்.**

**நடுவ னடுவின்மை வாளாகிடப்பன் மறந்து :**

"நடுவன்—நடுநிலைமைக்கு ஆகுபெயர். அதனை யுடையவன் நடுவன் ; நடுவிலிருப்பவன் எனவுமாம் ; பாவபுண்ணியங்களுக் குப் பொதுவாய் நின்று தண்டிப்பவன் என்பது பொருள். இக் கருத்தைப்பற்றி 'சமவர்த்தி' என்று ஆரியத்திற் பெயருண்டு."
—ஊ. பு. செ.

"நடுவின்மைமறந்து—நாளுலந்தவர்களைக் கொண்டுபோவது தன் கடமையாயிருக்க அப்படிச் செய்யாமையால் தனக்கு நடு நிலைமை அழிந்த தென்பதை நினையாமல் என்று கருத்து."
—ஊ. பு. செ.

நடுநிலைமை யின்மையைக் காலன்பாலேற்றி உரை செய் தாருமுளர்.

"இயமன் யாவரிடத்துங் கண்ணோடாது ஒரே தன்மையனா யிருத்தலின் 'நடுவன்' எனவும், அவன் அந்நிலையனுதலால் பிறரையும் அந்நிலையர் எனக் கருதுதல் அவனுக்கியல்பாதலால் 'நடுவின்மை வாளாகிடப்பன் மறந்து' எனவுங் கூறினர்."
—தி. சு. செ.

"கிடப்ப னென்றதனல் யமனை இகழ்ந்தபடி."—உ.வே.சா.

"நடுநிலைமையை யுடைய இயமன் இடையே புகுந்து உயிர் கொண்டதாகிய நடுநிலைமை யில்லாமையை மறந்து செய்தான் போலும் எனக் கூறியதனல் இது தற்குறிப் பேற்றவணி எனப்படும்."
—ஏ. எஸ். ஜெ.

For those, who, meeting friendship with treachery, secretly devise evil, and array themselves on the side of enemies; surely the appointed day of power has expired; and Yaman must be lying carelessly forgetful of their iniquity.
—H. S.

In the case of those that hold hollow friendship and practise deceit in secret, it is not to be presumed that

their days are not as yet numbered. *Yama* only slumbers for the time, unconscious of his own pitiless character.

—C. M.

For those, who, while professing friendship behave with treachery and secretly devise evil, arraying themselves among the enemies, surely the appointed day has gone by and Yama lies careless, forgetful of their iniquity.

—T. B. K.

---

## 58. மனநலம்

*மனத்த கறுப்பெனி னல்ல செயினும்*
*அனைத்தெவையுந் தீயவே யாகும்—எனைத்துணையுந்*
*தீயவே செய்யினு நல்லவாக் காண்பவே*
*மாசின் மனத்தி னவர்.*

1. மனத்த - மனத்திடத்தே, கறுப்பு - ஒருவன்மீது 'செற்றம்' எனின் - உள்ளதானல், நல்ல - நல்ல காரியங்களை, செயினும் - (அவன்) செய்தாலும், அனைத்தெவையும் - அவை எல்லாம், தீயவே - பொல்லாத காரியங்களாகவே, ஆகும் - தோன்றும்; எனைத்துணையும் - எவ்வளவு மிகுதியும், தீயவே - பொல்லாத காரியங்களையே, செய்யினும் - (அவன்) செய்தாலும், நல்லவா - நல்ல காரியங்களாக, காண்பவே-கருதுவார்கள், மாசுஇல் - கறையில்லாத, மனத்தினவர் - மனநலம் படைத்தோர்.

2. கறுப்பு மனத்த எனின் நல்ல செயினும் அனைத்தெவையும் தீயவேயாகும்; மாசின் மனத்தினவர் எனைத்துணையுந் தீயவே செய்யினும் நல்வாக் காண்பவே.

3. மனநலமே மாநலம் பயக்கும்.

4. "அழிவந்த செய்யினு மன்பரு ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்." —குறள்.

"வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்
தீரக் காய்ந்துழி நல்லவுந் தீயவாந்
ஒரும் வையத் தியற்கையன் றோவெனு
வீர வேனெடுங் கண்ணி விளம்பினுள்." —சிந்தாமணி.

"தத்தம்
இனத்தனைய ரல்லர் எறிகடற் றண்சேர்ப்ப
மனத்தனையர் மக்களென் பார்." —நாலடியார்.

5. "அல்லது, பகைமை ஒருவனுடைய மனத்தின்கண் உளவாயி னவன் நற்கருமங்களைச் செய்வானுயினு மவைகள் தீயவேயாய் முடிகின்றன. களங்கமற்ற மனத்தினையுடையோ ரெவ்வளவுந் தீமையே புரியினு மவைகள் நன்கு முடிவனவாகவே காணப்படும்." —சி. வை. தா.

"கறுப்பு, குற்றம் எனக்கொண்டு ஒருவன் கபடம் வஞ்சனை முதலான குற்றங்களை மனதிலுடையவனுனல் அவனுக்குப் பிறர் செய்யும் நன்மைகள் தீமையாகவே தோன்றும்; மனதிற் குற்றமில்லாதவருக்குப் பிறர்செய்யுந் தீமையு நல்லதாகத் தோன்றும் எனவுங் கருத்துக் கொள்ளலாம். இரண்டுவிதத் திலும் கறுப்பு ஆகுபெயர். ஆகையால் வெறுப்பு விருப்பில் லாமல் ஒன்றை ஆராயவேண்டும்." —உ. பு. செ.

"ஒருவர் செய்யும் நன்மை தீமையாதற்கும் விருப்பு வெறுப்புக் காரணம் ஆதலால் அறிவுடையோர் அவற்றைக் கொள்ளாது ஒருவர் செய்யுங் கருமங்களின் குணங் குற்றங் களை யாராய்ந்து கொள்வார் என்பது எஞ்சி நின்றது குறிப்பெச்சம். இதனுல் மனத்தாலாய பயன் கூறப்பட்டது." —தி. சு. செ.

"பிறர் செய்த தீமையை மனத்திலே நினைத்திருத்த லாகா தென்பது கருத்து. 'நன்றல்ல தன்றே மறப்பது நன்று' எனவும் 'மனத்துக்கண் மாசிலனுத லனைத்தறன்' எனவும், வள்ளுவருங் கூறுவர்." —அ. கு.

மனத்த கறுப்பெனின்:

"கறுப்பு மனத்தவெனின் - குற்றங்கள் மனத்தின்கண் உள்ளவென்ருல் - மனத்திற்குக் குற்றமாவது தீயனவற்றை

நினைத்தல். "மைபொதி விளக்கே யென்ன மனத்தினுட் கறுப்பு வைத்து (பெரியபுராணம்)" —உ. வே. சா.

'கறுப்பு' - கோபமாகிய குறிப்புணர்த்தும் உரிச்சொல். இது கருமை என்றவழி அப்பொருள்படாது தொழிற்பட்டு நின்றவழி அப்பொருள்படும். செவப்பு என்பதும் அது: "கறுப்புஞ் செவப்பும் வெகுளிப் பொருள" என்பது தொல்காப் பியம்." —தி. சு. செ.

"கறுப்பு என்பதற்குக் கறையெனப் பொருள்கொண்டு அழுக்கு மனத்திற் கிடக்குமாயின், என உரைத்தலும் பொருந்தும்." — அ. கு.

"கறுப்பு மனத்த என்றது உயர்வு பற்றிய பால்வழுவமைதி. கறுப்பு கோபத்தின் காரியமாதலால் காரணத்தைக் காரியமாக உபசரித்த உபசார வழக்கு." — ஏ. எஸ். ஜெ.

"மனத்த மனத்தது என்பது ஈறு தொக்கது என்னலாம். காரணம் பலவாதலால் கோபங்களும் பல எனக்கொண்டு பன்மைவந்த தென்னவுமாம்." — ஊ. பு. செ.

"அனைத்தெவையும் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை." — ஏ. எஸ். ஜெ.

**நல்லவாக் காண்பவே:**

"**காண்பவே**—இதிற் 'காணப்படும்' என்றற்பாலது நயக்கு விதியினுற் 'காண்ப' என்ருயிற்று. அன்றி அதனைச் 'செய்ப' என்னும் வாய்பாட்டு முற்ருகக்கொண்டு 'பெரியோர்' என் றன்னவோர் கருத்தாவைத் தோன்ரு எழுவாயாக் கொள்ளினு மாம். ஏ-அசை" —சி. வை. தா.

**மாசின்மனத்தினவர்:**

"மாசு - வெகுளி, வைரம், பெருமை, அவா முதலியன இவை மனத்திலே கிடக்குமாயின் நன்மை தீமைகளை உள்ள வாறறியவிடாது மறைக்கும்" — அ. கு.

Where there is stain on the heart, even good deeds will be all received as evil: but those of spotless minds, though

men do them altogether evil, will still look upon it as good.
— H. S.

Even the good acts of a man who harbours malice will be considered evil, whereas even the evil acts of men with spotless hearts will seem to be good. — C. M.

Angry minds receive even good deeds as evil, bnt spotless minds receivc even the worst of evils as good. — T. B. K.

---

## 59. சொற்றிறம்.

இனியவ ரென்சொலினு மின்சொல்லே யின்னார்
கனியு மொழியுங் கடுவே—அனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினு நோய்தீர்க்கு மெய்பொடிப்பச்
சிங்கி குளிர்ந்துங் கொலும்.

1. இனியவர் - நல்லோர், என் சொலினும் - என்ன சொன்ன போதிலும், இன் சொல்லே - (பின்னர் நன்மையே பயத்தலால் அவை யாவும்) இனியசொற்களேயாகும்; இன்னார் - தீயவருடைய, கனியும் - அளிந்து கனிந்த, மொழியும் - சொற்களும், கடுவே - பின்னர் தீமையே பயத்தலால்) நஞ்சினைப்போன்ற வன்சொற்களேயாகும்; அனல்-தீயினைப் போல், கொளுந்தும் - சுடும், வெங்காரம் - வெங்கார உப்பு, வெய்து - வெப்பமுடையது, எனினும் - ஆனாலும், நோய் - உடல் நோயை, தீர்க்கும்-நீக்கி நன்மை பயக்கும்; மெய்-உடல், பொடிப்ப-புளகிக்கும்படி, சிங்கி - நஞ்சானது, குளிர்ந்தும் - குளிர்ந்திருந்தாலும், கொலும் - உடல் நலத்தைப் போக்கிக் கொல்லுதலைச் செய்யும்.

2. அனல்கொளுந்தும் வெங்காரம் வெய்தெனினும் நோய் தீர்க்கும்; இனியவர் என் சொலினும் இன்சொல்லே; சிங்கி மெய்பொடிப்பக் குளிர்ந்துங் கொலும்; இன்னார் கனியும் மொழியும் கடுவே.

**3. நல்லோர் வன்சொல்லும் இன்சொல்லே, அல்லார், இன் சொல்லும் வன்சொல்லே.**

4. *"நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்*
*மேற்சென் றிடித்தற் பொருட்டு."* —குறள்.

*"நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ*
*லொல்லை யுணரப் படும்."* —குறள்

*"மாசுற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்*
*பேசுற்ற இன்சொல் பிறிதென்க."* —நன்னெறி.

*"புன்சொல்லு நன்சொல்லும் பொய்யின் றுணர்கிற்பார்*
*வன்சொல் வழியராய் வாழ்தலு முண்டாமோ*
*புன்சொல் இடர்ப்படுப்ப தல்லால் ஒருவனை*
*இன்சொல் இடர்ப்படுப்ப தில்."* —பழமொழி.

5. *"சொல்லளவையா னோக்காது அதன் குணங் குற்றங் களை நோக்கிக் கொள்ளவேண்டும் என்றலால் இதனால் வாக்கினலாய பயன் கூறப்பட்டது."* —தி. சு. செ.

*"வெறுஞ் சொற்களை மட்டும் கவனியாது அவற்றின் குணங் குற்றங்களை ஆராய்தல் இன்றியமையாதது என்பதால் வாக்கினலாய பயன் இங்குக் கூறப்பட்டது."* — இள.

**இனியவ ரென்சொலினும் இன்சொல்லே:**

**இனியவர்** - *அன்புடையார், சிநேகிதர், விருப்பமுடையோர் (உரியவர்), நல்ல மனமுடையார், நற்குண நற்செயல்களை யுடையவராகிய நல்லோர் என்றும் பொருள்கள் கூறப் பட்டுள்ளன.*

"**என்சொலினும்** - *கடுஞ்சொற் கூறினுமென்றபடி."*—அ.கு.

*"அதாவது கேட்பதற்கு விருப்பமில்லாத சொற்களைச் சொன்னபோதிலும்."* — இள.

*"செவிக்கின்னாதை சொல் என்றபடி."* — தி. சு. செ.

**இன்னார் கனியுமொழியும் கடுவே:**

"இன்னார் - பண்படியாகப் பிறந்தபெயர்; இது எதிர்மறை வினைப்பெயரென மயங்கிக் குழறுவா ரொருவர்." —கோ. இ.

"இனிமைசெய்யார் என்னும் பொருள்தருதலின் பண்படியாகப் பிறந்த எதிர்மறைக் குறிப்பு வினைமுற்றுப் பெயர். இனிமை பகுதி." — தி. சு. செ'

"கனியும் - பெயரெச்சம் (கனிகின்ற)." — இள.

**அனல் கொளுந்தும் வெங்காரம் வெய்தெனினும் நோய் தீர்க்கும்:**

"அனல் கொளுந்தும் - அனல்பற்றிய." — அ. கு.

"கொளுந்தும்-எதிர்காலப் பெயரெச்சம்; கொளுந்து பகுதி." — தி. சு. செ.

"கொளுந்து - இது தன்வினை, கொளுத்து பிறவினைப் பகுதி." — கோ, இ.

"வெங்காரம் — உறைப்புங் கடுமையுமான ஓர் சுவைக் குணத்தை யுணர்த்தும் காரம் என்னுஞ் சொல் அதனை யுடையதற்கு ஆகுபெயர்; அது வெம்மை என்பதோடு பண்புத் தொகையாகிய ஒருவகைப் பொருளுக்குப் பெயராயிற்று; ஆதலால் அடையடுத்த ஆகுபெயர்." — ஊ. பு. செ.

"காரம் - பண்பாகுபெயர். வெம்மை பிறிதினியைபு நீக்கிய விசேடணம்." — ஏ. எஸ். ஜெ.

"வெய்து - பண்படியாகப் பிறந்த பெயர். வெய்யது எனச் சாரியை பெற்றுவரும்." — ஏ. எஸ். ஜெ.

தீர்க்கும் - "தன்வினை பிறவினைகட்குப் பொதுவாகிய தீர் பகுதி. "இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்" என்பதனால் தீர்க்கும் கொலும் என்பவை வந்தனவே யன்றிக், காலங்காட்டுவன வல்ல." — ஊ. பு. செ.

**மெய்பொடிப்பச் சிங்கி குளிர்ந்துங் கொலும்:**

சிங்கி - சிங்கு ( அழிவு ) பகுதி; அதனைச் செய்வது என்னும் பொருளில் இகர விகுதி வந்தது.

இது எடுத்துக் காட்டுவமையணி. —கோ. இ.

Whatever those of Kind disposition may say, will still be sweet; but even the honeyed words of the unkind will be gall. The kindling borax, though it burn, will assuage pain. Arsenic, though it causes the body to shiver with cold, will kill.

—H. S.

The words of the kind-hearted, whether sweet or not, will seem sweet; but even the sweet words of the rude will be bitter. The borax, although hot will cure disease, but poison though cooling will kill. —C. M.

The words of the kind-hearted, whatever they be, will always be sweet; but eveu the sweet words of the unkind will be bitter. Borax though hot will cure disease; while poison though cool will kill. —T. B. K.

---

## 60. நல்லாறு.

பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கும்
எய்தாமை சொல்லின் வழுக்காது—மெய்யில்
புலனைந்துங் காத்து மனமா சகற்றும்
நலமன்றே நல்லா றெனல்.

1. பொய் - பொய்யும், குறளை - புறங்கூறலும், வன்சொல் - கடுஞ்சொல்லும், பயனில - பயனில்சொற் கூறலும், என்று - என்ற, இன்நான்கு-இந்நான்கு குற்றங்களும்,எய்தாமைசொல்லில்- (தாம்)பேசும் சொற்களிற் பொருந்தாமலும், வழுக்காது - நெறிதப்பிச் செல்லாமல், மெய்யில்-உடம்பில், புலனைந்தும் - (உள்ள) ஐம்புலன்களையும், காத்து -

அடக்கியாண்டும், மனம் - மனத்தில், மாசு - குற்றங்களை, அகற்றும் - நீக்கியும்(செய்கின்ற,) நலம்-நற்செய்கை, அன்றே - அன்றோ, நல்லாறு - நன்னெறி, எனல் - என்று கூறத்தகுவதாம்?

2. சொல்லின் பொய் குறளை வன்சொல் பயனில என்றிந் நான்கும் எய்தாமை, மெய்யில் வழுக்காது புலமைந்துங் காத்து மனமாசகற்றும் நலமன்றே நல்லாறெனல்?

3. சொற்குற்றம், செயற்குற்றம், மனக்குற்றம் ஆகிய மூன்றும் இல்லாமையே நல்லொழுக்கமாம்.

4. "அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொன் னான்கு
மிழுக்கா வியன்ற தறம்." —குறள்.

"உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து." —குறள்.

"வாயி னடங்குத றுப்புரவா மாசற்ற
செய்கை யடங்குத றிப்பியமாம்—பொய்யின்றி
நெஞ்ச மடங்குதல் வீடாகு மிம்மூன்றும்
வஞ்சத்திற் றீர்ந்த பொருள்." —திரிகடுகம்.

"பொய்குறளை வெளவ லழுக்கா றிவைநான்கு
மையந்தீர் காட்சியார் சிந்தியார்—சிந்திப்பி
னையம் புகுவித் தருநிரயத் துய்த்திடுந்
தெய்வமுஞ் செற்று விடும்." —ஆசாரக்கோவை.

"கொலையே களவே காமத் தீவிழை
வுலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
றுள்ளந் தன்னி னுருப்பன மூன்றமெனப்
பத்து வகையாற் பயன்றெறி புலவர்
இத்திறம் படரார்." —மணிமேகலை.

5. "இல்வாழ்வோர்க்கு இவையுரியன வாதலின் 'நல்லாறு' எனவும், வாக்குக் குற்றம் ஒழிதலும், காயக் குற்றம்

ஒழிதலும், மனக்குற்றம் ஒழித்தற்குச் சாதனங்களாதலால், 'எய்தாமையும்' 'காத்தும்' என எண்ணும்மை தந்துங் கூறினர்.''
தி. சு. செ.

**பொய்குறளை வன்சொல் பயனில:**

பொய்குறளை வன்சொற் பயனில்சொல் என்னும்
இவ்வகை நான்கும் இழிந்தகு சொல்லே,'' —திவாகரம்.

''குறளை - சிறுமைப்பொருளதாகிய பண்புப்பெயர் புறங் கூறலுக்கானது பண்பாகு பெயர்,'' —எ. எஸ். ஜெ.

''குறளையாவது ஒருவர் இல்லாத இடத்தில் அவரைப்பற்றி இகழ்ச்சியாய்க் கூறுதலும், உறவினால் அறிந்த இரகசியங்களை நண்பன்மேல் வெறுப்பு வந்ததால் வெளியிடுவதும்.'' —இள.

''குறளை என்பது அற்பத்தின் பெயராய் அற்ப குணத்துக்கு ஆயிற்று. குறளை கோட்சொல்லுமாம்.'' —ஊ. பு. செ.

''நீதியாகிய நயமின்மையாற் பயனில் சொல்லுங் குற்ற மாயிற்று.'' —அ. கு.

**எய்தாமை சொல்லின்:**

''எய்தாமை - எய்து - பகுதி, ஆ - எதிர்மறை விகுதி, மை - வினையெச்ச விகுதி; இதுவும் மல், மே, து, றி என்பவைகளும் எதிர்மறை வினையெச்சத்துக்கே வரும்.'' —ஊ. பு. செ.

**வழுக்காது மெய்யில் புலமைந்துங் காத்து:**

''வழுக்காத்து மெய்யில்'' என்று பாடங் கொண்டு சொல்லின் வழுவாகிய பொய்குறளை வன்சொல் பயனில என்றிந் நான்கும் வந்தடையாமற் பாதுகாத்து என்றுரைத்தார் **அ. குமாரசுவாமிப்புலவர்.**

மெய்யில் என்பதற்கு வாய்மையினின்றும் என்று பொருள் கொண்டார் **தி. சுப்பராயச்செட்டியார்.** வாய்மையாவது பொருள் இன்பங்களைப் பற்றி நிகழும் பொய்மையொழிதல், என்றும் **அவர் விரித்துக் கூறினர்.**

சொல்லில் நாற்குற்றங்கள் எய்தாமற் காத்தும், உடம்பில் ஐம்புலன்கள் வழுவாமற் காத்தும், மனத்தில் மாசு சேராமல் அகற்றியும் என்று உரைப்பதிலுள்ள நயங்காண்க.

**மனமாசகற்றும்:**

மனமாசு - மனக்குற்றம்; அவையாவன, காமம் வெகுளி மயக்கம் பேரவா அழுக்காறு ஆகியவையாம்.

"மனத்தின்கண் தோன்றும் வெஃகல், வெகுளல், மயக்க மென்னுங் குற்றங்கள்." —உ. வே. சா.

மனம் என்பது தமிழ்ச்சொல்லே யாதலால் இப்பாட்டு முழுவதும் தனித்தமிழா லியன்றமை காண்க.

That virtue, which, by excluding these four—falsehood, slander, rude words and unprofitable conversation—avoids offence in speech; and by guarding the five organs of sense, keeps clear of the pollution of the heart; may indeed be termed the right way. —H. S.

What is described as virtue consists in avoiding falsehood, and slandering, aud harshness of expression, and emptiness of speech, in guarding the organs of sense from sinning and in removing all impurities from the heart. —C. M.

The right way is that which consists in avoiding the for sins of the tongue, vix. falsehood, slander, rude words, and unprofitable conversation; in guarding the five organs of sense from sinning; and in removing all impurities from the heart. —S. W.

Virtue consists in avoiding falsehood, slander, harsh expressions and useless speech; in guarding the organs of sense from sinning and in removing all impurities from the heart. —T. B. K.

## 61. நல்லோரியல்பு

நல்லா றொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார்—பல்பொறிய
செங்கட் புலியே றறப்பசித்துந் தின்னுவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ்.

1. நல்லாறு - நன்னெறியில், ஒழுக்கின் தலை - ஒழுகும் ஒழுக்கத்தினிடத்து, நின்றார் - வழுவாது நின்றவர்களாகிய சான்றோர், நல்கூர்ந்தும் - வறுமையுற்றாராயினும், அல்லன - (நன்னெறி) அல்லாத செயல்களை, செய்தற்கு - செய்ய, ஒருப்படார் - மனமிசையார்; பல் - பல, பொறிய - வரிகளையுடையனவும், செங்கண்-சிவந்த கண்களையுடையனவுமான, புலியேறு - ஆண்புலிகள், அற - மிகவும், பசித்தும் - பசித்தாலும், தின்னுவாம் - தின்னமாட்டாவாம், பைங்கண் - பசிய இடமகன்ற, புனத்த - கொல்லையிலுள்ள, பைங்கூழ் - பயிர்களை.

2. நல்லாறு ஒழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்தும் அல்லன செய்தற்கு ஒருப்படார், பல்பொறிய செங்கண் புலியேறு அறப்பசித்தும் பைங்கட் புனத்த பைங்கூழ் தின்னுவாம்.

3. வறுமையிலும் நெறிதவறார் சான்றோர்.

4. "ஊழிபெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்." —குறள்.

"உடுக்கை யுலரி யுடம்பறிந்தக் கண்ணுங்
குடிபிறப் பாளர்தங் கொள்கையிற் குன்றார்
இடுக்கண் தலைவந்தக் கண்ணு மரிமா
கொடிப்புற் கறிக்குமோ மற்று." —நாலடியார்

"ஒற்கந்தா முற்ற விடத்து முயர்ந்தவர்
நிற்பவே நின்ற நிலையின்மேல்—வற்பத்தால்
தன்மே னலியும் பசிபெரி தாயினும்
புன்மேயா தாகும் புலி." —பழமொழி

"மெய்த்திருத் தவம் வீரம் படைக்கினு
மெத்திறத் திட ரெய்திய தாயினு
முத்தமக் குல மேன்மை யொழுக்கமார்
தத்த நீதி பிழைப்பர்கொல் சால்புளோர்," —சேதுபுராணம்.

5. **நல்லா றொழுக்கின் தலை நின்றார்:**

"**நல்லாறு**—நல்லாறென்பது முன் செய்யுளிற் கூறப்பட்ட மனம் வாக்கு காயங்களாகிய குற்றங்கள் ஒழிதல்." —இள.

"நெடிலோ டுயிர்த்தொடர்" என்கிற சூத்திரத்தில் "மிக" என்றதனுல் ஆறு என்பதில் றகரமிரட்டாது நின்றது. ஏழாம் வேற்றுமைத்தொகை." —ஊ. பு. செ.

"**ஒழுக்கின்தலை**—இன் - சாரியை, தலை - ஏழனுருபு. ஒழுக்கு - ஒழுகென்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்." —ஊ. பு. செ.

**நல்கூர்ந்தும் அல்லன செய்தற் கொருப்படார்:**

**நல்கூர்ந்தும்**—நல்கூர் - வினைப்பகுதி.

"பெரும்பாலும் பொய் முதலிய பாவத் தொழில்களைச் செய்தல் தரித்திர மடைந்தபோ தாதலால், 'நல்கூர்ந்தும்' என்ற உம்மை உயர்வு சிறப்பு." —கோ. இ.

"**அல்லன**—என்னும் பலவின் படர்க்கைக் குறிப்பு வினைப் பெயர் முன் நல்லா றென்றதனுல் பாவத் தொழில்களுக் காயிற்று." —கோ. இ.

"**அல்லன**—திருட்டு, வஞ்சகம், பொய், கொலை முதலியன." —இள.

"**அல்லன**—பிறனில் விழைதல், பிறர் பொருள் விரும்பல் முதலியன." —தி. சு. செ.

"**ஒருப்படார்**—ஒருமைப்படு என்பதில் மை கெட்டது. ஒத்துக்கொள்ளுதல் பொருள்." —ஊ. பு. செ.

"எதிர்மறை வினைமுற்று; உடன்பாட்டில் வரின் ஒருப் பட்டார் என வரும்." —தி. சு. செ.

**புலியேறு அறப்பசித்துந் தின்னுவாம்:**

"புலியேறு—ஏறு - பசு, எருமை, பன்றி, கவரி, சங்கு, மான், மரை, புல்வாய், சுறு ஆகிய இவற்றின் ஆணிற்குப் பொது." —மோ. வே.

"'ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குறித்தே' என் பதற்கொப்பப் பெண் புலியையு முணர்த்திற்று; இஃது பால் பகா அஃறிணைப் பெயர்." —சி. மு.

"புலி பசித்தன்ன மெலிவிலுள்ளத் துரனுடையாளர். (புறம், கசூ௦)." —உ. வே. சா.

**பைங்கட் புனத்த பைங்கூழ்:**

"பைங்கண் என்பதில் பசுமை ஈரத்தையும், பைங்கூழ என்பதில் பசுமை பாகஞ் செய்யாமையையும் உணர்த்தின." —கோ. இ.

"இது எடுத்துக்காட்டுவமையணி. இவ்வுவமை 'புலி பசித் தாலும் புல்லைத் தின்னாது' என்னும் பழமொழிபற்றி வந்தது."

இச்செய்யுள் தனித் தமிழ்ச் செய்யுளாம்.

Those, who have persisted in the course of the path of virtue, though in poverty, will not consent to do evil; the spotted red-eyed tiger, though ravenous with hunger, will not feed on the growing crop in the green meadow. —H. S.

Those who have stood in the paths of virtue will not condescend to do evil acts, although suffering from poverty. The many-spotted tiger, although pinched by hunger, will not feed on the green grass growing in the meadow. —C. M.

Those who have persistently stood in the path of virtue, will not stoop to do evil even in poverty. The many-striped, red-eyed tiger ravenous with hunger, will not feed on the crop of the green meadows. —T. B. K.

# 62. கூடாத செல்வம்

குலம்விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் வாய்மை
நலம்விற்றுக் கொள்ளுந் திருவும் தவம்விற்றூங்
கூணோம்பும் வாழ்வு முரிமைவிற் றுண்பதூஉம்
தானோம்பிக் காத்த றலை.

1. குலம் - (தனது) குலத்தை, விற்று - முழுமையும் விட்டு, கொள்ளும் - (அதனால் தேடிக்) கொள்ளும், வெறுக்கையும் - பொருளும், வாய்மை - உண்மை (யாகிய), நலம் - நன்மையை, விற்று - முற்றும் விட்டு, கொள்ளும் - அதனால் பெறும், திருவும் - பொருளும், தவம் - தவவொழுக்கத்தை, விற்று - கைவிட்டு, ஊன் - உடலை, ஓம்பும் - பாது காக்கும், வாழ்வும் - வாழ்க்கையும், உரிமை - தன்னுரிமையை, விற்று - விலைப்படுத்தி, உண்பதூஉம் - வயிறு நிறைப்பதும், தான் - ஒருவன், ஓம்பிக்காத்தல் - (மறந்தும் இவை தன்னையணுகாதபடி விலக்கிப்) பாது காத்து வருவதே, தலை - தலையாய அறமாகும்.

2. தான் குலம் விற்றுக்கொள்ளும் வெறுக்கையும், வாய்மை நலம் விற்றுக்கொள்ளும் திருவும், தவம்விற்று ஊனோம்பும் வாழ்வும் உரிமைவிற் றுண்பதூஉம் ஓம்பிக் காத்தல் தலை.

3. அறத்தாற்றாற் பொருளீட்டுவதே சிறந்ததாம்.

4. "நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல்." —குறள்.

"குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு." —குறள்

"அல்லது செய்வார் அரும்பொரு ளாக்கத்தை
நல்லது செய்வார் நயப்பவோ—ஒல்லொலிநீர்
பாய்வதே போலும் துறைவகேள் தீயன
ஆவதே போன்று கெடும்." —பழமொழி.

5. "வெறுக்கையையுந் திருவையும் வாழ்வையும் உண்பதையும் ஓம்பிக் காத்தல் தலை. வறுமைநிலை அடையினும் குலம் முதலியவற்றைப் பாதுகாத்தல் வேண்டும்." —உ. வே. சா

"வறுமையுற்ற விடத்துத் தன் குலத்திற் பிறந்தா னல்லா னுக்குப் பொருள்வேண்டி மகட்கொடை நேர்ந்தும், மன்றிற் பொய்க்கரி கூறியும், தான் செய்த தவப்பயனைப் பிறருக்குத் தத்தஞ் செய்தும், அரசராற் றனது குடிப் பிறந்தோருக்குக் கொடுத்த உரிமையைவிற்றும் வாழ்தல் கடைப்பட்ட தொழிலா தலால் அதனை நினையா தொழியவேண்டும் என்பார். 'தானேம் பிக் காத்தல்' எனவும், அவ்வாறு நினையா தொழிதலே எல்லா அறச்செய்கைகட்குந் தலையான அறம் என்பார் 'தலை' எனவும் கூறினார்." —தி. சு. செ.

"உயிர்க் கொலை புரிதல், உண்ணு முணவு மாருட்டஞ் செய்தல், அயிர்ப்பிலா நண்பர்மாட்டும் ஐதரக் குய்யஞ்செய் தல், பயிர்ப்பு மிக்குற நல்லோரைப் பழித்தல், பொய்க்கரி யுரைத்தல், செயிர்ப்பில் ஆலயத்திடத்துஞ் சென்று பட்டிமை இயற்றல், இவை முதற் பலவும் மாந்தர் இயற்றி நாள் கழியா நிற்பர் அவையெலாம் பொருள் நிமித்தமாகும்."

—குசேலோபாக்கியானம்.

குலம் விற்றுக்கொள்ளும் வெறுக்கையும்:

"குலத்திற்குரிய ஒழுக்கம் இன்சொல், பணிவு முதலிய செயல்களைத் திரவிய நிமித்தம் கைவிடுதல்." —அ. கு.

"பொருள்வேண்டிக் குலத்திற்குரிய ஒழுக்கம் பெருமை முத லியவைகளை விட்டு வேறோர் இழிகுலப் பற்றுடைத்தாதல்."

—இள.

"பொருளுக் காசைப்பட்டுத் தன்னின் இழிகுலத்தாரோடு சம்பந்தஞ்செய்தல்." —கோ. இ.

மண் பெண் பொன் என்ற மூன்றில் யாதொன்றையோ இரண்டையோ அன்றி மூன்றையுமோ கருதி, ஒருவன் தான் பிறந்த குலத்திற்குப் பழியெய்துமாறு தானே குலம் விட்டுக் குலம் மாறுதலும், அன்றி மகட்கொடை நேர்தலும் கூடாது என்பது பெறப்பட்டது.

"வெறுக்கை—பொருளுடையார்க் கெப்போதும் உயிர்ப் பயமேயாகையால் அறிஞர் அதனை வெறுப்பர் எனுங் காரணம் பற்றிப் பொருளுக்கு வெறுக்கை என்று பெயர்." —இள.

"பொருவறு பந்த மெல்லாம் புணர்த்திடுந் தெய்வ சிந்தை
யொருவமே விட்டு நிற்கு முறக்கமு மிறக்கச் செய்யுங்
கருவினுட் புகுத்து மின்ன கரிசுகண் டதனு லன்றோ
விருநிலத் திடைவெ றுக்கை யென்மனுர் புலமை சான்றோர்."
—குசேலோபாக்கியானம்.

**வாய்மை நலம் விற்றுக் கொள்ளுந் திருவும்:**

"பொருளுக்காகப் பொய்ச் சாட்சி முதலிய சொல்லல்."

—கோ. இ.

"பொய்மொழி கூறல், பொய்ச்சான்று கூறுதல் முதலியவை களைத் திரவிய நிமித்தம் செய்தல்." —அ. கு.

**தவம் விற்றுங்கு ஊனோம்பும் வாழ்வும்:**

"தவம் விற்றல் - பொருள் வேண்டிக் கூடாவொழுக்கம், தீமை, களவு முதலிய நற்றவத்திற் கேலாதன செய்தல்."—இள

"தவம் விற்றலாவது பிறர்க்காகத் தவஞ்செய்தல்."
—ஊ. பு. செ.

"உடல்வலி குறையாமைக்காக மேற்கொண்ட விரதத்தை விடல்." —கோ. இ.

"ஊன்—காரியமாகிய உடம்பிற் காதலால் காரணவாகு பெயர்; தவத்தாலாய பயனைத் "தவம்" எனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார்." —தி. சு. செ.

வாழ்வு—செல்வம்; அது வாழ்தற்குக் காரணமாதல்பற்றி வாழ்வெனப்பட்டது. "வாழ்வெனு மையல் விட்டு வறுமையாஞ் சிறுமைதப்பி" என்னுஞ் சித்தியாரினும் "வாழ்" வென்பது இப் பொர்ருட்டாதலறிக." —அ. கு.

கூடாவொழுக்கம், தீமை, களவு போன்றவையேயன்றி, தவ வலிமையால் ஏவல் விடுதல், இரும்பு தின்னல், பாம்பு தின்னல், நீர்மேல் மிதத்தல், நிலத்துட் பொதிதல்போன்ற கண் கட்டு வித்தைகள் காட்டிப் பொருளீட்டுவதும் தவமுடையார்க் கறமன்று என்பதும், தான் தபசியாக இருந்து, பொதுமக்கள் அதுகருதி நல்கும் நன்கொடைப் பொருளைப் பெற்றுத் தன் உற்றார் உறவினரைத் துய்க்கவிடுவதும் அறமன்று என்பதும் இதனாற் குறிக்கப்பட்டன.

"ஆங்கு—அசை."

**உரிமை விற்று உண்பதூஉம்:**

"உரிமை விற்றலாவது—வறுமை நீங்குதற்காகத் தன் வூமி சத்துக்குரிய சுதந்தரத்தை ஒருவர் வசமாக்கிப் பொருள்பெற்று உண்ணல்."
—கோ. இ.

"உரிமை விற்றலாவது பிறர்க்கு அடிமைப்படல்."
ஊ. பு. செ.

"திரவியநிமித்தம் பிறனுக்கடிமையாகித் தன் வசமிழந்து நிற்றல்."
—அ. கு.

"உண்பதூஉம்—அளபெடை இன்னிசை யளபெடை. உகரம் ஊகாரமா யளபெழலே இன்னிசை யளபெடை எனக் குழறுவார்க்குக் "கடா அயினுஞ் சான்றவர் சொல்லார்" என் பதைக் காட்டி மறுக்க."
—கோ. இ.

உலகம் போற்றும் கடவுள் திருக்குமாரராகிய இயேசு கிறித்துவிற்குச் சீடனாயிருக்கும் ஒப்பற்ற உரிமையை முப்பது வெள்ளிகளுக்காக விற்று அப்பெரியாரை பஸ்கா பண்டிகை யன்று பிரதான ஆசிரியருக்கும் வேதபாரகருக்குங் காட்டிக் கொடுத்தான் யூதாஸ் காரியோத்து என்பது விவிலியநூலிற் காணப்படும் எடுத்துக்காட்டாகும்.

**ஓம்பிக்காத்தல்:**

முன் ருரு-ஆம் செய்யுளில் "பரிந்தோம்பிக் காப்பவே" என்புதற்குரைத்த உரையை நோக்குக.

The riches gotten by selling the privileges of descent; the prosperity acquired by selling the benefit of truth; the ease that pampers the body at the expense of religious duties; and the subsistence derived from selling the ties of friendship and kindred; to beware of *all these* is chief excellence. —H. S.

The greatest of virtues is to avoid the wealth flowing from selling one's birth and rank and talents; to abstain from cherishing the body to the detriment of religious penance.

—C. M.

The greatest of virtues is to avoid the riches arising from selling the privileges of one's lineage; the prosperity flowing from selling the benefit of truth; the ease that pampers the body at the expense of religious duties; and the subsistence derived from selling one's inheritance.—S. W.

Riches got by sale of birth right, a fortune acquired by sacrifice of truth, the pampered ease of the body at the expense of the religious austerity and the livelihood eked out by selling one's inheritance; the avoidance of all these is the crown of all virtue. —T. B. K.

---

## 63. வஞ்சித்துக்கொண்ட உடைமை

*இடைதெரிந் தச்சுறுத்து வஞ்சித் தெளியார்*
*உடைமைகொண் டேமாப்பார் செல்வம்—மடநல்லார்*
*பொம்மன் மூலைபோற் பருத்திடினு மற்றவர்*
*நுண்ணிடைபோற் றேய்ந்து விடும்.*

1. இடை - காலத்தின் வாய்ப்பு, தெரிந்து - அறிந்து, அச்சுறுத்து - அச்சங்காட்டியும், வஞ்சித்து - ஏமாற்றியும், எளியார் - (தம்மில்) எளியவர்களுடைய, உடைமை - பொருள்களை, கொண்டு - கவர்ந்து, ஏமாப்பார் - இறுமாந்திருப்பவர்களது, செல்வம் - பொருள்,

மடநல்லார் - இளமகளிரின், பொம்மல் - பூரித்த, முலைபோல் - முலையினைப்போன்று, பருத்திடினும் - பருத்துக் காட்டினாலும், மற்று அவர் - அம்மகளிரது, நுண்ணிடைபோல் - சிற்றிடைபோல், தேய்ந்துவிடும் - (அப்போதே) தேய்வுறும்.

2. எளியார் உடைமை இடைதெரிந்து அச்சுறுத்து வஞ்சித்துக்கொண்டு ஏமாப்பார் செல்வம், மடநல்லார் பொம்மன் முலைபோற் பருத்திடினும் அவர் நுண்ணிடைபோல் தேய்ந்து விடும்.

3. அறத்தாற்றின் ஈட்டாத செல்வம் விரைந்து தேய்ந்து போம்.

4. "களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்." —குறள்.

"நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்." —குறள்.

"அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்." —குறள்.

"மடங்கிப் பசிப்பினும் மாண்புடையாளர்
தொடங்கிப் பிறருடைமை மேவார்." —பழமொழி.

5. "எளியாரை வஞ்சித்துக் கவர்ந்த திரவியம், வளர்வது போலக் காணப்படினும், விரைவில் அழிந்துவிடும்." —அ. கு.

பெண்களின் பருத்த முலையையும் சிறுத்த இடையையும் முறையே செல்வவளர்ச்சிக்கும், அறிவுக்கும் ஒப்பிட்டுக்காட்டிய ஆசிரியர் நுண்ணறிவு வியக்கத்தக்கது.

இடைதெரிந்து அச்சுறுத்து வஞ்சித்து:

"இடை தெரிந்து—இடம் அறிந்து" என்று பொருள் கொண்டார் கோ. இராசகோபால பிள்ளை.

"இடை—பிறர் சோர்வுற்ற சமயம்; இடை - சமயம்; "உண்டையோர்போல விடையின்று குறுகி." (புறம், ருச)."
—உ. வே. சா.

அச்சுறுத்து—"அஞ்சுறுத்து" எனப் பாடங்கொண்டனர், கோ. இராசகோபால பிள்ளையும், காஞ்சிபுரம் சபாபதி முதலியாரும்'

அச்சுறுத்தி எனப் பாடங்கொண்டார் அ. குமாரசாமிப் புலவர்.

"அச்சு—'அஞ்சு' எனும் மென்றொடர் வன்றொடராய் விகாரப்பட்டு வந்த தொழிற்பெயர்." —இள.

எளியார் உடைமைகொண் டேமாப்பர்:

"ஏமாப்பர்—எதிர்கால வினைமுற்றுப்பெயர்; ஏமா, பகுதி ......ஏமம் என்னும் பெயர்ச்சொல் ஈறு தொக்கு ஆ என்னும் வினைப்பகுதியோடு கூடி ஓர் பகுதியாய் நின்றது." —தி. சு. செ.

"ஏமாப்பர்—பலர்பாற் படர்க்கை எதிர்கால வினைப்பெயர். களிப்புணர்த்தும் ஏமம் என்பது பண்புப்பெயர்." —கோ. இ.

"ஏமாப்பர்—ஏமம் + யாப்பர் - ஏமாப்பர்என விகாரப்பட்டு நின்றது. ஏமாப்பர் - களிப்பர் எனலுமாம்." —இள.

"ஏமாப்பர்—தலையெடுப்புக் கொள்பவர்; தலையெடுப்புக் கொள்ளலாவது சொற் செயல்களிலும் உடை நடைகளிலும் யாரினும் மேலாகத் தம்மைக் காட்டுதல். ஏமாப்பரென்பதற்குக் களிப்பவரென உரைப்பாருமுளர்." —அ. கு.

"ஏமாப்பர் - இன்புறுவாரது; ஏமாத்தல் - இன்புறுதல்; "காமர் நெஞ்ச மேமாந் துவப்ப" (புறம், கக௲அ)."
—உ. வே. சா.

மடநல்லார் பொம்மன் முலைபோற் பருத்திடினும்:

"மடமை - பெண்கள் குணத்துள் ஒன்று, அதாவது அறியாமை." —தி. சு. செ.

"அறியாமைப் பொருளதாகிய மடம் என்னும் பண்புப் பெயர் காரணமாகிய இளமைக்காயிற்று." —கோ. இ.

பொம்மல்—பொருமிய, பொலிவாகிய, பொலிவுற்ற என்றும் பொருள் கூறுவர்.

"முதற்கண் பெருகுவதுபோற் றோன்றினும் பின் அழிந்துவிடு மென்றபடி."

" அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை."—(குறள்) —உ. வே. சா.

இது தனித் தமிழ்ச்செய்யுள்.

The wealth of those, who exult in having gotten the possessions of the poor, by watching an opportunity to terrify and deceive them; though it increase like the swelling bosom of beautiful women, will *quickly* diminish like their slender waist. —H. S.

The wealth of those who availing themselves of the weakness of the poor, dispossess them of their property by threats and deceit, although it may for a time swell like the blooming breast of a maiden, will in the end melt away like their attenuated waist. —C. M.

Those who amass wealth by deceiving or terrifying the weak at a convenient time and exult in such possession, will find it reduced like the slender waist of a beautiful woman though big as the swelling bosom. —T. B. K.

---

## 64. பேரவா

பெற்ற சிறுகப் பெறாத பெரிதுள்ளுஞ்
சிற்றுயிர்க் காக்க மரிதம்மா—முற்றும்
வரவர வாய்மடுத்து வல்விராய் மாய
எரிதழன் மாயா திரா.

1. பெற்ற - தன்னாற் பெறப்பட்ட பொருள்களெல்லாம், (அற்பமென்று அவற்றைப் பேணிக் கொள்ளாமற் செலவு செய்யப்பட்டு). சிறுக - மிகச் சிறிதாகக் குறைந்துபோக, பெறாத - பெறப்படாதனவாய பொருள், பெரிது - பெரியதென்று, உள்ளும் - அதனையே நினைந்து ஏங்கும், சிற்றுயிர்க்கு - குறுகிய வாழ்நாள்களை யுடைய உயிருக்கு, ஆக்கம் - மேன்மேலுயருந்தன்மை, அரிது - உண்டாகாது, முற்றும் - முழுமையும், வரவர - வருந்தோறும், வாய்மடுத்து - தன் வாயினுள் ளடக்கி, வல்விராய் - வலிய விறகுகள், மாய - எரிந்தொழிய, எரிதழல் - எரிகின்றதீயும், மாயா திரா - அழியாது நிற்பதில்லை (அழிந்தேபோகும்).

2. வல்விராய் வரவர முற்றும் வாய்மடுத்து மாய. மாயா திரா எரிதழல்; பெற்ற சிறுகப் பெறாத பெரிதுள்ளும் சிற்றுயிர்க்கு ஆக்கம் அரிது.

3. **பெற்றதே கொண்டுவத்தல் ஆக்க நெறியாம்.**

4. "வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்." —குறள்.

"கொண்டொழுகு மூன்றற் குதவாப் பசித்தோற்றம்
பண்டொழுகி வந்த வளமைத்தங்—குண்டது
கும்பியிலுந் தீச்சென் றெறிதலால் தன்னுசை
அம்பாயுள் புக்கு விடும்." —பழமொழி,

"செல்வ மென்பது சிந்தையி னிறைவே
யல்கா நல்குர வவாவெனப் படுமே."
—சிதம்பரமும்மணிக்கோவை.

" பூசைக் கெலியரிக்குப் பொம்ம லுடற்களிரு
லாசைக் களவுதனத் தற்றறிஞர்—ஈசன்
அளித்ததா னெஞ்சந் திருத்தி யதனுள்ளத்
தளிப்பா லின்ப வளம்."

—சி. வை. தா. பதிப்பிற் கண்ட மேற்கோள்.

5. "தழல் அழிதல்போலப் பற்றுள்ளா னொருவன், அதனோடு தானும் அழிவனென்றபடி. தான் பெற்றவற்றையே பெரியனவாகக் கருதிச் சிந்தை நிறைவைப் பெறாமல் பெற்றவை சிறியவாகவும் பெறாதன பெரியவாகவும் எண்ணி ஏங்குவானுக்கு என்றும் ஆக்கமில்லையென்பது கருத்து." —உ. வே. சா.

"கிடைத்த விறாய் போதும் என்றமையாத தீ, மேலும் மேலும் எரிக்கமுயலுதலால், அவ்விறா யழியத் தானும் அழிதலின். 'கிடைத்த செல்வம் போதும்' என்றமையாது மேலும் மேலுங் கருதுதலால் அச்செல்வமழியத் தாமும் அழியும் உயிர்கட்குத் தொழில்பற்றிவந்த உவமையணியாய் நின்றது. இதனாற் பெற்ற செல்வம் போதும் என்று மகிழ்கூர வேண்டும் என்பது எஞ்சி நிற்றலிற் குறிப்பெச்சம்." —தி. சு. செ.

"தீயானது தன்னிடத்தில் விறகு வருந்தோறும் அதையெல்லாம் எரித்து, அவ்விறகு மாண்டால் தானும் மாள்வதுபோல, பொருள் கிடைக்கக் கிடைக்க அவற்றையெல்லாம் அற்பமாக நினைத்து அதிருப்திப்படுகிறவனுக்குச் செல்வத்தால்வரும் சுகம் நாசமாகும் என்பது கருத்து." ஊ. பு. செ.

"விறகு போடப்போடத் தீயும் அவற்றைப் பற்றிக் கொழுந்துவிட்டெரியும்; மேல் விறகில்லையேல் எரிந்த விறகில் தங்கிய தீ அப்படியே நிற்காது சிறிது நேரத்தில் அவிந்து போகும்; மேலும் மேலும் விறகுக் காசைப்படுந் தீ, விறகு கிடைக்காவிடில் கிடைத்த விறகை எரித்த மட்டிலேனும் வெகு நேரம் நிற்காமல் அவிந்துபோவது போல், கிடைத்தபொருளை வைத்து மகிழாமல் மேன்மேலும் பொருளுக்கு ஆசைப்படுவார் கிடைத்தபொருளின் பயனையும் அடையமாட்டாரென விளங்குகிறது. 'போதுமென்ற மனமே பொன்செயு மருந்து' எனும் பழமொழி இங்கு நோக்கற்பாலது." —இள.

**பெற்ற சிறுகப் பெறுத பெரிதுள்ளும் சிற்றுயிர்க்கு:**

"பெற்ற பெறுத, இரண்டும் வினையாலணையும் பெயர்."
—ஊ. பு. செ.

"சிறுக—செயவென் வாய்பாட்டு வினையெச்சம், இங்கு உள்ளும் என்னும் வினைக்கு உரியாய் நின்றது; சிறுகு - பகுதி."
—ஊ. பு. செ.

"இது நிகழாநிற்க இது நிகழ்ந்ததென்னும் பொருட்டாய் நிகழ்காலங் காட்டி நின்ற செய என்னும் வாய்பாட்டு வினை யெச்சம்."
—அ. கு.

"பெரிது—பெரிது என்றதனுல் 'பெருதது' எனக் கொள்ளப் பட்டது."
—தி. சு. செ.

"சிற்றுயிர்க்கு—அற்ப அறிவுடைய உயிர்க்கு" என்று பொருளுரைத்தார் அ. குமாரசாமிப் புலவர்.

"அடையாதமுன் பெருமையுள்ளனவாகக் கருதிய பொருள் களை அடைந்தபின் சிறுமையுள்ளனவாக இவன் கருதுதலால் இவன் கருத்தை அப்பொருள்களின்மேல் ஏற்றிப் 'பெற்ற சிறுக' என்றும், இவ்வாறு கருதும் இழிவுநோக்கிச் 'சிற்றுயிர்' என் றும் கூறினர்."
—கோ. இ.

**ஆக்கம் அரிதும்மா**—ஆக்கம் செல்வம் என்றும், செல்வத்தா லுண்டாகும் இன்பம் என்றும், (தான் இயற்கையாகவே பெற் றிருக்கும்) செல்வத்தாலான பயன் என்றும் பொருளுரைத்தாரு முளர்,

**அம்மா**—வியப்பிடைச் சொல்.

**முற்றும் வரவர வாய்மடுத்து:**

"வாய்மடுத்து—இலக்கணை. மடுத்தல் - உண்ணல். இதன் முதனிலையடியாக மடை என்னும் பெயர் சோற்றுக்கு வழங்கும். உண்ணப்படுவதென்பது பொருள்."
—கோ. இ.

• இது தனித்தமிழ்ச் செய்யுள்.

How impossible is it for mortals to prosper, who making little of what they have gotten, think much of what they have gotten, think much of what they have not: the wild fire, which devours everything as it comes, cannot but die away, as the fuel is consumed. —H. S.

That short-lived mortals, who underrate the value of what they have not, should enjoy happiness is impossible. The blazing conflagration becomes extinct after burning all the fuel in its scope. —C. M.

Making little of what they have and thinking much of what they have not, how shall mortals prosper? The wild fire that devours everything in its course, dies away when all the fuel has been consumed. —T. B. K.

---

## 65. அறத்தாற்றிற் பொருளீட்டல்

*தத்த நிலைக்குங் குடிமைக்குந் தப்பாமே*
*ஒத்த கடப்பாட்டிற் றாளூன்றி—எய்த்து*
*மறங்கடையிற் செல்லார் பிறன்பொருளும் வெஃகார்*
*புறங்கடைய தாகும் பொருள்.*

1. தத்தம் - ஒவ்வொருவரும் தமக்குரிய, நிலைக்கும் - நிலைமையிலும், குடிமைக்கும் - குடியினியல்பிலும், தப்பாமே - எறுதல் குறைதலின்றி, ஒத்த - இயைந்த, கடப்பாட்டில் - முறையில், தாள் - முயற்சி, ஊன்றி - (அசைவின்றிச்) செய்து, எய்த்தும் - (ஊழ்வினையால் அந்நிலை) தளர்வுற நேரினும், அறங்கடையில் - பாவநெறியில், செல்லார் - செல்லாதும், பிறன் - பிறனுடைய, பொருள் - உடைமையை, வெஃகார் - விரும்பாதும் இருந்து முயல்வாராயின், புறங்கடையது - (அவருடைய) தலைவாயிலிலே, ஆகும் - தானாகவே வந்து சேரும் இயல்பினதாகும், பொருள் - பொருட்செல்வம்.

2. கொண்டு கூட்டு வேண்டிற்றிலது.

3. **நல்லாற்றின் முயன்று பொருளீட்டலே சிறந்ததாம்.**

4. மேல் ருக முதல் கூச வரையுள்ள செய்யுட்களுக்குக் காட்டிய மேற்கோள்களை நோக்குக.

5. *"அறங்கடையிற் செல்லாராய்ப் பிறன்பொருளும் வெஃகாரது புறங்கடையி லுள்ளதாகும் பொருள். "ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா, ஊக்க முடையா னுழை"* **(குறள்)** *என்பது இதனோடு ஒருவாறு ஒப்புமையுடையது."*

—உ. வே. சா.

*"தன் குல வொழுக்கத்திற்கு மாறான, தீச்செயல் புரிதல் பாவமாகையால் அறங்கடையிற் செல்லலாகாதென்றும், பிறன் பொருள் விரும்பில் தன் பொருளுங் கேடுறுமாகையால் பிறன் பொருளும் வெஃகலாகாதென்றும் கூறினர். இவ்வாறு குல வொழுக்கங் குன்றாமலும் பிறன் பொருள்மேல் ஆசை வையா மலும் தம் முயற்சியால் பொருள் தேடுவார்க்கு அவர் அறநெறி கண்டு அகமகிழ்ச்சிகொள்ளும் அறக் கடவுள் அன்னார் புறங் கடையிற் சீக்கிரம் பொருள் குவிப்பார் என நன்னெறியில் முயற்சியால் பொருளீட்டும் பெருமையை ஆசிரியர் புகழ்ந் தனர்."*

—இள.

**தத்த நிலைக்கும் குடிமைக்குந் தப்பாமே:**

*"நிலையாவது, தம்மிடத்தே நிற்றலுடையனவாகிய பொருள், வலி, ஆண்மை, துணை முதலியன."* —அ. கு.

*"நிலை - வருணத்தின் நிலைமை."* —தி. சு. செ.

*"குடிமை—தமது குடியிலுள்ளாரால் ஆசரிக்கப்பட்டுவந்த இயல்புகள்."* —அ. கு.

"குடிமை - குடிப்பிறப்பு." —ஊ. பு. செ.

"குடிமை - குடிப்பிறப்பி னொழுக்கம்." —தி. சு. செ.

"தப்பாமே—தப்புதல்; நிலைக்குங் குடிமைக்கு முரிய அளவி னின்று பெருக்கமுஞ் சுருக்கமுமாதல்." —அ. கு.

**ஒத்த கடப்பாட்டில் தாளூன்றி:**

"கடப்பாடு—கடத்தல் நடத்தலாகையால், கட என்கிற பகுதி பாடு என்கிற தொழிற்பெயர் விகுதி கொண்ட தென்ன லாம்; நடக்கை என்பது பொருள்." —ஊ. பு. செ.

"கடப்பாடாவது தவிராது செயற்பாலனவாகிய கடமையா யுள்ளது. பரிமேலழகர் கடப்பாடு - ஒப்புரவு என்றும், ஒப்புர வாவது உலகநடையினை அறிந்து செய்தல் என்றுங் கூறுவர். வேறு சிலர் உலகியல் என்றும், முறை என்றுங் கூறுவர். நிலைக் கொத்த கடப்பாட்டாவது தம்பாலுள்ள பொருள் ஆண்மை முதலிய நிலைக்கேற்பச் செயற்பாலனவற்றைச் செய்தல், குடி மைக்கொத்த கடப்பாடாவது தமது முன்னோர் நடந்த வரம் பிகவாது செயற்பாலனவற்றைச் செய்தல்." —அ. கு.

"**தாள் ஊன்றி** என்பதற்குக் காலை அழுந்தவைத்து எனவும் பொருள் கூறலாம். அது இலக்கணையால் முயற்சியை யுணர்த் தும்." —ஊ. பு. செ.

"தாளூன்றி - முயன்று என்னும் பொருட்டாதலால் தாளூன்று பகுதி. 'தாள்' என்னும் பெயர்ச்சொல் 'ஊன்று' என்னும் வினைப்பகுதியோடு கூடி யொருசொற் றன்மைப்பட்டு நின்றது." —தி. சு. செ.

**எய்த்தும் அறங்கடையிற் செல்லார்:**

எய்த்தும் என்பதற்கு மறந்தும் என்று பொருள் கொண் டார் தி. சுப்பராயச் செட்டியார்.

"அறங்கடை—தருமத்திற்குப் புறம்பானது பாவம். அறக் கடை அறங்கடை யென மெலிந்தது." —ஊ. பு. செ.

"அறத்தினின்று நீக்கப்பட்டதாதலால் பாவம் அறக்கடை எனப்பட்டது." —கோ. இ.

"நாடறியப் பட்ட பெருஞ்செல்வர் நல்கூர்ந்து
வாடிய காலத்தும் வட்குபவோ—வாடி
வலித்துத் திரங்கிக் கிடந்தே விடினும்
புலித்தலையை நாய்மோத்த லில்."

என்னும் பழமொழிச் செய்யுளையும்,

"ஈனமா யில்விருந் தின்றி விளியினு
மானந் தலைவருவ செய்பவோ—யானை
வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்ற
ளரிமா மதுகை யவர்."

என்ற நாலடிச் செய்யுளையும் ஒப்பு நோக்குக.

**பிறன் பொருளும் வெஃகார்:**

"அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்." —குறள்

**புறங்கடையதாகும் பொருள்:**

"பொருள் அவரவர் வேண்டுங் காலத்தை எதிர்பார்த்துக் காக்குமென்பார் 'புறங்கடையதாகும் பொருள்' என்றார்."
—கோ. இ.

To such as do not fail of *what is due* to their respective station and lineage, exert themselves in their proper calling, and though in difficulties, neither transgress the bounds of virtue, nor covet their neighbour's wealth ; riches will flow to their very gates. —H. S.

Abundant wealth will be stable only with those who toil on straight in the paths of virtue, and in spite of pains and privations, acquire riches by means worthy of their birth and station, indulge not in sin, and covet not another's property. —C. M.

Riches flow to the very gates of those who never swerve from the duties of their station and lineage, who exert themselves in doing their duty of being universally beneficent and who even in difficulties transgress not the bounds of virtue, nor covet their neighbour's wealth. —T. B. K.

---

## 66. செல்வ வகை

*பொதுமகளே போல்வ தலையாயார் செல்வம்*
*குலமகளே யேனையோர் செல்வம்—கலனழிந்த*
*கைம்மையார் பெண்மை நலம்போற் கடையாயார்*
*செல்வம் பயன்படுவ தில்.*

1. பொதுமகளே போல்வ - பொதுமகளின் இன்ப நலம் போல்வ தாகும், தலையாயார் - மேலோர் (கைப்பட்ட), செல்வம் - பொருள்; குலமகளே (போல்வ) — (கற்புடைய) குலமகளின் இன்ப நலத்தைப் போல்வதாகும், ஏனையோர் - இடையாயினர் (கைப்பட்ட), செல்வம் - பொருள்; கலன் - தாலி, அழிந்த - இழந்த, கைம்மையார் - கைப்பெண் களின், பெண்மைநலம் (ஏ) - பெண்ணின்பத்தையே, போலும் - போன்று, கடையாயார் - கீழ்மக்கள் (கைப்பட்ட), செல்வம் - பொருள், பயன்படுவது - (யார்க்கும்) பயன்படுவது என்பது, இல் - இல்லை.

2. தலையாயார் செல்வம் பொதுமகளே போல்வ; ஏனை யோர் செல்வம் குலமகளே; கடையாயார் செல்வம் கலனழிந்த கைம்மையார் பெண்மை நலம்போற் பயன்படுவதில்.

3. செல்வத்தினாலாய பயன் அது சேர்ந்தாரின் தன்மை யையே பொறுத்ததாகும்.

4. "ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு." —குறள்.

"பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வ
நயனுடை யான்கட் படின்." —குறள்.

"வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில்." —குறள்.

"வழங்கலும் துய்த்தலும் தேற்றாதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வம்—தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப! அதுவன்றோ
நாய்பெற்ற தெங்கம் பழம்." —பழமொழி.

5. "இது முதல் ஈகையின் சிறப்புக் கூறப்படும்."
—உ. வே. சா.

"ஏகாரத்தைப் பெண்மை நலம் என்பதனோடும், நலம் என்பதைக் குலமகள் பொதுமகள் என்பவற்றோடும் போல்வ என்பதைக் குலமகள் என்பதனோடுங் கூட்டிப் பொருளுரைக்க."
—கோ. இ.

"செல்வர் பலவகை இயல்பினரா யிருப்பினும் பலர்க்கும் பயன்படுவோரும், தமக்குப் பயன்படுவோரும், யாவர்க்கும் பயன்படுதலில்லோரும் என மூவகை யியல்பினரா யிருத்தலின் அவர்களைத் 'தலையாயார், ஏனையோர், கடையாயார்' எனப் பிரித்தும், அச் செல்வம் பயன்படுதலுடைமைக்கும், இன்மைக்கும் காண்டலளவையாக அவற்றைப் பொதுமகள், குலமகள், கைம்பெண் இவர்களது நலத்தின்மே லேற்றியும் செல்வத்தினாலாய பயன் கூறினார்." —தி. சு. செ.

"தாமும் அனுபவித்துப் பிறர்க்குங் கொடுத்தலால் உத்தமரிடத்துள்ள செல்வமே சிறந்ததென்பது கருத்து. மத்திமர் செல்வம் அவர்க்கு மாத்திரமன்றிப் பிறர்க்கும் பயன்படாதென்பதும், அதமருடைய செல்வம் அவர்க்குத்தானும் பயன் படாதென்பதும், உபமான முகத்தாற் பெறப்படும்." —அ. கு.

பொதுமகளே போல்வ தலையாயார் செல்வம்:

"'போலும்' என்று பாடங்கொண்டார்." தி. சுப்பராயச் செட்டியார்.

"கல்வி அறிவு கேள்வி ஒழுக்க முதலியவற்றால் சிறந்தவ ரானமைபற்றி மேலோரைத் 'தலையாயார்' என்றார்." —கோ. இ.

'உத்தமனுக்கும் பொதுமகளுக்கும் எவ்வளவு நெருக்கம் இருக்குமோ அவ்வளவு நெருக்கம், அவனுக்கும் அவன்பா லுள்ள செல்வத்திற்கும் உண்டு என்க. குலமகன், தன் மனைவி யைப் போற்றி, அவள்பால் இன்பம் துய்த்தல்போல, உத்தம ரும் கடையாயரும் ஒழிந்த பிறர் தம் பொருளினைக் காத்து, அதனால் எய்தும் பயனைத் தாமே துய்ப்பரென்க. துய்க்க வேண்டிய தலைவனுக்குப் பயன்படாத கைம்மையார் போல, கடையாயார் செல்வம் அவர்பால் தங்கி, உரியார்க்குப் பயன் படாது ஒழியுமென்க.

பெண்களுள் குலமகளை உத்தமப் பெண் என்றும், கைம்மை நோன்பு நோற்கும் கைம்பெண்ணினை மத்திமப் பெண் என் றும், பொது உடைமையாக இருக்கும் பெண்ணை அதமப் பெண் என்றும் கொள்வர் உலகினர்.

நம் ஆசிரியர், அவ்வரிசையில் செல்வம் என்னும் பெண் ணினை நிறுத்தாது, அவள் விலைமகள் தன்மையை மேற்கொண் டிருப்பின் அவளை உத்தமப்பெண் என்றும், குலமகளின் அருங் குணத்தைக் கொள்ளுங்கால் மத்திமப்பெண் என்றும், கைம் பெண் தன்மையை ஒத்தகாலத்து அதமப் பெண் என்றும் வகுக் கும் அழகு உற்றுநோக்குதற் குரித்தென்க." —சே. சோ.

**குலமகளே ஏனையோர் செல்வம்:**

"**குலமகள்**—குலத்துக்கு உரிய மகள் அல்லது நற்குலத்தை யுடைய மகள்." —ஊ. பு. செ.

"ஏனையோ ரென்பது தலையாயினோ ரொழிந்த மற்றெவ ருக்குஞ் செல்லுமாயினும் ஈண்டுக் கடையாயினோரைப் பின் வகுத்துக் கூறினமையா னிடையோர்க்கே கொள்ளப்பட்டது." —சி. வை. தா.

"**கலனழிந்த**—முக்கியத்தைப்பற்றி மங்கல சூத்திரத்திற்கு வந்தது." ஊ. பு. செ.

"கடையாயார்—கல்வி முதலியனவற்றை முயன்று பெருமையால் இழிந்தோரானமைபற்றிக் கீழோரைக் 'கடையாயார்' என்றார்." —கோ. இ.

"இது நியமவுவமை யணி." —கோ. இ.

The wealth of the eminently generous, is like a prostitute; the wealth of the middling class is like a chaste *married* woman; but the wealth of misers, like the charms of unadorned widows, produces no benefit. —H. S.

The wealth of the great will be useful to all, like the woman-hood of a whore; the wealth of men in the middling ranks will be serviceable only to the owners, like the woman-hood of a chaste wife; whereas the wealth of the lowly will be useful to none, like the woman-hood of a widow.
—C. M.

The wealth of the generous is as a prostitute available to many, the wealth of the middle class like a chaste wife. The wealth of the misers like an unadorned widow is of no use to any. —T. B. K.

---

## 67. ஈயாதான் செல்வம்

வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலு நனிநல்ல கொன்னே
அருளில னன்பிலன் கண்ணறைய னென்று
பலரா லிகழப் படான்.

1. வள்ளன்மை - ஈகைத்தன்மை, இல்லாதான் - இல்லாத ஒருவனுடைய, செல்வத்தின் - செல்வத்தைநோக்க, மற்றையோன் - (ஈகைத் தன்மை படைத்த) ஒருவனுடைய, நல்குரவே போலும் - வறுமையே,

நனி - மிகவும், நல்ல - நல்லதாகும்; (என்னை?), கொன்னே - வீணே, அருளிலன் - கருணையற்றவன் (என்றே), அன்பிலன் - அன்பில்லாதவன் (என்றே), கண்ணறையன் - கண்ணோட்ட மில்லாதவன், என்று - என்றே, டலரால் - பலராலும், இகழப்படான் - இகழப்படமாட்டான் (ஆதலின்).

2. வள்ளன்மை இல்லாதான் செல்வத்தின் மற்றையோன் நல்குரவே நனிநல்ல போலும், அருளிலன் அன்பிலன் கண்ணறையன் என்று கொன்னே பலரால் இகழப்படான்.

3. இன்மையி னின்னாததில்லை; இனிததூஉம் ஈதல் இயையாக் கடை.

4. "ஈத்துவக்கு மின்ப மறியார்கொ ருமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்." —குறள்.

"உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ்." —குறள்.

"நயவார்க ணல்குரவு நாணின்று கொல்லோ
பயவார்கட் செல்வம் பரம்பப் பயின்கொல்
வியவாய்காண் வேற்கண்ணா யிவ்விரண்டு மாங்கே
நயவாது நிற்கு நிலை." —நாலடியார்.

"குடிகொழுத்தக் கண்ணுங் கொடுத்துண்ணா மாக்கள்
இடுகாட்டு ளேற்றைப் பனை." —நாலடியார்.

5. "வள்ளன்மை யில்லாதான் அருளிலன், அன்பிலன், கண்ணறையனென்று இகழப்படுவான் என்பதை எதிர்மறை வாய்பாட்டால் உணர்த்தினர்." —உ. வே. சா.

"இதனால் முன்னர்க் கூறிய கடையாயினார் பிறருக்குப் பயன்படுத லில்லாமையா லடையும் பயன் கூறப்பட்டது." —தி. சு. செ.

"உதார குணமில்லாதவனுக்குச் செல்வமிருப்பது அவனைத் தூஷிப்பதற் கேதுவாகின்றது. அக்குண முள்ளவனுடைய வறுமையோ அப்படியன்று; ஆதலால், இந்தவறுமையே நல்லது

போல் தோன்றுகிறது; என்றால் செல்வமுள்ளவன் உதாரனா யிருக்க வேண்டுமென்பது கருத்து.'' —ஊ. பு. செ.

''ஈயாதார் செல்வம் இருந்தென்ன போயென்ன எனும் இழிவுமொழி இங்கு நோக்கற்பாலது.'' —இள.

**வள்ளன்மையில்லாதான் செல்வத்தின்:**

''வள்ளன்மை—ஏற்றார்கட் கெல்லாம் இசைநிற்பத் தா முடைய, மாற்றார் கொடுத்திருப்ப வள்ளன்மை.'' —பழமொழி.

''வள்ளன்மை - வள்ளலினது தன்மை; அதாவது ஈயு மியற்கைக் குணம்.''

**மற்றையோன் நல்குரவே போலும் நனிநல்ல:**

''மற்றையோன் - இடைச் சொல்லடியாகப் பிறந்தபெயர்.'' —கோ. இ.

''மற்றையோன் என்பதன் பகுதி வினைமாற்றுப் பொருளில் வந்தது.'' —தி. சு. செ.

''நல்குரவு—வறுமை, மணி பொன் ஆடை முதலியன இல்லாமை மேல் நிற்றலால் 'நல்ல' எனப் பன்மைப் பயனிலை தந்தும், 'நல்குரவே நனிநல்ல' என உடையான் அடையும் பயனை யுடைமைமேலேற்றியுங் கூறினார்.'' —தி. சு. செ.

''அநுபவிக்கப்படும் பொருள் பலவாதலால் அவற்றின்மை யாகிய நல்குரவும் பல ஆயது.'' —கோ. இ.

**போலும்**—அசை.

**கொன்னே:**

''தான் பிறரை இகழானாகவும் பிறராலிகழப்படுதல்பற்றி, 'கொன்னே' யென்றார்.'' —அ. கு.

**அருளிலன் அன்பிலன் கண்ணறையன் என்று:**

"அருள்—தொடர்பில்லாதார் மேலும் செல்லும் நேயம்; அன்பு தொடர்புடையார்மேற் செல்லும் நேயம்."—உ. வே. சா.

"கண்ணறையன்—தொழிலடியாகப் பிறந்த ஆண்பாற் பெயர். கண்ணறு பகுதி. கண்ணறை என ஒருமைப்பால் மூன்றுக்கும் பொதுமையாய் நின்ற பொதுமையை நீக்கவந்த அன் ஆண்பாற் படர்க்கை விகுதி." —கோ. இ.

"கண்ணறையன் - "கண்ணோட்டம் அறுதலுடையவன்' என நிற்றலால் தொழிற்பெயர். "கண்ணறை" எனவரில் தொழிலாகு பெயராகக்கொள்க. இதுபோலக் காதறை, மூக்கறை என வருதல் காண்க." —தி. சு. செ.

**பலராலிகழப்படான்:**

"ஒருமொழி யொழிதன் னினங் கொளற்குரித்தேயாதலின், இவனிகழப்படா னெனவே அவனிகழப்பட்டா னென்பதாயிற்று." —சி. வை. தா.

"பின்னிரண்டடிகள் நல்குரவு நல்லதென்பதற்குக் காரணங் கூறியபடி." —உ. வே. சா.

"கொடை யில்லாதவன் அருளிலன் அன்பிலன் கண்ணறையனென்று இகழப்படுவான் என்பதை உட்கொண்டு அது புலப்படுமாறு கொடையாளி அங்ஙன மிகழப்படானெனக் கூறுதலால் இது மாறுபடு புகழ்நிலை என்னும் அணி." —அ. கு.

Even the poverty of the liberal is far better than a miser's wealth; for the former is not gratuitously subject to the opprobrious reproaches of the world, as ungracious, selfish and pitiless. —H. S.

The poverty of a benevolent-minded man is better than the opulence of one devoid of benevolence; for the former cannot be reproached as being destitute of mercy, kindness and courtesy. —C. M.

The poverty of a benevolent man is much better than the affluence of the miser. The former will never be censured by the world, as destitute of grace, kindness and pity.

—T. B. K.

---

## 68. இன்சொற் சிறப்பு

*ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்தல்*
*ஓகோ கொடிது கொடிதம்மா—நாகொன்று*
*தீவினைக் கம்மியனால் வாய்ப்பூட் டிடப்படின்மற்*
*றுவா விவரென்செய் வார்.*

1. ஈகை - கொடுக்குந் திறம், அரிதெனினும் - இல்லையானாலும், இன்சொலினும் - இனிய மொழிகளைக் கூறுதலினும், நல்கூர்தல் - (ஒருவர்) வறுமையடைதல், ஓகோ - ஐயகோ, கொடிது கொடிது - மிகக் கொடியது, அம்மா - இது வியப்பே! நா - (தம்) நாக்கு, கொன்று - எழாதவாறு வலியடக்கப்பட்டு, தீவினை - முன் செய்த பாவமாகிய, கம்மியனால் - கம்மாளனால், வாய்ப்பூட்டிடப்படின் - வாயானது பேச முடியாதபடி மூடிவிடப் பெற்றால், ஆஆ - ஐயோ, இவர் - இத்தகையோர், மற்று - வேறு, என் செய்வார் - என்ன செய்ய முடியும்! (பேசாமல்தான் இருக்கவேண்டும்.)

2. ஈகை அரிது எனினும் இன்சொலினும் நல்கூர்தல் ஓகோ கொடிது கொடிது அம்மா! தீவினைக் கம்மியனால் இவர் நாகொன்று வாய்ப்பூட்டிடப்படின் மற்று என் செய்வார்?

3 ஈகையிற் சிறந்தன்று இன்சொலுடைமை.

4. "அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின்." —குறள்.

"அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின்." —குறள்.

"உடுக்கை மருந்துறையுள் உண்டியோ டின்ன
கொடுத்துக் குறைதீர்த்த லாற்றி—விடுத்தின் சொல்
ஈயாமை யென்ப எருமை எறிந்தொருவர்
காயக்கு லோபிக்கும் ஆறு." —பழமொழி.

5. வள்ளன்மை யில்லாத செல்வரை முற்பாட்டிற் குறித்து, அவர்கள் இன்சொலினும் நல்கூர்தல் கொடிது கொடிது என்று இச்செய்யுளில் இடித்துக் கூறுகின்றார் ஆசிரியர்.

"இது முதல் 'சிறு முயற்சி செய்து' (எ0-ஆம்செய்யுள்) என்பதீறாக வாக்கினாலாய பயன் கூறுகிறார்." —தி. சு. செ.

"கொடுத்தல் கூடாதவழி அதனினும் நல்லதாய்த் தம் வயத்ததாய் வெளியே விடினுங் குறைவுபடாததாயுள்ள இன் சொல்லைக் கூறாது விடுதல் மிகக் கொடுமை என்பது கருத்து."
—அ. கு.

"பொருள் வசத்ததாகிய கொடுத்தல் முடியா தாயினும் தம் வசத்ததாகிய இன்சொல்லேனுஞ் சொல்லா தொழிதல் பெரும்பாவம் என்பார் 'கொடிது, கொடிது' என்றும் அடங் காது, 'ஓகோ, 'அம்மா' என வியப்பிடைச் சொற்கள் தந்தும், இவர்களைப் புகழ்வார்போன்று பழிப்பார் 'தீவினைக் கம்மியனால் வாய்ப்பூட்டிடப்பட்டால், ஆவா விவரென் செய்வார்' என்றும் கூறினார்." —தி. சு. செ.

"சிலர் அறத்தின் பொருட்டுப் பொருளைக் கொடுத்த லில்லாராயினும், இன்சொல்லை யாயினுஞ் சொல்ல லாயிருக்க, அதுவுஞ் செய்யாமைக்குக் காரணம் அவருடைய பாவமேயாம் என்பது கருத்து." —கோ. இ.

"பாவத்தைக் கம்மியனாகவும், சொல்ல மனம் வராமையைப் பூட்டாகவும் உருவகப் படுத்தினார்." —ஊ. பு. செ.

**ஈகை யரிதெனினும் இன்சொலினு நல்கூர்தல்.**

**ஈகை** என்பதற்கு ஈயப்படும் பொருள் என உரைத்தார் **அ. குமாரசுவாமிப் புலவர்.**

இன்சொலினும் நல்கூர்தல்— "இங்கு உம்மை எச்சப் பொருளதாய் ஈகையைத் தழுவுகின்றது மன்றி இழிவுசிறப்பு மாம்." —ஊ. பு. செ.

"எதிர்சென்று முகமன் கூறி யிருக்கையு நல்கியுண்டே
அதிசய மெனவிளவி யன்பொடு முகமலர்ந்து
துதிபுரிந் துபசரிக்குந் தொழிலினற் செலவொன் றில்லை
யதிர்கட லுலகுளோர்தம் அன்பெலாம் வரவாமாதோ."

என்பது நீதிநூல்.

**ஓகோ கொடிது கொடிதம்மா:**

ஓகோ—"ஓவோ" எனப் பாடங்கொண்டார் கோ. இராச கோபாலப் பிள்ளை.

"ஓஒ" என்று பாடங்கொண்டு "ஓஒ கொடிது; ஓகாரம் சிறப்புப் பொருளது" என்றுரைத்தார் உ. வே. சாமிநாதையர்.

**நாகொன்று:**

"பேச முடியாதபடி நாவைச் சிதைத்து." —இள.

"சொல்ல முடியாமல் நாக்கினை உள்ளே அடக்கி."
—அ. கு.

"(இவர்கள்) நாவானது கொய்யப்பட்டு." —சி. மு.

**தீவினைக் கம்மியனால் வாய்ப்பூட் டிடப்படின்:**

தீவினைக் கம்மியனால்—இயமனால் என்று பொருள்கூறி 'தீவினைக் கம்மியன்' இயமனென்பது "தென்புலத்தார்கோ வினைவேலை" யென்பதனானறிக என விளக்கினார் சி. வை. தாமோதரம் பிள்ளை.

"தீவினைக் கம்மியனென்பது உருவகமாதலால் இருபெய ரொட்டுப் பண்புத் தொகைநிலைத் தொடரென்க." —கோ. இ.

**வாய்ப்பூட் டிடப்பட்டால்:**

"பூட்டிடப்படின் என்பது பூட்டு என்னும் பிறவினைப் பகுதியோடு இடு என்பது சேர்ந்து ஒருபொருளதாகி நின்ற பகுதியோடு படு எனுஞ் செயப்படுபொருள் விகுதி யேறி பூட்டிடப்படு என்பது இன்விகுதி பெற்று வந்த செயினென் வாய்பாட்டெச்சம்." —ஊ. பு. செ.

'வாய்பூட்டிடப்படின்' என்று பாடங் கொண்டாருமுளர்.

**ஆவா இவரென் செய்வார்:**

"ஆவா—இரக்கக் குறிப்பு; இடைச்சொல்; "ஆவா விருவ் ரறியா• வடிதில்லை யம்பலத்து, மூவாயிரவர் வணங்க நின் ரோனே." (திருச்சிற்றம்பலக்கோவை). —உ. வே. சா.

**இவரென் செய்வார்:**

"அருக்கி வைத்திருந்த இன்சொற்கொண்டு தமக்கு வேண் டுஞ் சுகங்களையுஞ் சொல்லிச் செய்வித்துக் கொள்ளமாட்டா ரென்பது தோன்ற 'என் செய்வா'-ரென்றார்." —அ. கு.

"இன்சொற் கூறுதானைக் குற்றத்தினின்று நீக்குவார் போல ஒரு காரணம் கூறினார்; 'அவன்பாற் குற்றமில்லை, அவன் செய்த தீவினைதான் அதற்குக் காரணம்' என்றார்." —உ. வே. சா.

"இது புகழ்வது போலப் பழித்திறம் புனைந்து கூறுதலின் இலேசவணியு ளடங்கும்." —தி. சு. செ.

It may be impossible to give ; but how cruel is it to be *at the same time* poor of kind words : yet what else can they do : if, as by a smith, their tongues be pierced through, and their mouths locked up by the evil deeds *of a former life* ? —H. S.

To be poor in good words is far worse than to be devoid of benevolence. What can such persons do when death will cut their tongues and lock their mouths ? —C. M.

Even where a gift is impossible, refraining from kind words is most cruel; but alas! these are men whose tongues are cut off and whose mouth is locked up by the smith of the evil deeds of a former life. —T. B. K.

---

## 69. சொல்வன்மைப் பயன்

*சொல்வன்மை யுண்டெனிற் கொன்னே விடுத்தொழிதல்*
*நல்வினை கோறலின் வேறல்ல—வல்லைத்தம்*
*ஆக்கங் கெடுவ துளதெனினு மஞ்சுபவோ*
*வாக்கின் பயன்கொள் பவர்.*

1. சொல்வன்மை - சொற்களாற் பயன் கொள்ளுந் திறன் (செல்வாக்கு), உண்டெனில் - தன்கண் அமைந்திருக்குமாயின், கொன்னே - வீணாக, விடுத்தொழிதல் - (அதனைப் பயன்படுத்தாமல்) கைவிடுதல், நல்வினை - (ஆக்கத்திற்குக் காரணமாகிய நல்வினையை), கோறலின் - அழித்தலினும், வேறல்ல - வேறாகாது; வல்லை - விரைவில், தம் - தம்முடைய, ஆக்கம் - செல்வமெல்லாம், கெடுவது - கெடுதற்குக் காரணமாக வரும் செயல், உளதெனினும் - உளதாயினும், அஞ்சுபவோ - அதற்கு அஞ்சித் (தம் சொற்றிறனைக்) கைவிடுவார்களோ, வாக்கின் - சொல்லாற்றலின், பயன் (பெறக்கூடிய) பயனை, கொள்பவர் - அறிந்தோர்?

2. வாக்கின் பயன் கொள்பவர் சொல்வன்மை யுண்டெனிற் கொன்னே விடுத்தொழிதல் நல்வினை கோறலின் வேறு அல்ல, தம் ஆக்கம் வல்லை கெடுவது உளதெனினும் அஞ்சுபவோ?

3. **சொல்வன்மை யுண்டெனில் அதனைப் பிறர்க்குப் பயன் படுத்தலே அறமாம்.**

4. "திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூங் கில்." —குறள்.

"காலமென் னு நலனுடைமை யங்கலம்
யாகலத் துள்ள தூஉ மன்று." —குறள்.

5. "தாம் சொல்வன்மையினல் சந்தி செய்வித்தல் முதலிய நல்வினைகளை யாற்றும் ஆற்றலுடையவர் தம் ஆக்கம் இழப் பினும் அவற்றைச் செய்வர்." —உ. வே. சா.

"சொல்லின் வலிமையாவது தமது சொல் பிறரிடத்துஞ் சென்று ஒருவருக்குப் பயன்படுதல்; அவ்வாறு பயன்படுஞ் சொல்லைத் தம்மிலெளியார்க்குப் பயன் படுத்தா தொழிதல் பெரும்பாவமென்பார், 'நல்வினை கோறலின் வேறல்ல' எனவும், மனம் வாக்குக் காயங்களாலாகிய பயனைக் கொள்ள முயல் வோர் அவற்று ளொன்ருகிய வாக்காலாய பயனுல் தமக்குவரும் பயன் கெடினும் அஞ்சார் என்பார் 'தம்மாக்கங் கெடுவதுள தெனினு மஞ்சுபவோ' எனவுங் கூறினர்." —தி. சு. செ.

"தம் சொல்லாற் பயனுண்டென்று தம்மை நாடித் தம் சொல்லுக் குறையிரக்கும் தம்மி லெளியார்க்கு அன்னர் நலங் கருதித் தம் சொல் வன்மையைப் பயன்படுத்தா தொழிதல் பெரும் பாவம் என்ருர் ஆசிரியர், சொல்வன்மையுடைய ஒரு வரிடம் ஓர் எளியன் போய் அன்னர் ஒரு சொல்சொன்னல் அதனை மதித்துப் பிறிதொருவர் அவ்வெளியனுக்கு வேண்டும் உதவி செய்வர் எனக்கூறி அவன் குறையிரக்கும்போது, சொல் வன்மையுடைய அவர் அது செய்ய மறுப்பராகில் அவர் அப் போதே பெரும் பாவம் செய்தவராகிருர் என்பது கருத்து." —இள.

**சொல்வன்மை உண்டெனின் கொன்னே விடுத்தொழிதல்:**

"அதிகாரம், செல்வம், கல்வி, அறிவு, குலம் முதலியபற்றி யல்லது வன்மையடைதல் சொல்லுக்கியல்பாக வில்லாமைபற்றி **'உண்டெனின்' என்ருர்."** —அ. கு.

**கொன்னே விடுத்தொழிதல்**—"அவ்வாருய சொற்கொண்டு செய்வன தவிர்வனவற்றைச் சொல்லிச் செய்வித்து நற்பயன் பெருமல் அச்சொற் பயனிலதாகப்போக விட்டுவிடுதல்" என்று **கூட்டியுரைத்தார் அ. குமாரசாமிப் புலவர்.**

நல்வினை கோறலின் வேறல்ல—"சொல்லாற் செயப்படுந் தருமத்தினைச் செய்ய வன்மையிருந்துஞ் செய்யாது விடுதல் நல்வினையைக் கெடுத்தலால் வரும் பாவத்தினை அடைவிக்கும் என்பது தோன்ற 'நல்வினை கோறலின் வேறல்ல' என்றார்." —அ.கு.

**வாக்கின் பயன் கொள்பவர்:**

வாக்கின் பயன்களாவன:—

"அறம்பெரி தறைதல் புறங் கூறாமை
வாய்மை, கல்வி, தீமையிற் றிறம்பல்
இன்மொழி யிசைத்தல், வன்மொழி மறுத்தல்."
—ஞானமிர்தக் கட்டளை.

Where *a man's* words possess influence, without cause to neglect to avail himself of it, is nothing else than to destroy *the effect of* good works; even when their wealth is threatened with immediate ruin, should those fear who possess the advantages of eloquence? —H. S.

To allow the talent of vigour of expression to remain unemployed is to destroy a proper means of growing rich. Will they who appreciate the value of powerful words hesitate to speak, though to the detriment of their fortune?
—C. M.

Power of speech not used in furtherance of good, is as the slaying of it. Even at the risk of one's prosperity, one should not fear to speak, if one has to make the best use of eloquence. —T. B. K.

## 70. சிறுமுயற்சிப் பெரும்பயன்

*சிறுமுயற்சி செய்தாங் குறுபயன் கொள்ளப்*
*பெறுமெனிற் றாழ்வரோ தாழார்—அறனல்ல*
*எண்மைய வாயினுங் கைவிட் டரிதெனினும்*
*ஒண்மையிற் றீர்ந்தொழுக லார்.*

1. சிறுமுயற்சி - ஒருசிறிது முயலும் முயற்சியையே, செய்து - (மேற்கொண்டு) செய்து, ஆங்கு - அதனால், உறுபயன் - உற்ற பெரும் பயனை, கொள்ளப் பெறுமெனில் - அடையக் கூடுமானால், தாழ்வரோ - (அதனைச் செய்யவும்) பின்னடைவரோ?; தாழார் - பின்னடையார், அறனல்ல - அறநெறிக் கொவ்வாத தீச்செயல்கள், எண்மையவாயினும் - செய்ய எளியனவா யிருப்பினும், கைவிட்டு - அவற்றைச் செய்யா தொழிந்து, அரிதெனினும் - செயற்கரியதா யிருந்தாலும், ஒண்மையில் - அறநெறியினின்றும், தீர்ந்து - நீங்கி, ஒழுகலார் - நடவாத சான்றோர்.

2. எண்மையவாயினும் அறனல்ல கைவிட்டு அரிதெனினும் ஒண்மையிற் றீர்ந்து ஒழுகலார் சிறுமுயற்சி செய்து ஆங்கு உறுபயன்கொள்ளப் பெறுமெனில் தாழ்வரோ? தாழார்.

3. சான்றோர் செயற்குரிய செய்யப் பின்னடையார்.

4. "பெருமை யுடையவ ராற்றுவ ராற்றி
னருமை யுடைய செயல்." —குறள்.

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்." —குறள்.

"தங்தொழி லாற்றுந் தகைமையார் செய்வன
வெங்தொழில ராய வெகுளிகட்குக் கூடுமோ
மைந்திறை கொண்ட மலைமார்ப ஆகுமோ
நந்துழுத வெல்லாங் கணக்கு." —பழமொழி.

**சிறுமுயற்சி செய்தாங் குறுபயன் கொள்ளப் பெறுமெனில்:**

"சிறுமுயற்சி—முற்கலியிற் சொல்லப்பட்ட வாக்கு வன்மை யாற் செய்யத்தக்க நன்மை போன்ற அற்பகாரியம். முயற்சி - முயலப்படுவதென்னும் பொருட்டாய் இங்கே காரியத்திற் காயிற்று." —அகு.

"சிறுமுயற்சி - வாக்கின் ஞெழில்; அது செய்தல் யாவர்க்கும்,எளிதாதலால் சிறுமுயற்சி என்றார்." —தி. சு. செ.

**அறனல்ல எண்மையவாயினும் கைவிட்டு:**

"அறனல்ல—பொய்ம்மொழிதல், புறங்கூறல், கடுஞ்சொற் கூறல், பயனில்சொற்கூறல் முதலியன." —இள.

"**எண்மையவாயினும்** - எளிதாகச் செய்து பெரும் பயன் பெறத் தக்கனவாய் வாய்க்குமாயினும். வாயின் என்பது முதனிலைத் தொழிற் பெயரடியாகவந்த வினையெச்சம். வாய்த்தல் - நேர்படுதல்." —அ. கு.

"உயிர்கள் தீவினை மிகுதியும், நல்வினை சிறிதும் செய்வன வரிதலின் 'அறனல்ல எண்மைய வாயினும்' என்றார்."
—கோ. இ.

**அரிதெனினும் ஒண்மையிற்றிர்ந் தொழுகலார்:**

"**ஒண்மை** - நன்மை. 'அழகு நன்று மறிவு மொண்மை' என்பது பிங்கலம்." —அ. கு.

"ஒண்மை என்னுங் காரியப்பெயர் உயிரைவிளங்கச் செய்வதாகிய அறமென்னுங் காரணத்தின்மேல் நின்றது."—கோ. இ.

"மனம் உடம்புகளால்செய்யும் அறச்செய்கை யாவருக்கும் அரிதாதலால் அதனை 'அரிது' எனக் கூறினர்." —தி. சு. செ.

" நரம்பெழுந்து நல்கூர்ந்தா ராயினுஞ் சான்றோர்
குரம்பெழுந்து குற்றங்கொண் டேறார்—உரங்கவறா
வுள்ளமெனு நாரினாற் கட்டியுள வரையால்
செய்வர் செயற்பா லவை." —நாலடியார்.

When they can procure a great advantage by a little exertion, shall they shrink from it; who abandon what is contrary to virtue though it be easy, to pursue decidedly the path of duty, however difficult? —H. S.

Those that unswervingly walk in the path of virtue and avoid that of wickedness - howsoever difficult the former and howsoever easy the latter may be - will never hesitate to perform any the slightest deed of virtue, provided it brings with it its own virtuous reward. —C. M.

Those who give up the path of unrighteousness, however easy and pursue the path of virtue, however difficult, will not hesitate to attain to much good by a little exertion. —T. B. K.

---

## 71. நாகரிகரல்லாதார்

செயக்கடவ வல்லனவுஞ் செய்துமன் னென்பார்
நயத்தகு நாகரிக மென்னுஞ்—செயிர்த்துரைப்பின்
நெஞ்சு நோமென்று தலைதுமிப்பான் றண்ணளிபோல்
எஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று.

1. செயக்கடவ - செய்து முடிக்கக் கூடியன, அல்லனவும் - அல்லாத செயல்களையும், செய்துமன் - மிகவும் செய்துமுடிப்போம், என்பார் - என்று சொல்லளவிற் கூறுவோரின், நயத்தகு - விரும்பத் தக்க, நாகரிகம் - தாட்சிண்ணியம், என்னும் - என்ன பயன்தரும்? செயிர்த்து - சினந்து, உரைப்பின் - (கடிந்து) கூறின், நெஞ்சு - (கடிந்து கூறப்பட்டவரின்) நெஞ்சம், நோமென்று - வருந்துமென்று, தலை - அவருடைய தலையையே, துமிப்பான் - வெட்டும் ஒருவனது, தண்ணளிபோல் - கருணைத் திறனை யொத்ததாமென்று, எஞ்சாது - ஒளியாமல், எடுத்துரைக்கல் - எடுத்துச் சொல்லப்படும், பாற்று - பகுதியினை யுடைத்து.

2. (கொண்டு கூட்டு வேண்டிற்றிலது.)

3. ஆற்றலுணர்ந்து செயலாற்ற முற்படுவதே நலந்தரும்.

4. "சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்." —குறள்

5. "கண்ணோட்டங் கருதித் தம்மாற் செய்க்கடவ அல்லா தவற்றைச் செய்வதாக உறுதிகூறி இடர்ப்படுதல் பிழை என்பது கருத்து." —உ. வே. சா.

"பயன்பெறக் கருதித் தம்மை யொருவ ரடைந்தால், அது தம்மான் முடியாதாயின் 'முடியாது' என்னாது, 'முடிப்போம்' என்னில், அதனைக் கடைப்பிடித்துப் பிறரிடத்துச் சென்றடையும் பயனையும் அவரிழத்தலால் 'நெஞ்சுநோமென்று தலை துமிப்பான் தண்ணளிபோல் எஞ்சாதெடுத்துரைக்கற்பாற்று' என்றார்." —தி. சு. செ.

"தன்னை வந்தடுத்துத் தன் உதவி விரும்புவானிடம் தான் செய்தற்கரிய காரியங்களையும் செய்துமுடிக்க முடியுமென்று சொல்லளவிற் சொல்லிச் செயலில் அங்ஙனம் செய்ய இயலாதான் வெறும்பேச்சு இகழப்படும். தன்னாலாகாதவிடத்துத் தன்னை வந்தடுத்தோன் பிறனிடம் சென்றேனும் பயன் பெறட்டும் என்று விடாது, தானே அதிகம் செய்துவிடுவதாய்ச் சொல்லி, அவன் பிறனொருவனிடம் அடையும் பயனையும் அடையவிடாது கெடுத்தலால், 'நெஞ்சு நோமென்று தலை துமிப்பான் தண்ணளிபோல்' என்றார்." —இள.

"தம்மால் செய்ய முடியாதவற்றையும் நினக்குச் செய்வோமென்று காலங்கழிப்பவரிடத்தில் தாட்சிண்ணியம் வையாமல் அவரால் முடியாமையைப் பலரறியச் சொல்லி நீங்குக என்பது கருத்து. இவன் சொல்லாமலிருக்கும் தாட்சிண்ணியம் அவ்வலியில்லார் அவ்வாறு சொல்லிக்கொள்ளுதற்குக் காரணமானதைப்பற்றிச் 'செய்தூமன் னென்பார் நயத்தகு நாகரிகமென்' என்றார். —கோ. இ.

**செய்க்கடவ வல்லனவும் செய்தூமன் என்பார்:**

"செயக்கடவ—மேலே சொல்லப் பட்டனவாகிய எளிதிற் செய்து நலம் பெறற்குரிய காரியங்கள்." —அ. கு.

"செய்தூமன்—மன் மிகுதிப்பொருளதாகிய இடைச்சொல்." —கோ. இ.

"மன் - ஒழியிசைப் பொருட்டு." —தி. சு. செ.

நயத்தகு நாகரிக மென்றும்:

"நாகரிகம்—நாகரிகச் செயல். நாகரிகர் - நகர சம்பந்த முடையவர்; நகரமாவது புண்ணியமான செயலிலே வல்லவரைத் தன்மாட்டுடையது; எனவே, நாகரிகம் - செயற்பாலனவாகிய நற் செயலைச் செய்யும் வன்மை என்பது பெறப்படும். நாகரிகம் என்பதற்குத் தாட்சிண்ணிய மென்பாரும் உளர்." —அ. கு.

"நாகரிகம் என்பது தம்மோடு பழகினோர் நஞ்சிடக் கண்டும் மறுக்காதுண்டு பின்னு மவரோடு பழகுந் தன்மைத் தாதலால் 'நயத்தகும்' எனச் சாதியடை தந்தார்.

"முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சுமுண்பர் நனிநா கரிகர்"

என்பதனாலும் அறிக." —தி. சு. செ.

"நாகரிகம் - கண்ணோட்டம்; 'பெயக்கண்டு நஞ்சுண் டமை வர், நயத்தக்க, நாகரிகம் வேண்டுபவர்' (குறள்.) நாகரிகம் என் பது இங்கே குறிப்பு மொழி, கண்ணோட்ட மின்மையைக் குறித் தலால்." —உ. வே. சா.

நாகரிகம் என்பதற்குச் சாதுரியம் என்றும், முகமன் வார்த்தைகள் என்றும் பொருளுரைத்தாரும் உளர்.

தலைதுமிப்பான் தண்ணளிபோல்:

"தண்ணளி—தன் எதிர் மறையை யுணர்த்தவந்த குறிப்புச் சொல்." —கோ. இ.

"தண்ணளிபோன்று" எனப் பாடங் கொண்டார் தி. சுப்ப ராயச் செட்டியார்.

Of what avail is the [flattering] politeness of men, who forwardly profess that [they] will do things, which are not in their power to do ? It may be fitly compared to the tender feelings of a man, who lest harsh words should grieve the heart of another, would cut off his head. —H. S.

. Of what avail is the courteous spirit of those who will do what it does not become them to do? It is like the mercy of one who cuts off the head of a fellow, lest he should give pain by angry words. —C. M.

Of what use is the loveable kindness of those who easily promise to do even what is impossible? It is like the warm kindness of one who fearing to injure by harsh words cuts off the head. —T. B. K.

---

## 72. அடக்கமில்லாதார்

*அல்லன செய்யினு மாகுலங் கூழாக்கொண்*
*டொல்காதார் வாய்விட் டுலம்புப—அல்லாற்*
*பிறர்பிறர் செய்பபோற் செய்தக்க செய்தாங்*
*கறிமடம் பூண்டுநிற்பா ரார்.*

1. அல்லன - (அறப்பயன் அளிக்கவல்லன) ஆகாத செயல்களை, செய்யினும் - செய்வார்களாயினும், ஆகுலம் - ஆரவாரத்தையே, கூழாக் கொண்டு - பயனாகக் கருதி, ஒல்காதார் - அடக்கமில்லாதார், வாய்விட்டு - (பலரறியத் தஞ்செயல்களை) வாய்திறந்து, உலம்புப - உளறி முழங்குவர்; அல்லால் - இவ்வாறன்றி, பிறர்பிறர் - (அடக்கமுடைய) பிறரெல்லாம், செய்பபோல் - செய்யுமாறு போன்று, செய்தக்க - (அறப்பயன் அளிக்க வல்லனவாய) செயக்கடவ செயல்களை, செய்து - செய்து முடித்து, ஆங்கு - அச்செய்கைகளில், அறிமடம் - (தாம்) தெரிந்தும் தெரியாமை யாகிய தாழ்மையை, பூண்டுநிற்பார் - மேற்கொண்டிருப்பார், ஆர் - யாவர்? (ஒருவரு மிலர்.)

2. ஒல்காதார் அல்லன செய்யினும் ஆகுலங் கூழாக் கொண்டு வாய்விட்டு உலம்புப, அல்லால் செய்தக்க பிறர்பிறர் செய்பபோற் செய்து ஆங்கு அறிமடம் பூண்டு நிற்பார் ஆர்.

**3. அறனல்ல செய்யினும் பெருமை பேசுவர் அறிவிலார்; செயற்கரிய செய்தும் வெளிக்காட்டா திருப்பர் கற்றறிந்தடங்கிய சான்றோர்.**

4. "பணியுமா மென்றும் பெருமை சிறுமை
அணியுமாந் தன்னை வியந்து." —குறள்

"கற்றறிவார் கண்ட தடக்கம் அடங்காதார்
பொச்சாந்தும் தம்மைப் புகழ்ந் துரைப்பார்."—பழமொழி.

"முல்லைக் குத்தேரும் மயிலுக்குப் போர்வையும்
தொல்லை யளித்தாரைக் கேட்டறிதும்—சொல்லின்
நெறிமடற் பூந்தாழை நீடுநீர்ச் சேர்ப்ப
அறிமடமும் சான்றோர்க் கணி." —பழமொழி.

5. "ஒல்லாதார் அல்லன செய்யினும் வாய்விட்டு உலம்புப; வல்லார் செய்யத்தக்க செய்து, அறிமடம் பூண்டுநிற்பார்."
—உ. வே. சா.

"அடக்க மில்லாதவர் - மனம் வாக்கு காயங்களடங்குத லில்லாதவர். அவர்கள் செய்யுஞ் செயல்கள் பிறர்க்குப் பயன் படாதன ஆதலால் 'அல்லன செய்யினும்' எனவும், அதைப் பிறருக்குப் பயன்படுவன போலக் கருதிப் பலரறிய ஆரவாரஞ் செய்தல் அவர்களியல்பு ஆதலால் 'ஆகுலங் கூறாக்கொண்டுலம்புப' எனவும், பிறர்க்குப் பயன்படுவனவற்றைப் பிறரொருவர் செய்தது போலத் தாம்செய்து வைத்து அதுபோல ஒன்றும் அறிந்தும் அறியார் போலிருத்தல் அடக்கமுடையார்க்கேயன்றி யவர்களுக்கில்லாமையால் 'அல்லால் ஆர்' எனவுங் கூறினர்."
—தி. சு. செ.

"இச் செய்யுளால் உலகத்தில் அறிந்தும் அறியாதவர்போ லிருக்கும் அடக்கமுடையாரைக் காண்டல் அரிது என விளங்குகிறது. தாம்செய்த ஒரு சிறு காரியத்தைப் பெரிதாகத் தம் வாய்கொண்டே முழங்கும் அடக்கமிலார் இவ்வுலகில் அநேகருளர்."
—இள.

**அல்லன செய்யினும்:**

"செய்தக்க என அடியிற் சொன்னமையால், அல்லன பாவத்துக்காயிற்று." —கோ. இ.

"செய்யத்தக்கன வல்லாத அருஞ் செயல்களை ஓரோவழிச் செய்தாராயினும்" என்று இதற்குப் பொருளுரைத்தார் அ. குமாரசாமிப் புலவர்.

"மனம் வாக்குக் காயங்களில் அடக்கமிலார் செய்யுங் காரியங்கள் மற்றவர்க்குப் பயன்படா வாகையால் 'அல்லன செய்யினும்' என்றார்." —இள.

**ஆகுலங் கூழாக் கொண்டுலம்புப:**

"பயன்படாக் காரியங்களைச் செய்துவிட்டு வாளா இராது அவர்கள் கருத்திற்கு அவை பயன்படுவனபோற்றோன்றுதலால் தாம் பிறர்க்குப் பயன்படுஞ் செயல்கள் செய்துவிட்டதாய் உலகறிய முழங்குவ ராகையால் அவர்கள் அவ்வாறு முழங்குதலை 'ஆகுலங் கூழாக் கொண்டுலம்புப' என்றார்." —இள.

"ஆகுலமாவது பலராலு மறியப்பட்டுப் பேசுதல். ஆரவாரித்தல் மாத்திரமாகிய பயனுடைமையின் 'ஆகுல' மென்றார்." —அ. கு.

"பலரறிதலாகிய காரியத்தை அதன் காரணமாகிய ஆகுலம் என்றது காரியத்தைக் காரணமாகக் கூறுவதோர் உபசார வழக்கு. பயனைக் கூழென்றது இலக்கணை." —கோ. இ.

**ஒல்காதார் வாய்விட்டுலம்புப:**

ஒல்குதல்—தளர்தல்.

"அறியும்படி இரைந்து பலமுறை கூறுதல்பற்றி 'வாய்விட்டுலம்புப' என்றார்." அ. கு.

"வாயினிழிவைச் சிறப்பித்தற்கு 'வாய்விட்டு' என்றும், அவர் சொல்லுவன பயனில்லன வென்றுணர்த்தற்கு 'உலம்புப' என்றும் கூறினர்." —கோ. இ.

"ஒல்லாதார்" என்று பாடங்கொண்டு 'வன்மையில்லாதார்' என்று பொருளுரைத்தார் உ. வே. சாமிநாதையர்.

**அல்லால்:**

"வல்லார்" என்றுபாடங்கொண்டார் உ.வே.சாமிநாதையர்.

"அல்லார்" என்று பாடங்கொண்டாருமுளர்.

**பிறர் பிறர் செய்யபோல்:**

"என்பதற்குத் தாம் செய்வதுவாக வெளிப்படாமற் பிறர் செய்வது போலாக என்றுரைப்பாருமுளர்." * —அ. கு.

**அறிமடம் பூண்டு நிற்பாரார்:**

"அறிஞர் பிறர்க்குப் பயன்படுஞ் செயல்களையே செய்து அவை பிறர்க்குப் பயன்படுவதை அறிந்துங்கூடத் தம்மைப் புகழாமல் அவற்றை யெல்லாம் அறிந்தும் அறியாதவர்போ லிருப்பாரென்றும், அக்குணம் அவ் அறிஞர்க்கன்றி அடக்க மில்லார்க் கில்லையாதலால் 'அல்லால் ஆர்' எனவுங் கூறினர்." —இள.

"அறிமடம் பூண்டு நிற்பாரா" என்று பாடங்கொண்டு, நிற்கமாட்டார் என்று பொருளுரைத்தார் அ. குமாரசாமிப்புலவர்.

"அறிமடம் பூண்டு நிற்பார்" என்று பாடங்கொண்டார் உ. வே. சாமிநாதையர்.

Many, to reap a harvest of empty sound, scruple not to boast aloud, though they have done nothing: on the contrary, where are the men, who, when they have done a good action, assume a feigned ignorance, as if others had done it? —H. S.

The insolent will trumpet forth their actions, evil though they be, desirous of ostentatious display. There is none in

---

* இவ்வாறுரைத்தவர் சி. முத்தையா பிள்ளையாவர்.

the world who will remain silent after performing deeds of charity, as if he knows nothing about it, and as if some one else had done it. —C. M.

Even when doing useless things and reaping but a harvest of empty loud sound, the foolish boast a great deal. How few are those who having done good and necessary things, by their humble silence seem as if someone else had done it? —T. B. K.

---

## 73. பிறர்பழிகூறல்

பகையின்று பல்லார் பழியெடுத் தோதி
நகையொன்றே நன்பயனுக் கொள்வான்—பயமின்று
மெய்விதிர்ப்புக்காண் பான் கொடிறுடைத்துக்கொல்வான்போற்
கைவிதிர்த் தஞ்சப் படும்.

1. பகை இன்று - பகையில்லாதிருந்தும், பல்லார் - பலருடைய, பழி - குற்றங்களை, எடுத்து - (வலிதில் முயன்று) எடுத்து, ஓதி - பன்முறை சொல்லி, நகை யொன்றே - கேட்போர் எள்ளி நகையாடுதலாகிய தீமை யொன்றினையே, நன்பயனு - (அவ்வாறு ஓதுதலின்) பெரும் பயனுக, கொள்வான் - கருதித் திரியும் மூடன், பயமின்று - தான் கொள்ளும் பொருட்பயன் ஏதும் இல்லையாகவும், மெய் - (அவர்கள்) உடல், விதிர்ப்பு - நடுங்கித் துடித்தலை, காண்பான் - காண்பது மட்டுங் கருதி, கொடிறு - வழிச்செல்வோரின் கன்னத்தை, உடைத்து - அடித்து நொறுக்கி, கொல்வான்போல் - வருத்தும் கள்வன் (பிறரால் அஞ்சப்படுவது) போல், கை விதிர்த்து - (அச்சத்தாற்) கைந்நடுங்கி, அஞ்சப்படும் - அஞ்சப்படுவான்.

2. பயமின்று மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்துக் கொல்வான்போல், பகையின்றிப் பல்லார் பழியெடுத்தோதி நகையொன்றே நன்பயனுகக் கொள்வான் கைவிதிர்த்து அஞ்சப்படும்.

**3. நகைப்பே பயனுக் கருதிப் பிறர்பழி கூறுவோர் அஞ்சி யொதுக்கப்படுதற் குரியார்.**

4. "அறங் கூறா னல்ல செயினு மொருவன்
புறங் கூறா னென்ற லினிது." —குறள்.

"அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்." —குறள்.

"பண்டின்ன ரென்று தமரையுந் தம்மையுங்
கொண்ட வகையாற் குறைதீர நோக்கியக்கால்
விண்டவரோ டொன்றிப் புறனுரைப்பி னஃதன்றோ
உண்டவில் தீயிடு மாறு." —பழமொழி.

5. **பகையின்று பல்லார் பழியெடுத் தோதி:**

"பகையின் றென்றதனல் 'பல்லார்' நட்பினர், அயலவருக் காயிற்று." —கோ. இ.

"இன்று—இன்றி என்னும் எதிர்மறைக் குறிப்பு வினை யெச்சத் திரிபு." —இள.

"இன்றி யென்னும் வினையெஞ்சிறுதி நின்ற விகர முகர மாதல்ருன்றியன் மருங்கிற் செய்யுளி லுரித்தே." (தொல் காப்பியம்: உயிர் மயங்கியல்) —சி. வை. தா.

"பகையுள்ளபொழுது பிறர்பழி கூறில் அப்பழி செல்லா தாதலால் 'பகையின்று' என்றூர்." —தி. சு. செ.

பழி வசையுமாம்.

**பயமின்று மெய்விதிர்ப்புக் காண்பான்:**

"பயம்—பயன். இதற்கு "அஞ்சுதல் என்று பொருள் கொண்டார் சி. முத்தைய பிள்ளை.

இன்று—எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று.

"காண்பான்—காணுதல் என்பார் தொழிற்பெயரென்றூர்." —இள.

கொடி றுடைத்துக் கொல்வான்போல்:

கொடிறு—கபோலம் என்றுரைத்தார் தி. சுப்பராயச் செட்டியார். கதுப்பு என்று பரிமேலழக ருரைத்துள்ளார்; கஎஎ-ஆம் குறளுரை நோக்குக.

"கடுங்கண் மறவர்தாம், கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர், துள்ளுநர்க் காண்பார் தொடர்ந்துயிர் வௌவலின்" (கலி-௪ : 3-5). —உ. வே. சா.

கைவிதிர்த்து:

"கை ஆகுபெயரா யுறுப்புக்களனைத்தையும் விளக்கிற்று."
—சி. வை. தா.

"கைவிதிர்ப்பு—கைந் நொடித்தல். இங்கே இவனோடு நின்று பேசுதலாகாதென்பதனைக் குறிப்பா லுணர்த்திற்று."
—அ. கு.

"கொல்லுதல் ஒரு நாளைத் துன்பம்; இது பல நாளைத் துன்பம் ஆதலின் 'கை விதிர்த்து' என்று கூறினர்."

A man, who without malice, takes up, and dwells upon the scandal of others, for the solitary advantage of exciting laughter, will be feared and trembled at, like a man who, without any benefit to himself, would kill *his neighbour* by a blow on the cheek, that he might see the body quiver *in death.* —H. S.

He who exposes the failings of others without any cause of enmity, aiming at no more effect than derisive laughter will be feared like him who breaks the jaws of a person simply to see him tremble with pain. —C. M.

He who without any cause of enmity keeps exposing the failings of others, seeking mockery as the only object of his efforts, will be dreaded like him who breaks a man's jaws simply to see him tremble with pain. —T. B. K.

## 74. தெய்வ தண்டனை

தெய்வ முளதென்பார் தீய செயப்புகிற்
றெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும்—தெய்வம்
இலதென்பார்க் கில்லைதத்த மின்புதல்வர்க் கன்றே
பலகாலுஞ் சொல்வார் பயன்.

1. தெய்வம் - கடவுள், உளதென்பார் - உண்டென்று சொல்லுவோர், தீய - தீச்செயல்களை, செயப்புகின் - செய்யத் தலைப்படுவாராயின், தெய்வமே - அக்கடவுளே, கண் இன்று - கண்ணோட்டமின்றி, நின்று - (ஆங்காங்கு அவரெதிரில்) நின்று, ஒறுக்கும் - தண்டிக்கும்; தெய்வம் - கடவுள் என்ற ஒன்று, இலதென்பார்க்கு - இல்லையென்று சொல்லுவோர்க்கு, இல்லை - (அக்கடவுள் எதிரில் தோன்றுவதும், ஒறுத்தலும்) இல்லை; தம் - (பெற்றோர்) தம்முடைய, இன்புதல்வர்க்கு அன்றே - அன்புள்ள நல்ல பிள்ளைகளுக்கன்றோ, பலகாலும் - (அவர்கள் நெறி தப்புந்தோறும்) பன்முறையும், சொல்வார் - எடுத்துக் கூறி அறிவுறுத்துவார், பயன் - பயன்தரும் (நீதிச் சொற்களை!)

2. தம் இன்புதல்வர்க்கு அன்றே பலகாலும் சொல்வார் பயன்; தெய்வம் உள தென்பார் தீய செயப்புகின் தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும்; தெய்வம் இலதென்பார்க்கு இல்லை.

3. **இறைவனொருவன் உளனென்று உளமார நம்புபவர்கள் தீயன செய்தல் அடாது.**

4. "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்." —குறள்.

"ஓங்கிய புவியிற் செல்வத் தொடுஞ்சில ருற்றார் சில்லோர்
தாங்கினர் வறுமை யீதே யூழ்வினை முயற்சி தன்னாற்
றீங்குறு நன்மை வேட்டோர் தீவினை யடைவர் தீமை
நீங்குறு மனத்தோர் நன்மை நிறைந்திட நிலத்தில் வாழ்வார்."
—கந்தபுராணம்.

5. "கடவுள் உண் டென்பாருக்கே மிக்க துன்பங்கள் வாழ்க்கையில் உண்டாகின்றன' என்று கூறுவாரை நோக்கி

அதற்கொரு காரணம் எடுத்துரைப்பார். இதனை மறக்கருணை என்பர்.'' —உ. வே. சா.

''பெற்றோர் தம் அன்பான புதல்வர்க்கு மட்டும் அறநெறி போதிப்பரன்றி அன்பிலாப் புதல்வர்க்கு அவ்விதம் போதியார் போல், இறைவனும் தன்னை நம்பினவர்க்குமட்டும் நன்னெறி காட்டுவனன்றி நம்பாதார்க்கு அவ்விதம் செய்வதில்லை என்றார்.'' —இள.

''இவ்வாறு உலகத்தில் அநுபவ மிருப்பதற்குக் காரணம் யோக்கியருக்குப் பாவம் கழிவதற்காகக் கடவுளே அப்படிச் செய்கிறார் என ஏது கூறினர்.'' —ஊ. பு. செ.

**தெய்வ முளதென்பார் தீய செயப்புகின்:**

''தெய்வம்—ஆரியச் சிதைவு; தற்பவம்; அது பொருளால் உயர்திணையேனுஞ் சொல்லால் அஃறிணை யாதலால் 'உளது', 'இலது', 'ஒறுக்கும்' என அஃறிணை முடிபு தந்து கூறினர்.''
—தி. சு. செ.

''தெய்வ முள தென்பவர் தீயன செய்யா ரென்பது தோன்றச் 'செயப்புகின்' என்றார்.'' ——அ. கு.

**கண்ணின்று நின்றொறுக்கும்:**

'கண் நின்றுநின்று ஒறுக்கும்' எனப் பிரித்து, அவரெதிரில் ஆங்காங்கு நின்று அத்தீய செயல்களிற் செல்ல விடாமல் அவரைக் கண்டிக்கும் எனப்பொருளுரைத்து, இலதென்பார்க்கு முன்வாராமை தோன்றக் 'கண்ணின்று' எனக் கூறினர் என்றும், '''கண்ணின்' றென்பதற்குத் தாட்சிண்ணியமின்றி என்றுரைப்பாரு முளர். அது தெய்வ குண மன்மையானும், திருட்டாந்தத்துள்ள 'பல்காலும்' என்பதற்கு மாறுபடுதலானும் பொருந்தாதென்க'' என்றும் விரித்துக் கூறினர் அ.குமாரசாமிப் புலவர்.

''கண்ணின்று நின்றொறுத்த லென்றது, முற்பகல் செய்யின் பிற்பகல் விளைதல்.'' —கோ. இ.

தெய்வம் இலதென்பார்க் கில்லை:

"தெய்வம் இலதென்பார்க்கு ஒறுத்தலில்லை என்றது இவரை மறுமையில் நரகவேதனை முதலியவற்றால் தண்டித்தலால் இம்மையில் இல்லை என்றபடி. இது பெரும்பான்மை பற்றிக் கூறியது." —கோ. இ.

சொல்வார் பயன்:

"தம் இன்புதல்வர்க்குப் பலகாலும் பயன் சொல்வார் என்பதில் தமக்கினிய ரல்லாத புதல்வர்க்குப் பலகாலும் பயன் சொல்லார் என்று கொள்ளப்படுதல் உபலக்கணம்."—தி.சு.செ.

If those, who confess the existence of God, enter on evil action, God will stay and rebuke them without mercy; not so those, who say, ' there is no God". Is it not to their own dear children, that men patiently repeat instruction?
—H. S.

Should he who puts faith in God begin to do evil, the Almighty will stand before him and punish him with rigour; whereas those who ignore the existence of God are not so punished. The father utters words of admonition only to his sons.
—C. M.

When those who fear God enter on any evil action, that God steps forward to punish them. To those that own no God, no such thing happens. Good advice is constantly given only to one's own dear children.
—T. B. K.

---

## 75. தீயவர் ஆக்கம்

தீய செயற்செய்வா ராக்கம் பெருகினும்
தீயன தீயனவே வேறல்ல—தீயன
நல்லன வாகாவா நாவின் புறநக்கிக்
கொல்லுங் கவயமாப் போல்.

1. *தீய - தீயனவான, செயல் - செயல்களை, செய்வார் - செய்வோரின், ஆக்கம் - பொருள்கள், பெருகினும் - முதற்கண்பெருகி வளர்ந்தாலும், தீயன - தீய தொழில்களால் திரட்டப்பட்ட அப்பொருள்கள், தீயனவே - பின்னர் தீமை பயப்பனவே, வேறல்ல - (அன்றி,) நன்மை பயப்பனவாகா; என்னை? தீயன - தீத்தொழில்களான் வரும் பொருள்கள், நல்லன - எக்காலத்திலும் நன்மை பயப்பன, ஆகாவாம் - ஆகமாட்டாவா யாதலின்; (இது,) நா - நாவினால், இன்புற - (முதற்கண்) இன்ப முண்டாகும்படி, நக்கி - நக்கிக்கொடுத்து, கொல்லும் - (பின்னர்க்) கொன்றுவிடும், கவயமாப்போல் - காட்டுப் பசுவினைப் போல்வதாம்.*

2. *தீய செயற் செய்வார் ஆக்கம் பெருகினும், நா இன்புற நக்கிக்கொல்லும் கவயமாப்போல், தீயன தீயனவே வேறல்ல தீயன நல்லன ஆகாவாம்.*

3. நல்லாற்றில் ஈட்டப்படாத பொருள் ஆவதே போன்று கெடும்.

4. *"அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்*
*கேடு நினைக்கப் படும்."* —குறள்.

*"களவினா லாகிய வாக்க மளவிறந்*
*தாவது போலக் கெடும்."* —குறள்.

*"அல்லது செய்வார் அரும்பொரு ளாக்கத்தை*
*நல்லது செய்வார் நயப்பவோ—ஒல்லொலிநீர்*
*பாய்வதே போலும் துறைவகேள் தீயன*
*ஆவதே போன்று கெடும்."* —பழமொழி.

5. *"தீய செய்வாருக்கு ஆக்கம் பெருகினும் அதற்குக் காரணம் தீய செயல்கள் அல்ல; முற்பிறப்பிற் செய்த நல்வினையே யென்றறிதல்வேண்டும் என்பது கருத்து."*
—உ. வே. சா.

*"பரிசவின்ப மிக நாவினால் நக்கிப் பின்பு கொலைசெய்தல் காட்டுப் பசுவிற் கியற்கைத் தொழிலாதல் போலத் தீய செய்லால் வரும் பொருள் தன்னைத் தேடினோர்க்குத் தீராக் கெடுதி விளைத்தல் அப்பொருளுக் கியற்கைத் தொழில் என்பார்*

'தீயனவே வேறல்ல' என்று கூறியு மமையாது 'தீயன நல்லன வாகாவாம்' என்றனர்.'' —தி. சு. செ.

காட்டுப்பசு தான் கொல்ல விரும்பும் ஒரு பிராணியை முதலிலேயே கொல்லாமல், முதலில் நாவினால், அப்பிராணிக் குச் சுகந் தோன்ற நக்கிக்கொண்டேயிருந்து அச்சுகத்தி லீடு பட்டு அப்பிராணி தன்னிலையி லசையாமல் நிற்கையில் திடீ ரெனப் பாய்ந்து அதன் உயிரை வாங்கும். அதுபோல் தீநெறி யிற் றிரட்டிய பொருள் முதலிற் சுகந் தருவதாய்த் தோன்றி னும், இறுதியில் தீமையே பயக்கும் என்றார். அது கருதியே அப்பொருள் 'தீயனவே வேறல்ல', என்றும், 'தீயன' என்றும் 'நல்லனவாகாவாம்' என்றுங் கூறினார்.'' —இள.

**தீயசெயற் செய்வாராக்கம் பெருகினும்:**

"ஆக்கம் பெருகினும் - செல்வம் மேலும் மேலும் பெருகி னாலும்; பெருகினும் என்றதனால் பெருகாமை குறிப்பிக்கப் பட்டது.'' —உ. வே. சா.

"செயல் செய்வார் - நிலைமொழி அஃறிணைப் பெயராத லாலும், இப்புணர்ச்சி இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புணர்ச்சி யாதலாலும், (நன்னூல் மெய்: சூ. உசு-ன்படி) நிலை மொழியீற்று லகரம் திரியாமல் (சூ. கசூ-ன்படி) விகாரத் தியல் பாயிற்று.'' —கோ. இ.

"செயற் செய்வார் என்பதில் லகரம், "லளவேற்றுமையிற் றடவும்'' என்கிற விதியால் றகரமாகத் திரிந்தது. "இயல்பின் விகாரமும், விகாரத்தியல்பும்'' என்பதற்கு இயல்பி னியல்பும், விகாரத்தில் விகாரமுமன்றி இயல்பின் விகாரமும், விகாரத் தியல்பும் என்று பொருள் கூறின ராதலால் இங்கு விரோத மில்லை.'' —ஊ. பு. செ.

**தீயன தீயனவே வேறல்ல:**

"நெருப்பின்க ணுள்ளதாகிய தீமையையுடையனவேயாம்; அதனின் வேறுதலுளதேனுஞ் சேர்ந்தாரைக் கொல்லுதலால், வேறாவனவல்ல'', என்று பொருளுரைத்து, "தீ தான்பற்றிய இடத்தை முற்றத் தகித்தல்போலத் தீமையாலே தேடப்பட்ட

பொருளுந் தற்சேர்ந்தாரை முற்ற அழித்தல் பற்றித் 'தீயன தீயன' என்ருர்'' என்று விரித்துரைத்தார் அ.குமாரசாமிப்புலவர்.

''நல்லார் நயவ ரிருப்ப நயமிலாக்
கல்லார்க்கொன் ருகிய காரணம் - தொல்லை
வினைப்பய னல்லது வேறெடுங் கண்ணுய்
நினைப்ப வருவதொன் றில்.'' —நாலடியார்.

**தீயன நல்லன வாகாவாம்:**

''தீயன - தீயவை, ஆகா - அடைதற்குரியன அல்ல; நல்லன-நல்லவை, ஆம் - அடைதற்குரியன'' என்று கண்ணழித்து, ''ஆற்ருெழுக்காகப் பொருள் கொள்ளின் 'தீயன தீயனவே எனத் தேற்றேகாரங் கொடுத்ததனே டமையாது எதிர்மறை முகத்தாலுங் கூறி முடித்தமையால் அது குற்றமே யாம்'' என விரித்துரைத்தார் கோ. இராசகோபாலப் பிள்ளை.

''தீயன தீயனவே வேறல்ல என்றும், தீயன நல்லன ஆகா என்றும் உறுதிப் பாட்டுக்காகக் காரண காரிய வகையாற் கூறியிருத்தலாற் கூறியது கூறலாகாதென வுணர்க.'' —ஊ. பு. செ.

**நாவின்புற நக்கிக் கொல்லுங் கவயமாப்போல்:**

''நாவின்-நாக்கிஞல், புறம் நக்கி - உடலின் புறத்தை நக்கி'' எனவுமுரைக்கலாம்.'' —ஊ. பு. செ.

''கவயமா - பின் மொழியை விசேடித்து வந்த இருபெயரொட்டுப் பண்புத் தொகை.'' —தி. சு. செ.

''ஆமான் நக்குங்காற் பிறக்கும் இனிமையே இங்கே உவமை, (சீவக சிந்தாமணி: 189-நச்சினூர்க்கினிய ருரை)'' —உ. வே. சா.

Though the prosperity of those who do evil, increase; still evil is but evil; evil will never be good. Like the wild cow, which licks the body with her tongue, so as to create a pleasing sensation, while at the same time she thereby causes death. —H. S.

The wealth of the wicked, although it may for a time grow will still yield nothing but pain. It cannot but be evil. What is bad cannot become good. Hence their wealth is like the jungle cow, which pleases by licking, but kills us.
—C. M.

Though the wealth of evil-doers increases, evil is still evil. Evil can never become good ; it is still like the licking by the wild cow that causes death. —T. B. K.

---

## 76. பழி நாணுவோர்

நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க நாள்வாயும்
செந்நெறிச் செல்வாரிற் கீழல்லர்—முன்னைத்தம்
ஊழ்வலி யுன்னிப் பழிநாணி யுள்ளுடைவார்
தீய செயினுஞ் சில.

1. நன்மக்கள் - நல்லோருடைய, செந்நா - (உண்மையே பேசும்) செம்மை வாய்ந்த நாவில், தழும்பு - (அடிக்கடி தாம் செய்த நன்மைகளைப் புகழ்ந்து பேசுவதால்) தழும்பு, இருக்க - ஏறியிருக்கும்படி, நாள்வாயும் - நாள்தோறும், செந்நெறி - நல்வழியில், செல்வாரில் - ஒழுகும் மேலோரினும், கீழல்லர் - தாழ்ந்தவராகமாட்டார், முன்னை - பழமையாகிய, தம் - தம்முடைய, ஊழ்வலி - ஊழ்வினையின் வலிமையை, உன்னி - (தம் பிழைபாட்டிற்கு ஏதுவாக) நினைத்து, பழி - (வரவிருக்கும்) பழிச் சொற்களுக்கு, நாணி - (அஞ்சி) வெட்கமுற்று, உள்ளுடைவார் - மனம் வருந்தும் இயல்புடையோர், தீய - (அவ்வூழ்வினை காரணமாக) தீய செயல்கள், செயினும் சில - சிலவற்றை (ஒரோவொரு காலத்து அறிவிழந்து) செய்து விட்டார்க ளாகுலும்.

2. தம் முன்னை ஊழ்வலி உன்னிப் பழிநாணி உள்ளுடைவார் தீய சில செயினும், நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க நாள்வாயும் செந்நெறிச் செல்வாரிற் கீழல்லர்.

3. பழிநாணி மனம் வருந்தும் இயல்புடைய மேன்மக்கள் கெட்டாலும் மேன்மக்களே.

4. "பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு." —குறள்.

"தாருப்படினும் தலைமகன் தன்னொளி
நூரு யிரவர்க்கு நேர்." —பழமொழி.

"அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந்
திங்களுஞ் சான்றோரு மொப்பர்மற்—றிங்கண்
மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்றார் தெருமந்து
தேய்வ ரொருமா சுறின்." —நாலடியார்.

5. "சான்றோர் சில தீயவற்றைச் செய்யினும் தம் பெருமை குன்றா ரென்பது இதிற் கூறப்படும்." —உ. வே. சா.

"ஊழ்வலியைத் தம் அநுபவத்துக்குக் காரணமாக நினைத்தலும், பழிக்குக் கூசி மனம் வருந்துதலும் மிகுதியும், தீய செய்தல் சிறிது மாதலால் இவரை நல்வழியில் நடக்கிறவர்களினின்றும் தாழ்ந்தவரல்லர் என்றார்." —கோ. இ.

"நல்லார் இடைவிடாது புகழ என்பார் 'நன்மக்கள் செந்நாத் தழும் பிருக்க' எனவும், தம்மையறியாது தீயூழால் வரும் பழிக்கு நாணி மனம் வருந்துவோர் ஒருபோதுந் தீய கருமஞ் செய்யா ரென்பார் எதிர்மறையும்மை தந்து 'தீய செயினுஞ் சில' எனவும், அவ்வாறு செய்தல்வரினுந் தம்மாலன்று என்பார் 'ஊழ்வினை யுன்னி' எனவுங் கூறினார்." —தி. சு. செ.

"தாம் அறியாமல் ஊழ்வினையால் மதிமயங்கித் தீயகாரியங்கள் செய்ய நேர்ந்து அதனால்வரும் பழிக்கு நாணி மனம் வருந்துவோர் ஒருபோதும் தீய காரியங்களைச் செய்யா ரென்பர். பழி நாணுவோர் தாம் அறியத் தீய காரியங்களைச் செய்யார். ஊழ்வலியால் மதிமயங்கிச் செய்து விட்டாலும் அதனாலேற்படும் பழிக்குப் பெரிதும் மனம் வருந்துவர்." —இள.

**நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க:**

"செந்நாத் தழும்பிருக்க வென்றது நாத்தழும்பேறும்படி புகழ வென்றபடி. "நாத்தழும்பிருக்க வேத்துமினீரே" (காசிக் கலம்பகம்.)
—உ. வே. சா.

"சத்தியமாகிய செம்மை யுடைமையாற் பெரியார் நா 'செந்நா' எனப் பட்டது."
—அ. கு.

"நாக்குக்கு உண்மை கூறுதலின் மேற்பட்ட நன்மை வேறின்மையால் செம்மைக்கு உண்மை கூறுதலெனப் பொருள் கொள்ளப்பட்ட போதினும், செந்நா - பண்புத் தொகை நிலைத் தொடரென்க; விரிந்தால் செம்மையாகிய நா என விரியும்."
—கோ. இ.

செந்நா என்பதற்குச் "செவந்த நா" எனப் பொருளுரைத் துச் செம்மை நிறத்தின்மே னின்றது என விரித்துரைத்தார் தி. சுப்பராயச் செட்டியார்.

**நாள்வாயுஞ் செந்நெறிச் செல்வாரிற் கீழல்லர்:**

"நாள்வாயும் - நாள்தோறும், "நாள்வாயு நல்லறஞ் செய் வார்க்கு" (பழமொழி)"
—உ. வே. சா.

**முன்னைத் தம் ஊழ்வலி யுன்னி:**

"ஊழிற் பெருவலி யாவுள" என்ற பெருநாவலர் வாக்கு நினைவு கூரத் தக்கது.

**பழிநாணி:**

"அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கு" என்று வகுத்தார் வள்ளுவனார். "கருமத்தால் நாணுதல் நாண்" என்பது அவர் வரையறை. "நன்மக்கள் நாணுவது இழிந்த கருமங் காரணமாக நாணுதல்" என்பது பரிமேலழகர் உரை.

**உள்ளுடைவார்**—"தெருமந்து தேய்வார் ஒரு மாசுறின்" என்றார் நாலடியாரில். என்னை? "நாணாலுயிரைத் துறப்பர்" நல்லோர், "உயிர்ப் பொருட்டால் நாண் துறவார்" ஆகலின்."

Not inferior to those who walk every day in the right way, so as to gain the approbation of good men; are the men who though they may do some things wrong, are broken in spirit at the thought of the force of destiny, and with the shame of reproach. —H. S.

Those who feel afflicted and ashamed by deeds of ill, being over-ruled by fate, are not inferior to those who move unswervingly in the paths of virtue extorting reiterated applause from the wise. —C. M.

Those who repent for the smallest evil done under force of destiny are not less than those who have constantly persevered in the path of virtue and been praised by wise therefor. —T. B. K.

---

## 77. பிறன்மனை நயத்தல்

*பிறன்வரை நின்றாள் கடைத்தலைச் சேறல்*
*அறனன்றே யாயினு மாக—சிறுவரையும்*
*நன்னலத்த தாயினுங் கொள்க நலமன்றே*
*மெய்ந்நடுங்க வுண்ணடுங்கு நோய்.*

1. *பிறன்வரை* - பிறனது எல்லைக்கண், *நின்றாள்* - நின்றவள் (அஃதாவது, பிறன் மனைவி), *கடைத்தலை* - தலைவாயிலில், *சேறல்* - (அவளது இன்பத்தை விரும்பிச்) சென்று நிற்றல், *அறனன்றே* - நற்செயலே யாகாது; *ஆயினும்* - அது நற்செயலென்றே வேண்டுமாயினும், *ஆக* - கொண்டொழிச; *சிறுவரையும்* - (அச்செயல்தானும்) சிறிது பொழுதாயினும்; *நன்னலத்த தாயினும்* - (தனக்கு) நல்ல இன்பத்தைத் தருவதாயிருப்பினும், *கொள்க* - (அதனை) மேற்கொள்க; *நலம்* - (ஆனால், அச்செயலால் வருவது) இன்பமும், *அன்றே* - அன்று; (மற்றென்ன எனின்) *மெய்* - உடல், *நடுங்க* - நடுக்கங்கொள்ள; *உள்* - உள்ளமும், *நடுங்தும் நோய்* - ஒருங்கே நடுங்க வருவதொரு நோயாகும்!

2. பிறன் வரை நின்றாள் கடைத்தலை சேறல் அறனே அன்று; ஆயினும் ஆக; சிறுவரையு நல் நலத்ததாயினும் கொள்க; மெய்ந்நடுங்க உள் நடுங்கும் நோய், நலமே அன்று.

**3. பிறன்மனை நயத்தல் அறனு மாகாமல், இன்பமும் பய வாமல் துன்பத்தையே அளிப்ப தாகலான், அதனை ஒழித்தல் வேண்டும்.**

4. "பிறன் பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில்." —குறள்.

"பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்." —குறள்.

"அச்சம் பெரிதா லதற்கின்பஞ் சிற்றளவா
னிச்ச நினையுங்காற் கோக்கொலையாம்." —நாலடியார்.

"புக்கவிடத் தச்சம் போதரும்போ தச்சந்
துய்க்குமிடத் தச்சந் தோன்றாமற்—காப்பச்ச
மெக்காலு மச்சந் தருமா லெவன்கொலோ
வுட்கான் பிறனில் புகல்!" —நாலடியார்.

நீணிரயத்
துன்பம் பயக்குமாற் றச்சாரி நீகண்ட
வின்ப மெனக்கெனைத்தாற் கூறு. —நாலடியார்.

"இதுமுதல் 8 செட்யுட்களால் இன்பம் கூறப்படும். பிறர் மனை நயத்தலின் தீமை இதிற் கூறப்படும்." —உ. வே. சா.

"பரதாரத்தை விரும்பிச் செல்லுகை பாவம் என்பார், தேற்றேகாரந் தந்து 'கடைத்தலைச் சேறல் அறனன்றே' எனவும், சாருவாகன் முதலிய புறமதத்தர் சொல்லுவதைத் தக்கதெனக் கூறினும் அவர் கூறுவது இழிந்த தென்பார் இழிவு சிறப்பும்மை தந்து 'ஆயினுமாக' எனவும், அச்செயலால்வருவது இன்பம் அன்று என்பார், 'சிறுவரையும் நன்னலத்ததாயிற் கொள்க' எனவும், வருவன பழிபாவங்களும், அவள் கணவன் கைப்படின் உயிரிழத்தலும் என்பார் 'நலமன்றே மெய்ந்நடுங்க உண்ணடுங்கு நோய்' எனவுங் கூறினார்." —தி. சு. செ.

"பரதார கமனம் பராதித மாதலால் அறமென்னும் இன்ப நூர் லுடையானை நோக்கி, அது அறமேயாயினும் நீ அக்காலத்தில் அநுபவிப்பது உடல் நடுங்கும்படி மனம் நடுங்குகின்ற நடுக்க மன்றோ? ஆதலால் அது ஒழிக என்பது கருத்து. இச் சொற் பொருளுணராதவர் இச்சொல்லைப் பரகியமெனப் பரிமேலழக ருரையில் திருத்தினர்." —கோ. இ.

**பிறன்வரை நின்றாள் கடைத்தலை சேறல்:**

"பிறன் மனையாளைப் புணர்த லென்பது இழிவுபற்றி, 'பிறன் வரை நின்றாள் கடைத்தலை சேறல்' என வேறோராற்றாற் கூறப்பட்டது." —அ. கு.

"பிறன்வரை நின்றாள் கடைத் தலைச் சேறல், இடக்க ரடக்கல்." —ஊ. பு. செ.

"பிறன்வரை நின்றாள்—பிறனது எல்லைக்கண் நின்றவள்—பிறன் மனைவி; "பிறன் வரையாள்" (குறள் 150) என்றார் திருவள்ளுவரும்." —உ. வே. சா.

"கடைத்தலை:—கடை - புறவாயில், தலை - ஏழனுருபு; அல்லது தலைமையான கடை என்பது 'கடைத்தலை' என் மாறிவந்த இலக்கணப்போலி என்னலுமாம்." —ஊ. பு. செ.

**அறனன்றே ஆயினு மாக:**

"பாவமே யாயினு மாக" என்றே பொருள் கொண்டார் **அ. குமாரசாமிப் புலவர்.**

**சிறுவரையும் நன்னலத்ததாயினுங் கொள்க:**

"சிறுவரையும் என்ற உம்மை முற்றுப் பொருளோடு இழிவு சிறப்புப் பொருளது." —கோ. இ.

'கொள்க' என்றது 'சிறுவரையும் நன்னலத்ததாயினுங் கொள்ளற்க!' என்னும் பொருட்டு.

**நலமன்றே:**

"ஈற்றிலுள்ள ஏ இரக்கப் பொருளது." —கோ. இ.

மெய்ந்நடுங்க வுண்ணடுங்கு நோய்:

"காணிற் குடிப்பழியாங் கையுறிற் கால்குறையு
மாணின்மை செய்யுங்கா லச்சமாம்."

என்ற நாலடிச் செய்யுளடிகளை நோக்குக.

To visit the gate of a neighbour's wife is certainly not virtue. But suppose it to be so. Then if it yield even a brief enjoyment, be it allowed; but surely the torture, that shakes the body and the mind *with agitation*, is not enjoyment. —H. S.

Wicked as adultery is, it may be reasonable to indulge in it could it afford even a moment's pleasure. It does not yield such delight. It is a source of fear, afflicting the heart and shaking the limbs. —C. M.

To approach the gate of a neighbour's wife lustfully is not virtue. Supposing it to be so, let him do it, if it yields him at least the enjoyment of the shortest duration. Surely it does not yield any, pleasure, but pain which shake the body as well as the mind. —T. B. K.

---

## 78. நன்னல இன்பம்

கருமஞ் சிதையாமே கல்வி கெடாமே
தருமமுந் தாழ்வு படாமே—பெரிதுந்தம்
இன்னலமுங் குன்றாமே யேரிளங் கொம்பன்னார்
நன்னலந் துய்த்த னலம்.

1. கருமம் - உரிய தொழில், சிதையாமே - கெடாமலும், கல்வி - பயின்ற கல்வி கேடுறாமலும், தருமமும் - செய்துவரும் அறச் செயல்

களும், தாழ்வுபடாமே - குறை வெய்தாமலும், பெரிதும் - மிகவும், தம் - தம்முடைய, இன்னலமும் - இனிய பண்பு நலங்களும், குன்றுமே - குறைவுபடாமலும், ஏர் - அழகிய, இளம் கொம்பன்னார் - இளமையான பூங்கொம்பையொத்த மனைவியாது, நன்னலம் - புரைபடாத நல்ல இன்பத்தை, துய்த்தல் - நுகர்தல், நலம் - நன்மையாம்.

2. (கொண்டுகூட்டு வேண்டிற்றிலது.)

**3. பிறனில் விழையாது அறத்தாற்றின் இல்வாழ்க்கை நடத்திக் காதன் மனையாளொடு கூடி இன்ப நுகர்தலே சிறப்புடைத்து.**

4. "தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு." —குறள்.

"தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு." —குறள்

"கற்றநூற் றுறைபோய்க் கடிமனைக் கிழவன்
நற்குண நிறைந்த கற்புடை மனைவியோ
டன்பு மருளுந் தாங்கி யின்சொலின்
விருந்து புறந்தந் தருந்தவர்ப் பேணி
ஐவகை வேள்வியு மாற்றி யிவ்வகை
நல்லற நிரப்பிப் பல்புகழ் நிறீஇப்
பிறன்மனை நயவான் றன்மனை வாழ்க்கைக்கு
வரையா நாளின் மகப்பேறு குறித்துப்
பெருநலந் துய்க்கும் பெற்றித் தன்றே."
—சிதம்பர மும்மணிக் கோவை.

5. "பரதார கமனத்தில் உண்டாகும் நடுக்கம் தராததனால், 'நன்னலம்' என்றும், இளமை, தேகபலம் இவ்விரண்டையும் அடக்கிப் பொதுப்பட 'இன்னலம்' என்றும், தம்மின் இளையரா யிருத்தல் வேண்டுமென்னுங் கருத்தால் 'இளங் கொம்பன்னார்' என்றுங் கூறினர்." —கோ. இ.

"முன் செய்யுளிற் பிறனில் விழைவதா லேற்படும் துன்பங்களை விளக்கிப்போந்த ஆசிரியர், இச்செய்யுளில் தன்னில்லாளோடு ஒருவன் இன்ப நுகருங்கால் கவனிக்கவேண்டிய முறைகளை விளக்கினர்." —இள

"கருமம் முதலியன சிதையுமாயின், அவ்வின்பமுஞ்சிதைந்து துன்பமாய் முடியும்." —அ. கு.

"கருமங் கல்வி தருமநல மென்றிவை தாழ்வடையா திருத்தற்கு மனைவியரைக் கொள்ளுதலும் அநுபவித்தலு மன்று; வியபசார விலக்கே இன்றியமையாமை யெனக் கூறினரென்க. அதுவுமன்றிச் சந்தானவிருத்தி முதலிய இல்லறப்பயன் கருதி அம்மனைவியரைத் தழுவுதல் இன்றியமையாமை யென்றுரெனினுமாம்." —சி. வை. தா.

**கருமஞ் சிதையாமே:**

"கருமமாவது இல்வாழ்க்கையைத் தாங்க மேற்கொண்ட முயற்சி." —தி. சு. செ.

"கருமமாவது இல்லற வாழ்க்கைக் கியைவதான நற்செயல்." —இள.

**கல்வி கெடாமே:**

"கல்வியாவது முனிவர் மகிழ அவர்களருளிய நூலிற் பயிலுதல்." —தி. சு. செ.

"கல்வி—அறிஞர் எழுதிய அறிவுரைகள் கற்றல்." —இள.

**தருமமுந் தாழ்வு படாமே:**

"தருமமாவது பிரமசாரி முதலிய மூவருந் தத்தம் ஒழுக்கத்திற் குன்றாது நடக்கச் செய்தல்." —தி. சு. செ.

**பெரிதுந் தம் இன்னலமுங் குன்றாமே:**

"தம் என்பதைக் கருமம், கல்வி, தருமம் ஆகியவற்றோடுங் கூட்டி யுரைத்தலுமாம்."

"இன் நலம்—இனிய தாட்சிண்ணியம்" என்று பொருள் கூறி விருந்தினர் சுற்றத்தார் முதலியோ ரிடத்துச் செய்யுந் தாட்சிண்ணியம் என்று விரித்துரைத்தார் தி. சுப்பராயச் செட்டியார்:

பெரிதும் என்பதை ஈற்றடி யிறுதியில் வரும் நலம் என்பத னோடு கூட்டி யுரைத்தலு மொன்று.

"இன்னலம் - இல்லறத்து நலமெனினுமாம்." —சி.வை.தா.

இன்னலம் இனிய பண்புகள் என்று மேலுரைத்தது,

" இளமையே கவினே கீர்த்தி யெழுழ்கலை யிங்கிதத்தின்
வளமையே யன்பே நல்ல வருணமே யேகபோகம்
விளைவுசெய் திறனேமற்று மிக்குள ரேனும் பொன்னிற்
றளர்வின ராயி னஞ்சே யிருமணத் தையலார்க்கு "

என்ற பேரூர்ப் புராணச் செய்யுளில் கண்ட இளமை, கவின், கீர்த்தி முதலியவற்றைக் குறித்ததாம்.

**ஏரிளங் கொம்பன்னார் நன்னலந் துய்த்த னலம்:**

"ஏரிளங் கொம்பன்னார்" பூங்கொம்பையொத்த மாதர்கள் என்றுரைத்தார் சி. முத்தைய பிள்ளை.

"அழகிய யவ்வன மாதர்" என்றார் சி. வை. தாமோதரம் பிள்ளை.

"அன்னா ளென்னாமல் 'அன்னா' ரென்றது கற்பாகிய உயர்வுபற்றிவந்த பால்வழுவமைதி." —கோ. இ.

"நன்னலம்—பிறர்மனை விழையாமையாலேற்படும் நன்மை; அஃதாவது, பகை பாவம் அச்சம் பழி யில்லாமை." —இள.

"துய்த்தல்—இதனைத் 'துத்தல்' என்றே பாடங்கொண்டு "துத்தல் தொழிற் பெயர், து - பகுதி, த் - சந்தி, தல் - விகுதி" என்று உரைத்தார் தி. சுப்பராயச் செட்டியார்.

Without interruption to business; without ruining learning; without preventing charity; and without greatly diminishing *our* household goods; the enjoyment of the charms of those, who resemble a beautiful young branch, *may be considered* good. —H. S.

It is good to enjoy the charms of tender and lovely women without impending the progress of our actions and studies, without contracting the sphere of our charity, and depriving us of youthful vigour. —C. M.

Without interruption to business, without ruining learning, without preventing charity and without depriving us of youthful vigour, the enjoyment of the charms of those, whose waist is as tender and narrow as the beautiful young stem of a flower *may be considered* good. —S. W.

Without detriment to business or studies, without interfering with virtue, without detriment to one's vigour, one may enjoy the charms of his wife —T. B. K.

---

## 79. காமங் கதுவப்பட்டார்

*கொலையஞ்சார் பொய்ந்நாணார் மானமு மோம்பார்*
*களவொன்றோ வேனையவுஞ் செய்வார் பழியொடு*
*பாவமிஃ தென்னார் பிறிதுமற் றென்செய்யார்*
*காமங் கதுவப்பட் டார்.*

1. கொலை - கொல்லுந் தொழிலை, அஞ்சார் - (செய்யப்) பின் வாங்கமாட்டார்; பொய் - பொய்யினை, நாணார் - (கூறவும்) கூசமாட்டார்; மானமும் - மானத்தினைக் கூட, ஓம்பார் - பாதுகாக்கமாட்டார்; களவு - திருடுதல், ஒன்றோ - ஒன்றுமட்டுமோ? ஏனையவும் - பிற தீச் செயல்கள் யாவையும், செய்வார் - செய்ய முற்படுவார்; பழியொடு - பழியுடனே, பாவம் - பாவத்தையும் (தருவது), இஃது - (காமமாகிய) இச் செயலே, என்னார் - என்று கருதமாட்டார்; பிறிது மற்று - (அங்ஙனமாயின்) வேறு யாதுதான், செய்யார் - செய்யமாட்டார்கள், காமம் - காமப் பேயினால், கதுவப்பட்டார் - பற்றப்பட்டவர்கள்?

2. காமங் கதுவப்பட்டார் கொலை அஞ்சார், பொய் நாணார், மானமும் ஓம்பார், களவொன்றோ, ஏனையவும் செய்வார், பழியொடு பாவம் இஃது என்னார் பிறிது மற்று என் செய்யார்?

3. **காமமே மற்றத் தீச் செயல்களுக்கெல்லாம் காரணமாகும்; ஆகையால், அதனை ஒழித்து விடுக.**

4. "பகைபாவ மச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண்." —குறள்.

"பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்." —குறள்.

"முடிபொரு ளுணர்ந்தோர் முதுநீ ருலகிற்
கடியப் பட்டன வைந்துள வவற்றிற்
கள்ளும் பொய்யுங் களவுங் கொலையுந்
தள்ளா தாகுங் காமந் தம்பா
லாங்கது கடிந்தோ ரல்லவை கடிந்தோரென
நீங்கின ரன்றே நிறைதவ மாக்கள்
நீங்கா ரன்றே நீணில வேந்தே
தாங்கா நரகந் தன்னிடை யுழப்போர்." —மணிமேகலை.

"தீமை யுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிறப்புந்
தோமில் செல்வமுங் கெடுக்கு நல்லுணர்வினைத் தொலைக்கு
மேம நன்னெறி தடுத்திரு ளுய்த்திடு மிதனாற்
காம மன்றியே யொருபகை யுண்டுகொல் கருதில்."
—கந்தபுராணம்.

5. "காமத்தின் தீமை இதிற் கூறப்படும்." —உ. வே. சா.

"கொலை யஞ்சாமை பொய்ந் நாணாமை, மான மோம்பாமை, களவாடல், மற்றவையுஞ் செய்தல் ஆகிய இவற்றுள் இது பழியொடு பாவத்தையுந் தருவதென நினையார்க ளென்பது கருத்து." —கோ. இ.

"அளவுகடந்த காமமுடையோர் என்பார் காமத்தை வினை முதலாக்கிக் 'காமங் கதுவப்பட்டார்' எனவும், பிறர் கூறுவன

வும் அடங்கு மென்பார் 'ஏனையவும்' என்றமையாது 'பிறிதென் செய்யார்' எனவுங் கூறினர்.'' —தி. சு. செ.

**மானமு மோம்பார்:**

"உம்மை உயர்வு சிறப்பு, மானம் உயிரினும் சிறந்ததா தலின்.'' —உ. வே. சா.

**களவொன்றோ ஏனையவுஞ் செய்வார்:**

"களவு—தொழிற் பெயர்; கள் - பகுதி, அ - சாரியை, வு - புடை பெயர்ச்சி விகுதி; இப் பகுதி யடியாகக் கட்டான், கட்டு, கட்ட என இறந்தகால வினைமுற்று, வினையெச்சம், பெயரெச்சம் வரும்; இஃதுணராதவர் கள்ளினன், கள்ளி, கள்ளின என வருமெனக் குழறுவர்.'' —கோ. இ.

''ஒன்றோ—எண்ணிடைச் சொல். 'அறனொன்றோ வான்ற வழக்கு' (குறள்-148.)'' —உ. வே. சா.

ஏனையவும்—கள், கொலை, பொய், களவு என்ற ஏனைய பெருந் தீச்செயல்களும், பிற தீச் செயல்களும்.

செய்வார்—செய்ய முற்படுவார் என்றுரைத்தது,

''சிறையு முண்டோ செழும்புனன் மிக்குழீஇ
நிறையு முண்டோ காமங் காழ்கொள்ளின்''

என்ற மணிமேகலைக் கருத்தை நோக்கி,

**பழியொடு பாவ மிஃதென்னர்:**

காமமே கொலைகட் கெல்லாங் காரணங் கண்ணோடாத
காமமே களவுக் கெல்லாங் காரணங் கூற்றமஞ்சுங்
காமமே கள்ளுண்டற்குங் காரண மாதலாலே
காமமே நரகபூமி காணியாக் கொடுப்ப தென்றான்.

—திருவிளையாடற் புராணம்.

என்பதனுல் காமமே மற்றைத் தீச் செயல்களுக்குக் காரண மாதல் விளங்கும்.

**பிறிது மற்றென் செய்யார்:**

"செய்வார்" என்று பாடங்கொண்டு, 'ஏனையவுஞ் செய்வார்' என மேற் கூறியவை ஒழிந்த தீச் செயல்களையுங் கூறி முடித்தமையின், 'பிறிது மற்றென் செய்யார்' என்னும் பாடம் கூறியது கூறலா மாதலால், 'பிறிது மற்றென் செய்வார்' என்னும் பாடமே கொள்க என்று விரித்தார் **கோ. இராசகோபாலப் பிள்ளை.**

"ஏனையவுஞ் செய்வார் என்று உடன்பாட்டாற் கூறியதை உறுதிப்படுத்தும் பொருட்டு எதிர்மறையினாலும் கூறினாரென்றறிக." —ஊ. பு. செ.

They fear not murder; they are not ashamed of falsehood; they preserve not reputation, they rob not in one way only, but in all; they think not of any act that it is sin attended with infamy; what else will they not do, who have fallen into the power of lust? —H. S.

Those who are actuated by Lust will not shrink from murder, and will not feel ashamed of falsehood and dishonour. Is it only theft that they will indulge in? They will perpetrate all species of vice. What is there that those, who maintain that lust is not sinful, will hesitate to do? —C. M.

Those who have fallen into the power of lust fear not murder, they are not ashamed of falsehood; they preserve not reputation; Is it only theft they indulge in? They will perpetrate all species of evil; Those who consider not that lust is sin attended with infamy, what else will they not do? —S. W.

Those who are driven by lust fear not murder; falsehood, dishonour, theft, anything in fact, sin and blameworthy acts even other things besides, they are apt to do. —T. B. K.

---

## 80. தீய விலங்கனையார்

திருவினு நல்லாண் மனைக்கிழத்தி யேனும்
பிறன்மனைக்கே பீடழிந்து நிற்பர்—நறுவிய
வாயின வேனு முமிழ்ந்து கடுத்தின்னும்
தீய விலங்கிற் சிலர்.

1. திருவினும் - திருமகளாகிய இலக்குமியினும், நல்லாள் - அழகு நல மிகுந்தவள், மனைக்கிழத்தியேனும் - தம் மனையாட்டியாயினும் (அவளை விட்டு), பிறன் - பிறருடைய, மனைக்கே - மனையாளிடத்தே (காமுற்று), பீடு - தம் பெருமையாவும், அழிந்து நிற்பர் - கெட்டு நிற்பர்; நறுவிய - நல்ல சுவையுடைய (இரைப் பொருள்கள்), வாயினவேனும் - வாயின்கண் உள்ளனவாயினும், உமிழ்ந்து - அவற்றை உமிழ்ந்துவிட்டு, கடு - கடுக்காயை யொத்த கைப்புள்ள பொருள்களையே, தின்னும் - தின்னுகின்ற, தீய - தீய இயல்புடைய, விலங்கின் - மிருகத்தையொத்த, சிலர் - சில தீயோர்.

2. வாயின நறுவியவேனும் உமிழ்ந்து கடுத் தின்னும் தீய விலங்கின்சிலர், மனைக்கிழத்தி திருவினு நல்லாளேனும் பிறன் மனைக்கே பீடழிந்து நிற்பர்.

3. பிறன்மனை விழைதல் பெரும் பேதைமையாம்; அதிலும், திருவனைய மனைவி யிருக்க, மறுவுடைய பிறன்மனை நயந்து நிற்றல் பேதைமையுட் பேதைமையாம்.

4. "எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி." —குறள்.

"ஆத்த மனையா ளகத்தி லிருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாம
லீச்சம் பழத்துக் கிடருற்ற வாறே." —திருமந்திரம்.

"அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும்
பிறன்றார நச்சுவார்ச் சேரா." —நாலடியார்.

"அறனுமறிந்த செய்கையுஞ் சான்றோர்
திறனுடைய னென்றுரைக்குந் தேசும்—பிறனில்
பிழைத்தா னெனப்பிறராற் பேசப் படுமே
விழுக்கா மொருங்கே யிவை." —அறநெறிச்சாரம்.

5. "இனிய பொருள்களிருப்பினு மவற்றை விரும்பாது கைப்புள்ள பொருள்களை விரும்பு மிருகங்களுஞ் சில; பேரழகுள்ள மனைவி யருகிருப்பினு மவளை விரும்பாது அருவருக்கத் தக்க வுருவினையுடைய பிறன் மனைவியை விரும்பு மனிதருஞ் சிலர் என்பார் 'தீய விலங்கிற் சிலர்' என்றார்." —தி. சு. செ.

**பிறன் மனைக்கே பீடழிந்து நிற்பார்:**

பீடு—பெருமை; மானமுமாம்.

காமம் "பாவமும் பழியு நல்கும் பல்வகைப் புகழறங்கள் யாவையு மழிக்கும்."

அழிந்துநிற்பர்—கெட்டு நிற்பர் என்பது கெட்டலைவர் என்ற உலகவழக்கு மொழியைக் குறித்து நின்றதாம்.

**நறுவிய வாயினவேனும் உமிழ்ந்து கடுத்தின்னும் தீய விலங்கு:**

"தீய விலங்கிற் சிலர், ஒட்டகம் போலுஞ் சிலரெனினு மமையும்; மகாகாவியத்திற் காண்க. மேலும் இராமாயணத்தில்,

"தள்ளரும் பாரந் தாங்கிய வொட்டகம்
தெள்ளுதண் கரும்பி யாவையுந் தின்கில
உள்ள மென்னத் தம் வாயுமுலர்ந்தன
கள்ளுண் பார்களிற் கைப்பன தேடியே." —சி. வை. தா.

"மாந்தளிர் முதலியவற்றைத் தள்ளி வேப்பிலையைத் தின்னும் ஒட்டகம்." —ஊ. பு. செ.

"பொற்கலத் தூட்டிப் புறந்தரினு நாய்பிற
ரெச்சிற் கிமையாது பார்த்திருக்கும்."

என்ற நாலடியார்ச் செய்யுள் இங்கு நோக்கற்பாலது.

There are some, who though their own wife be more beautiful than Latchmi, nevertheless degrade themselves by hankering after their neighbour's; like an evil beast, which though it has sweet food in its mouth, will reject it to feed on bitter. —H. S.

Though the wife of their homes be more beautiful and virtuous than the goddess of beauty herself, some persous will always long for another's wife: and thus stain their honour, like the foolish animals which spit out the sweet things in their mouth to eat bitter ones. —C. M.

Though the wife be more beautiful than Lakshmi, there are some who will always degradingly go after others' wives. They are like those animals (like the camel) that spit out sweet things and chew only bitter ones —T. B. K

---

## 81. நன்மக்கட் பேறு

*கற்புடுத் தன்பு முடித்துநாண் மெய்ப்பூசி*
*நற்குண நற்செய்கை பூண்டாட்கு—மக்கட்பே*
*றென்பதோர் செல்வமு முண்டாயி னில்லன்றே*
*கொண்டாற்குச் செய்தவம் வேறு.*

1. *கற்பு - கற்பினையே, உடுத்து - ஆடையாக உடுத்து, அன்பு - அன்பினையே, முடித்து - மலராகச்சூடி, நாண் - நாணமாகிய பெண்மைப் பண்பையே, மெய்ப்பூசி - கலவைச் சாந்தாகப் பூசி, நற்குணம் - நற் குணங்களும், நற்செய்கை - நற்செய்கைகளுமாகிய ஆபரணங்களை, பூண்டாட்கு - அணிந்த மனையாளுக்கு, மக்கட்பேறு - மக்களைப் பெறுகை, என்பது - என்னும், ஓர் - ஒப்பற்ற, செல்வமும் - ஆக்கமும், உண்டாயின் - உளதாயின், இல்லன்றே - இல்லையாகும், கொண்டாற்கு - (அவளை மனைவியாகக்) கொண்டவனுக்கு, செய் - செய்யக்கிடக்கும், தவம் - தவம், வேறு - வேறே. (இதுவே முடிந்த தவம் என்றபடி)*

2. கற்புடுத்து அன்பு முடித்து நாண் மெய்ப்பூசி, நற்குண நற்செய்கை பூண்டாட்கு மக்கட்பேறு என்பதோர் செல்வமு முண்டாயின் கொண்டாற்கு வேறு செய்தவம் இல்லன்றே.

3. கற்பிற் சிறந்த காதன் மனையாளிடத்துப் பெறும் மக்கட் பேறே பெறற்கரிய செல்வமாம்.

4. "மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கல நன்மக்கட் பேறு." —குறள்.

"மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம் வாழுநாளே." —புறநானூறு.

"பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ-வின்னடிசில்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களை யிங்கில்லா தவர்." —நளவெண்பா.

5. "இத்தன்மையவள் ஒருவனுக்கு மனைவியாகக் கிடைத்தல் அவன் செய்த தவப்பயனென்பது கருத்து. உடுத்து, முடித்து, பூசி, பூண்டாள் என்னும் வினைகளால் கற்பு முதலியவை இன்ன பொருளாக உருவகஞ் செய்யப்பட்டன என விளங்குகின்றமையால், கற்பு அன்பு, நாண், நற்செய்கை என வாளா கூறினர்." —கோ. இ.

"நன்மக்கட் பேற்றின் சிறப்புக் கூறப்படும்." —உ.வே.சா.

"கற்பு அன்பு நாண் முதலியவைகளை யுறுதியாகக் கொண்ட நாயகியாலே நாயகனுக்கு எல்லாத் தவமு மமையு மென்பது கருத்து. "இல்லதெ னில்லவண் மாண்பானல்" என்றது வள்ளுவர்." —அ. கு.

"கற்பு, அன்பு, நாணம், நற்குண நற்செய்கையே ஆடை, மலர், கலவை, ஆபரணம் எனக் கொள்ளப்பட்டன. அதற்கேற்ப உடுத்து, முடித்து, பூசி, பூண்டாள் என வினைகள் தந்தார்." —இள

**கற்புடுத்து:**

"கற்பு - கற்பாவது கணவனே தெய்வமெனக் கருதியிருப்பதோர் செய்கை." —அ. கு.

'கற்புடுத்து-கற்பாகிய ஆடையை யுடுத்து; "மணி பொன்னும் சாந்தமும் மாலையுமின்ன, அணியெல்லா மாடையின்பின்" (பழமொழி - 271) என்பராதலின் கற்பை முதலில் ஆடையாக்கிக் கூறினர்." —உ. வே. சா.

**அன்பு முடித்து:**

"அன்பு—இல்வாழ்க்கையி லிருக்குந் தன்னுதவி நாடி வந்தாரிடம் தான் காட்டும் பிரியம்." —இள.

"முல்லையந்தொடை யருந்ததி முதலெழு முனிவரில்லறம் புரிதுணைவியர்—(பிரபுலிங்கலீலை: கைலாயகதி-உஎ) இதிற் கற்புடையோர்க்கு முல்லைப்பூ வுரித்தாயினமை காண்க." என்று காரணங்கூறி, அன்பாகிய முல்லை மாமலரை முடித்து, எனப் பொருளுரைத்தார் சி. வை. தாமோதரம் பிள்ளை.

**நாண் மெய்ப்பூசி:**

"நாணாவது செய்யத் தகாதனவற்றிலே உளத்திற்கு வருவதோர் ஒழுக்கம்." —அ. கு.

" 'நாண் மெய்ப்பூசி' எனப்பாடமாயின் 'நாணமு மெய்யுமாகிய கலவையைப் பூசி' எனப் பொருள் கொள்க." —தி. சு. செ.

"மெய்யிற் பூசுவது கலவை யென்பது, 'வாசமென் கலவைக் களிவாரி மேல் பூசப்பூச' என்றும், 'பூசுவெண் கலவைப் புனை சாந்தினை' என்றும் கூறிய இராமாயண (மிதிலைக் காட்சிக்) கவிகளானறிக." —சி. வை. தா.

**நற்குண நற்செய்கை பூண்டாட்கு:**

"பூண்டாட்கு என்றமையால், நற்குண நற்செய்கைகளை அணிகளெனக் கொள்க." —உ. வே. சா.

மக்கட்பே றென்பதோர் செல்வமும் உண்டாயின்:

"தம் பொருளென்ப தம் மக்கள்" என்ற வள்ளுவர் வரையறையால் மக்கட்பேறு ஆக்கமாதலறிக.

"செல்வமும்—என்பதற்கு "ஆக்கமும்" என்று பாடங் கொண்டார் உ. வே. சாமிநாதையர்."

"செல்வமும் என்ற உம்மை இறந்தது தழீஇயதனோடு உயர்வு சிறப்புப் பொருளது. கற்பு முதலியனபோல இவள் வசத்த தல்லாமையால், 'செல்வமு முண்டாயின்' என்றார்."
—கோ. இ.

"பொறையிலா வறிவு போகப் புணர்விலா விளமைமேவத்
துறையிலா வணசவாவி துகிலிலாக் கோலத் தூய்மை
நறையிலா மாலை கல்வி நலமிலாப் புலமை நன்னர்ச்
சிறையிலா நகரம்போலுஞ் சேயிலாச் செல்வமன்றே."

என்னும் வணையாபதிச் செய்யுளாலும் மக்கட்பேறு பெறுதற்கரிய செல்வ மென்பதும், அஃதில்லாப் பிற செல்வங்கள் பிறங்காவென்பதும் பெறப்படும்.

"கொண்டாற்கு—கொண்டான் உலக வழக்கு." —கோ. இ.

"மக்கட்பேறென்பதோர் செல்வம் என இதனை யுருவகஞ் செய்து மற்றவற்றை யுருவகஞ் செய்யாமையின் இது ஏகாங்க வுருவகவணி."
—கோ. இ.

"இது ஏகதேச வுருவகவணி; பல அடுக்கினதால் மாலை யுருவகமுமாம்."
—ஊ. பு. செ.

If a wife clothed with chastity, crowned with affection, anointed with modesty, and adorned with jewels of a good heart and life, possess only the wealth of child-bearing; what more can her husband have to seek by the performance of penance?
—H. S.

A person whose wife is robed with chastity, decked with the flowers of affection, perfumed with female

modesty, ornamented with domestic virtues, and also blest with the wealth of child-bearing, need not wish for anything more. —C. M.

If a wife robed with chastity, crowned with affection, anointed with modesty and adorned with good character and good deeds, possess also the fortune of begetting children, her husband has nothing more to seek by penance. —T. B. K.

---

## 82. கற்பின் மகளிர் (1)

ஏந்தெழின் மிக்கா னிளையா னிசைவல்லான்
காந்தையர் கண்கவர் நோக்கத்தான்—வாய்ந்த
நயனுடை யின்சொல்லான் கேளெனினு மாதர்க்
கயலார்மே லாகு மனம்.

1. ஏந்து - சிறந்தோங்கும், எழில் - எழுச்சியோடு கூடிய வனப்பு, மிக்கான் - மிகுந்தவனும், இளையான் - இளமைப் பருவ முடையவனும், இசைவல்லான் - இசையில் வல்லவனும், காந்தையர் - (பிற) மகளிருடைய, கண் - கண்களை, கவர் - கவருந்தன்மையதான, நோக்கத்தான் - பார்வையுடையவனும், வாய்ந்த - (நீதியொடு) பொருந்திய, நயன் உடை - நலப்பாட்டினை யுடைய, இன்சொல்லான் - இன்சொற் பேசுபவனும், (ஆக வாய்த்தோன்), கேள் - (தம்) கணவனுயினும், மாதர்க்கு - (கற்பிலாப்) பெண்களுக்கு, அயலார்மேல் - (இந்நலங்கள் அமையாத) பிற ஆட்வர் மேலே, மனம் - மனம், செல்லும் - நாடிச்செல்லும்.

2. கேள், ஏந்து எழின் மிக்கான், இளையான், இசை வல்லான், காந்தையர் கண் கவர் நோக்கத்தான், வாய்ந்த நய னுடைய இன்சொல்லான் எனினும் மாதர் மனம் அயலார் மேலாகும்,

3. கற்பின்மை பேதைமை; அதிலும் கணவன் எந்நலமும் வாய்ந்தவனு யிருக்கப் பிறனை விரும்புதல் பெரும் பேதைமையாம்.

4. "பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்." —குறள்.

"அன்பு நூலாக வின்சொ லலர்தொடுத் தமைத்தகாத
லின்பஞ் செய்காமச் சாந்திற் கைபுனை தேற்றமாலை
நன்பகற் சூட்டி விள்ளா தொழுகினு நங்கைமார்க்குப்
பின்செலும் பிறர்க ணுள்ளம் பிணையனார்க் கடியதன்றே."
—சீவகசிந்தாமணி.

5. "இது முதல் 'முறையும் குடிமையும்' (அ௩-ஆம் செய்யுள்) என்பதீறாகக் கற்பில்லாத மகளிர் தன்மை கூறுகின்றார்."
—தி. சு. செ.

"இது பெரும்பான்மைபற்றிக் கூறியது." —கோ. இ.

"பெண்களுக்குக் கற்பும் மனமும் நண்பும் நிலைகுலைதல் இயற்கை என்பது மநுமிருதி." —அ. கு.

"அ0-ஆம் செய்யுளில் ஆசிரியர் 'காமங் கதுவப்பட்டார்' தம் மனைவியர் எவ்வளவு அழகாயிருப்பினும், அவர்களைத் தவிர்த்துப் பிறன்மனைவிமேல் ஆசைகொண் டலைவர் என்பதற் கிணங்க, இச்செய்யுளில் கற்பிலா மங்கையர் தம் கணவர் எவ்வளவு நலங்கள் பொருந்தியவரா யிருப்பினும் அவர்களை வெறுத்து வேற்று மனிதர்மேல் விருப்பங்கொள்வர் என, 'காமங் கதுவப்பட்ட' ஆணையும் பெண்ணையும் எடுத்துக் கூறினார்."
—இள.

**ஏந்தெழின் மிக்கான்:**

"ஏந்து எழில்—எவரானுங் கொள்ளப்படும் அழகிற் சிறந்தவன்." —அ. கு.

"ஏந்து - பொருந்திய." —சி. மு.

"எழில்—எழுச்சி; வளர்ந்தமைந்த பருவத்தும் வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளருமென்பதுபோன்று காட்டும் அழகு. (தொல் - பொருளியல்; 53.)" —உ. வே. சா.

"சுமக்கின்ற அழகென்னும் பதப் பொருளுடைய தாதலால் 'ஏந்தெழி' லென்பது சிறந்த அழகுக் காயிற்று." —கோ. இ.

**இசைவல்லான்:**

"இசை பாடுதலும் பெண்களை மயக்கி வசமாக்கும்; "பாடினான் தேவகீதம் பண்ணினுக் காசான் பாடச் சூடக மகளிர் சோர்ந்து" என்பது சிந்தாமணி." —அ. கு.

**காந்தையர் கண்கவர் நோக்கத்தான்:**

"காந்தையர்—பிற மகளிருடைய; காந்தையர் என்பது மகளிரென்னும் பொதுப் பொருளில் நின்றது." —உ. வே. சா.

**வாய்ந்த நயனுடை யின்சொல்லான் கேள் எனினும்:**

'வாய்ந்த' என்பதை 'நய' னென்பதனோடு கூட்டி 'வாய்ந்த நயன்' என்றும், 'கேள்' என்பதனோடு கூட்டி 'வாய்ந்த கேள்' என்றும் பொருளுரைக்கலாம்.

Though their husband be of surpassing beauty, youthful, powerful in song, of the aspect to ravish the eyes of maidens, and uniting truth with courtesy in his pleasing address; the heart of women will still be fixed on others.

—H. S.

Though the husband be conspicuous for beauty and musical accomplishments; though he may have glances fascinating the looks of women, and though he may be kind and tender in his words, women will always love others.

—C. M.

Though their husbands be handsome in appearance, youthful in age, skilful in music, of commanding personality, attracting the attention of maidens and be pleasant and kind in their address, the heart of woman may still turn towards other men. —T. B. K.

---

## 83. கற்பின் மகளிர் (2)

**கற்பின் மகளி னலம்விற் றுணவுகொளும்**
**பொற்றொடி நல்லார் நனிநல்லர்—மற்றுத்தம்**
**கேள்வற்கு மேதிலர்க்குந் தங்கட்குந் தங்கிளைஞர்**
**யாவர்க்குங் கேடுசூ ழார்.**

1. கற்பில் - கற்பில்லாத, மகளின் - குலமகளைக் காட்டிலும், நலம் - தம்முடைய இன்பத்தை, விற்று - (பொருளுக்காக) விலைப்படுத்தி, உணவுகொளும் - வயிறு வளர்க்கும், பொற்றொடி - பொன்னாலாகிய வளையல் (அணிந்த), நல்லார் - பொதுமகளிர், நனி - மிகவும், நல்லர் - சிறந்தவர்களாவர்; (ஏனெனில்) மற்று தம் - தம்முடைய, கேள்வற்கும் - கணவனுக்கும், ஏதிலர்க்கும் - (களவில் தம் நலம் துய்க்கும்) பிறருக்கும், தங்கட்கும் - தங்களுக்கும், தம்கிளைஞர் - தம்முடைய சுற்றத்தார், யாவருக்கும் - அனைவருக்கும், கேடு - (எதிர்பாராப்) பழியினை, சூழார் - (கற்பில் மகள் எய்துவிப்பதுபோல) எய்துவியாராகலின்.

2. நலம் விற்றுணவுகொள்ளும் பொற்றொடி நல்லார் கற்பின் மகளின் நனிநல்லர், மற்றுத்தம் கேள்வற்கும், ஏதிலர்க்கும், தங்கட்கும் தங்கிளைஞர் யாவர்க்கும் கேடு சூழார்.

3. **கற்பிலாக் குலமகளிர் பொதுமகளிரினுங் கடையராவார்.**

4. "புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை." —குறள்.

"பொருவில் கற்பின் வழீஇயபுன் மங்கையர்
உரிய மூன்று மரபிலுள் ளோரையும்
வெருவந் தேங்கி விழுங்கி யுமிழ்கலா
வெரியுந் தீரா கிற்குடி யேற்றுவார்." —காசிகாண்டம்.

5. "இதுமுதல் இரண்டு பாட்டுக்களால் கற்பில்லாத குல மகளிரது இழிவு கூறப்படும்." —உ. வே. சா.

"பொதுமகளிர் தம் கணவர்கட்கும், பிறர்க்கும், தங்கள் சுற்றத்தாருக்கும் கேடு வினையார்; ஆதலால் அன்னார் கற்பிலாப்

பெண்களினும் மேல் என்றபடியால், கற்பிலாப் பெண்களால் இத்தனைக் கேடுகளும் வரும் என்பது சொல்லாமலே விளங்கு மன்றோ?''
—இள.

**கற்பின் மகளின்:**

''ஒருவனுக்கு மனைவியாய்ப் பரத்தையர் போல நடிக்கும் பெண்ணையே 'கற்பின்மக' ளென்றார்,
—சி. வை. தா.

**நலம் விற்றுணவுகொளும் பொற்றொடி நல்லார் நனிநல்லர்:**

''கற்பிறத்தல் வேசியர்க்குரிய செயலாதல்போலக் குலப் பெண்ணுக் காகாமையால், அச்செயல் கேள்வன் முதலிய நால்வர்க்கும் நிந்தையைத் தருதல்பற்றி வேசியர் 'நனிநல்லர்' என்றார்.''
—கோ. இ.

''உணவு—அது உண்டி, ஆடை, அணி முதலியவற்றுக்கு இங்கு ஆயிற்று.''
—கோ. இ.

''வேசியை உணவின்பொருட்டுக் கற்புக் கெடுதலாகிய இழிவு கருதிப் 'பொற்றொடி' என ஒருமையால் வாளா கூறி, கேள்வன் முதலிய நால்வர்க்கும் கேடு சூழாமையாகிய சிறப்புக் கருதி 'நல்லார்' என்றும், அதுவும் நிரம்பாமல் 'நனிநல்லர்' என்றும் பன்மையாற் கூறினதாகப் பொருள் கொள்ளலு மாம்.''
—கோ. இ.

**மற்றுத்தங் கேள்வற்கு......கேடு சூழார்:**

''மற்று—குலப்பெண்ணின் நாயகன்போலே நிலையுடை யானாகாது, இவ்வளவெனப் பொருள் வரையறுத்துக் கொடுப் பவனாதலால் 'மற்றுக்கேள்வ' னென்பதில் மற்றுப் பிறிதென் னும் பொருளது.''
—கோ. இ.

''கேள்வற்கும்—'கேள்வர்க்கு' என்றே பாடங்கொண்டு, ''கேள்வர்க்குக் கேடு சூழ்தலாவது அபசாரியாய் அவர் புகழை யும் புண்ணியத்தையுங் கெடுத்தல்'' என்றுரைத்தார் அ. குமார சாமிப் புலவர்.

ஏதிலர்க்கும்—"ஏதிலர்க்குக் கேடு சூழ்தலாவது அவரையும் புணர்ந்து பகை பாவம் பழி என்பன வுடையராக்குதல்."

—அ. கு.

தங்கட்கும்—

" கணவர்த மேவல் பூண்டு கற்பிணி லொழுகிடாதார்
நணுகருங் கொடிய வெய்ய நாகினு ளழுந்துவாரால்."

என்ற வாயு சங்கிதை அடிகளால் கற்பிழந்த மனைவியர் தமக்குத் தேடிக்கொள்ளுங் கேடு அறியப்படும்.

"தங்கிளைஞர் யாவர்க்கும்—தான் வியபிசாரியானதால் தன் குலத்துக்கு ஈனம் ஏற்பட, தனக்கு நெருங்கிய சுற்றத்தார் தன் செயலுக்குத் தன்னைக் கோபிக்க, கோபத்தால் தான் அவர்களுக்குக் கேடு நினைத்தல் முதலியன." —இள.

யாவர்க்கும் என்பதனை 'தங்கிளைஞர் யாவர்க்கும்' என்றும், தம்கேள்வர், ஏதிலர், தாம் கிளைஞர் ஆகிய யாவர்க்கும் என்றுங் கூட்டி யுரைக்கலாம்.

"சூழார்—காமத்தால் கற்பிறத்தலை ஆலோசித்துச் செய்வதாகக் கொண்டு 'சூழா'ரெனக் கூறினமையால், அது இலக்கணை. இப்படியன்றிச் சூழ்விக்காரென்னும் பிறவினை விவ்விகுதி தொகுக்கப்பட்டதெனக்கொண்டு சூழ்ந்துகொள்ளச் செய்யார், அதாவது உண்டாக்காரெனப் பொருள் கூறினும் பொருந்தும்."

—கோ. இ.

Far better than wife without chastity, are the fair with golden bracelets, who subsist by selling their favours; for they do not involve in misery their husband, their neighbour, themselves, and all their connexions. —H. S.

Whores who live by selling their youthful charms are better than an unchaste wife, for they do not bring disgrace on their husband, and relatives, and themselves, and others. as the latter does. —C. M.

Far better than an unchaste wife is a harlot, adorned with bracelets, who sells her body to eke out her livelihood; for, she does not involve in misery, her husband, herself, her kindred or neighbours. —T. B. K.

---

## 84. கற்பின் மகளிர் (3)

முறையுங் குடிமையும் பான்மையு நோக்கார்
நிறையு நெடுநாணும் பேணார் — பிறிதுமொரு
பெற்றிமை பேதைமைக் குண்டே பெரும்பாவம்
கற்பின் மகளிர் பிறப்பு.

1. முறையும் - (தமக்கும் பிறர்க்கு முள்ள) உறவு முறைமையையும், குடிமையும் - (தாம் பிறந்த) குடிப் பெருமையையும், பான்மையும் - (தமக்கும் பிறர்க்கு முள்ள) தகுதியையும், நோக்கார் - (கருதிப்) பாரார், நிறையும் - (மனம் நெறி தவறிப் பிறர்பாற் செல்லாது) நிறுத்து தலையும், நெடு - நீடிய, நாணும் - நாணத்தையும், பேணார் - பாதுகாவார்; பிறிதும் - (இவை யொழிந்து) வேறு, ஒரு - ஓர், பெற்றிமை - உரிய இயல்பான தன்மை, பேதைமை - அறியாமை என்பதற்கு, உண்டே - உண்டுகொல்! பெரும்பாவம் - பெரியதொரு பாவமே யாகும், பெண்ணின் (இத்தகைய கற்பில்லாத) பெண்களின், பிறப்பு - பிறவி!

2. முறையும் குடிமையும் பான்மையும் நோக்கார், நிறையும் நெடுநாணும் பேணார்; பேதைமைக்கு பிறிதும் ஒரு பெற்றிமை உண்டே; கற்பின் மகளிர் பிறப்பு பெரும்பாவம்.

**3. பெண்ணாய்ப் பிறந்து கற்பிழந்து நிற்பதிலும் பிறவாமை தனி நன்று.**

4. "நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்." —குறள்.

"பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்." —குறள்.

5. "முறை முதலியன நோக்காமை முதலானவற்றிற் கெல்லாம் அவருடைய பேதைமையே காரணமாதலால் அதன் மேலேற்றிப் 'பிறிதொரு பெற்றிமை பேதைமைக் குண்டே' என்றார்."

—கோ. இ.

"பெண்களோடு கூடப்பிறந்து அவர்களோடு கூட வளர் தலால் 'நெடு நாண்' எனவும், தங்களுக்குரிய நல்லொழுக்கினைப் பற்றற விட்டு இழிகுணமுடைமையால் அதனைப் 'பேதைமை' எனவும், இக் குணமுடையார் பிறப்புப் பாவ வடிவாதலால் 'கற்பின் மகளிர் பிறப்புப் பெரும் பாவம்' எனவுங் கூறினர்."

—தி. சு. செ.

"கற்பினை யுடைய மகளிரது பிறப்பிற்கும் பெரும்பாவமே காரணமாயின் முறையுங் குடிமையும் பான்மையு நோக்காதன ரும், நிறையு நெடுநாணும் பேணுதனருமாகிய பேதைகட்கு யாதாயினும் பெற்றிமை யுளதோ? இன்னும், நோக்கார் பேணு ரிவைகளை வினை முற்றாக்கிப் பேதைமை யென்ற தெப்பெண் ணினையு மெனக் கொண்டு கற்பினையுடைய மகளிரது பிறப்பும் பெரும்பாவங் காரணத்த தாதலின் எனினும் அமையும்."

—சி. வை தா.

நிறையுடைமையாகிய கற்பே பெண்மைக்கு இயல்பாய் அமைந்த உயிர்ப்பண்பாதலாலும், அதனினும் சிறந்தது நாண் ஆதலாலும் அவ்விரண்டும் இழந்த பெண்மை பெண்மையாகாது பேதைமையேயாம். பெண்பேதைமைக்குப் பெற்றிமை, அதா வது இயல்பாயமைந்த பண்புகள் நிறையின்மையும் நாணின்மை யுமேயாம் என்பது இதனாற் பெறப்படும். இதனை வலியுறுத் தற்கே இவ்விரண்டும் ஒழிந்த, "பிறிதொரு பெற்றிமை பேதை மைக் குண்டே" என்று அழுத்தமாகக் கூறி, வேறு இல்லை என் முடித்தார் ஆசிரியர். அவ்வாறு முடித்தமையினாலே, பரந்த வுள்ளம் படைத்த ஆசிரியர் 'கற்பின் மகளிர் பிறப்புப் பெரும் பாவம்' என்றிரங்கினர்.

இனி, மேல் எகூ-ஆம் செய்யுளில் 'காமங் கதுவப்பட்ட' ஆண்பிறப்பைச் சுட்டிய ஆசிரியர் ஈண்டுக் 'காமுங் கதுவப்பட்ட' பெண்பிறப்பைச் சுட்டியமை உய்த்துணர்க.

**முறையும் குடிமையும் பான்மையு நோக்கார்:**

"முறை நோக்கலாவது இவர் நமக்கு இன்ன முறையினரெனக் கருதுதல்." —அ. கு.

"குடிமை—குடிப்பிறப்பு, "பெண்ணெனப் படுவ கேண்மோ, பீடில பிறப்பு நோக்கா" (சீவக. 1597.) —உ. வே. சா.

பான்மை—"ஒருவனுக்கே உரிமையாய் நிற்றல்.' —அ. கு.

இதற்கு "(ஜாதியினது) வகுப்பு." என்று கோ. இராசகோபாலப் பிள்ளையும்; "தமது தன்மையும் பிறரது தன்மையும்" என்று தி. சுப்பராயச் செட்டியாரும், "தகுதியும்" என்று சி. வை. தாமோதரம் பிள்ளையும் உரைத்தார்கள்.

"பான்மை - வருணத்தின் தன்மை; பால் - வருணம்; "வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்" (புறநா. 183; 8)"—உ.வே.சா.

**நிறையு நெடுநாணும் பேணார்:**

"நிறையாவது கற்புநெறியிலே மனத்தினை நிறுத்துதல்." —அ. கு.

"நெடுநாண்—நெடுங்காலமாக உள்ள நாணம். "நாணொடுடன் பிறந்த நாண்" (முத்தொள்ளாயிரம்—98), "என்னொடும் வளர்ந்த, பொற்பார் திருநாண்" (திருச்சிற்றம்பலக் கோவையார்—208) என்று கூறப்படுதல் காண்க." —உ. வே. சா.

"நாணம் பெண்களுக்குரிய குணமாகையால் அது பெண்களோடு கூடவே பிறந்து கூடவே வளர்கிறதென்பர். ஆதலால் நாளாக நாளாகப் பெண்ணுக்காகும் வயதுபோல் அவளுடன் பிறந்த நாணுக்கும் காலவரை அதிகமாவதால் 'நெடுநாண்' எனப்பட்டது." —இள.

**பிறிது மொரு பெற்றிமை யுண்டே:**

"பெற்றிமை—தன்மை; "நாணுமை நாடாமை" (குறள் 833) என்பதை நினைந்து கூறியது." —உ. வே. சா.

"பெற்றிமை—நன்மை; பொருளுக்கு இயற்கையா யமைந்த தன்மையைப் பெறப்பட்டதென்பது இலக்கணை." —கோ. இ.

இச்சொற்கு, தன்மை, குணம், மேன்மை என்றும் உரைக்கப்பட்டன.

**பெரும் பாவம் கற்பின் மகளிர் பிறப்பு:**

முற்பிறப்பிற் செய்த பாவத்தின் பயனாக இப்பெண்பிறவி வாய்த்ததென்றும், நிறையின்மை, நாணின்மை ஆகியவற்றால் பெரும்பாவ மிழைக்கின்றனர் கற்பின் மகளிர் என்றும், கற்பின் மகளிரே பெரும்பாவத்தின் உருவினர் என்றும் ஏற்ற பெற்றி உரைத்துக் கொள்ளற்பாற்று.

"ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு."

"வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு."

என்ற இரு குறள்களும் இங்கு நினைவு கூரற்பாலன.

Regardless of their duty, of their birth and of propriety; insensible to shame, and respectability; what good quality is there compatible with the folly of frail women? The birth of such is *the retribution* for grievous sin. —H. S.

To be born an unchaste wife is a great sin. Such foolish women regard not virtue; heed not the greatness of their birth and worth; preserve not chastity; and feel not shame; and in fact have nothing good in them —C. M.

The birth of unchaste women is *the retribution* for great sin. Such women regard not virtue, they care not for their birth and propriety: they are insensible to shame and respectability; What good quality is there compatible with the folly of such woman? —S. W.

Unchaste women have no heed of propriety, greatness of birth or worth; they preserve not chastity and feel not shame; these ignorant women do not possess any good quality whatsoever. Their birth is a source of great sin. —T. B. K.

---

## 85. துறவு—புலப்பகை

**பெண்மை வியவார் பெயரு மெடுத்தோதார்**
**கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார்—பண்ணொடு**
**பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்**
**வீடில் புலப்பகையி ஞர்.**

1. பெண்மை - பெண் தன்மையை, வியவார் - பாராட்டிப் பேச மாட்டார்; பெயரும் - (பெண்ணென்னும்) பெயரையுங்கூட, எடுத்து ஓதார் - எடுத்துப் பேசமாட்டார்; கண்ணொடு - கண்களோடு நெஞ்சு - மனமும், உறைப்ப - சென்று பதியுமாறு, நோக்குறார் - கண்ணெடுத்தும் பார்க்கமாட்டார்; பண்ணொடு - இசையொடு, பாடல் - (அவர்கள் பாடும்) பாடல்களையும், செவிமடார் - காதில் வாங்கமாட்டார்; பண்பல்ல - (நல் லொழுக்கத்தின்பாற் படாதனவாகிய ஏனைய) நற்குண நற்செயல்களை யும், பாராட்டார் - கொண்டாட மாட்டார்; வீடில் - விடுதலில்லாத, புலப்பகையினர் - ஐம்புலன்களின்கண் பகைமை பூண்டு அவற்றை வெறுத்தவர்.

2. வீடில் புலப்பகையினர் பெண்மை வியவார், பெயரும் எடுத்தோதார், கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார்; பண் ணொடு பாடல் செவிமடார்; பண்பல்ல பாராட்டார்.

3. **துறவை மேற்கொண்டவர்கள் பெண்ணாசையை முதற் கண் துறத்தல் வேண்டும்.**

4. " அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு. " —குறள்.

"மெய்வாய் கண்மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை யவாவினைக்—கைவாய்
கலங்காமற் காத்துய்க்கு மாற்ற லுடையான்
விலங்காது வீடு பெறும்." —நாலடியார்.

"பெண்விழைவார்க் கில்லை பெருந் தூய்மை."
—அறநெறிச்சாரம்.

5. "இதுமுதல் 18-செய்யுட்களால் துறவறத்தின் இலக்கணம் கூறப்படும். துறவறத்தார்க்கு ஆகாத சில செயல்கள் இச் செய்யுளிற் கூறப்படும்." —உ. வே. சா.

"துறந்தோர் தாம் விட்ட பற்றுக்களை மீட்டும் விரும்பார் என்பது கருத்து." —தி. சு. செ.

இச் செய்யுள் ஐயுணர் வெய்தி மெய்யுணர் வெய்தாத துறவிகளையே கருதிற்றும். என்னை? உடலினைப் பேணல்விட்டு, ஒன்றிய செல்வம்விட்டு, விடலருஞ் சுற்றம்விட்டு, வேட்கை வேரொடும்விட்டு, இடனுடைக் குலமும்விட்டு, யானென தறவே விட்டு, ஊரொடு பேரும்விட்டு, உலகியன் முழுதும்விட்டு, ஐந்தவித்து மெய்யுணர்ந்து முற்றுந்துறந்த துறவிகளுக்குப் பெண்மையாலெய்தக் கிடக்கும் இன்பவுணர்வும் உள்ளதோ! இல்லை யென்பவாதலின்.

இனி, பின் அகூ-ஆம் செய்யுளில் "எவ்வினைய ரேனும் இணைவிழைச்சொன் றில்லெனின், தெவ்வுந் திசைநோக்கிக் கை தொழூஉம்" என்று வரையறுத்துக் கூறிய ஆசிரியர், ஐந்தடக்கல் அரிதென்பதை யுணர்ந்து அதனை அடக்குதற்கு எளியவழி, "கண்டுகேட்டுண்டுயிர்த் துற்றறியுமைம் புலனும், மொண்டொடி கண்ணே யுள" வாதலின், அவ்வொண்டொடியாகிய பெண்ணை அறவே விலக்குதலே யென்று இச் செய்யுட்கண் வகுத்தருளினார். "அந்தக் கரண மடங்கத் துறப்பதுவே, யெந்தத் துறவினும் நன் றெந்தாய் பராபரமே" என்றார் தாயுமானாரும்.

**பெண்மை வியவார்:**

"பெண்மை என்றது பெண்களுடைய அழகு, குணம், முதலியவைகளை." —அ. கு.

**கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார்:**

"நெஞ்சில் அவர்கள் உருவம் பதியுமாறு கண்களால் அவர்களைப் பார்க்கமாட்டார்கள்; கண்ணெடுத்துப் பார்த்தால் உடனே அவ்வுருவம் மனதில் படிந்து தம்மைத் துன்புறுத்தக் கூடாதென்று கண்களால் பார்க்கவுமாட்டார்கள்." —இள.

**பண்ணொடு பாடல் செவிமடார்:**

"மகளிர்பாடும் பண்ணையும் பாடலையும் செவிமடார். செவிமடார்-கேளார். துறவிகள் இசையைவிரும்பிக் கேளாரென்பது,

"மடந்தையர் மொழியுங் கானமுங் கேட்டு மன்னவன் மகண்முலை
[மணக்தான்
கடந்திரி கலையின் கோடுபெற்றுயர்ந்த கருதருந் தவனெனல்கேட்டு
படர்ந்திள மறிமான் வேட்டுவன்பாடும் பண்செவி மடுத்தவன் வலைமேல்
கிடந்தன கண்டும் வெவ்விசை கேளேன்"

என்னும் (பாகவதச்) செய்யுளால் விளங்கும். தாம் அஞ்சித் துறந்த காமத்தைப் பண்ணும் பாட்டும் மிகுவிக்குமாதலின் பண்ணொடு பாடல் செவிமடாரென்றார்; "கிளைநரம்பிசையுங் கூத்துங் கேழ்த்தெழுந் தீன்ற காமவிளைபயன்" (சீவகசிந்தாமணி 2598.) என்பதனாலும் இஃது அறியப்படும்." —உ. வே. சா.

**பண்பல்ல பாராட்டார்:**

"பண்பல்ல - நற்குணங்களல்லாதன." —அ. கு.

"பண்பல்ல - குணமற்றனவாகிய இச் செய்கைகளை" என்பது பெண்மை வியவாமை, பெயரோதாமை, நோக்காமை, செவிமடாமைஆகியவற்றைக் குறித்ததென்றுரைத்தார் இளவழகனார்.

**வீடில் புலப்பகையினர்:**

"வீடு இல் - விடுதல் இல்லாத; வீடு - விடுதல்; 'வீடில் பட்டினம் (சீவகசிந்தாமணி')' —உ. வே. சா.

"வீடுஇல் - (பிறர்க்குக்) கெடுதலில்லாத; வீடுதல் - சாதல்; விடு என்னும் முதனிலை வீடு எனத் திரிந்ததெனக்கொண்டு

'வீடில்' என்பதற்கு 'விடுதலில்லாத' என உரைப்பினும் பொருந்தும். விடயமாவன - சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்த மென்பன. இவை மனத்தை முத்திநெறியில் செல்லவிடாமல் தம்மை அநுபவிக்கும் பொருட்டுத் துன்பத்தாலும், பாவத்தாலும் வரும் பொருள்களின்மேல் செல்லவிடுவதால் இவற்றைப் 'பகை' என்றார்." —கோ. இ.

They, who admire not female beauty; who dwell not in conversation on their names; who excite not the eye and heart with licentious gazes; who indulge not the ear in music and song, and commend not what is contrary to decency, are the men who wage successful war with the unrestrained sensual organs. —H. S.

The sages who have, with incessant care subdued the senses will not admire female beauty, will not even utter the word 'woman,' will not cast lascivious eyes with a lustful heart, will not hear their songs, and in fact will avoid whatever is improper. —C. M.

Those who set themselves against the inexhorable senses, seeking salvation, do not admire female beauty, mention not woman in their conversation, do not gaze at women lustfully, do not listen to their melodious music and do not commend what is contrary to propriety. —T. B. K.

---

## 86. துறவு—உண்டி

துயிற்சுவையுந் தூநல்லார் தோட்சுவையு மெல்லாம்
அயிற்சுவையி னுருவவென் றெண்ணி—அயிற்சுவையும்
பித்துணக் கொள்பபோற் கொள்ப பிறர்சிலர்போல்
மொத்துண மொய்ம்பி னவர்.

1. துயிற்சுவையும் - உறக்க இன்பமும், தூநல்லார் - குற்றமில்லா மாதர்தம், தோட்சுவையும் - காம இன்பமும், எல்லாம் - ஏனைய இன்பங்

களும், அயிற்சுவையின் - உணவின்பத்தால், ஆகுவ - உண்டாகு மியல்புடையனவே, என்று - என்று, எண்ணி - கருதி யுணர்ந்து, அயிற்சுவையும் - உணவின் சுவையின்பத்தையும், பித்து - பித்துடையோர், உணுக் கொள்பபோல் - (சுவையறியாமல்) உணவு கொள்ளுதலைப்போல, கொள்ப - நுகர்வர், பிறர் - ஏனையோர், சிலர்போல் - வேறு சிலரைப் போல, மொத்துணா - புலன்களால் துன்பப்படாத, மொய்ம்பினவர் - (உண்மைத் துறவு பூணும்) ஆற்றலுடையவர்கள்.

2. பிறர் சிலர்போல் மொத்துணா மொய்ம்பினவர், துயிற் சுவையும் தூநல்லார் தோட்சுவையும் எல்லாம் அயிற்சுவையின் ஆகுவ என்று எண்ணி அயிற்சுவையும் பித்துணுக் கொள்ப போற் கொள்வர்.

3. **உண்டி சுருங்குதல் உறுதவர்க்கழகு.**

4. "உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு." —**குறள்.**

"கைப்பன கார்ப்புத் துவர்ப்புப் புளிமதுரம்
உப்பிரதங் கொள்வன நாவல்ல—தப்பாமல்
வென்றவன் சேவடியை வேட்டுவந் தெப்பொழுதும்
நின்று துதிப்பதா நா." —அறநெறிச்சாரம்.

"புலன்கள் பொருட்டாகப் பொச்சாந்து நெஞ்சே
சலங்களைச் சார வொழுகல்—புலன்கள்
ஒறுக்கும் பருவத் துசாத்துணையு மாகா
வெறுத்துநீ உண்டல் கடன்." —அறநெறிச்சாரம்.

5. "தவஞ் செய்வார்க்குரிய விரதங்களுள் உண்டி சுருக்கலொன் றென்பது இதிற் கூறப்படும். பேருண்டி, துயில் காமம் முதலிய தாமத உணர்ச்சிகளை உண்டாக்குவதாதலின் துறவியர் அதனை விரும்பா ரென்றபடி." —**உ. வே. சா.**

"பசி வருத்தும்போது பித்தன் உணவு சிறிது கொள்ளுதல் போல இவர்கள் பசி நிமித்தம் உணவு சிறிது கொள்வார் என்பார் 'பித்துணுக் கொள்பபோற் கொள்ப' எனவும், பிறரை

வஞ்சித்தற்குத் தவவேடம் பூண்டோர் என்பார், அவரைப், 'பிறர் சிலர்போல்' எனவுங் கூறினர்.'' —தி. சு. செ.

''காம விழைவின்மையால் வளரும் வீடு''; ஆதலின் ஐந் தடக்கி மெய்யறிவு தலைப்பட விழையும் உண்மைத் துறவியர் காமக்கலமாகிய பெண்ணின்பத்தை ஒழித்தல்வேண்டும் என்று மேல் அரு-ஆம் பாட்டிற் கூறிய ஆசிரியர், ஈண்டு, அத்தகைய பெண்ணின்பத்தையும் அதனைத் தொடர்ந்த ஏனைய இன்ப நுகர்ச்சிகளையும் விழையத்தூண்டுவது வயிறுநிறைந்த உணவே யாதலின் அதனைச் சுருக்கிச் சுருக்கி யொழித்தலே ஐந்தடக்கும் எளிய வழியாம் என்று கூறினர். ''மனம், பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும்'' என்று பரிமேலழகர் முதற்கண் உண்டி சுருக்கலை எடுத்துக் கூறி யமையை ஓர்க.

'' அயிற்சுவை பெறாஅன் துயிற்சுவை யுறாஅன்
மாணிழைமகளிர் தோணலங் கொளாஅன் ''

என்று இவ்வாசிரியர் சிதம்பர மும்மணிக்கோவையில் அழகுற யாத்துள்ளமையுங் காண்க.

**துயிற்சுவையும் தூநல்லார் தோட்சுவையும் எல்லாம்:**

**துயிற்சுவை**—உறக்க இன்பம். உறக்க இன்பத்தைத் துறக்க இன்பமாகக் கருதுவர் பேருண்டி கொள்வோர்.

**தூநல்லார்**—அழகிய மகளிருமாம்.

**அயிற்சுவையும் பித்துணக் கொள்பபோற் கொள்ப:**

''அயிற்சுவை—அயிலப்படுதலையுடைய சுவைப்பொருள்; எனவே உண்டி யென்றவாறும்.'' —அ. கு.

**பித்து**—பண்பாகு பெயராய்ப் பித்தனை யுணர்த்திற்று. —இள.

துறவிகளைப் பித்தர்களோடுஒப்பிடுதல் வழக்கம் என்பதை,

" அற்றசிவ யோகிக் கருஞ்சின்ன மூன்றண்டு
பற்றலகை யுன்மத்தர் பாலரியல்." —நீதிவெண்பா.

என்பதனுற் காண்க.

பிறர் சிலர்போல் என்றது துறவின் முதற்படியிலுள்ளவர்களையும், பொய்த்தவ வேடரையுங் குறித்ததாம்.

They, who, deeming indulgence in the sweets of sleep and the enjoyment of the charms of women of unsullied beauty, to be encouraged by indulgence in the sweets of feasting, take their food abstemiously as an idiot, are possessed of a strength which none may prevail against. —H. S.

Those who have freed themselves from the evils incident to birth, in which others are involved, by the power of penance will not indulge in excessive eating, because they know that sleep and sexual desire result from luxurious eating. Like an insane man they will eat little. —C. M.

Persons of strong will, not tossed by the waves of the (five) senses, eat their food like mad men; for they think that out of love for delicious food, spring love of sleep and of pleasures of women. —T. B. K.

---

## 87. துறவு—உடலோம்பாமை

அன்பொ டருளுடைய ரேனு முயிர்நிலைமற்
றென்பியக்கங் கண்டும் புறந்தரார்—புன்புலாற்
பொய்க்குடி லோம்புவரோ போதத்தாற் றூம்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார்.

1. அன்பொடு - (உயிர்கள் மேல்) அன்புடன், அருள் - அருளும், உடையவரேனும் - உடையவராயினும், உயிர்நிலை - தம் உடம்பு, மற்று

என்பு இயக்கம் - (உண்டி சுருங்கல் முதலிய விரதங்களால் மெலிந்து) எலும்புகள் புறப்பட்டு அசைதலை, கண்டும் - காணினும், புறந்தரார் - (அன்பும் அருளும் வைத்து) அதனைப் பாதுகாவார்; புன் - இழிந்த, புலால் - ஊனுல் வேய்ந்த, பொய் - நிலையில்லாத, குடில் - உடலென்னும் குடிசையை ஓம்புவரோ - (ஒரு பொருட்படுத்திப்) பேணுவார்களோ, (பேணார்), போதத்தால் - ஞானமாகிய மெய்யறிவைக்கொண்டு, தாம் - தாங்கள், வேய்ந்த - வேய்ந்துகொண்ட, புக்கில் - நிலையாகிய தமக்குரிய பேரின்ப வீட்டில், குடிபுகுதுவார் - குடிபுகக் கருதிய துறவிகள்?

2. போதத்தால் தாம் வேய்ந்த புக்கில் குடிபுகுதுவார் அன்பொடு அருளுடையரேனும், மற்று உயிர்நிலை என்பியக்கங் கண்டும், புன்புலால் பொய்க்குடில் ஓம்புவரோ? புறந்தரார்.

**3. பேரின்ப வீட்டில் நாட்டமுடைய உண்மைத் துறவிகள் சிற்றின்ப வீடாகிய உடலைப் பேணார்.**

4. "புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு." —குறள்.

"மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை." —குறள்.

"சிறந்ததம் சுற்றமும் செய்பொருளும் நீக்கித்
துறந்தார் தொடர்ப்பா டெவன்கொல்—கறங்கருவி
ஏனல்வாய் வீழும் மலைநாட அஃதன்றோ
யானைபோய் வால்போகா வாறு." —பழமொழி.

5. "துறவொழுக்கம் பூண்டார் தம் உடலைப் பாதுகாப்பதிற் கருத்துக்கொள்ளா ரென்பர்." —உ. வே. சா.

"முத்தி யுலகை அடைய விரைகுவோர் பிற வுயிர்களின் மேல் அன்பும் அருளும் உடையாராயினும் தம்முடம்பில் உடையரல்ல ரெனவே, அஃதழிதலைக் குறித்துக் கவலையில ரென்பது கருத்து." —கோ. இ.

"உயிர்களிடத்து அன்பும் அருளும் உடையோர் தமது தேகத்தினிடத்தும் அன்புமுடையராக வேண்டும் என்டார்,

உடம்பு என்றது 'உயிர் நிலை' எனவும், அதனை அவர் பாது காவாததற்குக் காரணம் தமக்குரிய வீடு அல்லாமையால் என்பார், 'பொய்க் குடி லோம்புவரோ' எனவுங் கூறினர்.''
—தி. சு. செ.

''மோட்சத்திற் செல்ல விரும்புவோர் அன்பும் அருளும் பிறவுயிர்களிடத்தே யல்லாமல் தம்முடலினிடத்து வைத்துக் காக்கமாட்டார்.
—ஊ. பு. செ.

மொத்துணு மொய்ம்பினவ ராயினும் 'பித்துணக் கொள்ப' போற் சிறிது உணக் கொள்வதால் உடல் மெலிந்து நலிவ தியற்கை யாதலின், அதனை ஓம்புதல் செய்யாமை அவர்களியல்பு என்பதை இச்செய்யுளால் விளக்கினர் ஆசிரியர்.

**அன்பொ டருளுடையரேனும்:**

''அன்பு—தம்மோடு சம்பந்தமுடைய உயிர்களின்மேல் வைக்கும் பரிவு.''
—கோ. இ.

''அருள்—சம்பந்தத்தாலல்லாமல் இயல்பாக எல்லா வுயிர்கள் மேலும் வைக்கும் இரக்கம்.''
—கோ. இ.

**உயிர்நிலை மற்றென்பியக்கங் கண்டும் புறந்தரார்:**

''**உயிர்நிலை**—உடம்பு. உயிர் நிற்றற் கிடனுதலின் இங்ஙனம் கூறினர் (குறள். 290.)''
—உ. வே. சா.

''உயிர்நிலை - ஆறும் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப் பெயர்; விரிந்தால் உயிரினது நிலையை யுடையது எனவிரியும்.''
—கோ. இ.

''**என்பியக்கம்**—என்பு இயக்கம் - எலும்பு வெளியே தோன்றி அசைதல். ''என் பெழுந்தியங்கும் யாக்கையர்'' (திருமுருகாற்றுப்படை)''
—உ. வே. சா.

''**புறந்தரார்**—பல்லோர் படர்க்கை எதிர்மறை வினைமுற்று; புறந்தா (ஒருசொல்லின் தன்மையது) - பகுதி; புறம் - முதுகை, தா - கொடு என்பது பொருளாதலால், புறந்தா இலக்கணையால் காப்பாற்றென்னும் பொருள் பட்டது.''
—கோ. இ.

**புன்புலாற் பொய்க்குடி லோம்புவரோ:**

"**புன்புலால்**—புலாலுண்ணும் சாதியாரும் விரும்பாத புன்மையை யுடைய ஊன். "புலையனும் விரும்பாத இப்புன்புலால் யாக்கை" (அரிச்சந்திர புராணம்.)" —உ. வே. சா.

" வினையின் வந்தது வினைக்கு விளைவாயது
புனைவன நீங்கிற் புலால் புறத்திடுவது
மூப்பு விளிவுடையது தீப்பிணி யிருக்கை
பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம். " —மணிமேகலை.

**பொய்க்குடில்—**

" எல்லாப் படியாலு மெண்ணினு லிவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை. " —நல்வழி.

" தோற்போர்வை மேலுந் தொளைபலவாய்ப் பொய்ம்மறைக்கு
மீப்போர்வை மாட்சித் துடம்பானல். " —நாலடியார்.

பின், 'தாம் வேய்ந்த புக்கில்' என்று கூறினமையால் உடல் 'துச்சில்' என்பது பெறப்பட்டது. துச்சிலாவது வாத முதலியவற்றின் இல்லாய உடம்புகளுள், அந்நோய்கள் இருக்கவமைந்தது ஒன்று இருந்தும், வெகுண்ட ஒன்று போயும், ஒருடம்பினும் நிலைபெறாது வருதலாய ஒதுக்கிருத்தல் என்பது பரிமேலழகர் கூ௪0-ஆம் குறளுக்கு உரைத்த உரையாற் பெறப்படும்.

" குடியிருக்கும் புன்குரம்பை. " —காசிக்கலம்பகம்.

**போதத்தாற் றம்வேய்ந்த புக்கில் குடிபுகுதுவார்:**

"**போதம்**—ஞானம். அதனல் வேய்ந்த புக்கிலென்றது முத்தியை; "பரந்தாமப் புக்கில்" (காசிக்கலம்பகம்.) புக்கில் - எஞ்ஞான்றும் இருப்பதற்குரிய இல்லம். (குறள். 340.) குடிபுகுதுவார் ஓம்புவரோ? ஓம்பாரென்றபடி. "ஞானத்தால் வீடாக நாட்டு" (சிறுபஞ்சமூலம். 36.) என்பவாகலின் 'போதத்தால் தாம் வேய்ந்த புக்கி' லென்று வீட்டைக் கூறினர்."
—உ. வே. சா.

"புக்கில்—ஒரு சொல்லின் தன்மையதாகிய பெயர். புக்கு - முதனிலை திரிந்த தொழிற் பெயர்; பொருள் புகுதலையுடைய வீடு என்பது." —கோ. இ.

"புக்கில் - 'பின் புறப்படாது புக்கேவிடுமில்' - பரிமேலழகர் உரை. மேலே 'பொய்க்குடில்' என்றமையால் இப்புக்கில் மெய்யானது, நிலைத்தது என்பன பெற்றும்.

Holy men, though of tender and benevolent disposition, do not turn back, though their bones show through the skin: should they who possess a heavenly mansion, which they have built for themselves by wisdom, seek to preserve a false tabernacle of rankly decaying flesh? —H. S.

Ascetics will not shrink from seeing their bodies become lean and emaciated, although they are benevolent and merciful. Will they who have to enter a celestial abode, reared up by wisdom, deign to cherish this false tenement of clay, rank with corrupt flesh? —C. M.

Holy men, however benevolent and merciful will not tend their body even though the bones show through the skin. How could those, that seek to enter a heavenly mansion built out of their wisdom preserve this false tenement of despicable flesh? —T. B. K.

---

## 88. துறவு—சிற்றின்பம் விழையாமை

சிற்றின்பஞ் சின்னீர தாயினு மஃதுற்றார்
மற்றின்பம் யாவையுங் கைவிடுப—முற்றுந்தாம்
பேரின்ப மாக்கட லாடுவார் வீழ்பவோ
பாரின்பப் பாழ்ங்கும்பி யில்.

1. சிற்றின்பம் - காம இன்பம், சில்நீரதாயினும் - சிறிதுகாலமே நிற்கும் இயல்பினதாயினும், அஃதுற்றார் - அவ்வின்பத்திற்கு ஆளா

னோர், மற்றின்பம் - மற்ற இன்பங்கள் எல்லாவற்றையும், கைவிடுப - கைவிடுவர்; முற்றும் - எப்போதும், தாம் - தாம், பேரின்ப - பேரின்பமாகிய, மா - பெரிய, கடல் - கடலில், ஆடுவார் - திளைப்பவர்கள், வீழ்பவோ - தவறி விழுந்து அழுந்துவார்களோ, பாரின்பம் - உலக இன்பமாகிய, பாழ்ங் கும்பியில் - பாழ் நரகத்தில்?

2. சின்னீரது சிற்றின்பமாயினும் அஃதுற்றோர் மற்றின்பம் யாவையுங் கைவிடுப; பேரின்ப மாக்கடல் தாம் முற்றும் ஆடுவார் பாரின்பப் பாழ்ங்கும்பியில் வீழ்பவோ?

3. **துறவோர் விழைவது தூய பேரின்பமே.**

4. "சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்." —குறள்.

"அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையார்
அற்றாக வற்ற திலர்." —குறள்.

"பிறந்துமண் மீதிற் பிணியே குடிகொண்டு பேரின்பத்தை
மறந்துசிற் றின்பத்தின் மேன்மய லாகிப்புன் மாதருக்குட்
பறந்துழன் றேதடு மாறிப்பொன் றேடியப் பாவையர்க்கீந்
திறந்திட வோபணித் தாயிறை வாகச்சி யேகம்பனே."
—பட்டினத்தடிகள்.

"அருளால் அறம்வளரும் ஆள்வினையால் ஆக்கம்
பொருளாற் பொருள்வளரும் நாளும்—தெருளா
விழைவின்பத் தால்வளரும் காமமக் காம
விழைவின்மை யால்வளரும் வீடு." —அறநெறிச்சாரம்.

5. "சிற்றின்பம் கணப்பொழுதிற் றோன்றி யழியுந் தன்மைய தென்பார் 'சின்னீரது' எனவும், அதனை விரும்பினோர்க்கு நல்லொழுக்கங்களால் வருமின்பங்களெல்லாம் கைக்கும் என்பார் 'மற்றின்பம் யாவையுங் கைவிடுப' எனவும், பேரின்பம் விரும்பினோர்க்குக் கணப்போதாயினும் வீண்படாதென்பார் 'முற்றும் தாம் பேரின்ப மாக்கட லாடுவார்' எனவுங் கூறினார்." —தி. சு. செ.

"கடலில் ஆடுவார் கும்பியில் வீழார் என்றது ஒரு நயம்." —உ. வே. சா.

**சிற்றின்பஞ் சின்னீரதாயினும்:**

—"நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது."

என்று ஆசிரியர் மூன்றும் செய்யுளில் உரைத்தமை காண்க.

**அஃதுற்றூர் மற்றின்பம் யாவையுங் கைவிடுப:**

"கடவுளைத் தியானித்தல், அவர் சரிதங் கேட்டல், அவர் திருநாமம் பாடல், அத்தன்மையரோடு கூடல் ஆகிய இவையெல்லாங் கருதி 'மற்றின்பம் யாவையும்' என்றது." —ஊ. பு. செ.

**பேரின்ப மாக்கட லாடுவார்:**

"செம்மை யாகிய சிந்தையர் சீரியோர்
வெம்மை யென்பதை வீட்டி விளங்கினோர்
தம்மை யுந்துறந் தேதலை நின்றவர்
இம்மை தன்னினு மின்பத்தை மேவுவார்."

என்ற கந்தபுராணச் செய்யுளால் துறவோர் பேரின்பம் விழைதல் அறியப்படும்.

**பாரின்பப் பாழ்ங் கும்பியில்:**

"சிலபிரதிகளிற் 'பாண் கும்பியி'லென்றிருக்கிறது. அதற்கு விதி வீரசோழியம், சந்திப்படலம்—உக-ஆம் சூத்திரம். பாண் செய், பாண் கிணறு என்பவற்றானு மறிக." —சி. வை. தா.

"பார்—கரு காரென நின்றாற் போலப் பரு பாரென நின்ற பண்புப் பெயர் பூமிக்கு ஆதலால் பண்பாகு பெயர்; பரா என்னும் முதனிலை முதல் நீண்டு, ஈற்றகரங் கெட்டுத் தொழிலாகு பெயராயிற்றென்பாரொருவர்; அவ்வாறு முதனிலை தன்னிலே விகாரப்படல் 'ஒருவழக்கினும்' இன்மையால் பேதைமை யென்க." —கோ. இ.

"பாழ்ங்கும்பி—பண்புத் தொகைநிலைத் தொடர்; பழமை என்னும் பண்புப் பகுதி ஈறு கெட்டு முதனீண்டு 'இனையவும்' என்றதனால் ஈற்றகரங் கெட்டுப் பாழ் என நின்றது."

—தி. சு. செ.

"பாழ்ங்கும்பி—பண்புத் தொகை நிலைத் தொடர்; விரிந்தால் பாழாகிய கும்பி என விரியும்; பாழ் பயனின்மைப் பொருளதாகிய பண்புப் பெயர்ச் சொல்; பயன்படாத புத்தகத்தை வாங்கினவனைப் பார்த்து ஒருவன் "இவன் பணத்தைப் பாழாக்கினான்" என்றால் பணத்தைப் பயனில தாக்கினான் என்பதன்றிப் பழமை யாக்கினா னென்பதன்று."

—கோ. இ.

"கும்பி—சேறு. "யானையும் நரகமுஞ் சேறுங் கும்பி" என்பது பிங்கலம்."

—அ. கு.

Small as is sensual pleasure, its votaries renounce all other enjoyments; shall they who bathe in the great sea of heavenly delight, sink in the mire of earthly indulgence?

—H. S.

Those who indulge in the enjoyment of sensual pleasures, frivolous though they be, will relinquish all other delights for the sake of these pleasures. Will they who have bathed in the great ocean of supernal bliss, fall into the infernal pit of secular pleasure?

—C. M.

Though the pleasure of the senses be transient, its votaries renounce all other forms of enjoyment; but they who bathe in an ocean of heavenly bliss, desire not to wallow in the mire of earthly pleasure.

—T. B. K.

---

## 89. துறவு—புணர்ச்சி விரும்பாமை

எவ்வினைய ரேனு மிணைவிழைச் சொன்றிலரேற்
றெவ்வுந் திசைநோக்கிக் கைதொழூஉம்—அவ்வினை
காத்த லிலரே லெனைத்துணைய ராயினும்
தூர்த்தருந் தூர்ப்பா ரலர்.

1. எவ்வினையரேனும் - (மற்றெத்தகைய) தீத்தொழிலுடைய ராயினும், இணைவிழைச்சு - புணர்ச்சியாகிய, ஒன்று - தீச்செயலொன்றை மட்டும், இலரேல் - (துறவிகள்) கைக்கொள்ளாதிருந்தார்களானால், தெவ்வும் - (அவர்களுடைய) பகைவரும், திசை - (அவர்களிருக்கும்) திக்கு, நோக்கி - பார்த்து, கைதொழூஉம் - கைதொழுவர்; அவ்வா றன்றி, அவ்வினை - அவ்வினைவிழைச்சை, காத்தல் - அகற்றிப் பாது காத்துக் கொள்ளும் (ஆற்றல்), இலரேல் - இல்லாதவராயின், எனைத் துணைய ராயினும் - தவநெறியில் எத்துணைச் சிறந்தோராயினும், தூர்த்த ரும் - (மகளிர் இன்பத்திலேயே மூழ்கிக் கிடக்கும்) காமுகரும், தூர்ப் பார் - கூறி நிரப்புவார்கள், அலர் - பழிமொழிகளை.

2. எவ்வினையரேனும் இணைவிழைச் சொன்று இலரேல் திசைநோக்கித் தெவ்வுங் கைதொழூஉம்; எனைத்துணையராயினும் அவ்வினை காத்தலிலரேல் தூர்த்தரும் அலர் தூர்ப்பார்.

3. காம இச்சையே துறவின் கடும்பகை.

4. "எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்." —குறள்.

"அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று." —குறள்.

"அறனு மறனறிந்த செய்கையுஞ் சான்றோர்
திறனுடைய னென்றுரைக்குந் தேசும்—பிறனில்
பிழைத்தா னெனப்பிறராற் பேசப் படுமேல்
இழுக்கா மொருங்கே யிவை." —அறநெறிச்சாரம்.

5. துறவொழுக்கத்திற் றலைசிறந்தது புணர்ச்சி விரும் பாமையே என்பதும், அதனை யகற்றிப் பாதுகாத்துக் கொள்வது

உரனுடையோர்க்கே இயலுமென்பதும் ஆசிரியரால் மீண்டும் இங்கு வற்புறுத்திக் கூறப்பட்டன. மீண்டும் என்றது அறு-ஆம் செய்யுளை நோக்கி.

"பெண்களின்பம் விரும்பாத துறவிகள் யாதொரு தீத் தொழிலுஞ் செய்யார் என்பார் 'எவ்விளையரேனும்' எனவும், அவ்வின்பம் விரும்பினோர் நல்லொழுக்கஞ் சிறிதுமிலரென்பார் 'எனைத்துணையராயினும்' எனவுங் கூறினார். —இ. சு. செ.

**எவ்வினையரேனும் இணைவிழைச் சொன்றிலரேல்:**

"**எவ்வினையரேனும்**—துறவோர் தமது துறவுக்கு விலக்கப் பட்ட கோபித்தல், பிறரை நிந்தித்தல், ஓரிடத்திருத்தல் முதலிய செயல்களுள் எவைகளைத்தானுடையராயினும்." —அ. கு.

"எவ்வினையரேனும் என்னும் உம்மை எத்தீத்தொழிலும் செய்யாதவராயிருத்தல் வேண்டும் என்னும் பொருள் தரலால் எதிர்மறையும்மை." —கோ. இ.

"**இணைவிழைச்சு**—செய்யப்படு பொருளில்வந்த ஆறும் வேற்றுமைத் தொகை; இணையினது விழைச்சு என விரியும். இணை - இணைகின்றவள், சேருகின்றவள், பெண் என்பது கருத்து. இணைகின்ற விழைச்சு என வினைத்தொகையாகக் கொள்வாருமுண்டு. உலகத்தில் முக்கியமாய் விரும்பப்படுவது புணர்ச்சியேயாகலின் இணையை விரும்புதல் எனப் பொருள் கொள்ளுதல் நலம்." —ஊ. பு. செ.

"பெண் ஆண் இரண்டும் விரும்பிச் செய்யப்படுதலால் இணைவிழைச் சென்னப்பட்டது." —அ. கு.

**ஒன்று**—பொருளாற்றல் நோக்கி ஒன்றுமட்டும் என விரித் துரைக்கப்பட்டது.

**தெவ்வுந் திசைநோக்கிக் கைதொழூஉம்:**

"திக்கு நோக்கித் தெண்டனிடுதல்" என்பது உலக வழக்கு.

**அவ்வினை காத்தலிலரேல்:**

"**காத்தல்**—அவ்வினை தம்மிடம் நீகழாது காத்துக்கொள்ளல். 'ஏந்திழையார் தஞ்சயனத் தெய்தித்தம் மெய்தொடினுங், காய்ந்துவர்த்தலே துறவு காண்' என்றார் பிறரும்." —அ. கு.

**எனைத் துணையராயினும்:**

"விதிக்கப்பட்ட தொழில்களெல்லாஞ் செய்து எத்துணையுஞ் சிறந்தவரா யிருப்பினும். துறவிகளுக்கு விதிக்கப்பட்ட செயல்களாவன கோபமின்மை, நிந்தையின்மை, பிச்சை வாங்குதல் முதலியன." —அ. கு.

துறவறமாவது,

" மனையற நிரப்பி
முற்றுணர் கேள்வியின் முதுக்குறை வெய்திப்
பொருளு மின்பமு மொரீஇ யருளொடு
பொறையு மாற்றலு நிறைபே ரொழுக்கமும்
வாய்மையுந் தவமுந் தூய்மையுந் தழீஇ
ஓரறி வுயிர்க்கு முறுதுய ரோம்பிக்
காலோய் நடைய ளுகித் தோலுடுத்
தென்பெழு மியாக்கையன் துன்புறத் துளங்காது
வரையுங் கானு மெய்திச் சருகொடு
கானீ ரருந்திக் கடும்பனிக் காலத்து
மாநீ ரழுவத் தழுங்கி வேனிலில்
ஐவகை யழலின் மெய்வருந்த வருந்தி
இவ்வகை யொழுகு மியல்பிற் றன்றே."

என்று நம் ஆசிரியர் சிதம்பரமும்மணிக்கோவையிற் பாங்குறயாத்திருப்பது கொண்டு உணரப்படும்.

**தூர்த்தருந் தூர்ப்பார் அலர்:**

"**தூர்த்தரும்**—காம நுகர்ச்சியில் மீதூர்ந்தவர்களும்."
—உ. வே. சா.

"**தூர்த்தரும்** - இழிவு சிறப்பு." —கோ. இ.

"'தூர்ப்பார் அலர்' என்பதிற்கு 'அவரைப் பழித்துரைப்பா ரல்லது மறையா'ரென வழூஉப்பொருள் கூறுவது 'அலர்' பழிமொழிப் பொருள் தருமாறு அறியாமையா னென்க."

—சி. வை. தா.

"அலர் - புகழ் போலன்றித் தான் சிறிதாயினும் எங்கும் விரைவில் பரவுதலால் பழிமொழிக்கு அலர் தொழிலாகு பெய ராயிற்று."

—கோ. இ.

Whatever be the conduct of those, who profess to have renounced the world, if they be only chaste, even their enemies will raise to them their hands in adoration. If, however distinguished in other respects, they guard not this virtue, even the profligate will not pass them over uncensured.

—H. S.

Howsoever those who pretend to have renounced the world may act, should they be only pure, even their foes will adore them with up-lifted hands. Should they fail to cherish this virtue, howsoever conspicuous they may otherwise be, even sensualists wili venture to reproach them.

-- C. M.

Even the enemies, of ascetics who are free from sexual desire, will turn towards them, with feeling of respect and worship whatever their conduct may otherwise be, but if they do not guard against that desire, even the profligate will blame them far and wide, however high they may be in other respects.

—T. B. K.

---

## 90. துறவு—பயனில செய்யாமை

*பரபரப்பி ேனாடே பலபல செய்தாங்*
*கிரவுபகல் பாழுக் கிறைப்ப—ஒருவாற்றான்*
*நல்லாற்றி னூக்கிற் பதறிக் குலைகுலைப*
*எவ்வாற்றா னுய்வா ரிவர்.*

1. பரபரப்பினோடே - விரைந்து விரைந்து, பலபல - மிகப்பல செயல்களை, செய்தாங்கு - செய்து முடித்து, இரவுபகல் - இரவையும் பகலையும், பாழுக்கு - வீணான காரியங்களில், இறைப்ப - கழிப்பர்; ஒருவாற்றான் - ஒருவகையால், நல்லாற்றின் - தேறிய நன்னெறிக்கண், ஊக்கின் - செல்லுமாறு (மெய்யுணர்ந்த நல்லாசிரியரால்) உணர்த்தப் பெற்றுத் தூண்டப்படினும், பதறி - (உடலும் மனமும் ஒருங்கே) பதற்ற மெடுத்து, குலைகுலைப - (அஞ்சி) நடுங்குவர்; எவ்வாற்றான் - எவ்வகை யால், உய்வார் - (பிறவித் துன்பத்தினின்றும்) தப்புவார், இவர் - இத் தகையோர்!

2. இரவு பகல் பரபரப்பினோடே பலபல செய்தாங்கு பாழுக்கிறைப்ப; நல்லாற்றின் ஒருவாற்றான் ஊக்கின் பதறிக் குலைகுலைப; இவர் எவ்வாற்றானுய்வர்?

3. **வீழ்நாள் படாது நன்றாற்றல் வீடடையும் வழியாம்.**

4. "வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்." —குறள்.

"தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வா ராசையுட் பட்டு." —குறள்.

"தாமேயு மின்புறார் தக்கார்க்கு நன்றாற்றா
ரேமஞ்சார் நன்னெறியுஞ் சேர்கலார்—தாமயங்கி
யாக்கத்துட் டூங்கி யவத்தமே வாழ்நாளைப்
போக்குவார் புல்லறிவி னார்." —நாலடியார்.

5. "பயனற்ற செயல்களையே செய்து காலத்தைப் போக்கியும், பிறர் அறிவுறுத்திக் கூறினும் நற்செயல் செய்ய நடுங்கியும் வாழ்வாரை நினைந்து இரங்கியபடி." —உ. வே. சா

"அரிதிற் பெற்ற செல்வங்களைச் சிற்றின்ப விஷயங்களிலே முற்றும் விடுபவர் ஒருகாலும் உய்யமாட்டாரென்பது கருத்து."
—அ. கு.

"ஒரு கணமேனும் தமது மன வாக்குகளை நல்லொழுக்கத்திற் சிறிதுஞ் செலுத்தார் என்பார் 'இரவு பகல் பாழுக்கிறைப்ப' எனவும், பெரியோர் அறநெறியிற் செலுத்தில் அவர்க்கு நெருப்பிற் றள்ளுதலோ டொக்கும் என்பார் 'நாக்கிற் பதறிக் குலை குலைப' எனவும், துறந்தோர் செயலைக் கூறுவோர் இவர் செயலுக் கிரங்கினர் ஆதலால், 'எவ்வாற்று னுய்வாரிவர்' எனவுங் கூறினர்."
—தி. சு. செ.

இச் செய்யுள் பொதுப்பட உலக மக்களைக் குறித்ததாகப் பல உரையாசிரியர்களுள் உரையெழுதியுள்ளார்கள். எனினும், மேல் அ௫-ஆம் செய்யுள் விளக்கவுரையிற் கண்டபடி, இந்நூல் இறுதிச் செய்யுட்கள் பதினெட்டும் துறவோரைக் குறித்தன வாதலால் இதுவும் அவரைக் குறித்ததாகக் கொண்டு உரை செயலே ஏற்புடைத்தாம். உலக மாயையினின்று விடுபட நினைத்துத் துறவு பூண்டோரிலும் பலர் தொடக்கத்தில் அவா வையும் ஐம்புலப் பற்றுக்களையும் அறவே அறுக்க முடியாம லும், அவற்றில் ஈடுபட்டுழலவும் மனமில்லாமலும் இருதலைக் கொள்ளி எறும்புபோல் திகைத்துத் தம் அறிவிற்கேற்றவாறு தேர்ச்சியின்றிப் பலபல வினைகளை இயற்றுவர். அவை நல்லாற்றிற்படாத தீவினைகளே யென்பது 'ஒருவாற்றால் நல் லாற்றினுய்க்கின்' என்றதாற் பெறப்படும். மெய்யுணர்ந்த ஆசிரியர் ஒருவரை அடைந்து, அவர் அறிவிக்க அறிந்து, முற்றத் துறந்து, ஐம்புலனடக்கி மெய்யுணரும்வரையில் அவர்கள் ஆற்றும் வினைகள் துறவோர்க்குரிய அறச் செயல்களின்பாற் பட்டாவாம். ஆகவே, அவ்வாறு செய்தாலன்றி இருவினையும் அற்று உண்மைத் துறவிகளாகிப் பிறப்பறுர் என்பதே இச் செய்யுளால் குறிக்கப்பட்டதாம்.

**பரபரப்பினோடே பலபல செய்தாங்கு:**

"பரபரப்பு, குலைகுலைப—இவற்றுள் பின்னைய பிரிந்திசைப் பினும் முன்னைய பிரிந்திசையாமையால் இரட்டைச் சொற் கள்."
—தி. சு. செ.

"பரபரப்பு, குலைகுலைப என்பன இரண்டும் இரட்டைக் கிளவிகள்." —கோ. இ.

"பரபரப்பினோடே - சம்பிரமத்தோடே. சம்பிரமம் - செய்ய விரும்பிய காரியத்திலே மனதுக்குத் தோன்றும் விரிவு." —அ. கு.

**இரவு பகல் பாழுக் கிறைப்ப:**

"அங்கே பெற்றுக்கொண்ட பொருள்களை ஒரு பிரயோசனமுமில்லாத சிற்றின்ப விஷயங்களிலே அள்ளி வீசுவார்கள்." —அ. கு.

"பாழ் - பண்பாகு பெயராய்க் காரியத்தை உணர்த்திற்று." —கோ. இ.

"இறைப்ப - பல்லோர் படர்க்கை எதிர்கால வினைமுற்று. முக்காலத்திலும் ஒத்து நடக்கும் பொருளை எதிர்காலத்தால் கூறுதல் தமிழர்மதம்; அஃறிணைக்கண் வருவதானால் அன்சாரியை பெற்று இறைப்பன எனவும் வரும்." —கோ. இ.

"பாழ் நிலத்திற்கு நீர் இறைப்பார்கள்; என்றது பயனற்ற செயல்களைச் செய்வார் என்றபடி, 'ஏழைத்தொழும்பனே னெத்தனையோ காலமெலாம் பாழுக் கிறைத்தேன்' (திருவாசகம்.)" —உ. வே. சா.

**ஒருவாற்றால் நல்லாற்றினூக்கிற் பதறிக் குலைகுலைப:**

"அறிவின்மையாலே நல்வழியினிலைத்திலர். "வேறுகொள் புலனை வென்றோர் மேலைநன் னெறியுய்த்தாலுந் தேறிய உணர்விலாதோர் செல்வழிச் செல்வரன்றே" என்பது கந்தபுராணம்." —அ. கு.

"நல்லாற்றில் நூக்கின் எனப் பிரித்தால், நல்வழியில் செலுத்தினால் எனப் பொருளுரைக்க; நூக்கல் - தள்ளல்." —கோ. இ.

"பெரியோ ரொருவா றவரை நல்லொழுக்கி நடத்துவாராயி னெனச் சிலர் பொருள் கூறுதல் பொருந்திலது" என்று காரணங்

கூறி; 'ஊக்கின்' எனப் பிரித்து "முயலுவாராயின்" என்று பொருள் கூறினர் திரு. சி. வை. தாமோதரம் பிள்ளை.

ஊக்கல் - என்பது உற்சாகப்படுத்தல், கற்பித்தல் என்றும் பொருள்படுமாதலின், ஆசிரியர் மதத்திற்கேற்ப ஞானகுரவர் இன்றியமையாதவர் என்பதும் அவர் மெய்ப்பொருளுணர்த்தலும் இன்றியமையாதாம் என்பதும் போதர, 'செல்லுமாறு (மெய்யுணர்ந்த நல்லாசிரியரால்) உணர்த்தப்பெற்றுத் தூண்டப்படினும்' என்று பொருள் உரைக்கப்பட்டது.

**எவ்வாற்றுனுய்வாரிவர்:**

"உய்வார்—பிறவிப் பெருங் கடலினின்றுந் தப்புவார்கள்."
—இள.

"ஐவகைக் குற்றத்தான் வரும் இருவகை வினையுமுள்ள துணையும் உயிர் யாக்கையோடுங் கூடி நின்று, அவ்வினைகளது இருவகைப் பயனையும் நுகரும்" என்று கூறி, "குற்றங்களைந்தாவன; அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பென்பன. இவற்றை வடநூலார் பஞ்சக்கிலேசமென்ப" என ௩௮-ஆம் திருக்குறளுரையில் விரித்துரைத்தார் பரிமேலழகர். எனவே, இவ்வைங் குற்றங்களுமொழிந்து நல்வினை தீவினை யென்ற இரண்டுமொத்தால்தான் மலபரிபாகமாகி, சத்திநிபாதம் சித்திக்க, பிறப்பறும் என்பது பெறப்படும். பிறப்பறுதலே உய்வாகும்.

There are some, who, doing various things with bustling haste, will spend day and night in watering the wilderness; but if by any means, one turn them into the good way, they will be immediately startled with alarm. How shall such prosper?
—H. S.

Some there are who waste their days and nights in doing many things at once, with a rash haste. Should they be led into the right path by some means, they tremble with fear and are confounded. How can such escape the evils incident to birth?
—C. M.

With bustling haste men do many things, and waste days and nights; if, by chance, one should turn them to the path of virtue, they quake and tremble. How shall such men prosper? —T. B. K.

---

## 91. துறவு—தவம்

*இளைய முதுதவ மாற்றுது நோற்றென்*
*றுளைவின்று கண்பாடு மூழே—விளிவின்று*
*வாழ்நாள் வரம்புடைமை காண்பரேற் காண்பாரும்*
*தாழாமே நோற்பார் தவம்.*

1. இளையம் - (நாம் இக்காலை) இளமைப் பருவத்தை யுடையேம், முது - முதுமைப் பருவத்தில், தவம் - தவத்தை, ஆற்றுதும் - செய்து முடிப்போம், நோற்று - விரதங்களை மேற்கொண்டு, என்று - என்று கருதி, உளைவின்று - கவலையின்றி, கண்பாடும் - உறங்கிக் கிடப்பதும் ஊழே - (ஒருகால்) முறையே யாகலாம்; (எப்பொழுதெனில்), விளிவு - இறத்தல், இன்று - இன்ன நாளில்தான் (என்று), வாழ்நாள் - தம் முடைய வாழ்நாளின், வரம்புடைமை - முடிவை, காண்பரேல் - (திட்டமாக) அறிவாராயின்; காண்பாரும் - (இறத்தல் இன்னநாள்தான் என்று வாழ்நாளின் முடிவுநாளை) அறிந்துகொள்ளும் ஆற்றலுடையவர்களும், தாழாமே - (முதுமை வரும்வரையிற்) காலந் தாழ்த்தாமல், நோற்பார் - மேற்கொண்டியற்றுவார்கள், தவம் - தவத்தினை.

2. விளிவின்று வாழ்நாள் வரம்புடைமை காண்பரேல், இளையம் முதுதவம் நோற்று ஆற்றுதுமென்று உளைவு இன்று கண்பாடும் ஊழே; காண்பாரும் தாழாமே தவம் நோற்பார்.

3. துறவோர் நாளை யென்றுதும் பின்னை யென்றுதும் தவம் செய்தல் வேண்டும்.

4. "நெருந லுளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு." —குறள்.

"நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை." —குறள்.

"சென்றநா ளெல்லாஞ் சிறுவிரல்வைத் தெண்ணலாம்
நின்றநாள் யார்க்கு முணர்வரிது." —அறநெறிச்சாரம்.

"மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்மின்."
—நாலடியார்.

5. "உடம்பு கணப்பொழுதேனு நிற்றலை யறித லரிது என்பார், 'வாழ்நாள் வரம்புடைமை காண்பரேல்' எனவும், அவ்வுடம்பாலாய பயனை அது உள்ளபொழுதே பெருதொழிதல் அறியாமையென்பார் 'உளைவின்று கண்பாடு மூழே' எனவுங் கூறினர். அழியும் உடம்பினுல் அழியாத மறுமைப் பயனை அடையவேண்டும் என்பது கருத்து." —தி. சு. செ.

"தங்களாயுளின் எல்லையறிந்த முனிவர்களும் தவத்தைச் செய்துகொண்டிருக்க, அஃது அறியாத மூடர், தேகத்தை நிலையாக மதித்து மூப்பில் தவஞ்செய்வோ மென்றெண்ணுவது முறைமையன்று." —ஊ. பு. செ.

**இளைய முதுதவ மாற்றுது நோற்றென்று:**

"இளையம்—இளமை என்னும் பண்படியாய்ப் பிறந்த தன்மைப் பன்மை வினைமுற்று." —இள.

"முதுதவம்—முதுமை என்பதில் மையீறு தொகுத்தலாய் நின்றது. முதுதவ மென்பது செய்வோரது முதுமையை, 'வீரக்கழ' லென்பதுபோல, அவராற் செய்யப்படும் தவத்தின்மேலேற்றிக் கூறிய மரபு வழுவமைதியெனினு மொக்கும்."
—கோ. இ.

**உளைவின்று கண்பாடு மூழே:**

"கண்பாடும்—தூங்குதலும். தவஞ் செய்யாது வாளாவிருத்தலைக் குறித்தபடி." —உ. வே. சா.

"ஊழே - விதியின்பயனே; இஃது அங்ஙனம் செய்யாரை நினைந்து இரங்கியபடி." —உ. வே. சா.

**விளிவின்று வாழ்நாள் வரம்புடைமை காண்பரேல்:**

"விளிவு இன்று—இளமையிலேயே இறத்தல் இல்லாமல்."
—உ. வே. சா.

"விளிவு இன்று - கேடின்றி." —அ. கு

"வரம்பு உடைமை - அளவறுத்தல்; அது முடிவாதலின் முடிவு என்றனம்." —தி. சு. செ.

**காண்பாரும் தாழாமே நோற்பார் தவம்:**

"நரைவருமென்றெண்ணி நல்லறிவாளர், குழவியிடத்தே துறந்தார்" என்பது நாலடியார்.

To sleep away our days in careless indolence, saying "we are young, and may perform the duties of devotion in old age," might be right if we could see the limit of our lives: but those, who could do so, would not relax in the performance of religious duties. —H. S.

It may be proper in those who know the term of existence on earth allotted to them, to waste their youths in indolence, with the excuse that they may do acts of penance in old age. Even sages who know the limited duration of man's life, will perform religious austerities without delay. —C. M.

Those that can decisively forsee the limit of their life-time may perhaps rightly sleep away their days in careless indolence, saying we are still young and may perform penance in old age; but even sages who could forsee that, do penance without delay. —T. B. K.

## 92. துறவு—ஊழ்

நல்லவை செய்யத் தொடங்கினு நோனுமே
அல்லன அல்லவற்றிற் கொண்டுய்க்கும்—எல்லி
வியனெறிச் செல்வாரை யாறலைத் துண்பார்
செலவு பிழைத்துய்ப்ப போல்.

1. நல்லவை - நற்கருமங்களை, செய்ய - செய்துமுடிக்கக்கருதி, தொடங்கினும் - தொடங்கினலும், நோனுமே - தவஞ்செய்யாமையினல், அல்லன - தீயூழ், அல்லவற்றில் - தீய கருமங்களில், கொண்டுய்க்கும் - கொண்டுபோய் நுழைக்கும்; (இஃது) எல்லி - இராப்பொழுதில், வியனெறி - நெடுவழி, செல்வாரை - செல்லக்கருதிப் புறப்பட்டவர்களை, ஆறலைத்துண்பார் - வழிபறித்துண்ணும் திருடர்கள், செலவு - (கருதிய இடஞ்சேரா நெடுவழிச்) செல்வதை, பிழைத்து - (அவ்வழியிற் செல்லாதபடி) விலக்கி, உய்ப்பபோல் - (கொடுவழியிற்) செலுத்துவிப்பது போலாம்.

2. எல்லி வியனெறிச் செல்வாரை ஆறலைத் துண்பார் செலவு பிழைத்துய்ப்ப போல், நோனுமே நல்லவை செய்யத் தொடங்கினும் அல்லன அல்லனவற்றிற் கொண்டுய்க்கும்.

3. **தவவலியின்றேல் ஊழ்வலியைத் தப்ப முடியாது.**

4. "தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
அஃதிலார் மேற்கொள் வது." —குறள்.

"பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை." —குறள்.

"சுட்டிச் சொலப்படும் பேரறிவினர் கண்ணும்
பட்ட விருத்தம் பலவானல்—பட்ட
பொறியின் வகைய கருமம் அதனல்
அறிவினை ஊழே அடும்." —பழமொழி.

5. "புண்ணிய முடையார்க்கே தவஞ் செய்தல் கூடுமென்பார்." —உ. வே. சா.

"தவம், முன்செய்த தவத்தால் கூடுமென்பது கருத்து."
—கோ. இ.

"தவஞ் செய்யாதவர் நல்வழிச் செல்லினும் ஊழ்வினை விடாதென்பது கருத்து." —அ. கு.

"நற்கருமஞ் செய்யப் புகுந்தோர், அதினின்று தவறுதற்கு அவரது முன்வினையே காரணமாம் என்பது கருத்து."
—ஊ. பு. செ.

"நற்காரியங்களைச்செய்ய நினைத்தாலும், ஊழ்வினை மாறாயின், அவை தீய காரியங்களாகவே முடியும். ஊழ் வலிது என்பது இங்கு நோக்கற்பாலது." —இள.

"துறந்தோர்க்கும் ஊழ் உண்மையால், அவர்கள் சில தீய கருமங்களைச் செய்யினும் ஊழென்று கருதி யுலகினரொழுக வேண்டும் என்பார் 'நல்லன செய்யத் தொடங்கினும் அல்லன அல்லவற்றிற் கொண்டுய்க்கும்' என்றார்." —தி. சு. செ.

ஊழிற் பெருவலி யாவுள என்பதைக் கொண்டு தவச் செல்வரும் ஊழ்வலிப்பட்டவரே எனவுரைத்தல் அவருக்குப் பெருமை தருவதொன்றாகாதாதலின், உலைவிலா முயற்சியாகிய உண்மைத் தவத்தால் ஊழையும் உப்பக்கங்காணலாம் எனக் கொண்டு மேல் உரை வகுக்கப்பட்டது.

**நோனமே:**

"அது பொறாமல்" என்றே பல உரையாசிரியர்களும் உரைத்துள்ளார்கள். தீயூழுக்கு இது பெருமை கற்பிப்பதால் இதனை விடுத்து, நோற்றல் - தவஞ்செய்தல் என்பதற் கேற்ப, தவஞ் செய்யாமையினால் என உரைக்கப்பட்டது. தவஞ் செய்யாமை என்றது முற்பிறப்பிலும் இப்பிறப்பிலும் செய்யாமையாகிய இரண்டையுங் குறிக்கும்.

"நோனமையாவது போகூழ்கள் வரத்தகுங் காலத்தில் தாமதியாமை." —கோ. இ.

**எல்லி வியனெறிச் செல்வாரை:**

"எல்லியம் போது வழங்காமை முன்னினிதே."

—இனியவை நாற்பது.

"**வியனெறி**—பெருவழி. வியல்நெறி எனப் பிரித்து "விரிவாகிய வழி" என உரைப்பினும் பொருந்தும். வியனென்பதில் மகரத்துக்கு னகரம் போலி." —கோ. இ.

**ஆறலைத் துண்பார் செலவு பிழைத்துய்ப்பபோல்:**

**ஆறலைத்து**—இறந்தகால வினையெச்சம்; ஆறலை ஒரு சொல்லின் தன்மையது.

"**பிழைத்து**—பிழைப்பித்து; "குடிபொன்றிக் குற்றமு மாங்கேதரும்" (**குறள் 171.**) என்பதில் பொன்றுவித்தென்பது பொன்றியென வந்தாற்போன்றது இது." —உ. வே. சா.

Though a man begin to do good, his evil destiny without suffering it, will turn into evil: as those who live by plundering on the highway, lead astray the traveller in the dark night. —H. S.

Although a person begin to do acts of goodness, evil fate, envious of his prosperity will lead him into evil ways; just as the robber at dead of night misleads the traveller on the highway into dangerous paths. —C. M.

When the man seeks to do good deeds, his evil *Karma* intercepts and leads him into evil, even as robbers lead astray in the night the traveller whose feet are set on the high-road. —T. B. K.

---

## 93. துறவு—உள்ளத்துறவு

நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை
கஞ்சுக மன்று பிறிதொன்றே—கஞ்சுகம்
எப்புலமுங் காவாமே மெய்ப்புலங் காக்குமற்
றிப்புலமுங் காவா திது.

1. நெஞ்சு - உள்ளம், புறம்பா - (பற்று நீங்காமலும், கட்டுப் படாமலும்) அயலதாகச் செல்ல, துறந்தார் - (சொற்செயல்களாலே) துறந்தவர்போலக் காணப்படுபவருடைய, தவப்போர்வை - தவவேடமாகிய போர்வை, கஞ்சுகம் - சட்டைபோன்றதுமாகாது; பிறிது - வேறு, ஒன்று - ஒன்றே (அவவேடமே) யாம்; (என்னை?) கஞ்சுகம் - சட்டையானது, எப்புலமும் - ஐம்புலன்களில் யாதொன்றையும், காவாமே - காவாவிடினும், மெய்ப்புலம் - (தன்னுளடங்கிய) உடலாகிய இடத்தை மட்டுமேனும், காக்கும் - (குளிர், பனி முதலியவற்றினின்று) பாதுகாக்கும்; மற்று இப்புலமும் - இந்த மெய்ப்புலனையும், காவாது - பாதுகாத்தல் செய்யாது, இது - இப்(பொய்த்) தவப்போர்வை.

2. கஞ்சுகம் எப்புலமுங் காவாமே மெய்ப்புலங் காக்கும்; மற்று நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை இப்புலமுங் காவாது; இது கஞ்சுகமன்று பிறிதொன்றே.

3. **புறத்துறவினும் அகத்துறவே மாண்புடைத்து.**

4. "நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்." —குறள்.

"வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று." —குறள்.

"அந்தக் கரண மடங்கத் துறப்பதுவே
யெந்தத் துறவினுநன் றெந்தாய் பராபரமே." —தாயுமானார்.

5. "முயற்சியுடையோன் அதற்குத் தகுதியாகக் கஞ்சுகம் பூண்டு செல்லல்போல, இவருடைய தவவேடமும் பிறருடைய மாதரை விரும்பி யடைதற்குரியதாதலின் அதனைப் 'போர்வை'

என்றும், கஞ்சுகம்போல உடலைக் குளிர் முதலியவற்றால் வருந்தாமல் காக்கமாட்டாமையால் 'பிறிதொன்று' என்றுங் கூறினர்." —கோ. இ.

"மனத்தை நிறுத்தாது விடயத்திற் செல்ல விடுவோர் என்பார் 'நெஞ்சு புறம்பாத் துறந்தோர்' எனவும், மெய் வாய் கண் மூக்குச் செவி என்பார் முற்றும்மை தந்து 'எப்புலமும்' எனவும், சட்டைபோலப் புறத்துறவினர் வேடம் பயன்படுதல் இல்லையென்பார் 'இது இப்புலமுங் காவாது' எனவும், இவ்வேடம் பிறரை வஞ்சித்துய்தற் பொருட்டு என்பார் 'பிறிதொன்று' எனவுங் கூறினர்." —தி. சு. செ.

"மனம் பிறிதாகத் துறந்தவரது தவப் போர்வை அவர் கருதிய சிற்றின்பங் காரணமாய் விளையுஞ் சரீரப் பிணிகளையு மறைக்காதென்பதாம்." —சி. வை. தா.

"துறந்தார் என்போர் எல்லாப் பற்றையும் அறவே நீத்தாராகையால் அவர்கள் மனம் ஒன்றிலும் பற்றக்கூடாது. ஏதாவது; ஒரு காரியம் விரும்பிப்போகிறவன் அதற்குத் தகுதியான சட்டையணிந்து செல்லுதல்போல், மனமடக்காது கருத்திலே கரவடம் கொண்டார் தவவேடமும் தீச்செயல் புரிதற்கென்று அணியப்படுவதுபோற் றோன்றலால் அது 'போர்வை' என்றும், ஆனால் போர்வைபோல் அது பயன்படாமையால் போர்வையுமன்று பிறிதொரு பொருள் என்றுங் கூறினார்." —இள.

**நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை:**

"நெஞ்சு புறம்பாக என்றது மாதரிடத்து மனஞ் செல்லலை." —கோ. இ.

"தம்மைப் பிறர் ஐயப்படாதிருத்தற் பொருட்டுக் கொண்டதாதலின் அதனைத் 'தவப்போர்வை' என்றார்." —உ. வே. சா.

**கஞ்சுகமன்று பிறிதொன்றே:**

"கஞ்சுகம்—சரீரத்திற்கு ஆயுதம் முதலியவைகளால் ஊறு வாராது காக்கும்படி போர்வீர ரணியுஞ் சட்டை." —அ. கு.

"கஞ்சுகம் - வடசொல்; சட்டை - தமிழ்ச்சொல்." —இள.

**கஞ்சுகம் எப்புலமுங் காவாமே மெய்ப்புலங் காக்கும்:**

"ஈண்டு 'இப்புல' மென்றமையால் 'எப்புலமு' மென்றது மெய்ப்புல மொழிந்தவற்றை." —கோ. இ.

**மற்று இப்புலமுங் காவாதிது:**

"இவர் வேடம் இவர்க்கீவது நலமென்று கருதி யீந்தாரையும் காக்கமாட்டாதென்பது தோன்ற 'இப்புலமு' மென்றார்."
—அ. கு.

**மற்று** - வினைமாற்று.

The cloak of devotion worn by those, who have renounced the world externally, is somewhat different from a garment: for, a garment though it guards not the other organs of senses, yet guards the body; the other guards not even this. —H. S.

The robe of ascetic devotion, worn by those who have sundered all earthly ties, is not like the coat which preserves at least the sense of touch, if not the other senses; for that affords no shelter to any. —C. M.

The cloak of penance worn by those ascetics whose heart is away from renunciation of the world, is very different from a coat. The coat at least covers the body but that covers nothing. —T. B. K.

---

## 94. துறவு—படிறின்மை

வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தே மென்று மகிழன்மின்—வஞ்சித்த
எங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
அங்கங் குலைவ தறிவு.

1. வஞ்சித்து - (தவவேடத்தால் உலகத்தோரை) ஏமாற்றி, ஒழுகும் - (அவ்வேடத்தால் தமது தீயொழுக்கத்தை மறைத்து) நடக்கும், மதியிலிகாள் - அறிவிலிகளே! யாவரையும் - எல்லோரையும், வஞ்சித்தேம் - எய்த்து விட்டோம், என்று - எனக் கருதி, மகிழன்மின் - மகிழ்ந்துவிடாதீர்கள்! வஞ்சித்த - (பிறரறியாதபடி நீவிர் செய்த) வஞ்சகச் செயல்களை, எங்கும் - எவ்விடத்திலும், உளன் - நிறைந்து நிற்பவனாகிய, ஒருவன் - ஒப்புயர்வில்லாத இறைவன், காணுங்கொல் - காண்பான், என்று - என உணர்ந்து, அஞ்சி - அவனுக்குப் பயந்து, அங்கம் - உடல், குலைவது - பதறுவதே, அறிவு - அறிவுடைமையாகும்.

2. வஞ்சித் தொழுகும் மதியிலிகாள். எங்கும் ஒருவன் உளன்; (அவன்) வஞ்சித்த காணுங்கொல் என்று அஞ்சி அங்கங் குலைவதே அறிவு; யாவரையும் வஞ்சித்தேமென்று மகிழன்மின்!

3. இறைவனை யொளித்தொரு வஞ்சகமில்லை; ஆதலால் வஞ்சனை யகற்றுமின்!

4. "நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்." —குறள்.

"பற்றற்றே மென்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென்
றேதம் பலவும் தரும்." —குறள்.

"எனக்குத் தகவன்றால் என்பதே நோக்கித்
தனக்குக் கரியாவான் தானாய்த் தவற்றை
நினைத்துத்தன் கைகுறைத்தான் தென்னவனும் காணார்
எனச்செய்யார் மாணா வினை." —பழமொழி.

5. "அணுவுக் கணுவாய் மகத்துக்கு மகத்தாய் ஒருவனுள்ளான் என்பார் 'எங்கு முளனொருவன்' எனவும், அவன் மறைந்

தொழுகுந் தீயொழுக்கங்க ளெல்லாம், அறியவல்லான் என்பார் 'யாவரையும் வஞ்சித்தோ மென்று மகிழன்மின்' எனவும், உலகினரறிந்து தண்டித்தலினும் அவன் தண்டித்தல் பெரிதென்பார் 'அஞ்சி யங்கங் குலைவதறிவு' எனவுங் கூறினர்."
—தி. சு. செ.

"இறைவன் எங்கு மிருக்கிறார், எல்லாம் அறிவார் என்னும் உண்மை அறியாரை 'மதியிலிகாள்' என்றார். மனிதர் தண்டிப்பதிலும் இறைவன் தண்டனை கொடிதாதலின் 'அங்கங் குலைவ தறிவு' என்றார்."
—இள.

**வஞ்சித் தொழுகு மதியிலிகாள்:**

"வஞ்சித்து—மனக்கருத் தொன்றாக வேடம் வேறொன்றாக வஞ்சித்து."
—அ. கு.

"'ஒழுகும்' என்னும் காரியப் பொருட்டாகிய பெயரெச்சம் 'மதியிலிகாள்' என்னும் பெயரின் பகுதியாகிய மதியின்மை என்னும் கருவிப் பெயர் கொண்டது."
—கோ. இ.

"மதியாவது நூலுணர்வு கொண்டு பொருளை நிச்சயிப்பது "கடவுள் ஒருவர் இருக்கிறார்; அவர் எங்கும் நிறைந்தவர்; அவர் இல்லாத இடமில்லை; 'அவர் எல்லாம் அறிபவர்; அவரால் அறியப்படாததில்லை' என்பது முதலாகச் சொல்லப்பட்டவைகளை அறியாமையின் 'மதியிலிகாள்' என்றார்."
—அ. கு.

**வஞ்சித்த எங்குமுள னொருவன் காணுங்கொல்:**

"வஞ்சித்த—இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும் பெயர்."
—இள.

**எங்கு முளனொருவன் காணுங்கொல்:**

"சாணினு முளனோர் தன்மை அணுவினைச் சதக் கூறிட்ட
கோணினு முளன், மாமேருக் குன்றினுமுளன் இந்நின்ற
தூணினு முளன் முன்சொன்ன சொல்லினுமுளன் இத்தன்மை
காணுதி விரைவின்" என்றான் (நன்றெனக் கனகன் சொன்னான்.)"

“உன் கடவு ளெங்குள னென்ற தந்தைக்குப் பிரகலாதன் சொன்னது.” —மோ. வே.

**அஞ்சி அங்கங் குலைவ தறிவு:**

*வஞ்சித்தல் அறனுடைமை யாகாது; அதனை நினைத்து மகிழ்தலோ அறிவுடைமையு மாகாது. எனவே, வஞ்சித்தலை விலக்காத வழியும் அதனை நினைந்து அங்கங் குலைந்தால் அஃது அறிவுடைமையின்பாற் படும்; என்னை? நினைந்து வருந்திய வழி மீண்டும் அவ்வழி யொழுகான் என்பது ஒருதலையாதலின்.*

Ye fools, who live in the practice of deceit, exult not in the thought that you have *succeeded* in deceiving all! That is true wisdom, which will tremble at the awful thought, that there is one everywhere present, who will behold all deceit. —H. S.

Ye fond men, who indulge in the ways of fraud, rejoice not at the success of your guile! Wisdom consists in trembling with horror at the thought that there is one above, who watches over you wherever you may practise your deceit.

—C. M.

Oh, ye! who practise deceit, rejoice not that you have deceived everyone! It is wisdom to quake and shudder at the thought that there is one unseen who is omnipresent and sees you in secret. —T. B. K.

---

## 95. துறவு—பழியச்சம்

**மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்**
**பறையறைந்தாங் கோடிப் பரக்குங் கழிமுடைப்**
**புன்புலா னாற்றம் புறம்பொதிந்து மூடினும்**
**சென்றுதைக்குஞ் சேயார் முகத்து.**

1. *மறைவழி* - பிறரறியாத வகையில் (இரகசியத்தில்), *பட்ட* - செய்த, *பழிமொழி* - இழிசெயலால் வந்த பழிச்சொற்கள், *தெய்வம்* - இறைவனே, *பறையறைந்தாங்கு* - (எங்குமே) பறையடித்துத் தெரிவித்ததுபோல், *ஓடி* - (விரைந்து) சென்று, *பரக்கும்* - பரவும்; *கழி* - மிகுந்த, *முடை* - முடைநாற்றமுடைய, *புன்புலால்* - இழிவான இறைச்சியின், *நாற்றம்* - கெட்ட நாற்றம், *புறம்* - மேலே, *பொதிந்து* - ஒன்றைப் போட்டு மறைத்து, *மூடினும்* - மூடினாலும், *சென்று* - வெளிப்பட்டு, *தைக்கும்* - பாய்ந்து நாறும், *சேயார்* - தொலைவிலுள்ளவர்கள், *முகத்து* - முகத்திலும்.

2. புறம் பொதிந்து மூடினும் கழிமுடைப் புன்புலால் நாற்றம் சேயார் முகத்துச் சென்று தைக்கும்; மறைவழிப்பட்ட பழிமொழி தெய்வம் பறையறைந்தாங்கு ஓடிப்பரக்கும்.

3. **இழிசெயலால் என்றென்றும் எய்தும் பழி.**

4. "தூர்த்த மங்கையர் சோர்வினிற் செய்பழி
வார்த்தை யெங்கணும் வல்லையிற் செல்லல்போல்"
—கந்தபுராணம்.

"பாவமும் ஏனைப் பழியும் படவருவ
சாயினும் சான்றவர் செய்கலார்." —நாலடியார்.

"பதிப்பட்டு வாழ்வார் பழியாய செய்தல்
மதிப்புறத்திற் பட்ட மறு" —அறநெறிச்சாரம்.

"இம்மைத் தவமும் அறமும் எனவிரண்டும்
தம்மை யுடையார் அவற்றைச் சலமொழுகல்
இம்மைப் பழியேயு மன்றி மறுமையும்
தம்மைத்தா மார்க்குங் கயிறு" —பழமொழி

5. "உபவாசி யென்பான் தேககனத்தால் ஒளித்துண்டலறிதல் போலத் தவவேடத்தால் மறைந்து தீமைசெய்வோன் முக முதலிய குறிகளால் அவன் தீமை வெளிப்படு மென்பார் 'தெய்வம் பறையறைந்தாங்கோடிப் பரக்கும்' என்றார்."

—தி. சு. செ.

சென்ற செய்யுளில் 'வஞ்சித்தோ மென்று மகிழன்மின், வஞ்சித்த எங்குமுள ஒருவன் காணும்' என்று அறிவுறுத்திய ஆசிரியர் கண்ட இறைவன் உலகத்தார்முன் பறையறைந்து தீராப்பழி எய்துவிக்கும் என்று இச்செய்யுளால் விளக்குகிறார்.

**மறைவழிப்பட்ட பழிமொழி:**

"மறைவிடத்திற் கூறிய பழிமொழி" எனப் பொருளுரைத்து "மறைவிற்கூறிய பழிமொழி விரைவில் வெளியாம்" என்று முடித்தார் சி. முத்தையப் பிள்ளை.

"மறை—முதனிலைத் தொழிற்பெயர் இடத்துக்கானமையால் தொழிலாகு பெயர்." —கோ. இ.

"மறைவழிப்பட்ட என்றது ஒழுக்கமுடையார்க் கேலாததாகிய மகளிர் புணர்ச்சியை. அதுவே விரைந்து சென்று பரக்கும்." —அ. கு.

**தெய்வம் பறையறைந்தாங்கு ஓடிப் பரக்கும்:**

எங்கும் உளனாய், எல்லாம் வல்லனாய நாதவடிவினனும் இறைவனே பறை சாற்றுவனாயின் எத்துணை விரைவில் பழிமொழி பரக்கும் என்பதை உய்த்துணரவைத்த பொருளாற்றல் கண்டு மகிழ்க.

**சென்றுதைக்குஞ் சேயார் முகத்து:**

"சென்று தைக்கும்—'சென்று உதைக்கும்' எனப் பிரித்துச் சென்று தாக்கும் எனப் பொருள்கொள்ளினு மமையும்."

—தி. சு. செ.

இஃது எடுத்துக் காட்டுவமையணி. —கோ. இ.

The infamy of evil done in secret, will spread abroad as though God had proclaimed it to the beat of drum. Though the rank stench of putrid flesh be concealed and covered up, it will escape to penetrate the senses of far distant persons.

—H. S.

Slanderous words uttered in secret will spread as if the Almighty were trumpeting them forth. The noxious stench of putrid flesh, although closely covered up, will affect the senses of distant persons. —C. M.

The infamy of evil done in secret will spread abroad, as though God had proclaimed it by beat of drum, just as the stink of putrid flesh, however much covered up, will assault the nose of those far off. —T. B. K.

---

## 96. துறவு—நிலையிற்றிரியாமை

*மெலியார் விழினு மொருவாற்றா னுய்ப*
*வலியார்மற் றென்றானு முய்யார்—நிலைதப*
*நொய்ய சழக்கென வீழாவாம் வீழினும்*
*உய்யுமா லுய்யா பிற.*

1. மெலியார் - சிறியோர், விழினும் - (தம் ஒழுக்க நிலையினின்றும்) தவறுவாராயினும், ஒருவாற்றான் - (ஏதோ) ஒருவகையால், உய்ப - உய்தி பெறுவர்; வலியார் - பெரியோர், மற்றென்றானும் - (தம் நிலைதவறி வீழ்வாராயின்) எவ்வகையானும், உய்யார் - உய்தி பெற மாட்டார்; நிலை - நின்ற நிலை, தப - தப்பி, நொய்ய - இலேசான பொருள்கள், சழக்கென - விரைவில், வீழாவாம் - விழமாட்டா; வீழினும் - (ஒரோவழி) வீழ்ந்தாலும், உய்யுமால் - (பின்னர்) உய்ந்து கொள்ளும்; உய்யா - அவ்வாறு உய்யமாட்டா, பிற - ஏனைய கனமான பொருள்கள்.

2. மெலியார் விழினும் ஒருவாற்றான் உய்ப; மற்று வலியார் ஒன்றானும் உய்யார்; நொய்ய நிலைதப சழக்கென வீழாவாம்; வீழினும் உய்யும்; பிற உய்யா.

3. **ஊழி பெயரினும் தாம் பெயரார் உண்மைத் துறவோர்.**

4. "நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினு மாணப் பெரிது." —குறள்.

"தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை." —குறள்.

"பெருவரை நாட பெரியார்கட் டீமை
கருநரைமேல் சூடேபோல் தோன்றும்." —நாலடியார்.

"நிரைதொடி தாங்கிய நீடோள்மாற் கேயும்
உரையொழியா வாகும் உயர்ந்தோர்கட் குற்றம்
மரையாகன் றூட்டும் மலைநாட மாயா
நரையான் புறத்திட்ட சூடு." —பழமொழி.

5. "வலியார் தம் நிலையினின்றும் பிறழின் மீட்டும் அந் நிலையை யடைதல் அரிதென்றபடி; "இந்திரர் புகழுந் தொல்சீ ரில்லறம் புரிந்துளோர்க்குத், தந்தம வொழுக்கந் தன்னிற் றகுமுறை தவறிற் றேனும், சிந்திடுந் தீர்வு முண்டாற் செய்த வர்க் கிணைய சேரி, னுய்ந்திட லரிதால் வெற்பி னுச்சியிற் றவற லொப்ப. (கந்தபுராணம்)." —உ. வே. சா.

"சிறியோர் செய்தற்கெளிய செயலினிற்றலால் அதனின்று தவறார் எனவும், தவறிற் பிழைப்பார் எனவும், பெரியோர் செய்தற்கரிய செயலி னிற்றலால் தவறுதல் கூடும் எனவும், தவறிற் பிழையார் எனவும் உவமைக்கேற்ப உவமேயத்திற்கும் பொருள் விரிக்க." —தி. சு. செ.

"அற்பமானவை விழமாட்டா; விழுந்தாலும் பிழைத்துக் கொள்ளும்; கனமானவை விழுந்தால் பிழைத்தலரிது. அது போல் சிறியர் நிலைதவறின் அவரே அற்பராகையால் அவர் நிலைதவறினதை உலகம் நன்கறியாது. பெரியரோவெனின் தந்நிலை கெட்டால் உலகெலாம் அது பரவும். பின் அவர்கள்

பெருமை அடைதல் அரிது. "ஆடு படுத்தால் எழுந்திருக்கும், ஆனை படுத்தால் எழுந்திருக்குமா?" என்னும் பழமொழி இங்குக் கவனிக்கத் தக்கது." —இள.

**மெலியார் விழினு மொருவாற்று னுய்ப:**

"மெலியார் வலியாரெனப் பொதுப்படக் கூறினாரேனும் மெலியாரென்றது இல்லறத்தாரை எனவும், வலியார் என்றது தவநிலையில் நிற்பவரை எனவுங் கொள்க. செயல்களின் மென்மை வன்மை நோக்கி அங்ஙனங் கூறப்பட்டார்." —அ. கு.

"அவமதிப்பாரை அழிக்கவும், நன்குமதிப்பவரை உயர்த்தவும் வலியின்மையால் இல்லறத்தாரை 'மெலியார்' என்றும், அவ்வலி யுடைமையால் துறவறத்தாரை 'வலியார்' என்றுங் கூறினர்." —கோ. இ.

"மெலியார் - அறிவின் மெலிந்தவர்." —உ. வே. சா.

**நிலைதப நொய்ய சழக்கென வீழாவாம்:**

"நிலைதப்பி" என்று சி. வை. தாமோதரம் பிள்ளையும், அ. குமாரசுவாமிப் புலவரும், உ. வே. சாமிநாதையரும் பாடங் கொண்டுள்ளனர். ஏனையோரெல்லாம் 'நிலைதப' என்றே ஓதினர்.

"நொய்ய சழக்கென வீழாது" எனப் பாடமாயின வழுவமைதியாகக் கொள்க" என்று பணித்தார் தம்முரையில் காஞ்சிபுரம் சபாபதி முதலியார்.

"தப என்ற "செய" என்னும் வாய்பாட்டு வினையெச்சம் "தப்பி" என்னுஞ் "செய்து" என்னும் வினையெச்சத்திற்காய் மயங்கி நின்றது." —சி. மு.

"சழக்கென—உரிச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம்; சழக்கென்பது பகுதி." —இள.

The weak, though they fail, will by some means survive; but the powerful survive not by any means; light things do

not fail from their place with a loud crash; but if they should fall, they would be saved; not so the others. —H. S.

If the weak should fall they may save themselves by some means of safety. A fragile thing, when dislodged from its position, does not fall with a loud crash, but such is not the case with the heavy. —C. M.

When the weak fall, they somehow survive; when others fall, they are lost forever. The petty ones do not fall fast; even if they fall, they are saved, not so others. —T. B. K.

---

## 97. துறவு—வரம்பிகவாமை

*இசையாத போலினு மேலையோர் செய்கை*
*வசையாகா மற்றையோர்க் கல்லாற்—பசுவேட்டுத்*
*தீயோம்பி வான்வழக்கங் காண்பாரை யொப்பவே*
*ஊனோம்பி யூன்றின் பவர்.*

1. இசையாத போலினும் - (சில சமயங்களிற் பிறர் கொள்கைக்குப்) பொருத்தமற்றனவாகத் தோற்றினும், மேலையோர் - பெரியோர்களுடைய, செய்கை - செயல்கள், வசையாகா - (பெரியோர்களிடத்தன வாயினமையின்) பழிப்புக்கிடனாகா; மற்றையோர்க்கு அல்லால் - அன்றிச் சிறியோரிடத்தனவாயின் அவருக்குப் பழிப்புக்கிடனவனவாம்; பசு - யாகப் பசுவினை, வேட்டு - (உலகுய்யக் கருதிக்) கொன்று, தீ - முத்தீ வேள்வியினை, ஓம்பி - செய்து, வான்வழக்கம் - மழை பெய்தலை, காண்பாரை - செய்யும் துறவோரை, ஒப்பவே - ஒத்தவராவரோ, ஊன் - தம் உடலை, ஓம்பி - பாதுகாக்கக் கருதி, ஊன் - பிற உயிர்களின் உடலாகிய இறைச்சியை, தின்பவர் - உண்பவர்கள்?

2. ஊனோம்பி ஊன்றின்பவர் தீயோம்பி பசுவேட்டு வான் வழக்கங் காண்பாரை ஒப்பவே? மேலையோர் செய்கை இசையாத போலினும் மற்றையோர்க் கல்லால் வசையாகா.

3. உண்மைத் துறவோர் ஒருகாலும் வரம்பிகவார்; அவர் செய்கை ஒரோவழி வரம்பிகந்ததாகக் காணப்படினும் அஃதளிக்கும் பெரும்பயன் கருதி அஃதும் அறமாகவே கருதப்படும்.

4. "தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙன மாளு மருள்." —குறள்.

"பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்." —குறள்.

"யானைமதப் பட்டா லலங்கார மாஞ்சிறுநாய்
தானு மதப்பட்டாற் சரியாமோ—ஞானி
தடைமீறி னாலுஞ் சரியாகுங் கன்மி
நடைமீறி லாகாது காண்." —ஒழிவிலொடுக்கம்.

5. "வேள்வி செய்வார் ஊனை உட்கொண்டாலும் அது செய்வார் தகுதிபற்றியும், கருத்துப்பற்றியும், வான்வழக்கங் காணும் பயன்பற்றியும் இழிவாகா தென்றபடி." —உ.வே.சா.

"பெரியோர் செய்யுங் காரியங்களிற் சில சாதாரணமாய்ப் பார்த்தால் தகாதனபோற் காணப்பட்டாலும் பெரும்பயனுக்கு ஏதுவாதலால் குற்றமாகா; அவற்றையே சிறியோர் செய்வாராயின் குற்றமாம்.' —ஊ. பு. செ.

"பெரியோர் வரம்பு கடந்து நடக்கினும் பழியன்று என்பார் 'இசையாத போலினும் வசையாகா' எனவும், அவ்வாறு சிறியோர் நடக்கிற் பழியாம் என்பார், 'அல்லால்' எனவும் கூறினர்." —தி. சு. செ.

"பசுவைக் கொன்று முத்தீ வேள்வி நடத்தலில் உயிர்க்கொலை அறமன்றெனப் பிறர்க்குத் தோன்றுமெனினும், அவ் வேள்வியால் அந்தணர் மழைபெய்யச் செய்து உலகு பிழைக்கச் செய்வார். ஆனால், தம் உடல் செழிக்கப் பிறிதோர் உயிரின் இறைச்சியைத் தின்பார் செய்கை நலமாகுமா? ஆகாது. அந்தணர் உயிர்க்கொலை செய்தும் உலகு பிழைக்கும் வழி செய்வர்; ஊன் தின்பார் உயிர்க்கொலை செய்தல் தமக்கன்றிப் பிறர்க்குப் பயனுளதோ? ஆதலால் 'மேலையோர் செய்கை இசையாத போலினும் வசையாகா' தென்றார்." —இள.

"அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர்செகுத் துண்ணாமைநன்று" என்று முடிந்த முடிபாய்த் தமிழ்மறைவல்ல நாயனார் ஓதியதறிந்தும், எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண் டொழுகும் அறவோர் பசுவினை வேட்டுத் தீயோம்புதல் இசை யுமோ என்றார்க்கு, ஆசிரியர் வான்வழக்கங் காணும் பெரும் பயன் கருதியக்கால் வசையாகா என்று விடை கூறுகின்றார். இசையும் என்றேனும், மறமாகா என்றேனும் அறுதியிட்டுக் கூறாமல் வாளா 'வசையாகா' என்று ஆசிரியர் ஒருபோக்காக விடையிறுத்தமை கூர்ந்து ஆராய்தற்பாற்று.

**இசையாத போலினு மேலையோர் செய்கை வசையாகா:**

மேலையோர்—"ஒன்றினை ஆக்கவேண்டி னாக்கவும் அழிக்க வேண்டி னழிக்கவும் வல்ல தவவலியுடைய பெரியோர்; மேலை யோரென்றது முனிவரரை." —அ. கு.

"பாவமு மேனைப் பழியும் படவருவ
சாயினுஞ் சான்றவர் செய்கலார்."

என்பது நாலடியார்.

**மற்றவர்க் கல்லால்:**

"(அவர் செய்யுஞ் செய்கை) சிறியோர் செய்தாற் பழிக்கப் படுமேயன்றி." —சி. மு.

"கீழ்மக்கள் திறத்தன்றி" —உ. வே. சா.

"அவரல்லராய சிறியோர்க் கல்லாமல் பெரியோர்க்கு வசையாகக் காணப்படமாட்டா." —அ. கு.

"மேலையோர் செய்கைகளைக் கீழ்மக்களன்றி மேன்மக்கள் பழியாரெனப் பொருள் கூறுவாருமுளர். அவ்வாறாயின் இவ் வலங்காரத்தின் கண்ணுள்ள சாதாரண தருமங் குன்றியும் உபமான உபமேயங்கள் தம்மிலக்கணம் பிறழ்ந்தும் அணியிலக் கண விரோதமடையும். ஆதலால் அவருரை பொருந்தா தென்க." —சி. வை. தா.

**பசுவேட்டுத் தீயோம்பி வான்வழக்கங் காண்பாரை:**

"பசு—பசு, யாகத்துக்குரிய உயிர்களுக்குப் பொதுப் பெயர்." —கோ. இ.

"தீயோம்பி—முத்தீத் தொழிலை நடத்தி. முத்தீ - ஆகவனீயம், தட்சிணாக்கினியம், காருகபத்தியம்." —தி. சு. செ.

"வான்வழக்கம் காண்பாரை - துறக்கம் அடைவாரை." —சி. மு.

"வான் - சுவர்க்கத்துக்கு, வழக்கம் - செல்லுதலை, காண்பாரை - செய்வாரை, என உரைப்பினும் அமையும்."—கோ. இ.

**ஊனோம்பி யூன்றின்பவர்:**

'ஊனுண்டலின் இழிவைப் புலப்படுத்த ஊன் தின்பவரென்றார், 'சாவ முன்னாட் டக்கன் வேள்வித் தகர்தின்று' (திருவாசகம்: திருச்சதகம் - ௪) என்பதுபோல —உ. வே. சா.

The conduct of the exhalted is not to be reprehended like that of others, although it may not appear praiseworthy. For, are those, who after sacrificing a cow, and cherishing the sacred fire, behold the ways of heaven, to be likened to those who eat flesh to pamper their bodies? —H. S.

The acts of the great, unlike those of the mean, will not be condemned, although they may seem improper. Are those who cherish their body with flesh to be compared with those who sacrifice (a cow) to appease the sacred flame; and thereby explore into the ways of Providence? —C. M.

Though not seeming acceptable, the acts of great men may not be reprehensible except to the low. But others feed flesh with flesh and are blameworthy. Are those, who eat flesh to fatten their bodies, equal to those who perform animal sacrifice to bring down rain? —T. B. K.

## 98. துறவு—தோய்ந்தும் தோயாமை

*எவரெவ ரெத்திறத்த ரத்திறத்த ராய்நின்*
*றவரவருக் காவன கூறி—எவரெவர்க்கும்*
*உப்பாலாய் நிற்பமற் றெம்முடையார் தம்முடையான்*
*எப்பாலு நிற்ப தென.*

1. எவரெவர் - யார்யார், எத்திறத்தர் - எவ்வெத்தன்மை யுடையரா யுள்ளாரோ, அத்திறத்தராய் நின்று - அவ்வத்தன்மையருக் கேற்பத் தாமும் நின்று, ஆவன - தகுந்த உறுதிமொழிகளை, கூறி - எடுத்துச் சொல்லி, எவரெவர்க்கும் - (அவர்கள்) யாவருக்கும், உப்பாலாய் - புறத்தராய், நிற்ப - (யாதொன்றிலும் பற்றற்றவராய்) நிற்பார்கள், மற்று எம்முடையார் - எம்மை ஆளுந்தன்மையையுடைய பெரியோர்; தம் முடையான் - தம்மை ஆளுடைய இறைவன், எப்பாலும் - (எல்லாப் பொருள்களிலும்) உள்ளும் புறம்பும் (தோய்ந்தும் தோயாதும்), நிற்ப தென - நிற்கின்ற தன்மையை யொப்ப.

2. தம்முடையான் எப்பாலு நிற்பதென எம்முடையார் எவரெவர் எத்திறத்தர் அத்திறத்தராய் நின்று அவரவருக்கு ஆவன கூறி எவரெவர்க்கும் உப்பாலாய நிற்ப.

3. திறந்தெரிந்து அறமுரைத்துப் பற்றின்றி இருப்பதே உண்மைத் துறவோரியல்பு.

4. "எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு." —குறள்.

"இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு." —குறள்.

"அறங்கேட் டருள்புரிந் தைம்புலன்கள் மாட்டும்
இறங்கா திருசார் பொருளும்—துறந்தடங்கி
மன்னுயிர்க் குய்ந்துபோம் வாயி லுரைப்பானேற்
பன்னுதற்குப் பாற்பட் டவன்" —அறநெறிச்சாரம்.

5. "ஞானசிரியர் இயல்பு கூறப்படும்." —உ. வே. சா.

"மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்னும் பக்குவர்கட்கு உண்மை நெறி யுபதேசிக்கு மிடத்துத் தாமும் அந்நிலையராய் நின்றாலன்றிப் பயன்படாதாதலால், 'எவரெவர் எத்திறத்த ரத்திறத்தராய் நின்று' எனவும், தாம் நின்ற நிலை அவர் பொருட்டாதலின் 'எவரெவர்க்கும் உப்பாலாய் நிற்ப, எனவுங் கூறினார்.''
—தி. சு. செ.

தமக்கு ஞானாசிரியராய் விளங்கிய திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர ஆதீனத்து நான்காவது பட்டம் **ஸ்ரீ மாசிலாமணி தேசிக பரமாசாரிய சுவாமிகளைக்** கருத்திற்கொண்டே ஆசிரியர் இச் செய்யுளை யாத்துள்ளனர் என்று இயல்பிற் கொள்ளலாம்.

"பாசமா மிருட்கோர் பட்டமணி விளக்கெனும்
மாசி லாமணித் தேசிக ராய"

என்றும் இன்னும் பலபடவும் நம் ஆசிரியர் தாம் யாத்த **பண்டார மும்மணிக் கோவையின்கண்** குருவணக்கங் கூறியுள்ளமையுங் காண்க.

**எவரெவர் எத்திறத்தர் அத்திறத்தராய் நின்று:**

"**எவர் எவர் எத்திறத்தர்**—தம் மாணாக்கர்களுள் எவர் எவர் எந்த எந்த நிலையினரோ."
—உ. வே. சா.

"எவரெவரென முன்னே கூறினமையால் 'எத்திறத்த' ரென்பதற்கு எவ்வெத்திறத்த ரென வினைக் கூட்டப்பட்டது. '**எவரெவ'** ரென்றது கல்வி யறிவுடையோரையும் அஃதில்லாரையும்; எவ்வெத்திறத்த ரென்றது தீவிரபக்குவம் மந்தபக்குவமுடையார்களை."
—கோ. இ.

**அவரவருக் காவன கூறி:**

"**ஆவன**—ஆகும் உண்மை நெறிகளை" —தி. சு. செ.

"**ஆவன**—செயற்பாலனவற்றை" —அ. கு.

"**ஆவன**—அவர்கள் செய்யவேண்டிய நற்காரியங்களை."
—இள.

எவரெவர்க்கும் உப்பாலாய் நிற்ப:

"உப்பாலாய்—உ என்னுஞ் சுட்டு அ இ என்பவைகளுக்கு வேறானதை யுணர்த்துதலால் புறம் என்னும் பொருளைத் தந்தது; ஊழையு முப்பக்கங் காண்பர்." —ஊ. பு. செ.

"உப்பாலாய்—ஆங்காங்கு." —சி. வை. தா.

"எவரெவர்க்கும் உப்பாலாய் நிற்ப என்பதற்கு, எவரெவர்களுடைய நிலையிலும் கலவாமல் தன் நிலையாகிய யோகநிலையில் நிற்பரென்பது கருத்து." —கோ. இ.

தம்முடையான் எப்பாலு நிற்பதெனை:

"தோய்ந்தும் பொருளனைத்துந் தோயாது நின்ற
சுடரே தொடக்கறுத்தோர் சுற்றமே போற்றி."—இராமாயணம்.

"அம்புயத்தின் பாசடை நீரிற் பற்றிலாததுபோற்
பற்றிலார் பரமயோகி களே." —சிவப்பிரகாசப் பெருந்திரட்டு.

Our spiritual preceptors, who adapt themselves to the disposition of each, whatever it be, and give to every one suitable counsel, will stand beyond all others, as their Lord is everywhere present. —H. S.

The saints, that possess our hearts, but whose hearts are in turn possessed by Siva, instruct men of every nature, adapting their instructions to the kind of reception that they might receive from their hearers; yet these, like Him who stands a loof from all relations, never allow themselves to be governed by any ties of affection towards other men. —C. M.

The sages who are our masters identify themselves with all sorts and conditions of people and give proper advice, but they are far above them all, just as God is both immanent and transcendant, —T. B. K.

---

## 99. துறவு—புலனடக்கி மெய்யுணர்தல்

**மெய்யுணர்ந்தார் பொய்ம்மேற் புலம்போக்கார் மெய்யுணர்ச்சி**
**கைவருதல் கண்ணுைப் புலங்காப்பார்—மெய்யுணர்ந்தார்**
**காப்பே நிலையாப் பழிநாண னீள்கதவாச்**
**சேர்ப்பார் நிறைத்தாழ் செறித்து.**

1. மெய்யுணர்ந்தார் - உண்மைப் பொருள்களையுணர்ந்த ஞானியர், பொய்ம்மேல் - பொய்யாகிய நிலையில்லாப் பொருள்களின் மேல், புலம் போக்கார் - தம் புலன்களைச் செல்ல விடாராய், மெய்யுணர்ச்சி - மெய் யறிவு, கைவருதல் - தலைக்கூடுதலே கருத்தாக, புலம் - ஐம்புலன்களை யும், காப்பார் - தீய வழிகளிற் செல்லாதபடி தடுப்பர்; மெய்யுணர்ந்தார் - அம்மெய்யறிவாளர், காப்பே - புலன்களைக் காத்தலே, நிலையா - (வாயில்) நிலையாகவும், பழி நாணல் - பழியஞ்சுதலே, நீள்கதவா - நீண்ட கதவு களாகவும், சேர்ப்பார் - புலன்களை (யடக்கி) ஒருவழிப் படுத்துவர், நிறை - ஒருமைப்பாடாகிய, தாழ் - தாழ்க்கோலை, செறித்து - இறுகப் போட்டு.

2. மெய்யுணர்ந்தார் புலம் பொய்ம்மேற் போக்கார்; மெய் யுணர்ச்சி கைவருதல் கண்ணுைப் புலங்காப்பார்; காப்பே நிலையா, பழிநாணல் நீள்கதவா, மெய்யுணர்ந்தார் நிறைத்தாழ் செறித் துச் சேர்ப்பார்.

**3. "செம்பொருள் தெரிந்து சிற்றறி வொரீஇ, ஐம்புல னடக்கி யறந்தலை நின்று, தீநெறி விலக்கி நன்னெறிப் படர்" வோரே உரனுடை மெய்யறிவாளர். (சிதம்பர மும்மணிக்கோவை)**

4. " ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டாப் பிறப்பு." —குறள்.

" சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு." —குறள்.

" தன்னெக்குத் தெய்வம் பிறிதில்லை தான்றன்னைப்
பின்னை மனமறப் பெற்றுனேல்." —அறநெறிச்சாரம்.

"அடங்கி அகப்பட ஐந்தினைக் காத்துத்
தொடங்கிய மூன்றினால் மாண்டீண்—டுடம்பொழியச்
செல்லும்வாய்க் கேமம் சிறுகாலைச் செய்தாரே
கொல்லிமேல் கோட்டுவைத் தார்." —பழமொழி.

5. **மெய்யுணர்ந்தார் பொய்ம்மேற் புலம்போக்கார்:**

"மெய்யுணர்ந்தார்—அறிவுநூலுணர்ந்த பெரியோர்."
—தி. சு. செ.

"பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் உண்மை யறிவாலறிந்தவர்கள்." —கோ. இ.

"பொய்ம்மேல்—விடயங்களில்." —தி. சு. செ.

**மெய்யுணர்ச்சி கைவருதல் கண்ணுப் புலங்காப்பார்:**

"மெய்யுணர்ச்சி-மெய்ம்மையாகிய முதற்பொருளைப் பாவித்தல், பிறப்பிறப்பில்லாமல் நித்தியமாய், விகாரமில்லாமல் இருத்தல்பற்றி முதற்பொருளை 'மெய்' என்றார்." —கோ. இ.

"மெய்யுணர்ச்சி - பிறப்பு வீடுகளையும் அவற்றின்காரணங்களையும் ஐயம் விபரீதமின்றி யறிதல்." —தி. சு. செ,

"மெய்யுணர்ச்சி - ஞானத்தைச் சிந்திப்பதே." —சி.வை.தா.

"கண்ணு - குறியாக." —தி. சு. செ.

"கண்ணு - கருமமாகக் கொண்டு." —சி. வை. தா.

"கண்ணு - பிரதானமாகக் கொண்டு." —ஊ. பு. செ.

**மெய்யுணர்ந்தார் காப்பே நிலையா:**

"மெய்யுணர்ந்தார் காவலாவது மெய்ஞ்ஞானந் தலைப்படினும் ஒரோவழிப் பிராரத்த வாசனையால் வரும் மறவியை நீக்கி ஞானத்தைப் பிரகாசிப்பித்தல். இதுபற்றியே சிவஞானபோதத்தும் "அன்பரொடு மரீஇ" என்றார்." —அ. கு.

மேல் அரு-ஆம் செய்யுளை நோக்குக.

**பழிநாண நீள்கதவா:**

மேல் கூரு-ஆம் செய்யுளை நோக்குக.

**சேர்ப்பார் நிறைத்தாழ் செறித்து:**

"சேப்பார்" என்று பாடங்கொண்டு "தங்குவர்" என்று பொருளுரைத்தார் **உ. வே. சாமிநாதையர்.**

"**நிறைத்தாழ்** - நிறையின் சிறப்புப்பற்றிக் கதவுக்கு வலிய தாகிய தாழாக உருவகப்படுத்தினர்; "காழொன்றுயர்திண்கதவு வலியுடைத்தோ, தாழொன்றிலதாயிற் றுன்" (**நன்னெறி: 32**)
**உ. வே. சா.**

"நிறை - நடுவுநிலைமை" —சி. மு.

They who know the truth, indulge not their senses in their pursuit of lies, and have in view the acquisition of true knowledge; will join to the door-post of caution, the long door of the shame of sin, and will secure it with the bolt of steadfastness. —H. S.

Those who obtained the knowledge of the truth will not direct their senses towards things that are unreal, making it their sole object to discover the truth, they will guard their senses. Making the preservation of the senses the door-post, and fear of guilt the door, they will curb themselves with the bolt of equity. —C. M.

Those that have realised truth, indulge not their senses in things false, but anxious to attain to true wisdom, guard their five senses; with control of the senses as the door-frame, fear of blame as the long door and their fortitude as the bolt, they guard themselves. —T. B. K.

## 100. துறவு—மெய்யுணர்வின்பம்

கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போல்—முற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்விற் றோன்றுவதே யின்பம்
இறந்தவெலாந் துன்பமலா தில்.

1. கற்று - (கற்க வேண்டிய நூல்களெல்லாவற்றையும்) ஐயந் திரிபறக் கற்று, துறைபோய - (கற்றதற்குத் தகநின்று) தேர்ச்சிபெற்ற, காதலற்கு - கணவனொருவனுக்கு, கற்பினள் - (அவனுடைய) கற்பு நிறைந்த மனைவி, பெற்றுக்கொடுத்த - ஈன்றளித்த, தலைமகன்போல் - (அறிவறிந்த) தலைப்பிள்ளை (யால்தோன்றுகின்ற ஒப்பற்ற இன்பத்தைப்) போன்று, முற்ற - (இருவகைப் பற்றினையும்) அறவே, துறந்தார்க்கு - ஒழித்த துறவோர்க்கு, மெய்யுணர்வில் - மெய்ஞ்ஞானத்தால், தோன்றுவதே - தோன்றுகின்ற இன்பமே, இன்பம் - (நிரதிசய) இன்பமாம்; இறந்த - (அதனை) ஒழிந்த, எலாம் - (ஏனைய) யாவும், துன்பம் - துன்பமே, அலாது - அன்றி, இல் - வேறில்லை.

2. (கொண்டுகூட்டு வேண்டிற்றிலது.)

3. **பற்றற்ற மெய்யுணர்விற் றோன்றுவதே மெய்யின்பம்.**

4. "இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு." —குறள்.

'இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.'' —குறள்.

'ஆசைப் படப்பட வாய்வருந் துன்பங்க
ளாசை விடவிட வானந்த மாமே.'' —திருமந்திரம்.

5. "துறந்த யோகிகளுக்குப் பகவானை அறியு நிலையில் பிறக்கின்ற இன்பமே யின்பம்; மற்றைய உலக இன்பமெல்லாம் துன்பம்.'' —ஊ. பு. செ.

"கற்றறிவுடையோர் தென்புலத்தார் கடன் செய்து முடித் தற்பொருட்டே இல்வாழ்க்கையைக் கைக்கொள்ளுதலாலும்,

அவ்வில்வாழ்க்கைப் பயன் தலைமகனுதலாலும், 'கற்பினுள் பெற்றுக்கொடுத்த தலைமகன்போல்' என்றார். இவ்வுவமைக் கேற்ப எடுத்த உடம்பாலாகிய கடன்களை முடித்தற்பொருட்டே துறவறங் கைக்கொள்ளுதலும், மெய்யறிவிற் றோன்று மின்பமே அத்துறவறத்தின் பயன் எனவும் உவமேயத்துக்குங் கொள்க."
—தி. சு. செ.

"கற்றறிவுடையோர் தென்புலத்தார் கடன் செய்தல் பொருட்டே இல்வாழ்க்கை நடத்துதலாலும் அக்கடன் செய்வது தலைமகனுனதாலும் 'கற்பினுள் பெற்றுக்கொடுத்த தலைமகன்' மிகவும் மதிக்கப்படுகிறான்."
—இள.

துறவறவின்பத்திற்கு இல்லறவின்பத்தையே உவமித்தார். கற்றவெல்லாம் நூலாகா; உற்றவரெல்லாம் மனைவியாகார்; அவர் பெற்றவரெல்லாம் பிள்ளைகளாகார்; ஆங்குற்றதெல்லாம் இன்பமாகா. கற்றற்குரியன கற்றலும், கற்புடை மனைவியை வாய்க்கப் பெறுதலும், அவண்மாட்டு அறிவறிந்த தலைமகனைப் பெறுதலுமே இல்லறத்தின் மெய்யின்பம் ஆகும் என்று அதன் அருமைப்பாட்டை விளக்கி, துறவறத்திற் றோன்றும் தலையாய இன்பத்தின் தனிச் சிறப்பை உய்த்துணரவைத்த ஆசிரியர் திறம் வியக்கற்பாற்று.

**கற்றுத் துறைபோய காதலற்கு:**

"துறைபோதல்—அதற்குத்தக நிற்றல். இதனைச் சிலப்பதிகாரத்திலே "வான் பொருட் கேள்வித் துறைபோயவர் முடித்த" என்பதனுரையானு முணர்க. இதற்குச் செயற்பாலனவாகிய அறங்களைச் செய்து முடித்த எனக் கூறுதலும் பொருந்தும்."
—அ. கு.

"துறையென்னும் பண்புப்பெயர் கற்றென்பதை அடுத்து நின்றமையால் பொருள் வகைக்கு ஆயிற்று. துறு - பகுதி; ஐ - செயப்படு பொருண்மை விகுதி; உகரக்கேடு சந்தி, நீர்க் கரையின் பெயராயினும் துறை இங்கு வகை என்னும் பொருள் தரலால் பண்பென்றும்."
—கோ. இ.

"துறை - குள முதலியவற்றில் இறங்குமிடத்தை யுணர்த்துவது. நூற்பொருள்களில் விதங்களுக்கு உவமையாகுபெயர்."
—ஊ. பு. செ.

முற்றத் துறந்தார்க்கு மெய்யுணர்விற் றோன்றுவதே இன்பம்:

"முற்ற—இருவகைப் பற்றினையும். இருவகைப் பற்றாவன; அகப்பற்று, புறப்பற்று என்பன. அகப்பற்று - யாக்கையின் கணுள்ள விருப்பு; புறப்பற்று - செல்வத்தின் கணுள்ள விருப்பு."
—அ. கு.

"மெய்யுணர்விற் றோன்று நலத்தின்பம்" என்று பாடங் கொண்டார் சி. வை. தாமோதரம் பிள்ளை.

"முன் கிடந்த துன்பங்களும் மேல்வரக்கடவ துன்பங்களும் இலவாதல் மெய்யுணர்வின் பயன்." —பரிமேலழகருரை.

இறந்த வெலாந் துன்பமலாதில்:

"அலாதென்னும் ஒன்றன் படர்க்கைக் குறிப்பு வினைப் பெயர் துன்பமென்பதை அடுத்து நின்றமையால் இன்பத்துக்கு ஆயிற்று."
—கோ. இ.

"இறந்தவெலாந் துன்பமேயாம்" எனவும் பாடமுண்டு.
—தி. சு. செ.

As the first-born son presented by a virtuous wife, to a husband, who has attained the shore of the sea of knowledge, is the bliss which appears in the contemplation of truth to those who have entirely renounced the world: compared to which, all that is past is but pain. —H. S.

Like the first-born presented to the husband, who has sounded the depths of knowledge, by his chaste consort, the beatific visions of truth that float in the holy sage constitute real happiness. All else is evil and painful. —C. M.

To those who have completely renounced the world, the happiness born of realisation of truth is the great bliss. All the rest is merely pain: even as to a learned husband, the first-born of a virtuous wife is a source of joy. —T. B. K.

---

## 101. துறவு—மெய்ந்நெறி நிற்றல்

*கற்றுங் கறிந்தடங்கித் தீதொரீஇ நன்றாற்றிப்*
*பெற்றது கொண்டு மனந்திருத்திப்—பற்றுவதே*
*பற்றுவதே பற்றிப் பணியறநின் றொன்றுணர்ந்து*
*நிற்பாரே நீணெறிச் சென்றார்.*

1. கற்றாங்கு - (அறிவு நூல்களைக்) கற்றவாறே (அவற்றின் மெய்ப்பொருளை), அறிந்து - ஐயந் திரிபற உணர்ந்து, அடங்கி - (அவற்றிற்குத் தக) செருக்கின்றி அமைந்து, தீது - (அந்நூல்களில்) விலக்கிய தீயவற்றினின்று, ஒரீஇ - நீங்கி, நன்று - (அந்நூல்களில்) விதித்த நல்லவற்றை, ஆற்றி - செய்து, பெற்றது கொண்டு - கிடைத்ததைக் கொண்டு, மனம் - மனமகிழ்ச்சியுற்று, திருத்தி - (அதனை இருவகைப் பற்றுமற) திருந்தச் செய்து (ஒருவழிப்படுத்தி), பற்றுவதே - தாம் அடையவேண்டிய வீட்டு நெறியையும், பற்றுவதே - அதற்கான வழிகளையும், பற்றி - உட்கொண்டு, பணி - தன்செயல், அற - நீங்க, நின்று - (தியான நிலையில்) நின்று, ஒன்று - தனிப் பரம்பொருளை, உணர்ந்து - அறிந்து, நிற்பாரே - (அதன் செயலாய்) மாறாது நிற்கும் அறிஞரே, நீணெறி - (முத்திப்) பெருவழியில், சென்றார் - சென்றவராவர்.

2. (கொண்டுகூட்டு வேண்டிற்றிலது.)

3. கசடறக் கற்று, கற்றதற்குத் தக அடங்கி நின்று, அவா வறுத்து, விலக்கிய ஓம்பி, விதித்தனவே செய்து, மெய்ந்நெறி நின்று, ஒன்றுணர்ந்து நிலைதிரியாது நிற்றலே வீடடையும் வழியாம்.

4. "ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து." —குறள்.

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு." —குறள்.

"அறிவ தறிந்தடங்கி யஞ்சுவ தஞ்சி
யுறுவ துலகுவப்பச் செய்து—பெறுவதனா
லின்புற்று வாழு மியல்பினா ரென்னொன்றுந்
துன்புற்று வாழ்த லரிது." —நாலடியார்.

5. "ஞானிகட்கும் பிராரத்துவம் உளதாதலிற் 'பெற்றது கொண்டு' எனவும், ஆகாமியம் வாராமற் பாதுகாக்க வேண்டுதலின் 'மனந்திருத்தி' எனவும், தூங்குவோன் கையிலுள்ள பொருள் நழுவுதல்போலச் சமாதி நிலையில் தொழில்கள் நழுவ வேண்டுதலின் 'பணியற நின்று' எனவும், சிவத்தையுணர்ந்தோர் மீட்டும் உணர்தலில்லாமையால் தேற்றேகாரந்தந்து 'நிற்பாரே' எனவும் கூறினர்." —தி. சு. செ.

"தீதொரீஇ நன்றாற்றி யென்றது 'விலக்கிய வோம்பி விதித்தனவே செய்யும்' (கஅ) என்பதை வற்புறுத்தியபடி."
—உ. வே. சா.

**கற்றுங் கறிந்தடங்கி:**

"அடங்கி—கற்றனமென்னுஞ் செருக்கின்றியமைந்து."
—சி. வை. தா.

**தீதொரீஇ:**

"காமம் கோபம் முதலிய தீங்குகளை விட்டு." —அ. கு.

"ஒரீஇ—தன்வினை பிறவினை இரண்டுக்கும் பொதுவாகிய 'ஒரீஇ' என்னும் இறந்தகால வினையெச்சம் இங்குத் தன்வினையாய் நின்றது. இவ்வளபெடை சொல்லிசை யளபெடை; செய்யுளிசை யளபெடையின்றி அச்செய்யுள் நடவாததுபோலச் சொல்லிசை யளபெடை யின்றி அச்சொல் நடவாதென்பதை உணரமாட்டாதவர் குற்றமெனக் குழறுவார்; சொல் நிரம்பாமல் எவ்வாறு வழங்குமென வினவி மறுக்க. இது ஒருவி

யென்னும், வினையெச்சம் சொல்லிசை நிறைத்தற்கண் வந்த அளபெடை யென்பர்; இது அளபெழுந்தால், ஒருவீஇ யென அளபெழல் வேண்டும்; ஓரிஇ என எவ்வாறு அளபெழும்? ஒருவீஇ எனவரின் செய்யுளிசை யளபெடை யாவதல்லது சொல்லிசை யளபெடை யாகாமையால் பெருங்குழறலே ஆம்.'' —கோ. இ.

**நன்றூற்றி:**

''கொல்லாமை வாய்மை முதலிய நற்செயல்களைச் செய்து.'' —ஆ. கு.

**பெற்றதுகொண்டு மனந்திருத்தி:**

''பெற்றது—இது விலக்கியதினீங்கி விதித்ததைச் செய்வதைப்பற்றி அறிவு தூய்மை பெறுதலால் அந் நிருமல ஞானத்துக்காயிற்று.'' —கோ. இ.

''மனந்திருத்தி—மனத்தைத் திருத்திசெய்து.'' —சி. மு.

''மநதினை ரம்மியப்படுத்தி.'' —சி. வை. தா.

**பற்றுவதே பற்றுவதே பற்றி:**

''பற்றுவதே—எல்லாரும் பற்றுவதாகிய பரம்பொருள். 'பற்றுவதே, பற்றுவதே' என்னும் அடுக்கு ''பொய்யாமை பொய்யாமை யாற்றின்'' (குறள் - 297.) என்றதுபோல நின்றது.'' —உ. வே. சா.

**பணியற நின்று:**

''எல்லாச் செயலுமடங்கும்படி நின்று; ''என்னுடைய செயன் மாண்டவா பாடித் தெள்ளேணங் கொட்டாமோ'' (திருவாசகம்).'' —உ. வே. சா.

''பணி—வேறு முயற்சி.'' —கோ. இ.

''சரியை முதலிய தொழில்கள்.'' —இள.

They, who have studied and attained knowledge; have exercised self-control; have rejected evil and embraced good; have contented their desires with what they have obtained; and thus by laying hold on their object, have superceded the necessity of works; and employ their thoughts in the contemplation of the one object only, walk in the endless path of happiness. —H. S.

Those alone can attain final emancipation who study the works of wisdom, appreciate the truths they contain, feel not the pride of knowledge, avoid what is prohibited in them and perform what they enjoin, purge the impurities of their mind by what they acquired; discover the means of securing heavenly bliss, proceed from சரியை to the higher stage of சமாதி and appreciate the divine nature, distinguishing between the ego and non-ego. —C. M.

They alone have trodden the great path who study and conform to what they have studied:—to avoid evil, and do good, remain content with what they get, hold fast to the means of reaching the highest and stand still realising the true one. —T. B. K.

---

## 102. துறவு—தீர்ந்த பொருள்

*ஐயந் திரிபின் றளந்துத் தியிற்றெளிந்து*
*மெய்யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவார் தம்முளே*
*காண்பதே காட்சி கனவு நனவாகப்*
*பூண்பதே தீர்ந்த பொருள்.*

1. ஐயம் - சந்தேகமும், திரிபு - விபரீத வுணர்வும், இன்று - இல்லாமல், அளந்து - மறைமுடிவின் அளவைகளால் பதி, பசு, பாச உண்மைகளை ஆராய்ந்தறிந்து, உத்தியில் - கருதலளவையால், தெளிந்து - தெளியப்பெற்று, மெய்யுணர்ச்சி - மெய்யறிவாகிய, கண் - ஞானக் கண்,

விழிப்ப - விழித்திருப்ப, தூங்குவார் - தியான நித்திரை செய்பவராகிய யோகியர், தம்முளே - தம் உள்ளத்திலே, காண்பதே - காணுவதே, காட்சி - காட்சியாகும்; கனவு - (அந்த நித்திரையிற்) காணுங் கனவை, நனவாக - (சாக்கிரமாக) விழிப்பு நிலையில், பூண்பதே - அடையப்பெறு வதே, தீர்ந்த - முற்ற முடிந்த, பொருள் - பொருளாகும்.

2. அளந்து ஐயந்திரிபின்று உத்தியிற்றெளிந்து, மெய் யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவார் தம்முளே காண்பதே காட்சி; தீர்ந்த பொருள் கனவு நனவாகக் காண்பதே.

3. மெய்யுணர்வுபெற்று இறைவனோடு ஒற்றுமையுற இடை விடாது துதிப்பவர் எங்கும் இறைவனாகவே கண்டு இன்புறுவர்.

4. "இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு." —குறள்.

5. "மெய்யுணர்ச்சி என்பதற்குப் பதி முதலிய பொருள் களை உள்ளவாறுணர்ந்த அறிவு எனவும், 'கண் விழிப்ப' என் பதற்கு எதிர்முகமாக நோக்காது தாமதுவாகப் பார்க்க என வும், 'தூங்குவார்' என்பதற்கு முதற்பொருளின்கண்ணே மனத்தை ஒடுக்கிக் கிடப்பவர் எனவும், தம்முளே காண்பது என்பதற்கு அம்முதற்பொருளோடு ஒற்றுமையுற இடைவிடாது பாவித்தல் எனவும் கூறுவாரும், 'கண் விழிப்பத் தூங்குவார்' என்பதற்குப் பரமான்ம விஷயத்திலே விழிப்பும், அவ்வுலக விஷயத்திலே நித்திரையு முடையவர் எனக் கூறுவாருமுளர்."
—அ. கு.

"ஜீவபர சொரூபத்தை யறிந்து தியான நித்திரை செய்பவர் களுக்கு உள்ளத்தில் காணும் சொரூபானந்தமே பிரத்தியட்ச ஞானமாம்; அதில் வரும் அநுபவமெல்லாம் சித்தாந்தமான காரியமாம் என்பது கருத்து." —ஊ. பு. செ.

**ஐயந்திரிபின் றளந்துத்தியிற் றெளிந்து:**

"ஐயம்—அதுவோ இதுவோ என ஒன்றில் துணிவு பிறவாது நிற்கும் உணர்ச்சி." —உ. வே. சா.

"ஐயமாவது இறைவன் உளனோ இலனோ என்னும் ஐயப் பாடு." —இள.

"ஐயமாவது பலதலையாய வுணர்வு; அஃதாவது மறுபிறப்பும் இருவினைப் பயனும் கடவுளும் உளவோ இலவோ வென ஒன்றிற் றுணிவு பிறவாது நிற்றல்." —அ. கு.

"திரிபு—மயக்கவுணர்வு. அது இருவினைப் பயனும் கடவுள் இல்லை எனவும் மற்றுமித்தன்மையவுஞ் சொல்லும் மயக்கநூல் வழக்குகளை மெய்ந்நூல் வழக்கெனத் துணிதல்." —அ. கு.

"அளந்து—அளவையாவன; பொறிகளாற் காணுங்காட்சியும், குறிகளானுய்த்துணரும் அனுமானமும், கருத்தா மொழியாகிய ஆகமுமென மூன்றுமாம். பிற இவற்றுளடங்கும்." —அ. கு.

"இது சிரவணத்தைக் குறிக்கும்." —ஞா. பு. செ.

"உத்தியில்—பொருந்துமாற்றான்." —அ. கு.

"உத்தியிற் றெளிந்து" என்பது மனனத்தைக் குறிக்கும். —ஞா. பு. செ.

**மெய்யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவார்:**

"மெய்யுணர்வைக் கண்விழித்திருக்கத் தியான நித்திரை செய்பவர்" என்று பொருளுரைத்தார் **அ. குமாரசாமிப் புலவர்.**

"இது நிதித்யாசனத்தைக் குறிக்கும்." —ஞா. பு. செ.

"மெய்யுணர்ச்சிக் கண்—அகக்கண் - மெய்யுணர்ச்சி யாகிய கண்; பண்புத்தொகை. இனி மெய்யுணர்ச்சி - மதி முதலிய பொருள்களை யுள்ளவாறுணர்ந்த அறிவுமாம்." —இள.

"தூங்குவார்—உலக நுகர்ச்சியை அறியாதிருப்பவர்; விழித் துறங்குந் தொண்டர்" (**மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்**) என்றார் முன்னும்." —உ. வே. சா.

"முதற்பொருளை இடைவிடாது பாவித்தல் செய்து வேறு முயற்சியற்று ஆநந்திக்கின்றவராதலால் 'மெய்யுணர்ச்சிக் கண் விழிப்பத் தூங்குவார்' என்றார்." —கோ. இ.

"அகக்கண் விழிப்புடையோர் புறக்காட்சியால் வரும் பல வகைப் பற்றுமிழத்தலால் 'தூங்குவார்' எனவுங் கூறினார்." —தி. சு. செ.

**கனவு நனவாகப் பூண்பதே தீர்ந்தபொருள்:**

"**கனவு நனவாகப் பூண்பது**—தியான நித்திரையிற் காணப் பட்ட இறைவனையன்றி வேறொன்றையும் மெய்ப் பொருளாகக் கொள்ளாதிருத்தல். நனவு - நினைவு, சாக்கிரம். அவையா வன, பொறிகளில்காணும் தோற்றம், குறிகளால் யோசித்து உணரும் முடிவு என்றிவையாகும்." —இள.

"நூலைக் கல்வியில் தொடங்கி இடையே அறம்பொருளின் பங்களுணர்த்தி மோட்சத்திற்குரிய ஞானத்தில் முடித்தமையால் இது பாவிகம் என்னும் அணியுமாம்." —ஊ. பு. செ.

The vision of those, who having measured without doubt and error, and ascertained all things by reason, sleep to external things that the eye of true knowledge may be awake, which looks within themselves, and substitutes spiritual, for material objects, is the final and perfect attainment. —H. S.

Some there are that sleep, (in the eyes of the world) but are wide awake in their exertions after the knowledge of Truth, judging things according to the revealed religion, but discerning what is Truth by their own reflection. These do really "see things" in their observations; and when they dream in such a feigned sleep of theirs, do really "find the Truth." —C. M.

Sages there are who by right standards of pure reason perceive the Truth without doubt or error, have their inner eye or true consciousness always open, while keeping their outer eyes shut against the world. What they see within them is the perception of the Highest Truth. If that is their dream, conversion of that into waking consciousness is the ultimate eternal Truth. —T. B. K.

நீதிநெறிவிளக்கநேருரையும், உரைவளமும்

முற்றுப் பெற்றன.



# செய்யுள் முதற் குறிப்பகராதி


| | | |
|---|---|---|
| அல்லன | ... | 72 |
| அவையஞ்சி | ... | 6 |
| அறம்பொரு | ... | 2 |
| அன்பொடரு | ... | 87 |
| ஆக்கம் | ... | 17 |
| இகழினிகழ்ந் | ... | 44 |
| இசையாத | ... | 391 |
| இடைதெரிந் | ... | 63 |
| இவறன்மை | ... | 12 |
| இளையமுது | ... | 91 |
| இனியவரென் | ... | 59 |
| இன்சொல்லன் | ... | 11 |
| இன்றுகொள | ... | 30 |
| ஈகையரிதெ | ... | 68 |
| உலையாமுயற்சி | ... | 51 |
| உறுதிபயப்ப | ... | 49 |
| எத்துணைய | ... | 5 |
| எவரெவ | ... | 395 |
| எவ்வினைய | ... | 89 |
| எனைத்துணை | ... | 10 |
| ஏதிலார் | ... | 33 |
| ஏந்தெழின் | ... | 82 |
| ஐயந்திரிபின் | ... | 407 |
| ஒற்றிற்றெரியா | ... | 32 |
| கண்கூடா | ... | 34 |
| கண்ணிற் | ... | 28 |
| கண்ணோக்கரு | ... | 37 |
| கருமஞ்சிதையா | ... | 78 |
| கலனழிந்த | ... | 42 |
| கலைமகள் | ... | 7 |
| கல்வியுடைமை | ... | 16 |
| கல்வியே | ... | 4 |
| களைகணு | ... | 40 |
| கற்பனவூழற்றூர் | ... | 23 |
| கற்பின்மகளி | ... | 83 |
| கற்புடுத்தன்பு | ... | 81 |
| கற்றனகல்லார் | ... | 25 |
| கற்றுங்கறிந் | ... | 404 |
| கற்றுத்துறை | ... | 401 |
| கற்றுப்பிறர் | ... | 21 |
| கற்றோர்க்கு | ... | 13 |
| காலமறிந் | ... | 52 |
| குடிகொன் | ... | 29 |
| குலமகட்கு | ... | 27 |
| குலம்விற்று | ... | 62 |
| கைவரும் | ... | 46 |
| கொலையஞ்சார் | ... | 79 |
| சிறியபகை | ... | 54 |
| சிறுமுயற்சி | ... | 70 |
| சிற்றின்பஞ் | ... | 88 |
| செயக்கடவ | ... | 71 |
| செவிசுடச் | ... | 45 |

| | | |
|---|---|---|
| சொல்வன்மை | ... | 69 |
| தத்தநிலைக்கு | ... | 65 |
| தம்மின்மெலி | ... | 15 |
| தம்முடை | ... | 41 |
| தன்னைவியப்பி | ... | 19 |
| திருவினு | ... | 80 |
| தீயசெயற் | ... | 75 |
| துயிற்சுவை | ... | 86 |
| தெய்வமுள | ... | 74 |
| தொடங்குங்காற் | ... | 3 |
| நட்பிடை | ... | 57 |
| நட்புப் பிரித்தல் | ... | 35 |
| நல்லவை | ... | 92 |
| நல்லாறொழுக்கி | ... | 61 |
| நன்மக்கள் | ... | 76 |
| நீரிற்குமிழி | ... | 1 |
| நெஞ்சுபுறம்பா | ... | 93 |
| நெடும்பகல் | ... | 8 |
| பகையின்று | ... | 73 |
| பணியப்படுவார் | ... | 36 |
| பரபரப்பி | ... | 90 |
| பழமைகடைப் | ... | 47 |
| பிறராற் | ... | 20 |
| பிறர்க்குப்பயன் | ... | 22 |
| பிறன்வரை | ... | 77 |
| புறநட்டகம் | ... | 56 |
| புழுநெளிந்து | ... | 43 |
| புறப்பகை | ... | 55 |
| பெண்மை | ... | 85 |
| பெற்ற சிறுகப் | ... | 64 |
| பொது மகளே | ... | 66 |
| பொய் குறளே | ... | 60 |
| போக்கறுகல்வி | ... | 24 |
| மறைவழி | ... | 386 |
| மனத்தகறுப் | ... | 58 |
| மன்னர்புறங் | ... | 48 |
| மாகஞ்சிறுக | ... | 39 |
| முடிப்பமுடி | ... | 31 |
| முயலாது | ... | 50 |
| முறையுங் | ... | 84 |
| முற்றுமுணர்ந் | ... | 14 |
| மெய்யுணர் | ... | 398 |
| மெய்வருத்தம் | ... | 53 |
| மெலியார் | ... | 388 |
| வஞ்சித்தொழு | ... | 94 |
| வருந்தித்தாங் | ... | 9 |
| வள்ளன்மை | ... | 67 |
| வாங்குங் | ... | 38 |
| விலக்கிய | ... | 18 |
| வேத்தவை | ... | 26 |

# பொருள் அட்டவணை




| பொருள் | செய்யுள் எண் | | பக்க எண் |
|---|---|---|---|
| கடவுள் வாழ்த்து | 1 | ... | 1 |
| கல்வியின் பயனும் சிறப்பும் | 2 | ... | 8 |
| கல்வி இன்பம் | 3 | ... | 14 |
| கல்விச் செல்வம் | 4 | ... | 18 |
| உய்த்துணர்வும் சொல்வன்மையும் | 5 | ... | 24 |
| இருந்தும் பயனில்லன | 6 | ... | 28 |
| புலவர் பெருமை | 7 | ... | 33 |
| அவையஞ்சு கல்வி | 8 | ... | 39 |
| கற்றன மறவாமை | 9 | ... | 43 |
| நல்கூர்ந்தார் கல்விநலன் | 10 | ... | 48 |
| இதுவுமது | 11 | ... | 52 |
| புலவர் வறுமை | 12 | ... | 58 |
| கல்வியழகே யழகு | 13 | ... | 63 |
| கல்விச் செருக்கு | 14 | ... | 67 |
| கற்கையவா | 15 | ... | 70 |
| எல்லார்க்கும் நன்றாம் பணிதல் | 16 | ... | 74 |
| பெரியோர் பணிவு | 17 | ... | 77 |
| தற்புகழ்ச்சியால் வருங் கேடு | 18 | ... | 80 |
| தற்புகழ்ச்சியின் இகழ்ச்சி | 19 | ... | 84 |
| பெருஞ்சுட்டுப் பெறும் வழி | 20 | ... | 89 |
| கற்றபடி நிற்றல் | 21 | ... | 93 |
| மெய்ந்நூலறிவை விலைப்படுத்துதல் | 22 | ... | 97 |
| கல்லாதார் அடக்கமின்மை | 23 | ... | 103 |
| கல்விநலன் அறிவுடையார்க்கே | 24 | ... | 109 |

| பொருள் | செய்யுள் எண் | | பக்க எண் |
|---|---|---|---|
| கல்லார்க்கு அறமுரைத்தல் | 25 | ... | 115 |
| மேன்மக்கள் பெருமை | 26 | ... | 119 |
| இறைமாட்சி | 27 | ... | 125 |
| ஆளுந்திரு | 28 | ... | 130 |
| இறைகோடல் | 29 | ... | 136 |
| கொடுங்கோன்மை | 30 | ... | 142 |
| அரசச் செல்வ மயக்கம் | 31 | ... | 146 |
| செங்கோன்மை | 32 | ... | 149 |
| அரசன் மூதறிவு | 33 | ... | 154 |
| கீழ்மக்களியல்பு | 34 | ... | 159 |
| கெடுவது காட்டுங் குறி | 35 | ... | 163 |
| பெரியாரைப் பிழையாமை | 36 | ... | 167 |
| ஈகை | 37 | ... | 173 |
| செழுங்கிளை தாங்குதல் | 38 | ... | 178 |
| நன்குமதிப்பு | 39 | ... | 182 |
| புகழுடம்பு பெறும்வழி | 40 | ... | 187 |
| மானமிழத்தல் | 41 | ... | 191 |
| சாவஞ்சாமை | 42 | ... | 196 |
| மெய்ப்பயன் கொண்டார் | 43 | ... | 201 |
| மன்பதை | 44 | ... | 206 |
| அமைச்சு | 45 | ... | 209 |
| செவ்விதெரிந்துரைத்தல் | 46 | ... | 213 |
| இறைமாண்டார் வெகுளி | 47 | ... | 217 |
| மன்னர் புறங்கடை காத்தல் | 48 | ... | 221 |
| உலையா முயற்சி | 49 | ... | 225 |
| அறிவறிந்த முயற்சி | 50 | ... | 229 |
| முயற்சியுடைமை | 51 | ... | 234 |
| ஆள்வினைத்திறம் | 52 | ... | 239 |
| கருமமே கண்ணாயினார் | 53 | ... | 243 |
| சிறுபகை யோம்பல் | 54 | ... | 247 |

| பொருள் | செய்யுள் எண் | | பக்க எண் |
|---|---|---|---|
| உட்பகை யோம்பல் | 55 | ... | 251 |
| உட்பகை களைதல் | 56 | ... | 254 |
| வஞ்சநட்பு | 57 | ... | 258 |
| மனநலம் | 58 | ... | 262 |
| சொற்திறம் | 59 | ... | 265 |
| நல்லாறு | 60 | ... | 268 |
| நல்லோரியல்பு | 61 | ... | 272 |
| கூடாத செல்வம் | 62 | ... | 275 |
| வஞ்சித்துக்கொண்ட உடைமை | 63 | ... | 279 |
| பேரவா | 64 | ... | 283 |
| அறத்தாற்றிற் பொருளீட்டல் | 65 | ... | 286 |
| செல்வ வகை | 66 | ... | 290 |
| ஈயாதான் செல்வம் | 67 | ... | 293 |
| இன்சொற் சிறப்பு | 68 | ... | 297 |
| சொல்வன்மைப் பயன் | 69 | ... | 301 |
| சிறுமுயற்சிப் பெரும்பயன் | 70 | ... | 304 |
| நாகரிகரல்லாதார் | 71 | ... | 306 |
| அடக்கமில்லாதார் | 72 | ... | 309 |
| பிறர்பழி கூறல் | 73 | ... | 313 |
| தெய்வ தண்டனை | 74 | ... | 316 |
| தீயவர் ஆக்கம் | 75 | ... | 318 |
| பழிநாணுவோர் | 76 | ... | 322 |
| பிறன்மனை நயத்தல் | 77 | ... | 325 |
| நன்னல இன்பம் | 78 | ... | 328 |
| காமங் கதுவப்பட்டார் | 79 | ... | 332 |
| தீய விலங்கனையார் | 80 | ... | 336 |
| நன்மக்கட்பேறு | 81 | ... | 338 |
| கற்பின் மகளிர்—(1) | 82 | ... | 342 |
| கற்பின் மகளிர்—(2) | 83 | ... | 345 |
| கற்பின் மகளிர்—(3) | 84 | ... | 348 |

| பொருள் | செய்யுள் எண் | | பக்க வெண் |
|---|---|---|---|
| துறவு—புலப்புகை | 85 | ... | 352 |
| ,, உண்டி | 86 | ... | 355 |
| ,, உடலோம்பாமை | 87 | ... | 358 |
| ,, சிற்றின்பம் விழையாமை | 88 | ... | 362 |
| ,, புணர்ச்சி விரும்பாமை | 89 | ... | 366 |
| ,, பயனில செய்யாமை | 90 | ... | 370 |
| ,, தவம் | 91 | ... | 374 |
| ,, ஊழ் | 92 | ... | 377 |
| ,, உள்ளத்துறவு | 93 | ... | 380 |
| ,, படிறின்மை | 94 | ... | 383 |
| ,, பழியச்சம் | 95 | ... | 386 |
| ,, நிலையிற்றிரியாமை | 96 | ... | 338 |
| ,, வரம்பிகவாமை | 97 | ... | 391 |
| ,, தோய்ந்தும் தோயாமை | 98 | ... | 395 |
| ,, புலனடக்கி மெய்யுணர்தல் | 99 | ... | 398 |
| ,, மெய்யுணர்வின்பம் | 100 | ... | 401 |
| ,, மெய்ந்நெறி நிற்றல் | 101 | ... | 404 |
| ,, தீர்ந்த பொருள் | 102 | ... | 407 |


---

GNANASAMBANDAM PRESS, DHARMAPURAM.

உ

குருபாதம்

# தருமபுரம் ஆதீனம் இயற்றிவரும்பணிகள்

தேவாரபாடசாலை நிறுவித் தெய்வத் தமிழ் வளர்ப்பது. சிவாகமபாடசாலை வைத்துத் திருக்கோயில் பூசைமுறைகளைப் பயிற்றுவிப்பது. சிவஞான நூல்களைத் தெளிவுற அச்சிட்டு வழங்குவது. சமய நுணுக்கங்களை நூல்களாக வெளியிடுவது. தலங்கள்தோறும் திருப்பதிகங்கள் வெளியிடுவது. அறிஞரைக்கொண்டு ஆலயம்தோறும் அறவுரை வழங்குவது. பிரசாரவாகனத்தின்மூலம் தமிழ்நாடெங்கும் சமயம்வளர்ப்பது. ஆங்கிலக் கலாசாலைகளில் தமிழ்ப்பரிசு அமைப்பது. ஆதீனக் கோயில்தோறும் பண்ணிசைத் தமிழ் வளர்ப்பது. தமிழ்க் கல்லூரி நிறுவி வித்துவான் தேர்விற்கனுப்புவது. வடமொழிக் கல்லூரி நிறுவி சிரோமணித் தேர்விற்கனுப்புவது. ஏழிசையும் இனிதோங்க இசைப்பிரிவு அமைப்பது. நூல் ஆராய்ச்சிகள் எழுதுவித்து வழங்குவது. விஞ்ஞானமெய்ஞ்ஞான நூல்களை வெளியிடுவது. சமய நூல்களைத் தக்க முறையில் வெளியிடுவது. "ஞானசம்பந்தம்" என்னும் மாதப்பத்திரிகை வாயிலாகச் சமய உண்மைகளை அறிவுறுத்துவது. சமயக் கூட்டங்களுக்குத் தக்கன செய்வது. தமிழ்ப்பணி, சமயப்பணி செய்பவர்க்குதவுவது. தமிழ்நாட்டுத் தல வரலாறு எழுதுவித்து வழங்குவது. புத்தகசாலையமைத்துப் பழந்தமிழ் நூல்களைப் பாதுகாப்பது. நாடோறும் ஹரிஜன மாணவர்களுக்கு அன்னமளிப்பது. பொருளும் புத்தகமும் அளித்து ஏழை மாணவர்களுக்கு உதவுவது. மாயூரத்தில் பிரஸவ ஆஸ்பத்திரி கட்டிவருவது. குடிமக்கட்கு அடிக்கடி எண்ணெய் முழுக்கும் அன்னமும் அளித்துவருவது, காந்திநிதி, ஹரிஜனபண்டு, அகதிகள் நிவாரணநிதி, காசநோய் ஆஸ்பத்திரி உதவிநிதி முதலிய பல பொதுஸ்தாபனங்கட்குப் பெருந்தொகையளிப்பது முதலியனவாம்.